ஸ்ரீ

# கம்ப ராமாயண வசனம்

(இரண்டாம் பகுதி)

[ கிஷ்கிந்தா, சுந்தர காண்டங்கள் ]



பதிப்பாசிரியர் :
மகாவித்துவான், சிந்தாமணிச் செல்வர்
மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை



புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
135, பவழக்காரத் தெரு, :: சென்னை - 1

# பதிப்புரை

இந்திய நாட்டு இணையிலா இதிகாசங்கள் இரண்டு: ஒன்று இராமாயணம்; மற்றொன்று பாரதம். இவ்விரு நூல்களும் இன்று உலகப் புகழ் பெற்று விளங்குகின்றன; பற்பல உலகப் பெருமொழிகளில் மொழி பெயர்க்கப்படும் பெருமைக்குரியனவாயும் திகழ்கின்றன.

வடமொழியில் 'ஆதி காவியம்' எனும் பாராட்டுக்குரிய தாய்த் திகழும் இராமாயணத்தை இயற்றியவர் வான்மீகி முனிவர். அவரைப் பின்பற்றித் தமிழ் மொழியில் 'தன்னிகரில்லாத் தனிப்பெருங்காப்பியம்' எனப் பலரும் போற்றத் தக்க முறையில் இராம காதையைத் தமிழர் பண்பாட்டிற்கியைய இன்கவிக் கருவூலமாக்கித் தந்தவர் கம்ப நாடர் என இம்பர் போற்றும் கவிவாணர்.

பன்மொழிப் புலமை பழுத்த நல்லறிஞர் பலரும் 'எம்மொழியிலும் இக்காவியத்திற்கு ஈடு காணேம்!' என இறுமாந்து பேசுகின்ற இக்காவியத்தை எளிதிற்பயின்று இன்புறுவதற்கு நல்ல வழி காட்டியாய் விளங்கும் மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைமைப் புலமைத் திருச்சிற்றம்பல தேசிகரவர்களது பதிப்பைத் தழுவிய இந்தக் கம்ப ராமாயண வசனத்தை எல்லோரும் படித்து இன்புற வேண்டும் என்னும் கருத்தால், குறைந்த விலையில் வெளியிட்டு மகிழ்கின்றோம். தமிழுலகம் பெற்றுப் பயனடைக!

இதனைச் சீரிய முறையிற் பதிப்பித்துதவிய மகாவித்துவான் சிந்தாமணிச் செல்வர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்களுக்கும், முகப்பில் வந்துள்ள கண் கவரும் வண்ணப்படத்தை எழுதித்தந்த சாந்தி ஆர்ட்ஸ் ஸ்ரீ. வி. மாதவன் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியது!

சென்னை,
5-9-'58.

சித. இராமநாதன்

# பொருளடக்கம்

# அஞ்சலி

'ஆதவன் புதல்வன் முத்தி
அறிவினை அளிக்கும் அண்ணல்
போதவன் ராம காதை
புகன்றருள் புனிதன் மண்மேல்
கோதவம் சிறிதும் இல்லான்
கொண்டல்மால் தன்னை ஒப்பான்
மாதவன் கம்பன் செம்பொன்
மலரடி தொழுது வாழ்வாம்!'

—செந்தமிழ்

## அனும வணக்கம்

அஞ்சிலே ஒன் று பெற்ருன்
அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்ரு ருக
ஆரியர்க் காக ஏகி
அஞ்சிலே ஒன் று பெற்ற
அணங்கைக்கண் டயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்
அவன்எம்மை அளித்துக் காப்பான்.

ஸ்ரீ:

# கம்ப ராமாயண வசனம்

## ௪. கிஷ்கிந்தா காண்டம்

### கடவுள் வணக்கம்

மூன்றுரு வெனக்குணம் மும்மை யாமுதல்
தோன்றுரு எவையும்அம் முதலைச் சொல்லுதற்கு
ஏன்றுரு அமைந்தவும் இடையில் நின்றவும்
சான்றுரு வுணர்வினுக் குவந்த தாயினுன்.

## 1. பம்பைப் படலம்

ஸ்ரீ ராம லட்சுமணர்கள், பம்பை என்னும் ஒரு பொய்கையைக் கண்டார்கள். அந்தப் பொய்கையானது பாதாள லோகம் வரையில் ஆழ்ந்திருந்தும், தண்ணீரின் தெளிவினுல் உள்ளிருக்கின்ற பொருள்களெல்லாம் நோக்குபவர்க்கு மிகவும் விளக்கமாகத் தெரிவது எப்படியிருந்ததென்ருல், சிறந்த கவிஞர்களால் இயற்றப்பட்ட ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்னும் பாக்களில் மிகவும் அபூர்வமாகிய ஆழ்ந்த பொருள்கள் விளங்குவது போல இருந்தது. அந்தப் பம்பைப் பொய்கையிலே ஸ்ரீ ராமர் அன்னப்பட்சிகளையும் தாமரை முதலானவைகளையும் கண்டு, தம்மைப் பிரிந்து போயிருக்கின்ற சீதையை நினைத்துக்கொண்டு மனமுருகித் தளர்ந்து, நல்லறிவு ஒடுங்கினவர் போல மயங்கிப் புலம்பத் தொடங்கினுர்: “வரால் மீன்களே, அன்னப்பட்சி

களே, உங்களைப்போலக் காலும் நடையும் உள்ளவளைப் பிரிந்து மனம் எரிந்துகொண்டிருக்கின்ற என்னிடத்தில் நீங்கள் இரக்கங்கூர்ந்தால், அது உங்களுக்குக் கீர்த்தி அல்லவா? இணை பிரியாமலிருக்கின்ற நீங்கள் ஒருவார்த்தை பேசினால் அதனாலே உங்களுக்குக் குற்றம் வருமா? தாமரை மலரும் நீலோற்பல மலரும் மலர்ந்து என் மனத்தைப் புண் படுத்தும் பொய்கையே, அவளுடைய கண்ணையும் முகத் தையும் காட்டுகின்ற நீ, அவளது சர்வாங்கமும் ஒரு தரங் காட்டலாகாதா? பொய்கையே, அமிர்தத்துக்குச் சமான மான சீதையினுடைய அவயவங்களாகிய நீலோற்பலம், செவ்வல்லி, தாமரை, வள்ளைக்கொடி, வரால் மீன், ஆமை இவைகளையெல்லாம் உன்னிடத்திலே கண்டேன்! ஓடுகின்ற மயிலே, அவளுடைய சாயலுக்குத் தோற்று மனமழிந்து ஒதுங்கித் திரிந்த நீயும் மனம் குளிர்ந்தாயா? அவளைத் தேடித் திரிகின்ற என்னையும் நீ கண்டாய்; மனமகிழ்ச்சி யுடனே ஆடுகின்றாய். ஆயிரம் கண்ணுடையவர்களுக்கு எதுதான் தெரியாது? அன்னப்பேடுகளே, நீங்களாகிலும் ஒரு வார்த்தை சொல்லுங்கள். நீங்களொன்றும் பேசுகிற தில்லையோ? உங்களிடத்திலே பிழை செய்யாமல் இருக் கின்ற எனக்கும் பிழை செய்கின்றீர்களே! அவள்தான் உங்கள் நடையை அழியச்செய்து ஜயங் கொண்டிருந்தாள். அவளிடத்திலே பகை உங்களுக்கிருக்கின்றது. உங்களைப் பார்த்து நான் சந்தோஷப்படுகின்றேனே! என்னிடத்திலும் கோபம் செய்யலாமா? பொன்போலும் இதழ்களைப் பொருந்தி வண்டுகள் தமிழ்ப்பாட்டினை இசையுடனே பாடும்படி மலர்ந் திருக்கின்ற தாமரையே, செங்கழுநீர்ப் புஷ்பமே, ஒரு வார்த்தையாகிலும் வாய் திறந்து சொல்லீர்களோ? நீலோற் பலமே, நீ அவள் கண்ணைப்போலவேயிருந்து என்னை இகழ்ச்சி செய்து உபத்திரவப்படுத்துகின்றாயா? வள்ளைக் கொடியே, நீ சீதையினுடைய காதைப்போலவே காணப்படு கின்றாய். நீயும் என் துயரத்தைப் பார்க்க ஆசைப்படுகின்றாயா?"

என்று சொல்லிப் புலம்பினுர். அந்தப் பொய்கையிலே மத யானைகள் வந்திறங்கித் தும்பிக்கைகளினுலே தண்ணீரை மொண்டு பெண் யானைகளின் வாயில் ஊட்டுகிறதைப் பார்த்துப் பின்னும் வருந்தினுர்.

இவ்விதம் துயரப்படுகின்ற ஸ்ரீராமரை, அன்பையே ஆபரணமாகப் பூண்டிருக்கின்ற தம்பியார் பார்த்து, "சுவாமி, நாழிகையாயிற்று. ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தனம் முடித்துக்கொள்ளும்," என்று சொன்னுர். ஸ்ரீ ராமர் எழுந்து, அந்தப் பம்பைப் பொய்கை புண்ணியம் செய்திருந்தபடியினுல், மதயானையும் பார்த்து நாணும்படி அதில் ஸ்நானஞ் செய்தார். அவரது திருமேனி கொண்டிருந்த காமாக்கினியினுலே அந்த நீர் கருமான் உலையிற்காய்ச்சிய இரும்பைத் தோய்த்த தண்ணீர் போலக் கொதித்தது. இராமசந்திரர் ஸ்நானஞ்செய்தெழுந்து, சாஸ்திர முறைப்படி சந்தியாவந்தனம் முடித்து, தம்பியாருடனே அவ்விடத்தில் முனிவர்கள் வாசஞ்செய்கின்ற ஒரு சோலையிலிருந்தார். சூரியன் அஸ்தமித்து அந்திப்பொழுது வந்தது. அத்தருணத்தில் உதயமான சந்திரனும் ஸ்ரீ ராமருக்குச் சூரியனைப்போல அதிக வெப்பத்தைக் கொடுத்தான். புஷ்பங்கள், வண்டுகள், பட்சிகள், மிருகங்கள், மரத்தினுடைய இலைகள் ஆகிய யாவும் செயலற்றன. குயில்கள் கூவாது ஒடுங்கின. மதயானைகள் பிளிருமல் ஒடுங்கின. கிளிகளும் ஒடுங்கின. மயில்கள் நடனஞ்செய்யாது ஒடுங்கின. சர்ப்பங்கள் பேய்கள் முதலான சகலமும் உறங்கின. ஸ்ரீ ராமருடைய திருக்கண்களுக்கு மட்டும் நித்திரை வரவில்லை. அவர் இரவு முழுவதும் அப்படியிருந்து வருந்துகிற சமயத்தில், ஒருவனுக்கு மெய்யுணர்வுதோன்ற அவனைச்சூழ்ந்த வினைகளெல்லாம்பற்றற்று விடுவது போல, இராத்திரி கழிந்து போய்விட்டது. தாமரைகள் மலர்ந்தன. சூரியன் சமுத்திரத்தில் உதயமானுன். ஸ்ரீ ராமர் துக்க சமுத்திரத்திலிருந்து எழுந்தார். அவர்கள் உடனே புறப்பட்டு பல சோலைகளைக் கடந்து போனுர்கள்.

## 2. அனுமப் படலம்

ஸ்ரீ ராம லட்சுமணர்கள் அவ்வண்ணம் நடந்து சவரி சொன்ன ரிசியமுக பர்வதம் போய்ச் சேர்ந்து, அதன்மேல் ஏறினுர்கள். அதில் வாசஞ்செய்துகொண்டிருக்கிற வானரங்களுக்கு ராஜாவான சுக்கிரீவன் அவர்களைக் கண்டு, "இவர்களாரோ சத்துருக்கள்!" என்று பயந்து, "ஓடி ஒளித்துப் பிழைப்போம்!" என்றெண்ணி, நளன், நீலன், அனுமன் முதலான வீரர்களுடனே பெருமையையுடைய அந்தப் பருவதத்தின் ஒரு பக்கத்திலோடி மறைவாயிருந்துகொண்டு, வாயு புத்திரனுன அனுமனுக்கு அவர்களைக்காட்டி, "ஐயா, இவர்கள் வாலியனுப்ப வந்தவர்களோ, என்னவோ, தெரியவில்லை! கையிலே வில்லைத் தரித்திருக்கிருர்கள்! செவ்வையாக யோசனை செய்து பார்!" என்று சொல்ல, ஆலகால விஷத்தைக் கண்டு பயந்த பிரமன் முதலான தேவர்களையும் அசுரர்களையும் 'பயப்படாமலிருங்கள்,' என்று அபயங் கொடுத்த சந்திரசேகரரான சிவபிரானைப்போல அஞ்சனு தேவியின் குமாரனுகிய அனுமான் சுக்கிரீவன் முதலானவர்களுக்கு அபயங் கொடுத்து, "இவ்விடத்திலே நீங்களிருங்கள். நான் போய் அறிந்து வருகிறேன்," என்று ஒரு பிராமணப்பிள்ளைபோல உருக்கொண்டு, ஸ்ரீ ராம லட்சுமணர்களிடத்துக்குப்புறப்பட்டு, தூரத்திலே வரும்போதே அவர்களைப் பார்த்து, "இவர்கள் கையிலோ, வில் இருக்கின்றது! இவர்கள் உருவமோ, தவசிகள் உருவம் போலக் காண்கின்றது. இவர்களை எப்படி அறிகிறது!" என்று மறைவாய் நின்றுகொண்டு, "தேவர்களுக்கெல்லாம் தலைவர்களான மும்மூர்த்திகளே இந்த இரண்டுருவம் எடுத்தவர்களாக வேண்டும். இவர்களுக்குச் சமானமானவர்கள் இந்த உலகத்தில் யார் இருக்கின்ருர்கள்? இவர்களுக்கு அருமையான பொருள் என்ன இருக்கின்றது? இவர்கள் சமாசாரத்தைச் சிற்றறிவைக்கொண்டு அறிய இயலுமா? இவர்கள் கிலே

சித்து நொந்திருக்கிருர்கள். இவர்கள் இப்படி மிகவும் மெலி யத்தக்க சாமானியமானவர்களுமல்ல ; மானிடர்களுமல்ல. தேவர்களே இந்த வடிவங்கொண்டு வந்தார்கள். இவர்கள் இங்கு வந்த காரியமும் வேருெரு பொருளைக் குறித்ததன்று. தேவாமிர்தத்துக்குச் சமானமான பொருள் இவர்களிடத்தி லிருந்தது. அது இடையிலே கை தப்பிப்போனபடியினுலே, அந்தப் பொருளையே பூமியிலும் ஆகாயத்திலும் தேடுகிருர் கள். இவர்களுக்குக் கோபமென்கிறதே இல்லை; கிருபை யானது கடல் போல இருக்கின்றது. இவர்கள் ஜீவகோடி களுக்கும் இதஞ்செய்கிறவர்களேயாவார்கள் ; தர்மமும் பார்த்து அஞ்சும்படியான ஒழுக்கமுடையவர்கள் ; மன்மத னும் பார்த்து அஞ்சுகின்ற உருவமுள்ளவர்கள். எமனும் அஞ்சத்தகுந்த சாமர்த்தியமுடையவர்கள்,'' என்று இப்படிப் பலபல விதமாக நினைத்து நிகரில்லாத அந்த அனுமன் முன்பு சினேகித்திருந்து பிரிந்த இஷ்டர்களைக் கண்டது போல அன்புடனே உள்ளமுருகி நின்ருன் ; அப்படி நின்று, ''வேங்கைப்புலி முதலான மிருகங்களெல்லாம் தங்களுடைய கன்றைக் கண்டது போல ஆசையுடனே இவர்களைப் பின் தொடர்ந்து வருகின்றன! மயில் முதலாகிய பட்சிகளெல்லாம் இரக்கமுற்று, இவர்கள் திருமேனியில் வெயிலுறையாமல் ஆகாயத்தில் பந்தலிட்டதுபோலச் சிறகை விரித்துக்கொண் டிருக்கின்றன! மேகங்கள் குறுந்துளிகளைச் சிந்திக்கொண் டிருக்கின்றன! நெருப்புப்போலச்சுடுகின்றபருக்கைக் கற்கள் இவர்களுடைய பாதங்களுக்குப் புஷ்பங்கள்போலக் குளிர்ச் சியைக் கொடுக்கின்றன ! இவர்கள் நடக்கிற வழிகளிலே மரம் புல் முதலானவைகளெல்லாம் சாய்ந்து இவர்களைத் தொழுவன போல இருக்கின்றன ! இவர்கள் தருமதேவர்கள் தாமோ ! எனக்கு ஆசை அதிகரிக்கின்றது ! கரையில்லாத அன்பு உதிக்கின்றது ! ஆகையால், பிறவித் துன்பங்களைத் தீர்த்து வினைகளைத் துடைத்து நரகத்துக்குப் போகவிடாமல் மீளாத மோட்சத்தில் சேர்க்கின்ற மேலாகிய தேவர்களே

இவர்கள்!'' என்று எண்ணி, நேராக அவர்கள் தன்னைக் காணும்படி அருகில் வருகிற போது, அவர்களும் நெருங்கினார்கள்.

அனுமன் ஸ்ரீ ராம லட்சுமணர்களைக் கண்டு, ''நீங்கள் நினைத்து வந்த காரியம் சித்தியாகக்கடவது! நீங்கள் இவ்விடத்தில் என்ன காரியமாக வந்தீர்கள்?'' என்று கேட்டான். கருணாநிதியான ஸ்ரீ ராமர், ''அப்பா, நீ நல்லவனாயிருக்கிறாய்! நீ யார்?'' என்று கேட்க, ''அடியேன் வாயு தேவனுக்கு அஞ்சனா தேவியின் வயிற்றிலே பிறந்த புத்திரன். என் பெயர் அனுமன்; இந்த மலையில் வாசஞ்செய்கிற சூரிய புத்திரரான சுக்கிரீவர் என்கிற மன்னருக்கு ஏவல் செய்து கொண்டிருப்பவன். அவர் நீங்கள் வந்ததைக் கண்டு யோசனை செய்து, 'அவர்கள் யார் என்பதை அறிந்துவா,' என்று அனுப்ப நான் வந்தேன்,'' என்று சொன்னான். அந்த வார்த்தையைச் சக்கரவர்த்தி திருமகனார் கேட்டு, அனுமனை விட நல்லவர்கள் இந்த உலகத்தில் வேறேயில்லையென்பது தெரிந்து, இலட்சுமணரைப் பார்த்து, ''தம்பி, இவன் கல்லாத வித்தைகளும், வேதசாஸ்திரங்களும் இல்லை என்பது இவனுடைய வார்த்தையினாலேயேதெரிந்தது. இந்த மகாபுருஷன் பிரமதேவனோ! ரிஷபவாகனனானசிவனோ! இப்பொழுது இவன் கொண்டிருக்கின்ற மனிதரூபம் இவனுடைய ஸ்வரூபமன்று. இந்த உலகுக்கெல்லாம் இது அச்சாணி போல மகா பராக்கிரமத்துடனே ஓங்கியுயர்வதாகிய ஸ்வரூபம் இவனுக்கு வேறேயிருக்கும். அதை நான் நன்றாகத் தெரிந்துகொண்டேன். அதை நீயும் பின்பு பார்க்கப் போகின்றாய்,'' என்று சொல்லி, அனுமனை நோக்கி, ''ஐயா, அந்த ராஜா எங்கேயிருக்கிறார்? அவரைப் பார்க்க வேண்டுமென்றே வந்தோம். எனக்கு உங்கள் ராஜாவைக் காட்டு,'' என்று சொன்னார்.

அப்போது அனுமன் அதிகசந்தோஷமாகி, ''உலகத்தில் உங்களுக்குச் சமானமானவர் யாரிருக்கிறார்? மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறவரைக் காண வந்தோமென்று

சொல்லுவீர்களாகில், அவர் செய்த பாக்கியமே பாக்கியம் ! அந்தச் சூரிய குமாரரை இந்திரகுமாரனுன வாலியென்பவன் சிறிதும் கிருபையில்லாமல் கோபித்துச் சீற, அதனுலே கிலேசம் மிகுந்தவராய் இந்தப்பர்வதத்தில் வந்து என்னுடனே இருக்கிருர். அவருக்கு மகாபாக்கியம் வந்து நேரிட்டிருக்கிற படியினுலே நீங்கள் வந்தீர்கள். உலகத்தில் பெரியவர்களுக்கு யாகாதி கிரியைகள் செய்கிறதினும், சோடசதானஞ்செய்கிற தினும், குலப்பகையாய்க்கொல்ல வந்த சத்துருவுக்குப்பயந்து ஒடுங்கினவனுக்கு அபயங்கொடுத்து இரட்சிக்கிறது விசேஷ மல்லவா? எங்களைப்பாதுகாக்கிறது உங்களுக்கு எளிதான காரியமே. உங்களிடத்தில் அடைக்கலம் புகுந்த எங்களுக்கு இதைப்பார்க்கிலும் உறுதி வேறு உண்டோ? எங்கள் ராஜா வுக்குஉங்களையாரென்றுநான்சொல்லுவது?'' என்றுகேட்க, இளைய பெருமாள், ''சூரியவமிசத்திற்பிறந்து சக்கரவர்த்தி யாராய்த் தேவர்கள் நிமித்தம் அசுரர்களைச் சங்கரித்த வீராதி வீரரும், யாகாதி கிரியைகளெல்லாம் செய்து முடித்தவரும், கருணைநிதியும், அசுரர்களெல்லாம் மடிந்து போம்படி வில்லை வளைத்து ஜயித்தவரும், மனு மாந்தாதா முதலானவர்களும் தமக்குச் சமானமல்லரென்று சொல்லும்படி கீர்த்தி படைத் தவரும், மகாநுபாவருமாகிய தசரத மகாராஜா என்கிற அயோத்தியாபுரிக்கு அதிபதியினுடைய திருக்குமாரர் இந்த மகாபுருஷர். இவர் தம்முடைய ராஜ்யத்தைத் தகப்பனுர் ஆக்கினையின்படி தம்பிக்குக் கொடுத்து, ஆரணியவாசம் செய்ய வந்தார் ; ஸ்ரீ ராமர் என்கிற திருநாமமுடையவர். அடியேன் இவருடைய அடிமைத் தொழில் செய்கிறவன்,'' என்று தொடங்கி ஸ்ரீ ராமர் திருவவதாரம் முதல் இராவணன் செய்த மாயைத் தொழில் வரைக்கும் நடந்த செய்திகளெல் லாம் ஒன்றுகிலும் விடாமல் விளக்கமாகச் சொன்னுர். அது கேட்டு எதிரே நின்ற அனுமன், ஸ்ரீ ராமருடைய பாதாரவிந் தத்தில் சாஷ்டாங்கமாய் விழுந்து சேவித்தான். அப்படிச் சேவிக்கவே, ''ஏன் தகாதகாரியம் செய்கிருய்? நீ பிராமணனு

யிருக்கின்ருயே!" என்று ஸ்ரீ ராமர் சொல்ல, "சுவாமி, அடியேனும் அந்தக் குரங்கின் கூட்டத்தில் ஒருவன்தான்," என்று மாருதி சொல்லி, உடனே இராம லட்சுமணர்கள் அதி சயிக்கும்படி, வேத சாஸ்திரங்களாலே சொல்லப்பட்ட மகத் தாகிய ரூப பதார்த்தங்களெல்லாம் தாழும்படி, பொன் மய மான மகாமேருவும் தோளுக்கே நிகராகாதென்று சொல்லத் தக்க தன்னுடைய யதாஸ்வரூபமாகிய ஆகாயமளாவுகின்ற விஸ்வரூபங்கொண்டுநின்ருன். பூமி ஆகாயமெல்லாம் திருவடி யினுலே அளந்துகொண்ட கமலநேத்திரராகிய அந்த ஸ்ரீராம ருக்கு, அனுமனுடைய குண்டலம் பிரகாசிக்கிற முகத்தைக் காண்கின்றதே அருமையாயிருந்ததென்ருல், சூரியனிடத் திலே சாஸ்திரங் கற்றுணர்ந்த அனுமனுடைய ஸ்வரூபத்தை நானெவ்வளவென்று அறிந்து சொல்லப்போகிறேன்! அந்த ஸ்வரூபத்தை ஸ்ரீராமர் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டு,இளைய பெருமாளைப் பார்த்து, "அப்பா, வேதங்களாலும் ஞானத்தினு லும் காணப்படாத அந்தப் பரமபதமே இந்த வானர உருவ மெடுத்தது. நல்ல நிமித்தங் கண்டோம்! இப்படிப்பட்ட மகா புருஷன் நமக்கு அகப்பட்டதனுல், இனித் துன்பமென்கிறது நமக்கில்லை; இன்பமும் வரும். இந்தச் சாமர்த்தியசாலி அந் தச் சுக்கிரீவனுக்கு ஏவல் செய்கிறவனுனுல், அவனுடைய பலமும் பெருமையும் சொல்ல வேண்டுமோ!" என்று சொல்லி முகமலர்ந்திருந்தார். அப்படியிருக்கும் அளவில், அனுமன் விஸ்வரூபத்தை அடக்கிக்கொண்டு, ஸ்ரீ ராமரை யும் லட்சுமணரையும் பார்த்து, "உடனே நான் போய் அவரை அழைத்துக்கொண்டு வருகிறேன். இவ்விடத்திலே சிறிது நேரம் இருங்கள்," என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு அதி சீக்கிரமாய்ப் போனுன்.

## 3. நட்புக்கோட் படலம்

அனுமன் சுக்கிரீவனிடத்திற்போய்ச் சேர்ந்து, அவனைப் பார்த்து, "வாலியென்கிற மகா பலசாலியினுடைய உயிரை வாங்குகிறதற்குக் காலன் வந்துவிட்டான்! நாமும் துயரக்கடலைக் கடந்தோம்!" என்று சொல்லிக்கொண்டு ஆலகால விஷத்தையுண்ட சாம்பமூர்த்தியைப் போல நடனஞ் செய்தான்; "இந்தப்பூமி ஆகாயம் முதலிய சகலலோகங்களிலும் இருக்கிறவர்களுடையநடத்தையிலும் வார்த்தையிலும் கண்ணிலும் இருக்கின்றவர்கள்; கரன் முதலாகிய கண்டகரான இராட்சதரையெல்லாம்சேனுசமுத்திரத்துடனேசின்னபின்னமாய்த்தலைகளுருள வில் வளைத்து யுத்தஞ்செய்து நிர்மூலப்படுத்திப் பூலோகத்தில் இருக்கிறவர்களுடைய உபத்திரவங்களைத் தீர்த்தவர்கள்; மேலானவர்களாகிய சிவன் முதலான தலைவரினும் அதிசயமாகிய பலமுடையவர்கள். உலகமெல்லாம் ஏகசக்கரம் நடத்தி ராஜ்யபாரஞ்செய்கிற தசரதசக்கரவர்த்தியார் குமாரர்கள்; திவ்விய சுந்தரமுடையவர்கள்; மனுநீதி தவறுதவர்கள்; கிருபாமூர்த்திகள்; ஒழுக்கந்தவறுதவர்கள்; சகலமானவர்களிலும் உயர்ந்தவர்கள். முடிவில்லாதபேரறிவையுடையவர்கள். ஓங்கிய கீர்த்தியுடையவர்கள்; விசுவாமித்திர முனிவர் கொடுத்த திவ்யாஸ்திரங்களையுடையவர்கள். அந்த ஸ்ரீ ராமலட்சுமணர்கள் இருவருள் மூத்தவராகிய ஸ்ரீ ராமரானவர், காலாக்கினிக்குச் சமானமாகிய தாடகை விழுந்து உருள வில் வளைத்து அவள் பிள்ளைகளையுங் கொன்று, தம்முடைய பாததூளியினுலே அகலிகை சாபமும் தீர்த்தருளினுர்; முன்பு மிதிலைக்குப் போயிருந்தபோது சிவனுடைய திரியம்பகம் என்கிற வில்லை ஒடித்தார்; பெற்ற பிதாவானவர் சொல்லச் சிறிய தாயார் ஆக்கியாபிக்க, ராஜ்யாதிபத்தியமெல்லாம் தம்பிக்குக் கொடுத்து, இவ்விடத்திற்கு எழுந்தருளினுர்; கையிலே மழுவாயுதம் தரித்திருக்கின்ற பரசுராமரையும் பலவீனப்பட்டுத் தோற்றுப்

போகும்படி செய்தார்; அதிக கடூரமான விராதனையுங் கொன்று, அவனுடைய சாபத்தையும் விமோசனமாகும்படி செய்தார். அவர் சகல தேவர்களும் தொழுகின்ற திருப்பாற் கடலிலே கண் வளர்ந்தருளும் ஸ்ரீமந்நாராயணனே இப்படி மானிட வடிவங்கொண்டவராக வேண்டும். சுக்கிரீவ: மகா ராஜாவே, நீர் அந்த மகானுபாவரைப் பிரத்தியக்ஷத்தில் பார்த்தால் யாவும் தெரியலாம். இராட்சதர்களுக்குள்ளே மாரீசனானவன் மாயமானாய் வந்தான். அவனை ஒரு க்ஷணத்தில் மாய்ந்து போம்படி செய்தார். திக்குகளையெல்லாம் கைகளாலே துழாவிச் சகல ஜீவராசிகளையும் பற்றி வாயிலிட்டு விழுங்கிக்கொண்டிருந்த கவந்தனையுங் கொன்று, தங்களுக்கு விருந்து செய்து உபசரித்த சவரியைப்போல அவனுக்கு நல்ல பதவி கிடைக்கும்படி செய்தார். ரிஷீஸ்வரர்கள் முதலாகிய பெரியவர்களெல்லாம் அவர் வருவாரென்றெண்ணி வெகுகாலமாகத் தவம் செய்து வழி பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். மேலும் அவருடைய தரிசனமாகவே வினையாகிய சிறை நீங்கி, எத்தனை பேர்களோ பரமபதம் சேர்ந்தார்கள்! நான் என்ன சொல்லுவேன்! புத்தியீனனான இராவணன் மாயையினாலே அவருடைய ஸ்திரீயை எடுத்துக்கொண்டு போனான். அவளைத் தேடிக் காண்கிற நிமித்தமாகவும், நீர் மிகுந்த தவஞ்செய்திருந்தவரானபடியினாலும், நல்ல நினைவுண்டாயிருக்கிறவராகையாலும், அந்த இராம லட்சுமணர்கள் உம் உறவை நாடிவந்தார்கள். நம்மிடத்தில் பரிபூரணமாகக் கிருபை செய்திருக்கிறார்கள். வாலிக்கு இன்றைக்கே மரணம் வந்து சம்பவிக்கும்! அவர்களைக் காண்கிறதற்கு நீர் எழுந்திருந்து வாரும்," என்று சொல்லினன்.

அந்தச் செய்திகளையெல்லாம் சுக்கிரீவன் கேட்டறிந்து, அதிக சந்தோஷமாகி, "உம்மைப்போன்ற மகானுபாவரையுடைய எனக்கு அருமையானது என்ன இருக்கின்றது?" என்று எழுந்து, அதிசீக்கிரமாய் நடந்து, தமக்குத்தாமே சமானமாகிய ஸ்ரீ ராமசந்திரருடைய திருவடியை வந்தடைந்-

தான். அந்தச் சூரியபுத்திரனுன சுக்கிரீவன் சுவாமியினுடைய குண்டலம் பிரகாசிக்கின்ற திருமுகமண்டலமும், செந்தாமரைப் புட்பங்கள் போன்ற கரசரணுதிகளும், கிருபையே ஒழுகிக்கொண்டிருக்கின்ற குளிர்ச்சி பொருந்திய நேத்திரங்களும், மேகத்துக்குச் சமானமாகிய சடையும், மரகத மலை போலும் திருமேனியின் அழகும் கண்டான்; இளையாழ்வாரையும் நோக்கினுன்; நெடுநேரம் நின்று கண்கள் களித்து, "பிரமன் சிருஷ்டித்த உலகங்களெல்லாம் அன்று முதல் இன்றைய வரைக்கும் செய்த தபோ பலங்களெல்லாம் குவிந்து இரண்டு உருவமாகிப் புஜபல பராக்கிரமத்தையுடைய வீரர்களாய்த் தோன்றின!" என்று மனந் தேறினவனுகி, பின்பு, களிப்புக்கடலின் கரை காணுதவனுய்ப் பாபரகிதராகிய ஸ்ரீ ராமருக்குச் சமீபத்தில் வந்தான்.

ஸ்ரீ ராமர் அன்புடனே திருக்கையை நீட்டி, "அப்பா. இப்படி வந்திரு," என்று ஆக்கியாபித்தார். அப்படியே சுக்கிரீவன் ஸ்ரீ ராமருக்கு அருகிலிருந்தான். இவ்வண்ணம் சுக்கிரீவனும் அனுமனும் ஸ்ரீ ராமலட்சுமணரும் கூடியிருந்தது, இராட்சதர்களென்கிற பகையைத் தள்ளித் தருமத்தை நிலை நிறுத்துகின்ற காலங்கள் ஒன்ருகக் கூடியிருந்தது போன்றிருந்தது. அந்த நால்வருள் தன் மனுேபீஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ளும்படி வந்த சுக்கிரீவனும் ஸ்ரீ ராமசந்திரரும், அமாவாசையில் தன் குறை நீங்கச் சூரியனிடத்தில் சந்திரன் வந்து சேர்ந்தது போலவும், தாங்கள் நினைத்திருக்கிற காரியங்களுக்கு முன்பு செய்த தவமும் பின்னுல் செய்யும் முயற்சியும் கூடினது போலவும் கூடியிருந்தார்கள்.

இப்படி இருக்கின்ற சமயத்திலே சூரியபுத்திரனுகிய சுக்கிரீவன், ஸ்ரீ ராமருடைய திருமுக மண்டலத்தைப் பார்த்து, "ஐயா, லோக நாயகரான உம்மைச் சேர்கிற பாக்கியம் எனக்குக் கிடைத்தபடியினுல், மகத்தான தவம் செய்தவர்கள் என்னைப்பார்க்கிலும் யாரிருக்கின்ருர்கள்?

விதியே கொண்டு வந்து கூட்டுவித்தால், எதுதான் சித்தி யாமலிருக்கும்?'' என்று சொன்னுன். அந்த வார்த்தையைக் கேட்டு ஸ்ரீ ராமரானவர், "பெருந்தவசியான சவரி என் பவள் இந்த மலையிலே நீ வந்திருக்கிற சமாசாரம் சொன் ஞள். அதனுல், எங்களுக்கு வந்திருக்கிற துயரத்தை உன் ஞல் தீர்த்துக்கொள்ள எண்ணி வந்தோம். அது உன்னுலே தீரும்; சந்தேகமில்லை,'' என்று சொல்ல, சுக்கிரீவன், "மஹா பலவானுன என் தமையன் என்னிடத்தில் அதிக கோபங்கொண்டவனுகி, நான் அந்தகார பூமி பரியந்தம் ஓடிப்போயும் துரத்திக்கொண்டு வந்து உபத்திரவப்படுத் தினுன். பிராணனைப் போக்கடித்துக்கொள்ளுகிறதற்குப் பயந்து, இந்த மலையில் அவன் வரக்கூடாதாகையினுலே, இதுவே ஓர் அரணுகப் பாவித்துக்கொண்டு, இதிலே பிராண னைக் காப்பாற்றிக்கொண்டிருந்தேன். இப்போது உம்மிடத் தில் அடைக்கலம் புகுந்தேன். என்னை இரட்சிக்கிறது பெருந்தர்மம்,'' என்று சொன்னுன்.

ஸ்ரீ ராமர் அப்படிச் சொன்ன சுக்கிரீவனைக் கிருபை யுடனே பார்த்து, "இது வரையிலும் உனக்கு வந்த இன்ப துன்பங்களெல்லாம் போகட்டும்! இனிமேல் சொர்க்க மத்திய பாதாளங்களில் உன்னை உபத்திரவப்படுத்தினவர்கள், என்னையும் உபத்திரவப்படுத்தினவர்களே. பொல்லாதவர் களானுலும் நல்லவர்களானுலும் உனக்குச் சினேகிதர்க ளானுல், அவர்கள் எனக்கும் சினேகிதர்களே. உன் பந்து ஜனம் என் பந்து ஜனமே. நீ என் பிராணபதமான தம்பியே,'' என்று அன்புடனே சொன்னுர்.

இப்படிச் சுவாமி சொல்லக் கேட்டவுடனே, "தேவ வாக்கைப்பார்க்கிலும் விசேஷமாகிய ஸ்ரீ ராமர் வாக்குப் பிறந்தபடியினுலே இனி நமக்கு என்ன குறையிருக்கின்றது!'' என்று நினைத்து, அங்கிருந்த குரங்கின் சேனை மிகுந்த சந்தோஷமாய் அட்டகாசஞ் செய்தது. அஞ்சனு தேவி புத்திரனுன அனுமனது சரீரம் புளகித்தது. தேவர்கள்

பூமாரி பொழிந்தார்கள். மேகம் ஸ்வர்ண வருஷம் வருஷித்தது. அப்போது அனுமன் எழுந்து ஸ்ரீ ராமரைச் சேவித்து, "தேவரும் தேவர் தோழரும் பல்லூழி காலம் சுகமாயிருக்க வேண்டும்! இனி உங்களுடைய திருமாளிகைக்கு வந்து நீங்கள் எழுந்தருளியிருக்குந் திருக்கோலத்தை நாங்கள் கண்டு சேவிக்க அபேட்சித்தோம். ஆகையால், கிருபை செய்ய வேண்டும்!" என்று விண்ணப்பம் செய்தான். "அப்படியே செய்கிறேன்," என்று ஸ்ரீராமர் தம்பியாருடன் எழுந்தருளினர். சுக்கிரீவனும் அனுமன் முதலான சில வானரர்கள் சூழ்ந்து வர, சந்தனம், அகில், புன்னுகம் முதலாகிய மரங்களும் தாமரைத் தடாகமும் சேர்ந்து போக பூமிக்குச் சமானமாயிருக்கின்ற பூஞ்சோலையிற்போய், பளிங்கறைகளும் நவரத்தினகசிதமான மண்டபங்களும் நிறைந்து அதிக சிங்காரத்துடனிருக்கிற அரண்மனையில் புகுந்து, ஒரு புஷ்ப மெத்தையிலே ஸ்ரீ ராமரும் சுக்கிரீவனும் சேர்ந்து, சந்தோஷமாய் இருந்தார்கள். அத்தருணத்தில் வானரர்கள் போய்ச் சுவையான கனிகளும் கந்தமூலங்களும் கொண்டு வந்தார்கள். ஸ்ரீ ராமர் திருமஞ்சனமாடி நியமம் முடித்துக் கொண்டு விருந்துண்டார். பின்பு ஸ்ரீ ராமர் யோசனை செய்து, சுக்கிரீவனைப் பார்த்து, "அப்பா, நீயும் மனைவியைப் பிரிந்திருக்கிறதாகக் காண்கிறது!" என்று சொன்னர்.

அப்போது அனுமன் நமஸ்காரஞ்செய்து, "சுவாமி, அடியேன் சொல்லுகிற விண்ணப்பத்தைக் கேட்டருள வேண்டும்: நாலு வேதத்திற்கும் வேலி போலக் கைலாச பருவதத்தில் வாசமாய் இருக்கின்ற சிவனுடைய கிருபையைப் பரிபூரணமாகப் பெற்றிருக்கின்ற வாலி என்பவன் ஒருவன் இருக்கின்ருன். அவனுடைய புஜபலத்துக்கு அளவில்லை. அவன் முன்பு தேவர்கள் அசுரர்கள் முதலானவர்களுக்கும் அசைக்கக்கூடாதிருந்த மந்தரகிரியை அசைத்துப் பாற்சமுத்திரத்தைக் கடைந்தவன். நிலம், நீர், நெருப்பு, காற்று என்கிற இந்த நான்கு பூதத்தின் பலத்தையும் தன்

பலமாக உடையவன். சத்தசமுத்திரத்துக்கும் அப்பாலிருக்கின்ற சக்கரவாளகிரியிலிருந்தபடி இந்த மலையினிடத்தில் தாண்டுவான். அவனெதிரே யாராகிலும் யுத்தம் செய்கிறதற்குக் கிடைத்தால், அவர்களுடைய பாதி பலம் அவனுக்கு வந்து சேரும். அஷ்டதிக்கிலும் பிரதிதினமும் போய், அஷ்டமூர்த்திகளையும் சேவித்து வருவான். அவன் வேகத்திற்கு முந்தி வாயுவும் போகமாட்டாது. அவனுடைய மார்பிலே சுப்பிரமணியனுடைய வேலும் நுழையாது. அவன் வாலின் பலம் அற்றுப்போகாததற்கு முன்னே இராவணனுடைய செங்கோலும் குடையும் செல்லா. அவன் நடந்தால், மேரு முதலாகிய பருவதங்களும் வேரோடே பெயர்ந்து போம். ஆகாயமும், திக்குகளும், மேகங்களும், சந்திர சூரியர்களும், பருவதங்களும், அவனுடைய தோள்களில் மறைந்து போம். அவன் பூர்வம் பூமியைத் தோண்டிய ஆதி வராகத்திற்கும், மந்தரகிரியை முதுகிலே சுமந்த ஆதி கூர்மத்திற்கும் சமானமானவன். இரணியன் மார்பைப் பிளந்த அந்த உக்கிர நரசிங்கமானாலும் அவன் தோளைப் பிளக்க மாட்டாது. ஆயிரம் பண முடிகளைப் பரப்பிக்கொண்டு இந்தப் பூமியையெல்லாம் ஆதிசேஷன் தாங்குகிறான். வாலி உலகத்தையெல்லாம் நடந்தபடியே தாங்குவான். கடல் சத்திக்கிறதும், வாயு சஞ்சரிக்கிறதும், சூரியன் தேர் ஆகாயத்தில் நடக்கிறதும், அவன் கோபத்துக்குப் பயந்தேயல்லாமல் மற்றொன்றினால் அல்ல. அவனிடத்தில் எழுபது வெள்ளம் வானர சேனை இருக்கின்றது. அந்தச் சேனையில் ஒவ்வொரு வானரமும் மகாமேருவையும் தோளினாலே முட்டித் தள்ளிவிடும். அவனுடைய ஆக்கினைக்கு அஞ்சி மேகங்களும் இடிக்கிறதில்லை; சிங்கங்கள் முழங்குகிறதில்லை; சர்ப்பங்களும் நடக்கிறதில்லை. அவன் இராவணனை வாலினாலே கட்டிக்கொண்டு பூலோகமெல்லாம் திரிகிறபோது, அந்தக் கட்டின வாலிலேயிருந்து பொழிந்த இரத்தம் எந்த உலகத்தில் தோயாமலிருந்தது? மேலும், அவன் தேவேந்திரன் பெற்ற புத்திரன்;

பூரணசந்திரனைப்போலத் தழைத்த வெள்ளை நிறமுண்டைய வன்; எமனும் பயப்படுகின்ற ஆக்கினையை உடையவன்; ஒரு தாய் வயிற்றில் இந்தச் சுக்கிரீவ மகாராஜாவுக்கு முன்னே பிறந்தவன். இப்படிப்பட்ட வாலி எங்களுக்கு ராஜா வாகியும் இவர் இளவரசராகியுமிருக்கிற நாளில், ஓர் அவு ணன் வமிச சத்துருவாய் அவனுடன் யுத்தத்திற்கு வந்தான். வாலி அவனுடன் யுத்தஞ்செய்து அவனை அடிக்கிற போது அவன் நிற்க மாட்டாமல் ஓடினான். அப்படி ஓடியும் விடாமல் வாலி பின் தொடர்ந்தான். அது கண்டு அவுணன் பூமியை விட்டுப் பாதாளமாகிய பிலத்துவாரத்தில் புகுந்தான். அப் போது வாலி தம்பியை அழைத்து, 'நான் அவனைத் தொடர்ந்து போய்க் கொன்றுவிட்டு கணப்பொழுதில் வருகி றேன். அது வரையிலும் நீ இந்தப் பிலத்தின் வாயிலைக் காத் துக்கொண்டிரு' என்று சொல்லிவிட்டு, அதிக கோபத்துடன் அந்தப் பிலத்துவாரத்தில் நுழைந்து, இருபத்தெட்டு மாதம் வரைக்கும் அவனைத் தேடி யுத்தஞ் செய்துகொண்டிருந் தான். அப்போது தம்பியாராகிய இவர் மிகவும் கிலேசித்து அழுது துயரப்பட்டார். நாங்கள் எல்லாங்கூடி இவரையிரந்து, 'உம்முடைய தொழில் இதுவானபடியினாலே நீர் இராச்சிய பாரஞ் செய்யும்,' என்று சொன்னோம். அப்படிச் செய்கிறது பழுதென்று மிகுந்த வருத்தமுற்றவராகி, 'அந்தப் பிலத் துவாரத்திலே நான் போய் என் தமையனாரைத் தேடிப் பார்க்கிறேன். அவர் இறந்துபோயிருந்தால், அவரைக் கொன்றவனைக் கொல்லுகிறேன். கொல்லமாட்டாமற் போனால் சாகிறேன்!' என்று அந்தப் பிலத்தில் நுழையப் போனார். அத்தருணத்தில் பக்கத்திலிருந்த பெரியோர்களும் அடியேனும் தடுத்துச் சில நீதிகளைச் சொல்லி மனத் தைத்தேற்றி, வானரசைனியங்களைப் பாதுகாக்கும்படி இவ ருக்கு அரசைக் கொடுத்தோம். இவர் அதை முழுச்சம்மத மாகப் பெற்றுக்கொள்ளவில்லை. அப்படியிருக்கையில், 'வாலியைக் கொன்ற அந்த மாபாவியாகிய அசுரன்

திரும்பி இவ்வழியாய் வருவான்!' என்று பயந்து, நாங்களெல்லாம் பருவதங்களைப் பிடுங்கிப் போட்டு அந்தப் பிலத்துவாரத்தை அடைத்தோம். அப்பால் இவரை அரசராக வைத்துக்கொண்டு கிஷ்கிந்தா பருவதத்தில் இருந்தோம். அப்போது அந்த அசுரனைத் தொடர்ந்து போன வாலி, அவனைக் கொன்று, மதோன்மத்தனாய்த் திரும்பி, பிலத்துவாரத்தின் வழியாய் வந்து, துவாரம் அடைத்திருந்ததைப் பார்த்துத் தம்பியைக் கூப்பிட்டான். பிரதியுத்தரஞ் சொல்லாதிருக்கக் கண்டு, 'நம் தம்பி நல்ல உபகாரஞ் செய்தான்!' என்று சொல்லி, அந்தப் பிலத்துவாரத்தின் அடைப்பை அதிக கோபத்துடன் காலினால் உதைத்தான். அப்படி உதைக்கவே, நாங்கள் அடைத்திருந்த பெரிய பர்வதங்களெல்லாம் சிதறி விழுந்தன. அங்கேயிருந்து சகலரும் பயப்பிராந்தி கொள்ளச் சீறிக்கொண்டு வந்து இவ்விடத்திற் சேர்ந்தான். மனத்திலே வேற்றுமையில்லாத இவரும் எதிரே போய்ச் சேவித்து, 'சுவாமி, நீர் நெடுநாளாய் வாராததனால் நான் உம்மிடத்தில் வரப் புறப்பட்டேன். அதற்கு இங்கிருந்த பெரியவர்களுள் ஒருவருஞ் சம்மதிக்கவில்லை. அவர்கள் ஆக்கினைக்கு அஞ்சி வாராமல், அரசு செய்துகொண்டிருந்த நாணமில்லாத என் குற்றத்தைப் பொறுத்தருளி, உம் ராஜரிகத்தை நீரே கைக்கொள்ளும்!' என்று சொன்னார். வாலி 'என் ஆக்கினை தப்பி இந்த ராஜரிகத்தின் ஆசையினாலே நீ இப்படிக் கொடுமை செய்தாய்!' என்றுசீறி, எங்கள் குலத்தாரெல்லாம் அஞ்சி ஒடுங்கும்படி சமுத்திரங்கடைந்த தன் கையினாலே இவருடைய சரீரத்தைக் குத்திக் குமைத்துவிட்டான். இவர் மிகவும் தளர்ந்து ஓட்டமெடுத்து, அவன் கையினின்றும் தப்பி, இந்த மலையில் வந்து சேர்ந்தார்; இதிலே அவன் வரலாகாதென்கிற சாபத்தினாலே இதுவரை பிராணனுடன் தப்பியிருந்தார். இவருடைய மனைவியாகிய உருமை என்கிற பெயரினையுடைய அமிர்தத்திற்குச் சமானமான ஸ்திரீயையும் அவன் விரும்பித் தனக்கு

உரியவளாக்கிக்கொண்டான். இவர் மனைவியையும் இழந்து; செல்வத்தையும் கைவிட்டு, இவ்விடத்தில் இவ்வண்ணம் இருக்கின்றார். இதுதான் நடந்த சமாசாரம்,'' என்று சொல்லினன்.

அந்த வார்த்தையைக் கேட்ட தேவாதிதேவராகிய ஆயிரந்திருநாமங்களையுடைய ஸ்ரீராமருக்கு அண்ட கோடிகளை உண்டுமிழ்ந்த அதரந் துடித்தது; கண்கள் சிவந்தன. தம்மிடத்தில் அன்பில்லாத சிறிய தாய் சொன்னாளென்று உடனே தம்பியாராகிய பரதாழ்வாருக்கு இராச்சியத்தைக் கொடுத்தருளின பகவானுக்கு ஒருவன் தன் தம்பியினுடைய தாரத்தைக்கைக்கொண்டானென்கிற வார்த்தையைக் கேட்டால் மனம் தரிக்குமா? ஆகையால், ஸ்ரீராமர் சுக்கிரீவனைப் பார்த்து, "அந்த வாலி நிமித்தம் பதினாலு லோகத்தாரும் வந்து எதிர்த்துத் தடுத்தாலும், அஸ்திரத்தினாலே அவனைக் கொன்று அந்த ராஜரிகத்தையும் உன் தாரத்தையும் உனக்குக் கொடுக்கிறோம்! அவனிருக்கிற இடத்தைக் காட்டு!'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அது கேட்டு துக்கசாகரக் கரையைக் கடந்து, 'இனி வாலியின் ஆண்மை அடங்கியது!' என்று எண்ணிக்கொண்டு, பின்பு 'இப்படிச்சொன்ன ஸ்ரீராமரைக் குறித்து நாம் ஆலோசிக்க வேண்டியிருக்கின்றது!' என்று கருதி, யோசனையும் கல்வியும் நீதியும் தந்திரமும் அமைந்திருக்கின்ற அனுமன் முதலான சில மந்திரிகளை அழைத்துக்கொண்டு சுக்கிரீவன் ஒரு பக்கத்தில் போயிருந்து யோசிக்கத் தலைப்பட்டான். அப்பொழுது அனுமன் சுக்கிரீவனைப் பார்த்து, "ஐயா, உம்முடைய உள்ளக்கருத்து எனக்குத் தெரிய வந்தது. வாலியைக் கொல்லுகின்ற பலம் இவரிடத்திலே உண்டோ, இல்லையோ என்று சமுசயப்பட்டீர். நான் சொல்லுகிறதைக் கேளும்: ஸ்ரீ ராமருடைய திருக்கைகளிலும் திருத்தாள்களிலும் சங்கு சக்கரக்குறிகள் இருக்கின்றன. இப்படிப்பட்ட இலட்சணம் எல்லாவுலகங்களிலும்

இருக்கின்றவர்களில் எவர்க்குமில்லை. ஆகையால், இவர் தருமத்தை நிலை நிறுத்த இவ்வுலகத்தில் அவதாரஞ் செய்த நாராயணரேயாவர். திரிபுராதிகளைத் தகனஞ்செய்து காலனைக் காலாலுதைத்த சாம்பமூர்த்தியினுடைய வில்லை, அந்த ஸ்ரீ மகா விஷ்ணுவினுலல்லாமல் மற்றொருவரால் ஒடிக்கக்கூடுமா? பூர்வத்தில் என் தந்தையாராகிய வாயு பகவானவர், 'இந்த லோகங்களையெல்லாம் சிருஷ்டித்த பிரமாவினுடைய பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணருக்கு நீ அடிமையாகி, அவருடைய கைங்கரியத்தைச் செய். அதுவே உனக்குத் தவம். அதனுல் உன்னைப் பெற்ற எனக்கும் மேலான நற்கதி கிடைக்கும்,' என்று எனக்குச் சொல்லியிருந்தார். அந்த நாராயணரே இந்த ஸ்ரீராமர். இதற்குச் சில ஏதுக்களும் உண்டு. அவை என்னவென்ருல், நான் என் பிதாவை நோக்கி, 'ஐய, நீர் சொன்ன பகவானை அறிகிறதற்கு உபாயம் என்ன?' என்று கேட்டேன். அவர், 'அவர் பத்தர் எவர்க்கானுலும் ஆபத்து வந்த காலத்திலே உடனே அதை நிவர்த்தி செய்கிறதற்குப் பிரசன்னமாவார். மேலும், அவரைக் கண்டமாத்திரத்திலே உனக்குள்ளே அளவிறந்த அன்பு உதிக்கும். அதுவே சாட்சி,' என்ருர். அதற்குச்சரியாக இப்பொழுது எனக்கு அன்பு உண்டாகின்றது. எனக்குச் சந்தேகம் எம்மாத்திரமும் இல்லை. நீர் இந்த ஸ்ரீராமருடைய பராக்கிரமத்தை அறிய வேண்டுமானுல் அதற்கும் ஓர் உபாயமிருக்கின்றது. நாம் சஞ்சரிக்கிறவழியில் ஏழு மராமரங்களிருக்கின்றனவே, அவைகளில் ஒரு மரத்தை அம்பினுல் எய்யச்சொல்லி, அது உருவிப்போகிறதைப் பாரும்," என்று சொன்னுன்.

இவ்விதம் அனுமன் சொல்லக்கேட்ட சுக்கிரீவன், "நல்ல உபாயஞ்சொன்னீர் !" என்று மாருதியைத் தழுவிக்கொண்டான். பின்பு எல்லாரும் ஸ்ரீராமருக்குச் சமீபத்தில் வந்தனர். சுக்கிரீவன், "சுவாமி, நாங்கள் ஒரு விண்ணப்பம் பண்ணிக்கொள்ள வேண்டியிருக்கிறது,' என்று சொல்ல,

"அதென்ன? சொல்," என்று ஸ்ரீ ராமசந்திரர் கேட்டருளினர்.

## 4. மராமரப் படலம்

சுக்கிரீவன், "சுவாமி, அதோ ஆகாயம் அளாவ வளர்ந்து நீண்ட ஏழு மராமரங்கள் இருக்கின்றன. அவைகளில் ஒரு மரம் உருவும்படி நீங்கள் அஸ்திரப் பிரயோகஞ் செய்தால், அடியேன் மனக்கிலேசம் போம்," என்று சொன்னான். அப்படிச் சொல்லவே, தேவராஜராகிய ஸ்ரீராமர், சிறு நகை நகைத்து, அவன் எண்ணிச் சொன்ன கருத்தை அறிந்து, வில்லிலே நாணேற்றி, அந்த மராமரங்களுக்குச் சமீபத்தில் எழுந்தருளினர். அம்மராமரங்கள் யுகம் பெயருங் காலங்களிலும் பெயர்கிறதில்லை; உலகங்கள் தாழுங்காலங் களிலும் தாழ்கிறதில்லை. மலைகளைக் கண்டோமென்று சொல்லலாமேயல்லாமல், இலைகளைக் கண்டாலல்லாமல் விருட்சமென்று அறிந்து சொல்ல இயலாது. சூரியனுடைய தேரிலே கட்டியிருக்கின்ற பச்சைக்குதிரைகள் அந்த மரத்தின் நிழலிலே புகுந்து போவதனுலேதான் இளைப்பில்லாமல் உலாவுகின்றன. நட்சத்திரங்களும், நவக்கிரகங்களும் அவைகளினுடைய புஷ்பங்கள் போலப் பிரகாசிக்கும். சந்திரன் அந்த விருட்சங்களினுடைய கிளைச்சந்துகளிலே நாள்தோறும் நுழைந்துபோகிறதனுலே, அவன் சரீரந்தேய்ந்து காய்ப்பேறி அந்த வடுவே களங்கமென்றுசொல்லப்படுகிறது. மனத்தில் எவ்வளவு வைரமிருக்கின்றதோ, அவ்வளவு வைரமுண்டானவை அம்மரங்கள். இப்படிப்பட்ட மராமரங்களினிடத்திலே வந்து அமல மூர்த்தியான ஸ்ரீராமர் அவைகளைச் செவ்வையாகப்பார்த்துப் பாணப்பிரயோகஞ் செய்ய உத்தேசித்து, ஆகாசமும் திக்குகளும் செவிடுபடவும், தேவர்களுக்கு மகத்தாகிய பயம் ஜனிக்கவும், கோதண்டத்தை வளைத்துக்,

குணத்தொனி செய்தார். அந்தக் குணத்தொனி கேட்டு, திக்கஜங்களும் மயங்கின. பிரமலோகமும் சலித்தது. கற்பத்தின் முடிவு பிறந்ததென்று சகல தேவர்களும் நடுங்கினர்கள். தம்பியாராகிய இலட்சுமணர் ஒருவரே சமீபத்தில் நின்ருர். சுக்கிரீவன் முதலிய மற்றவர்களுடைய செய்கைகளைச் சொன்னுல், அது அவர்களுக்குப் பழியாய் முடியும். நாலு திக்கிலும் திடுக்கிட்டோடிய அனுமன் முதலானவர்கள், 'இன்னம் எய்வதையும் பார்ப்போம்!' என்று வந்து சேர்ந்து சுவாமியினுடைய பிரதாபத்தைக் குறித்துக் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஸ்ரீராமர் வில்லிலே அஸ்திரத்தைத் தொடுத்துத் தீர்க்கமாக வாங்கி விட்டார். அந்த அஸ்திரமானது ஏழு மராமரத்தையும் உருவி, கீழேழுலோகத்தையும் கடந்து, அப்புறம் ஏழென்கிற தொகை சேர்ந்த பொருளில்லாமையால் அங்கிருந்து திரும்பியது. அது இன்னமும் ஏழாயிருக்கின்ற பொருள்களைக் கண்டால் துளையாமற் போகிறதில்லை. அத்தருணத்திலே ஏழு சமுத்திரமும், மேலேழு லோகமும், ஏழு குல கிரிகளும், சத்த ரிஷிகளும், சூரியனுடைய சத்தமாதர்களும், 'இந்தப் பாணம் ஏழென்னுந் தொகை சேர்ந்த பொருள்களையே லட்சியமாக உடையதோ!' என்று எண்ணி நடுங்கினர்கள். அப்படிப்பட்டதானுலும் அந்த ராமபாணமானது தர்மத்திற்கு உயிர்த் துணையாயிருக்கின்றதென்பதைச் சகலரும் நினைத்து உடனே பயமொழிந்தார்கள். அச்சமயத்தில் சுக்கிரீவன் தேக ஸ்மரணையில்லாமல் அதிக ஆனந்தமாகி, ஸ்ரீராமருடைய பாதாரவிந்தத்தைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து,

'வய்யம்நீ வானும்நீ மற்றும்நீ மலரின்மேல்
அய்யன்நீ ஆழிநீ ஆழிவாழ் அமலனீ
செய்யதீ வினைதெறும் தேவும்நீ நாயினேன்
உய்யவந் துதவினுய் உலகமுண் டுதவினுய்!'

"பூமியும் நீரே; ஆகாயமும் நீரே; மற்றப் பூதங்களும் நீரே; தாமரைப் பூவின்மேல் எழுந்தருளியிருக்கின்ற பிரமதேவனும்

நீரே; திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருள்கின்ற சக்கரதர ராகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவும் நீரே; தீவினையை நாசஞ்செய்கின்ற தருமதேவதையும் நீரே; உலகங்களையெல்லாம் உண்டருளிய நீர் நாயேன் பிழைக்கின்ற நிமித்தம் வந்து கிருபை செய்தீர். ஆதலால், இனியெனக்கு அரிதான பொருள் என்ன இருக்கின்றது? விதியே உம்மைக் கொண்டு வந்து என்னிடத்தில் விட்டது; தாய்க்குச் சமானமாகிய உம்முடைய தாசானுதாசன் நான்," என்று சொல்லித் துதி செய்தான்.

மற்ற வானரர்களெல்லாம் ஆடியும் பாடியும் இங்குமங்கும் ஓடியும் சந்தோஷமென்கின்ற மதுவைக் குடித்தவர்களாய் அதிகமாகக் களித்து, "வாலிக்குக் காலனை வெகு நாளாகத் தேடினேம்! இப்போது கிடைத்தான்!" என்று வாடியிருந்த தோள்கள் வளர்ந்து பூரித்திருந்தார்கள். அப்பால் மலையின்மேல் ஒரு மலை கிடக்கிறது போல ஆகாயமட்டும் உயர்ந்து கிடக்கின்ற துந்துபியினுடைய சரீரத்தை இரகு நந்தனர் கண்டார். "இது என்ன! எமனது வாகனமான மகிஷமோ! திக்கஜந்தான் மடிந்து கிடக்கின்றதோ!" என்று பார்த்து, "இது என்ன? சொல்," என்று கேட்கச் சுக்கிரீவன் சொல்லுகிறான்:

## 5. துந்துபிப் படலம்

"சுவாமி, துந்துபி என்னும் பெயரினையுடைய ஓர் அசுரன் மகா பலவான்; தலையிலே இரண்டு கொம்புடையவன்; மந்தரமலையைப்போலக் காத்திரமான சரீரமுடையவன். அவன் தன்னுடன் யுத்தஞ்செய்கிறவர் ஒருவரும் கிடையாமல், ஸ்ரீ மகாவிஷ்ணுவைத் தேடிக்கொண்டு திருப்பாற்கடலுக்குப் போனான். அந்த மகாவிஷ்ணு கண்டு, 'எதன் நிமித்தம் வந்தாய்?' என்று கேட்க, 'நீர் என்னுடன்

யுத்தஞ்செய்ய வாரும்,' என்ருன். அந்த வார்த்தை கேட்ட திருமால், 'உன்னுடன் யுத்தஞ் செய்யத்தக்க சமர்த்தன் கங்காதரனுகிய காளகண்டனே. அவனிடத்திற்குப் போ,' என்று சொன்னுர். அவன் அப்படியே திரும்பிக் கைலாசத்துக்குப்போய், தன் கொம்பினுலே அந்தப் பர்வதத்தை முட்டிப் பார்த்தான். அப்போது சிவபிரான் கண்டு, 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார். 'என்னுடனே நீர் யுத்தத்துக்கு வாரும். அதுதான் எனக்கு வேண்டுவது,' என்று சொன்னுன் அவன். சிவபெருமான், 'நீ மிகுந்த பராக்கிரமமுடையவனுகையால், உன்னேடு போர் செய்ய எனக்குக் கூடுமா? தேவர்களிடத்தில் போ,' என்று சொல்லி அனுப்பினுர். தேவர்கள், 'நீ நெடுங்காலம் போர் செய்வாயாகையால், பூலோகத்தில் வாலி என்னும் ஒருவனிருக்கிருன். அவனிடத்திலே போனுல், அவன் நெடுங்காலம் உன் மனேபீஷ்டப்படி யுத்தஞ் செய்வான்,' என்று சொல்ல, அப்படியே அவன் ஓடி வந்து வாலியிருக்கின்ற பர்வதத்தைத் தன் கொம்பினுலே குத்திச் சின்னபின்னம் செய்தான். அப்போது என் தமையனுன வாலி அதிக கோபத்துடனே வந்து எதிர்த்தான். இருவரும் கைகலந்து எற்றிப் பற்றித் தத்திக் குத்தி இன்னுன் இவனென்று கொஞ்சமாகிலும் ஒருவருக்கும் தெரியாமல், இடசாரி வலசாரியாகச் சுழன்று திரிந்து, சகல லோகங்களும் நடுங்க, தேவர்கள் அசுரர்கள் முதலானவர்களும் பார்த்துப் பிரமிக்க, ஆகாசமட்டுந் தாவி அக்கினியெழும்ப அட்டகாசஞ்செய்கிற சத்தங்கள் திக்குகளிலெல்லாம் போய்ப் பிரவேசிக்க, சமுத்திரங்கள் பருவதங்கள் சகலமும் நிலை பெயர்ந்து போக, காலடிகளைப் பெயர்த்து வைத்து மடங்கி விழுந்து எழுந்து இப்படி அனேக நாள் போர் செய்கிற போது, வாலி ஒரு விருட்சத்தைப் பிடுங்கி அவன் தலையின்மேல் அடித்தான். அந்த அடி படவே துந்துபி இடியேறுபோலக் கூச்சலிட்டு விழுந்து, வாயினுல் இரத்தங்கக்கினுன். அந்த அசுரனை வாலி மறுபடியும் மலையின்மேல்

கோடையிடி இடித்து விழுந்தாற்போல, வானமும் பூமியும் நிலை குலைய, திசைகள் செவிடுபடக் குத்தினன் ; பின்னும், 'இது எருமைக்கடா,' என்று தன் கையிற்கொண்டு சுழற்றினன். அப்போது அவனுடைய இரத்தம் திக்குதோறும் நிறைய, திக்கஜங்களினுடைய சரீரங்களும் சிவந்தன. பின்பு வாலி அந்தத் துந்துபியை உயரத்தூக்கி எறிந்தான். எறியவே, பிராணன் நீங்கிப்போக, உடல் மாத்திரம் திரும்பி விருட்சங்கள் முதலானவைகளும் முறியும்படி, இந்த மலையின் மேல் வந்து விழுந்தது. அப்படி வந்து விழுந்த போதுதான் வாலிக்கு இவ்விடத்திலே மதங்கரிஷியின் சாபமுண்டாகி, எனக்கு உதவியாயிற்று. அந்தத் துந்துபியினுடைய சரீரந்தான் இது,'' என்று சுக்கிரீவன் சொல்ல, அது கேட்டுப் பெரிய பெருமாள் இளைய பெருமாளைப் பார்த்து, "இதை நீ அப்பாலே தள்,'' என்று சொன்னர். உடனே இராமானுசர் தம் திருவடியின் பெருவிரலினலே அதை உந்தித் தள்ளினர். அம்மாத்திரத்தில் அந்த உடலானது மேலே எழும்பித் திரும்பி வந்து விழுந்தது. அது கண்ட இலட்சுமணரும் மகா பராக்கிரமமுடையவரென்று வானரர்கள் இடிபோலக் கொக்கரித்து அட்டகாசஞ்செய்து சந்தோஷப்பட்டார்கள். பின்பு அனைவரும் அவ்விடம் விட்டுத் திரும்பி முன்னிருந்த சோலையில் வந்து சேர்ந்தனர். சேர்ந்திருக்கும் போது சுக்கிரீவன் ஸ்ரீராமரை நோக்கி, "சுவாமி, அடியேன் ஒரு வார்த்தை சொல்லுகிறேன் ; திருச்செவி சாய்த்தருள வேண்டும்!'' என்று பயபத்தியுடனே சொல்லத் தொடங்கினன் :

## 6. கலன் காண் படலம்

"சுவாமி, நாங்கள் இவ்விடத்தில் இருக்கின்ற போது சில நாளுக்கு முன்னே இராவணன் இந்த வழியாய் ஆகாய மார்க்கத்தில் யாரையோ எடுத்துக்கொண்டு போகின்ற தருணத்தில் - அவர் தேவரீருடைய திருத்தேவியாரோ அல்லது

யாரோ ! - மிகவும் பிரலாபித்துக்கொண்டே போகின்றவர், எங்களைக் கண்டு, 'இவர்களாகிலும் சமாசாரம் சொல்லு வார்கள்' என்றோ, என்னவோ, மிகுந்த துயரத்துடனே ஆப ரணங்களைக் கழற்றி வஸ்திரத்திலே முடிந்து, அங்கிருந்த படியே விட்டுவிட்டார். அது கண்ட நாங்கள் கீழே விழுவ தற்கு முன்னமே அதைக் கையிலே ஏற்றுக்கொண்டோம். அதை அந்தப்படியே வைத்திருக்கிறோம். இப்பொழுது கொண்டு வருகிறோம். பார்த்தறியுங்கள்,'' என்று சொல்லி, எழுந்து ஓடி அதை எடுத்து, இரண்டு கையினாலும் தாங்கிக் கொண்டு வந்து, ஸ்ரீராமர் முன்னிலையில் வைத்தான். அதை ஸ்ரீராமர் பார்க்கவே, தம் தேவியின் திருவாபரணந்தா னென்று தெரிந்துகொண்டு, நெருப்பிலே வைத்த மெழுகு போலத் திருவுளம் கரைந்துருகினார். அப்போது, ஸ்ரீ ராகவர் இருந்த இருப்பை என்னவென்று சொல்லப்போகின்றேன்! சீதாபிராட்டியின் ஸ்தனங்கள்மேல் தரிக்கப்பட்ட ஆரம் முதலான ஆபரணங்கள் அவளுடைய ஸ்தனம் போலவே தோன்றின. மேகலை முதலானவைகள் அவை அணி யப்பட்ட அந்தந்த அவயவங்களாகவே காணப்பட்டன. ஆகையால், அந்தப் பூஷணங்கள் ஸ்ரீ ராமரை விட்டு நீங்கிய பேரறிவை அழைத்துக் கொடுத்தன என்று சொல்லுவேனா ! அவர் உயிரை இமிசைப்படுத்தின என்று சொல்லுவேனா ! அப்பிய சந்தனம் போலக் குளிர்ந்ததென்று சொல்லுவேனா ! அந்தத் திருவாபரணம் மோந்துகொள்வதற்குப் பரிமள புஷ்பமாகியும், திருத் தோளில் ஏந்துதற்கு உத்தரீயமாயும், பூசுதற்குக் கந்த மாயும், இரத்தினப் பிரகாசம் அவருடைய சரீரத்தைக் கவிந்து மூடுதலால் உடுப்பதற்கு வஸ்திரமாயுமிருந்தது. மேலும் சுவாமியினுடைய கமல நேத்திரங்களிலிருந்து ஜலம் தாரை தாரையாய்ப் பெருகியது. சரீரம் மயிர்க்கூச்செறிந் தது. புஜங்கள் வெய்ர்த்து வெதும்பின. இப்படியெல்லா மிருந்தபடியினாலே ஸ்ரீ ராமசந்திரருடைய தன்மையை அடி

யேன் என்னவென்று அறிந்து சொல்வேன்! அவர் விஷ மேறினாற்போல வெப்பம் அதிகரிக்க மயங்கி, பல நாழிகை மட்டும் சுவாசமும் பிரஞ்ஞையும் இல்லாமல் சோர்ந்தார். அப்படிச் சோர்ந்த ஸ்ரீ ராமபத்திரரைச் சுக்கிரீவன் தன் சரீரத்தினால் தாங்கினான்; தாங்கிக்கொண்டு, கண்ணிலே ஜலம் பிரவாகமாய் வர, அந்தத் துயரம் சகிக்காமல் ஏக்கமுற்று, மனமிரங்கி அழுகின்றவனாகி, "சுவாமி, இந்த ஆபரணத்தைக் கொண்டுவந்து காட்டி உமக்கு இத்தனை துக்கத்தைக் கொடுத்தேனே!" என்று சொல்லிப் பின்னும் சொல்லுகிறான்: "பிரமாண்டமும் அதற்கு அப்பாலும் சோர்வில்லாமல் தேடிப்பார்த்து, என் பலத்தையுங் காட்டி, உம்முடைய பிராணபதமான திருத்தேவியாரைக் கொண்டுவந்து கொடுக்கத் தக்கவனாய் நானிருக்க, நீங்கள் இப்படித் துயரப்படலாமா? தெய்வக் கற்பினையுடைய சீதாபிராட்டியாரைப் பயப்படச்செய்து எடுத்துக்கொண்டு போன துஷ்டனுடைய பத்துத் தலையும் இருபது தோளும் உமது ஒரு பாணத்துக்கு எதிர் நிற்குமா? அல்லது அதை உலகந்தான் தாங்குமா? சும்மா நீரிங்கே இருந்தருளும்! பதினாலு உலகத்திலும் புகுந்து தேடி அந்த இராட்சதனை ஜயித்து, உலக மாதாவை மீட்டுக்கொண்டு வருகிறேன்! என் சாமர்த்தியத்தைப் பாரும்! ஏவல் செய்கிறதற்குத் தோழர்களாகிய நாங்கள் இருக்கிறோம்! அதிக பராக்கிரமசாலியாகிய உம் தம்பியாருமிருக்கிறார். உமது வீரமோ, ஒருவராலும் சொல்லி முடியாதது! இப்படியெல்லாம் இருக்கிறபடியினாலே, திரிலோகத்தாரும் உம்முடைய சொல்லைக் கடப்பரோ? உயர்ந்தவர்களாயிருக்கின்றவர்கள் எப்போதும் உயர்ந்த பொருளைக் குறித்தே பேசுவார்கள். அதற்குச் சாட்சி அவர்கள் பேசிய படியே முடிக்கின்ற காரியமேயல்லாமல் வேறென்ன? தரும தேவதை என்பது தேவரீரேயன்றி வேறில்லை. ஆகையால், உமக்கு அருமையானது என்ன இருக்கின்றது! இவைகளையெல்லாம் யோசியாமல், ஒன்றுமில்லாத எளியவர் போலத்

துயரப்படுகிறது நல்லதா? பிரமன் சிவன் விஷ்ணு என்கிற இந்த மும்மூர்த்திகளும் ஒன்ருகக் கூடிஞல் உமக்குச் சமான மாவார்களேயல்லாமல், வெவ்வேருயிருந்தால் ஆவார்களா? என்னுடைய குறை பின்பாகிலும் நிறைவேறட்டும். உலக மாதாவான ஜானகியாரை மீட்டுக்கொண்டு வருவோம்! எழுந்து வாருங்கள்!" என்று மிகுந்த அன்புடன் சொல்லினன்.

அப்போது பரந்தாமராகிய ஸ்ரீ ராமர், அருவி போல ஜலம் பெருகிக்கொண்டிருக்கின்ற திருக்கண்களைத் திறந்து, சுக்கிரீவனை அன்புடனே பார்த்தருளி, ஒரு விதத்தில் உணர்ச்சி பிறந்து, தெளிவுண்டாகி, "தம்பி, சுக்கிரீவா, நான் பூமியில் பிராணனுடனேயிருக்க, என் கையில் வில்லும் இருக்கும் போதே, அவள் ஆபரணத்தைக் கழற்றியெறிந்து விட்டாளே! இதை என்னவென்று சொல்லுகிறது! பதிவிரதைகளாயிருக்கின்ற ஸ்திரீகளிலே யாரிப்படிச் செய்தவர்கள்? அந்த ஜானகி என் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்க, நான் மலைகள், காடுகள், மரங்களுடனேயும் அவளுடைய பூஷணத்துடனேயும் புலம்பிப் பொழுது போக்கிக்கொண்டு வெட்கமில்லாமல் வில்லைச் சுமந்து திரிகிறேன்! வழி நடக்கின்றவர்கள், யாராகிலும் ஒரு ஸ்திரீயைச் சத்துருக்கள் துன்பப்படுத்திஞல், அவர்களுடனே யுத்தஞ்செய்து தங்கள் பிராணனைக் கொடுத்தாகிலும் அந்தத் துயரத்தைத் தீர்ப்பார்கள். நான் என் சொந்த மனைவியினுடைய துயரத்தையே தீர்க்க மாட்டாமல் இப்படியிருக்கிறேன்! எங்கள் பெரியவர்கள் முன்ஞளிலே சமுத்திரத்தைத் தோண்டியும், ஆகாய கங்கையைக் கொண்டு வந்தும், புலியும் மானும் ஒரு துறையிலே தண்ணீர் குடிக்கும்படி செய்தும், மிகவும் கீர்த்தி சம்பாதித்தார்கள். இப்பொழுது நான் ஒரு ஸ்திரீயினுடைய விசனத்தைத் தீர்க்கத் தவஞ்செய்யவில்லை! எங்கள் தகப்பஞர் இந்திரனுடைய துயரத்தைத் தீர்த்து எமஞலும் வெல்லப்படாத சம்பராசுரனைச் சங்கரித்தார். அவருடைய புத்திர

ஞய்ப் பிறந்த நான் அபகீர்த்தியைச் சம்பாதித்தேன்! எங்கள் தகப்பனுருடைய சத்தியம் தப்பிப் போகுமானுல் பழி வருமென்று மகுடஞ் சூடாமல் ஆரணியத்துக்கு வந்துவிட்டேன். இப்போது சத்துருவானவன் என் மனைவியைக் கொண்டு போகப் பெரும்பழியைத் தேடிக்கொண்டேன்! நான் செய்த பிழைதான் என்ன?'' என்று இப்படிப் பலபல விதமாய்ச் சொல்லி மனமும் நொந்து, துக்க சமுத்திரத்திலே மூழ்கினவராய்த் துயரப்பட்டார்.

சுக்கிரீவன் அந்த விசனத்தைப் பார்த்து, தைரிய வார்த்தைகளைச்சொல்லித் துயரக்கடலினின்றுங் கரையேற்றினுன். ஸ்ரீராமர் சுக்கிரீவனைப் பார்த்து, "ஐயா, நீ ஆற்றினபடியினுலே துக்கமாறினேன்! அல்லாவிட்டால், துக்கம் நீங்கிச் சீவனுடன் இருப்பேனே? இதைக்காட்டிலும் நீ வேறுதவி செய்ய வேண்டுமா? இப்படிப் பூமியிலே எனக்கு அதிக விசனமும் அபகீர்த்தியும் உண்டாயிருந்தாலும், உன் குறையை முடித்த பின்பு என் குறையை முடித்துக்கொள்வேனேயல்லாமல், முன்னே என் விஷயத்தைக்குறித்து ஒன்றுஞ் செய்வதில்லை,'' என்று சொல்லினுர்.

அத்தருணத்தில் அனுமன் வணங்கிச் சுவாமியைப் பார்த்து, "அடியேன் ஒரு விண்ணப்பம் செய்துகொள்ளுகிறேன். அதனைத் தேவரீர் திருவுளம் மகிழ்ந்து கேட்டருளவேண்டும்: துஷ்கிருத்தியத்தைச் செய்யும் வாலியை முன்னே கொன்று, சுக்கிரீவ மகாராஜாவுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து, அப்புறம் படைகளைக் கூட்டினுலல்லாமல், அந்த இராட்சதன் இருக்கும் இடம் தேடிப் பிடிக்க இயலாது. மேலும், நாம் மானிடப் பிறப்பினை உடையவர்கள். ஆகாசமோ, பூமியோ, பர்வதமோ, பாதாளமோ, அது இன்னவிடமென்று நம்மாலே அறியப்படுவதன்று. இராட்சதர்கள் ஓர் இமைப்பொழுதுக்குள்ளே சகல உலகங்களிலும் பிரவேசிப்பார்கள்; அந்த அந்த இடங்களில் தாங்கள் இச்சித்த பொருள்களையெல்லாம் கொள்ளை கொள்வார்கள்; ஒருவ

னிடத்தில் தீவினையானது வருவதும் போவதும் போல, மாயையினுலே வருவார்கள் போவார்கள். அவர்கள் வாசஞ் செய்யுமிடம் யாராலே அறியத்தக்கது! ஆகையால், ஏக காலத்திலே எல்லோரும் வெவ்வேருக உலகமுழுமையும் பர விப் போய்ச் சீதாபிராட்டியார் இருக்குமிடத்தைத் தேட வேண்டும். அப்படியல்லாமல், ஒவ்வொரு திசையாகத் தேட வேண்டுமென்ருல், உலகம் விஸ்தாரமானதாகையால், மிக வும் அருமையாகும். மேலும், பல வருஷம் கழிந்து போகும். இதற்கு உபாயம் என்னவென்ருல், எழுபது வெள்ளம் வானர சேனையிருக்கின்றது. அது யுகாந்தகாலப் பிரளயம் போல உலகமெல்லாம் மூடிக்கொள்ளும். சமுத்திரத்தைக் குடிக்க வேண்டுமென்ருலும், பிரமாண்டத்தையும் மகாமேருவையும் பேர்த்தெடுக்க வேண்டுமென்ருலும், அப்படியே செய்யும். ஆதலால், அந்த வானரங்களைக்கொண்டு மேற்சொல்லிய படியே செய்யவேண்டும் என்று அடியேனுக்குத் தோன்று கின்றது,'' என்று சொல்லினன். அதற்குச் சுவாமியும், "மெய்தான்! அவ்வண்ணமே செய்வோம்! இப்பொழுது அந்த வாலியினிடத்திற்குப் போவோம், வாருங்கள்,'' என்று சொல்ல, நல்லதென்று அனைவரும் நடந்தனர்.

## 7. வாலி வதைப் படலம்

அப்படி நடக்கிற வழியிலே சிங்காரமான தேவகன்னிகை களின் ஊஞ்சல்களும், சந்தனச் சாரல்களும், செய்குன்றங் களும், சண்பகச் சோலைகளும், அந்தச் சோலைகளின்மேல் மேகங்கள் வந்து உறங்குகிறதும், மதயானைகளும் மலைப் பாம்புகளும் சஞ்சரிக்கிறதும், புலிகள் முழங்குகிறதும், தேனெழுகி ஓடுகிறதும், பொற்சன்னங்களும் பல வித இரத் தினங்களும் கும்பல் கும்பலாய் இருக்கிறதும், பட்சிகள் முத லானவை பரவி அங்கங்கே இரைவதுமான இப்படிப்பட்ட

சிங்காரங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு, யாளிகளும் சிங்கங்களும் புலிகளும் மதயானைகளும் ஏறிப்போவது போல ஏறி, பத்து யோசனைத்தூரம் உயரப்போய், தெய்வலோகமே இறங்கி வந்திருக்கிறது போல அதிக சிறப்புடனே பிரகாசிக்கின்ற வாலியிருக்கும் பர்வதத்தைச் சேர்ந்தார்கள்.

அப்புறம் இனியென்ன செய்யலாமென்று யோசனை செய்து, ஸ்ரீராமர் சுக்கிரீவனைப் பார்த்து, "நீ போய் அந்த வாலியை அழைத்து யுத்தஞ்செய்தால், அப்போது நான் பாணப்பிரயோகஞ்செய்து அவனைச் சங்கரிக்கிறேன்," என்று சொல்ல, எப்படியும் பகையை நிவாரணஞ் செய்து கொள்ள வேண்டுமென்று இருக்கிற சுக்கிரீவனும், "அப்படியே செய்யலாம்," என்று சம்மதித்து, சமுத்திரம் அஞ்சவும், கார்மேகங்கள் நாணவும், பூமியிலுள்ளவர்கள் பயந்து உடல் வியர்த்து ஓடவும், சொர்க்கத்தவர்கள் வருந்தவும், கொக்கரித்துக் கர்ஜித்தான். உடனே வாலியை அதட்டிக் கூப்பிட்டு, "என்னை வந்து எதிர்த்தாயானால் உன்னை வெல்வேன்!" என்று கூறி, வாய் மடித்துத் தோள் தட்டி ஆரவாரஞ் செய்தான். அந்தச் சத்தம், சம்பிரமத்துடனே படுத்து இடத்தோள் துடிக்கப் புட்பசயனத்தின்மேல் ஒரு பாற்சமுத்திரம் கிடப்பது போல நித்திரை செய்கின்ற வாலியின் காதிலே விழுந்தது. அதைக் கேட்ட மாத்திரத்திலே அவன் நித்திரை தெளிந்து, யானையின்சத்தத்தைக் காதிலே கேட்ட சிங்கம் போலச் சந்தோஷமடைந்து, தம்பி யுத்தத்திற்கு வந்திருக்கிறானென்பதை அறிந்து, கோபத்துடனே நகைத்தான்; பிரளய காலத்திலே பொங்கி வருகிற கடல் போலச் சரீரப்பூரிப்போடே அதி சீக்கிரமாய் எழுந்தான். அவன் சரீரத்தில் மயிர் சிலிர்த்துக்கொண்டது; வடவாமுகாக்கினியும் குளிரத்தக்கதாகக் கண்களிலிருந்து கோபாக்கினி சொலித்தது; பெருமூச்சானது அதிகரித்ததால், மூக்கிலும் வாயிலுமிருந்து புகையெழும்பித் தேவலோகத்திற்கும் அப்புறத்தே பிரவேசித்தது. அவன் கையைக் கைபுடனே

அறைந்தான். அறைந்த சத்தத்தினலே பூமிக்குக் காவலாயிருக்கின்ற அட்டதிக்கஜங்களும் நடுநடுங்கி மதச் செருக்கு அடங்கின. அன்றியும், இடிக்கூட்டங்களும் ஏங்கின; தேவலோகமும் திகைத்தது. அவன், "இதோ வந்தேன்! வந்தேன்!" என்று முழங்கினன். பருவதாகாரமான தேகத்தையுடைய வாலியானவன், நவரத்தின மகுடத்தையணிந்த தன் சிரம் ஆகாயத்தைத் தீண்டும்படி நின்முன். தேவர்கள் நிலே குலேந்தார்கள். அவன் பற்களே நெறநெற வென்று கடித்தான்; தோள்களேக் கொட்டினன்; சர்வ சங்கார காலத்திலே தகிக்கின்ற யுகாந்த காலாக்கினிபோலவும், தான் கடைந்த கடலிற்பிறந்த ஆலகால விஷம் போலவும் கோபாவேசங்கொண்டு, கொதிப்புடனே சகலரும் பயப்பிராந்தி கொள்ளும்படி யுத்தத்திற்கு வந்தான். அப்போது அவனுடைய நாயகியான அமிர்தத்தில் ஜனித்த தாரை என்னப்பட்டவள் வெகு துரிதமாய் வந்து, அவன் காலேப் பிடித்துக்கொண்டாள். அது கண்டு வாலி, "மலேகளில் வாசம் செய்யும் மயிலேப் போலும் சாயலே உடைய பெண்ணே, என்னேத் தடுக்காதே! விட்டுவிடு! கடலேக் கடைந்து அமிர்தத்தையெடுத்து உண்டதுபோல, சண்டைக் கழைத்தவனுடைய மார்பைக் கலக்கி அவனுயிரைக் குடித்துவிட்டு, ஒரு கணநேரத்தில் திரும்பி வருகிறேன்!" என்று சொல்லினன். தாரை, "கேளும் ராஜாவே, இது வரையிலும் பலவீனப்பட்டு உமக்குத் தோற்றுப்பயந்து, ஓடி ஒளித்துக் கொண்டிருந்த உம் தம்பியாருக்கு, இப்பொழுது புதுமையாய் ஏதோ சிறிது சாமர்த்தியம் உண்டாயிற்றென்பதை நினேக்க வேண்டாவா? அவர் வலிய வந்து யுத்தத்திற்கு அழைப்பதற்கு ஏது என்னவென்ருல், அவருக்கு நல்ல உபபலம் கிடைத்திருக்கின்றது. அதனுலேதான் இத்தனே ஆரவாரஞ்செய்கின்ருர். மேலும், உம்முடைய புஜபலத்திற்குத் தக்க ஜயத்தைக் கொடுக்கும் நாள் இன்றைய நாளல்ல. ஆகையால், நீர் இன்றைக்கு யுத்தத்திற்குப் போவது சரி

யன்று," என்று சொன்னாள். அந்த வார்த்தையைக் கேட்ட வாலி, "அந்தர சொர்க்க பாதாள லோகத்திலுள்ளவர்களும் வந்து என்னை எதிர்த்தாலும், அவர்களெல்லாம் தோற்றுப் போவார்கள்! அதற்குச் சாட்சியுண்டு. அது நீ அறியாயா? மந்தரகிரியே மத்தாகவும், வாசுகியே கயிருகவும், ஸ்ரீ மகா விஷ்ணுவே தாங்கும் கல்லாகவும், சந்திரனே காம்பாகவும் கொண்டு, இந்திரன் முதலான தேவர்களும் அசுரர்களும் பாற்கடல் கடையத் தலைப்பட்ட போது, அந்த மலையைப் பெயர்த்து இழுக்கச் சத்தியில்லாதவர்களாய்ச் சோர்ந்து வருத்தப்பட்டார்கள். அது கண்டு நான் கடைந்து அமிர்த முண்டாக்கிக் கொடுத்தேன். அல்லாமலும், தேவர் தான வர்களே என்னுடன் யுத்தஞ்செய்யத்தக்க பராக்கிரமம் இல் லாதவர்களாய்த் தோற்றுப்போயிருக்க, மற்றவர்களைக் குறித்துச் சொல்ல வேண்டுமா! என் பெயரைச் சொல்லும் போதே எமனும் கர்ப்பம் கலங்குவானென்றால், இனி யார் எனக்குச் சத்துருவாய் வந்து என்னை எதிர்த்து நிற்கும் பலமுள்ளவர்? யாராயினும் அறிவில்லாமல் வந்து எதிர்த் தாலும், அவர் பெற்ற வரத்திலும் பலத்திலும் பாதி எனக்கு வந்துவிடும். அப்புறம் அவர் எவ்விதமென்னை ஜயங்கொள்ளு வர்? இப்படியெல்லாம் இருக்கின்றதனால், இப்பொழுது நான் யுத்தத்தில் ஆண்மையை இழந்து தோற்பது ஏது? நீ கிலேசப்பட வேண்டா," என்று சொல்ல, பின்னும் தாரை யானவள், "பிராணேசரே, உம்முடைய தம்பியாருக்கு ஸ்ரீ ராமரென்பவர் பிராண சினேகிதராய் ஏற்பட்டு உமது உயிரை வாங்குவதற்குக் கூடவே வந்திருக்கிறாரென்று நமக்கு அனுகூலமானவர் வந்து சொல்லக் கேட்டிருக் கிறேன். அதைச் செவ்வையாக விசாரித்துப் பார்த்துக் கொண்டுதான் போக வேண்டும்," என்றாள். அவ்விதம் சொல்லக் கேட்ட வாலி, "என்னடி, பாவி! இரு வகை வினை களையும் கெடுக்கத்தக்க உபாயத்தைக் காணாமல் துக்கித் துச்சோகப்படும் உலகத்திற்குத் தர்மமார்க்கத்தையெல்லாம்

உண்டாக்கிய ஸ்ரீ ராமரைக் குறித்துச் சொல்லப்படாத வார்த்தையைச் சொல்லி உன் பெண் தன்மையினால் அவர் விஷயத்தில் அபசாரப்பட்டாய்! இகபரங்களான இரண்டையும் பார்த்து நடப்பவரான அவருக்கு இது பெருமையாகுமோ? இதனால், அவர் பெறும் பிரயோசனமென்ன? ஆத்தும கோடிகளையெல்லாம் இரட்சிக்கிற தருமம் தானே தன்னைத் தடுமாறிப் போம்படி செய்யுமா? மாற்றாந்தாய் சொல்ல உலகத்தையெல்லாம் அவள் பிள்ளைக்கு மிகவும் சந்தோஷமாய்க் கொடுத்து வந்த மகானுபாவரைத் தோத்திரஞ்செய்யாமல், அவர்மேல் இவ்வித அபவாதமான வார்த்தையைச் சொல்லலாமா? இம்மூன்று உலகத்தார்களும் வந்து எதிர்த்தாலும் தம்முடைய வில்லைத் தவிர வேறு துணை வேண்டாத அந்தப் புருஷோத்தமர், அற்பமான செய்கையையுடைய குரங்கைச் சினேகஞ்செய்வாரா? தம்பிமார்களல்லாமல் தமக்கு வேறே உயிரில்லையென்று எண்ணியிருக்கும் கிருபா சமுத்திரமான அந்த ஸ்ரீ ராமர், நானும் என் தம்பியும் போர் செய்யும் போது நடுவே வந்து அம்பெய்வாரா? அப்படியெல்லாம் நடவாது. நீ இவ்விடத்தில் இமைப்பொழுது சும்மாவிரு. வந்த சுக்கிரீவனையும் அவனுக்குப் பக்கத்துணையாய் வந்தவர்களையும் பிராணனை வாங்கிவிட்டு இதோ வருகிறேன்! பயப்படாதே!" என்று சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்டுப் பின்னையொன்றுஞ் சொல்லாமல் தாரையானவள் அஞ்சியிருந்தாள்.

பின்பு வாலி, தூணிலிருந்து வெளிப்பட்ட உக்கிர நரசிங்கமூர்த்தி போலப் புறப்பட்டு, அந்தக் கிஷ்கிந்தா பர்வதத்தின்மேல் நின்றான். இப்படி உலகத்தை அளந்த மகா விஷ்ணு போல ஆகாயமட்டும் நிறைந்திருக்கின்ற சொரூபத்துடனே நிற்கிற வாலி, ஆர்ப்பரிக்கின்ற தம்பியைக் கண்டு, தானும் ஆர்ப்பரித்தான். அத்தருணத்திலே ஸ்ரீ ராமர் வாலியைப் பார்த்து, சமீபத்திலிருக்கிற தம்பியாரையும் நோக்கி, "அப்பா, இலட்சுமணா, அசுரர்களும் தேவர்களும் இருக்-

கட்டும். எந்தச் சமுத்திரம், எந்த மேரு, எந்தச் சண்ட மாருதம், எந்தக் காலாக்கினி இவனது சரீரத்திற்குச் சமான மாகச் சொல்லப்படும்? நன்ருய்ப் பார்!'' என்று சொன்னுர். இலட்சுமணர், "சுவாமி, சுக்கிரீவன் இப்படிப்பட்ட தமைய னைக் கொல்லுவதற்குக் கூற்றுவனைக் கொண்டு வந்து வைத் துக்கொண்டு, குரங்கின் சண்டை செய்வதற்கு ஆயத்தமா யிருக்கிருன். இன்னம் சிறிதாயினும் மனத்திலே வருத்த முண்டாக எண்ணிப் பார்க்கவில்லை. தர்மநெறி தவறும்படி தேருது நடக்கிறவர்களை நாம் நம்பித் தேறுகிறது நன்மை யன்று. சத்துருவைப்போலத் தமையனையே கொல்லுகிற தற்கு வந்து நிற்கின்ற இவன், நம்மையொத்த அன்னியருக் குச் சகாயப்படுவது எப்படி?'' என்று சொன்னுர். ஸ்ரீராமர் அந்த வார்த்தையைக் கேட்டு, "அப்பா, ஒன்று கேள்: இந்தப் பித்தான குணத்தினையுடைய மிருகத்தின் நடத்தை யைச் சொல்லலாமா? எந்தத் தாய் வயிற்றிலும் பின் பிறந்த தம்பிமார்களெல்லாம் முன் பிறந்த தமையன்மார்களுடனே ஒத்திருந்தார்களேயானுல், நம்முடைய பரதன் பெரிதும் உத்தமனுவதுண்டோ? உலகத்திலே நல்லவர் சிலரும், தீய வர் பலருமாயிருக்கின்றது உண்மையே. காரியம் கொண்டு போகிறவர் ஒருவரிடத்திலிருக்கும் நல்ல குணங்களை மாத் திரம் கிரகித்துக்கொண்டு போக வேண்டுமேயல்லாமல், அவருடைய குற்றங்களையெல்லாம் பார்க்க முடியுமா? அப் படிப் பார்க்கப்போனுல், குற்றமில்லாதவர் ஒருவருமில்லை யென்றே சொல்ல வேண்டும்,'' என்று சொன்னுர்.

இவ்விதம் இராமலட்சுமணர்கள் உரையாடிக்கொண் டிருக்கும் போது, வாலியும் சுக்கிரீவனும் பூமியிலே சஞ்சரிக் கின்ற இரண்டு பருவதத்திற்குச் சமானமான இரண்டு திக் கஜங்கள் ஒன்ருேடொன்று முட்டினது போல முட்டினுர்கள். மலையும் மலையும் எதிர்த்தது போலவும், சிங்கத்தோடு சிங்கம் எதிர்த்தது போலவும் எதிர்த்து, நின்றும் திரிந்தும் அதிக விசையாய் இடசாரி வலசாரியாகச் சுழன்ருர்கள். அப்போது

பூமி குலாலனுடைய சக்கரம் போலச் சுழன்றது. தோளோடு தோள்களை ஒற்றியும், காலோடு கால்களை எற்றியும், கோபாக்கினி மண்டியெழக் கொதித்தும், சரீரந்தெரியாத மகா வீராவேசத்தோடே யுத்தம் செய்தார்கள். ஒரு தாய் வயிற்றில் பிறந்து ஒரு ஸ்திரீ நிமித்தமாய் உயுத்தஞ் செய்கின்ற வாலி சுக்கிரீவரிருவரும், முன்னாளிலே திலோத்தமை நிமித்தம் போர் செய்த சுந்தோபசுந்தர்கள் போல விளங்கினார்கள். கடலுங் கடலும் போலவும், மகாமேருவும் மகாமேருவும் போலவும், கோபமே இரண்டு ரூபமெடுத்து யுத்தஞ் செய்வது போலவும் போர் செய்கின்ற வாலியுஞ் சுக்கிரீவனும் இருந்தாற்போலிருந்து ஆகாயத்தில் போவார்கள்; பர்வதங்களின் சிகரத்தில் குதிப்பார்கள்; பூமியிலே வருவார்கள். திக்குகளிலோடித் தொடர்வார்கள். சகல ஜீவனுடைய கண்களிலுமிருக்கின்றவர்கள் போல அங்கங்கே நிற்பார்கள். ஒருவரையொருவர் இரத்தமானது கொப்பளிக்கும்படி கடிப்பார்கள்; தசதிசைகளிலும் பொங்கிப்போய் முட்டுகின்ற சத்த சாகரத்தினுடைய ஓசையைப்பார்க்கிலும் ஐந்து பங்கு அதிக ஓசையுண்டாகும்படி கர்ஜிப்பார்கள்; யுகாந்தகால மேகம் இடிப்பது போலத் தோளிலும் மார்பிலும் கைகளைக் கொண்டு குத்துவார்கள்; வாயிலிருக்கின்ற பற்களினால் கடிக்க அக்கடித்த வாயிலிருந்து பீரிட்டொழுகுகின்ற இரத்தமானது திக்குதோறும் பாய, வானத்தில் உதயமான நட்சத்திரங்களெல்லாம் செவ்வாய் போலவும், மேகங்களெல்லாம் செவ்வானம் போலவும் பிரகாசித்தன. ஒருவரையொருவர் அறையும் போது கருமான் உலைக்களத்தில் வெந்த இரும்பைப் பணையின்மேல் வைத்துச் சம்மட்டியினாலே அடிக்க, அந்த இரும்பானது சிதறுவது போல அக்கினிப் பொறியானது சிதற, இந்திரகுமாரனாகிய வாலியினுடைய தோளும் சூரியகுமாரனான சுக்கிரீவனுடைய மார்பும் சக்கை சக்கையாய்ப் பெயர்ந்தன. பின்னும் ஒருவரையொருவர் மார்பினால் உந்தியும், பாதத்தினால் உதைத்தும், கையினால் எடுத்தெறிந்

தும், கடித்தும், இடித்தும், விருட்சங்களை வேரோடே பிடுங்கி அடித்தும், அதட்டியும், மலைகளைப் பேர்த்துத் தலை மேலே வீசியெறிந்தும், கனைத்தும், கண்களில் நெருப்புச் சொலிக் கப் பார்த்தும், ஒருவரையொருவர் நெருங்கிப் பிடித்துத் தூக்கியும், விட்டெறிந்தும், மார்பு கொடுத்தும், குத்தியும், காற்றுடி போலச் சுழன்று தடுத்தும், கால்களோடே கால் களைப் பின்னியும், தழுவியும், விழுந்தும், மார்பெலும்புக ளெல்லாம் நெரிந்து உதிரும்படி வாலினாலே கட்டியிழுத்தும், வேலைக்கொண்டு துளைத்தாற்போல நகங்களினாலே கிள்ளி மலைக்குகைகள் போலச் சரீரங்கள் திறக்கத் துளைத்தும் போர் செய்தார்கள். தேவர்களெல்லாரும் பயந்து அப்பால் போய்விட்டார்கள் என்றால், அவர்களுடைய யுத்தத்தைப் பற்றி நான் வேறென்ன சொல்லப் போகின்றேன்! இப்படி இருவரும் தோற்காமல் நெடுநேரம் சண்டை செய்யுமளவில் வாலி அதிக கோபங்கொண்டவனாய், மதயானையின்மீது சிங்கம் பாய்வது போலப் பாய்ந்து, நகங்களினாலேயும் கைகளினாலேயும் சுக்கிரீவனை மிகுதியும் மெலிந்து குறைந்து நோவச்செய்தான்.

அத்தருணத்தில் சுக்கிரீவன் மனம் தளர்ந்து இளைத்த வனாகி, ஸ்ரீராமரிடத்திற்கு வந்து வணங்கிச் சொல்லிக் கொள்ள, சுவாமியானவர், "பயப்படாதே! உங்களுள் இன்னாரின்னாரென்று வேற்றுமை தெரியாததனாலே இது வரையிலும் அம்பெய்யாமலிருந்தேன். அடையாளம் தெரி யும்படி இப்பொழுது இதை நீ தரித்துக்கொண்டுபோ," என்று அவனுக்குக் கொடிப் பூமாலையைத் தரித்து அனுப்பினார். அவ னும் அந்த மாலையானது நட்சத்திரங்களை வரிசையாகக் கோத்தணிந்தாற்போலச் சிரசிலே பிரகாசிக்க, புலி போல உறுமி, இடியைப்போல ஆர்ப்பரித்து, துரிதமாய்ப் போய், வாலியை அவன் பயப்பிராந்தி கொள்ளும்படி அனேக ஆவர்த்தியடித்து மோதிக் கபீர் என்னும்படி குத்தி னான். அதனால் வாலி, "இப்பொழுது தோற்று ஓடிப்போன

வன் மறுபடியும் வந்த காரணமென்ன !'' என்று மனத்திலே சந்தேகத்தையுடையவனாகி, எமனுங் கர்ப்பங்கலங்கிப் பீதி யடையும்படி கண்களையுருட்டி விழித்துக் குறுநகை செய்து, சுக்கிரீவன் சோகப்பட அவனுடைய உயிர்நிலைதோறும் தன்னுடைய வயிரமான கையினாலேயறைந்து காலினாலே உதைத்தான். அப்பொழுது சுக்கிரீவன் பெருமூச்சு விட்டுஅந் தப் பெருமூச்சுடனே உயிர் நீங்கினவனைப்போல மூர்ச்சை யடைந்திருந்தான். அவன் செவி வழியாயும் கண் வழி யாயும் அனற்பொறி பறக்க உதிரவெள்ளம் பெருகிவழிந்தது. பின்பு சூரியகுமாரனானவன் வருத்தம் சகிக்கமாட்டாமல் எழுந்து, ஸ்ரீராமரிருக்கின்ற திக்கை நோக்கி ஓடினான். அவன்மேல் இந்திரகுமாரன் செருக்குற்று ஓடி வந்து விழுந்து தோள் மடல் நெரியும்படி நெருக்கி, அரையில் ஒரு கையும் கழுத்தில் ஒரு கையுங் கொடுத்துத் தூக்கி மேலேயெடுத்துப் பூமியிலே மோத எத்தனித்தான். அது கண்டு சுவாமியான வர், "இனி நாம் சும்மாவிருந்தால் இவனைத் தப்பாமல் தரை யிலே மோதிக் கொல்லுவான் !'' என்று நினைத்து, ஒரு பாணத்தை எடுத்துக் கோதண்டத்திலே பூட்டித் தோள் மட் டும்வாங்கி, வாலியினுடைய மார்புக்கு நேராக இலக்குப்பார்த் துப் பிரயோகஞ்செய்தார். அந்த இராமபாணமானது பஞ்ச பூதங்களின் பலம் முழுமையும் நிறைந்த திடகாத்திரத்தை யுடைய வாலியினுடைய மார்பிலே, வாழைப்பழத்தில் ஊசி நுழைந்தது போலத் தடைபடாமல் நுழைந்தது. அப்போது தனக்குத் தோற்று ஓடிய தம்பியைத் தயையில்லாமல் எடுத்து நிலத்திலே எற்றும்படி பிரயத்தனப்பட்ட வாலியான வன் சித்தங்கலங்கி, பிரளயகால சண்டமாருதம் அடிக்க வேரறுந்து விழுந்த மகாமேருவைப்போலப் பூமியிலே விழுந் தான். இவ்விதம் இடிவிழுந்த மலையைப்போல விழுந்த வாலி யானவன், சுக்கிரீவனைப் பிடித்த கையை நழுவவிட்டு, மார் பிலே பட்டுருவிப்போகின்ற பாணத்தைப் போகவொட்டாமல் உறுதியாகப் பிடித்துக்கொண்டு, ஆகாயமட்டும் எழும்பி,

"அண்டகடாகத்தை உடைக்கின்றேன்!" என்று எழுந்திருப்பான்; "உழுந்து உருள்கின்ற பொழுதுக்குள்ளே திக்குகளையெல்லாம் நிர்த்தூளியாகச் செய்கிறேன்!" என்று குதிப்பான்; மறுபடி விழுந்து, "பூமியை வேருடனே பறிக்கிறேன் !" என்று உறுக்குவான்; "இந்தப் பாணத்தை எய்தவன் யார்!" என்று சந்தேகித்து ஆச்சரியமாய்ப் பூமியைக் கையினாலேயே அறைவான்; கண்களில் நெருப்புப்பொறி பறக்க நான்கு திக்கையுஞ்சுற்றிப்பார்ப்பான்; அந்தப்பாணத்தைக் கையினாலும் காலினாலும்வாலினாலும்பற்றிப்பறிப்பான். பறிக்கக் கூடாததனாலே நிலத்திலே ஒரு பர்வதம் உருள்கின்றது போல உருள்வான்; "இது செய்தவர் தேவர்தானோ !" என்று ஐயப்படுவான் ; உடனே நகைப்பான் ; பின்னும், "திரிமூர்த்திகளுக்கும் சமானமானவனல்லவோ இப்படிச் செய்ய வல்லவன் !" என்று சொல்லுவான்; "என் மார்பிலே பட்ட ஆயுதம் விஷ்ணுசக்கரமோ ! சிவசூலமோ ! குமரனுடைய வேலோ! இந்திரனுடைய வச்சிரமோ ! எப்படிப்பட்டதானாலும், என் மார்பில் நுழைந்து செல்லுமோ !" என்று திகைப்பான்; "இது வில்லிலே பூட்டி எய்யப்படுவது அன்று," என்று அதிசயிப்பான் ; "இதை முனீஸ்வரர்கள் தங்கள் வாக்கின் மகிமையால் பிரயோகித்தார்களோ !" என்று எண்ணுவான்; பல்லினாற் பல தரம் கடித்தும், இழுத்தும், தன் மார்பைக்கல்லியும் பறிக்கப்படாமல் இருக்கிறது அம்பேயென்பதை அறிந்தான்; அப்படி ஸ்திரமாக அஸ்திரமென்று அறிந்து, பல விதத்திலும் சலிப்புற்றான்; "என் மார்பை உயிருடனே உருவிய இப்படிப்பட்ட பாணத்தை எய்தவன் இன்னானென்பதை அவன் பெயரால் அறிகிறேன்," என்று, அதை மறுபடியும் இரண்டு கையையும் காலையும் வாலையுங்கொண்டு மிக உக்கிரமாய் இழுத்துப் பறித்தான். அது கண்டு தேவர்கள் அசுரர்கள் முதலானவர்களும் வாலியைக் கொண்டாடிச் சந்தோஷப்பட்டார்கள். உலகத்திலே சுத்த வீரர்களைக் குறித்து யார்தான் அதிசயிக்க மாட்டார்கள் ? அவன் மார்

பாகிய மலையிலிருந்து அருவி ஒழுகுகிறது போல இரத்த ஜலம் பெருகியது. சுக்கிரீவனும் அந்த இரத்தப் பிரவாகத்தைப் பார்த்துத் திகைத்து, உடன் பிறப்பென்கின்ற ஆசா பாசத்தினாலே கண்களினின்று நீர் தாரைதாரையாய் ஒழுகப் பூமியிலே விழுந்தான்.

வாலியானவன் மார்பிலிருந்து பறித்த பாணத்தை முறித் தெறிகிறேனென்று எத்தனித்தும் கூடாமையால், "நான் மேருவையும் முறிக்கத்தக்க பராக்கிரமசாலியாயிருந்தும், இந்தஅம்பை முறிக்கின்றதற்கு என்னாலே ஆகவில்லையே!" என்று நினைத்து, "இதில் யார் பெயரெழுதியிருக்கின்றது!" என்று பார்த்தான். அப்போது அதில் சொர்க்க மத்திய பாதாளமாகிய திரிலோகங்களுக்கும் மூலமந்திரமாகியும், தியானம் செய்கின்றவர்களுக்குத் தற்சொரூபத்தைக் கொடுக்கின்ற தாரகப் பிரமமாகியும், இம்மை மறுமை என்கிற வியாதியை நிவர்த்தி செய்கின்ற பரம ஔஷதமாகியும் விளங்குகின்ற ஸ்ரீ ராமனென்று எழுதியிருந்த திருநாமத்தை நன்றாகத் தெரியக்கண்டான். இப்படிக் காணவே, "ஓ! ஓ! ஒரு நாளும் வேதசாஸ்திரங்களாற் சொல்லப்பட்ட தர்மந்தவருத சூரியகுலமானது, கிருகதர்மத்தைக் கைவிட்டு வானப்பிரஸ்தனாகி எங்கள் விஷயத்தில் வில்லின் தர்மத்தை மறந்த இந்த ராமன் உற்பவித்த பின்பு, தர்மம் தவறியது!" என்று வெட்கப்படுவான்; கிரீடந்தரித்த தன் தலையை அசைப்பான்; அதிக ஆர்ப்பாட்டமாகக் கலகலவென்று சிரிப்பான்; மறுபடியும் சிறிது நேரம் ஆலோசிப்பான்; "இதுவும் ஒரு தர்மமோ!" என்று நினைப்பான்; காலிலே பூட்டிய தளையுடனே குழியில் விழுந்த மதயானையைப்போல உதைத்துக்கொள்ளுவான்; பின்னும் சரீரஸ்மரணையில்லாதவனாய்ச் சோர்ந்து கிடப்பான். "உலகத்துக்கெல்லாம் இறைவனாகிய இந்த ராமன், தானே தர்மத்துக்கு விரோதமாகிய காரியம் செய்வானாகில் மற்றவர் எப்படியாக வேண்டும்!" என்று சொல்லுவான்.

இவ்விதம் மனமழிந்து துயரப்படுகின்ற வாலிக்கு

முன்னே மனுவியாக்கியானத்திற் சொல்லப்பட்ட இராசதரு மத்தைத் தவருமல் காக்கும் நிமித்தம் வேதமார்க்கம் தப்பாமல் ராஜ்யபாரம் செய்த தசரத மகாராசாவுக்குப் புத்திரராய்த் திருவவதாரம் செய்தருளிய புருஷோத்தமராகிய ஸ்ரீராமர் பிரசன்னமானுர்.

வாலியானவன், நீலமேகமானது தாமரைகள் புஷ்பிக்கும்படி ஒரு பர்வதாகாரமாகிய வில்லைத் தாங்கிக்கொண்டு பூமியிலேவந்து நிற்பதுபோல எதிரேநின்ற ஸ்ரீமந்நாராயணராகிய இராமமூர்த்தியைக்கண்டான். கண்கள் புண்போல இரத்தமும் நெருப்பும் பொழியப் பார்த்து, “ அப்பா, நீ என்ன நினைந்து என்ன காரியத்தைச்செய்தாய்! சத்தியமும் மரபும் தவருமல் காத்து, அதனிமித்தம் பிராணனை விட்டுவிட்ட புனிதராகிய தசரத சக்கரவர்த்தியாருக்குக் குமாரனுய், பரதனுக்கு முன்னே பிறந்தாய்; அயலாரைத் தீமைசெய்யவேண்டாவென்று ஆக்கியாபித்து அந்த ஆக்கினை தப்பி நடந்தவர்களைத் தண்டித்த நீயே இப்பொழுது தீமைகளைச் செய்தல் நன்மையாமா? பெற்றதாயைப்போல அன்பையும்தயையையும்சினேகத்தையும் தருமத்தையும்கைவிடாமல்தழுவிக்கொண்டிருக்கின்றநீ, ‘குலதர்மம் இப்படிப்பட்டது. கல்வி இப்படிப்பட்டது. நன்மை இப்படிப்பட்டது. திரிலோகாதிபத்தியம் இப்படிப்பட்டது. புஜபலம் இப்படிப்பட்டது. உலகத்தை இரட்சிக்குந் தன்மை இப்படிப்பட்டது’ என்று தருமசாஸ்திரம் சொல்ல அறிந்திருந்தும், மறந்தவர்களைப்போல அந்தச் சாஸ்திர நிச்சயத்தை அழிக்கலாமா? ராஜ தருமமென்பது உங்கள் வமிசத்திலே பிறந்தவர்களுக்கெல்லாம் இயற்கையாயிருக்கின்றதல்லவா? அப்படியிருக்க, உனக்கு ஆவியும், ஜனகபுத்திரியும், கிடைப்பதற்கு அருமையான அமிர்தத்தையொத்தவளும், உன் தேவியுமாகிய சீதையைப் பிரிந்த பிறகு நீ மனம் திகைத்தாயோ? சித்திரத்திலும் எழுதப்படாத திவ்விய சுந்தரத்தையுடைய ஸ்ரீராமா, இராட்சதர்கள் ஒரு பிழை செய்துபோனுல், அதற்கீடாகக் காட்டிலிருக்கின்ற ஒரு குரங்கு

ராஜனைக் கொல்லும்படி உங்கள் மனு நீதியிற்சொல்லியிருக் கின்றதோ ? உனக்குரிய இரக்கத்தை எங்கேதான் கொட்டி விட்டாய் ? என்னிடத்தில் என்ன குற்றத்தைக் கண்டாய் ? ஐயா, இந்த அபகீர்த்தியை நீ பூண்டுகொண்டால், இனிக் கீர்த்தியைத்தாங்கத் தக்கவர் யார் ? உலகத்திலே சஞ்சரிக் கிற குரங்கின் கூட்டத்திற்கு மாத்திரம் கலி காலம் நேரிட் டதோ ? ஒழுக்கமும் நன்மையும் வேண்டுவது எளியவர் களுக்கு மாத்திரமோ? பலவான்களுக்குவேண்டுவதில்லையோ? அவர்கள் பழியே செய்தாலும் புகழாய் முடியுமோ? ஒருவரும் துணை வேண்டாத விஜயப்பிரதாபனே, பெற்ற பிதாவானவர் உனக்குக் கொடுத்த ராஜ்ய சாம்ராஜ்யத்தை உன் தம்பிக்குக் கொடுத்து, நாட்டில் அவரைக் கொன்ருய். இப்போது இந்த ராஜரிகத்தை என் தம்பிக்குக் கொடுத்துக்காட்டில் என்னைக் கொன்ருய். இதைப்பார்க்கிலும் வேறென்ன காரியம் செய்ய வேண்டும் ? ஒரு நாளும் கோபமில்லாதவனே, ஆண்மை செலுத்துகிறது சுத்த வீரர்களுக்குரிய ஒழுக்கமே ஆயினும், என்னை இப்படி அநியாயமாகக் கொன்ற நீ நாளை அந்த இரா வணனை முறை தவறிய காரியஞ்செய்தானென்று கோபிப் பாயோ ? இருவர் எதிர்த்து யுத்தஞ் செய்துகொண்டிருக்கும் போது அவ்விருவரையும் சுற்றத்தாராகப் பாவிக்க வேண்டு வதை விட்டு, ஒருவர்மேல் கிருபையைச் செலுத்தி ஒருவர் மேல் கோபங்கொண்டு ஒளிந்திருந்து வில்லை வளைத்துப் பாணப்பிரயோகம் செய்வது தர்மமோ ? இது பக்ஷபாதமே ; வீரமுமன்று ; விதியுமன்று ; சத்தியமுமன்று ; உன் பூமிக்கு என் சரீரம் பாரமுமன்று ; நான் உனக்குப் பகையாளியுமல் லேன் ; சிறிதாகிலும் அன்பும் அருளுமில்லாமல் நீ இவ் விதம் செய்தது என்ன நியாயம் ? இகபரங்களில் வரும் நன்மை தீமைகளைக் குறித்துப் பார்த்து, சத்துருக்கள் சினே கிதர் அந்நியர்களாகிய சகலரும் ஒப்பச்செய்கிறதல்லவோ தருமத்தை இருட்சிக்கிறதென்பது ? குற்றம் வந்து சம் பவிக்குமென்று பாராமல், ஒரு பட்சத்திற்சார்ந்து உதவி

செய்யலாமா ? சிங்கத்தைக்கைவிட்டுச் சிறுமுயலைத் துணை யாகச்சேர்த்துக்கொள்வது போல, பகையாளியைச் சாதிக்க வேண்டுமென்று ஆலோசித்த நீ, நொடிப்பொழுதிலே ஜயிக் கத் தக்க சாமர்த்தியனுகிய என்னை ஒழித்து, பலவீனனுகிய சுக்கிரீவனைக் கைப்பற்றிக்கொண்டாயே! இது என்ன முயற்சி? சந்திரனுக்குக் களங்கமுண்டானது போலக் களங்கமில்லாத சூரியகுலத்துக்கு நீ பிறந்து களங்கமுண் டாகும்படி செய்தாய்! ஒருவன் வந்து என்னைப் போருக்கு அழைக்க, நான் அவனுடனே எதிர்த்துச் சண்டை செய்கிற சமயத்திலே, ஒளிந்திருந்து அம்பெய்து என் பிராணனை வதைத்துப் பின்னும் வெட்கமில்லாமல் நான் விழுந்துகிடக் கின்ற இடத்தில் எனக்கு முன் வந்து நிற்கின்ருய்! சாஸ்திர தர்மத்தையும் உங்கள் பிதுராசாரத்தையும் கைப்பற்ருமல், என்னைக் கொன்று ராஜதருமத்தின் வேலியை முறித்தெறிந் தாய்! உன் தாரத்தை ஒருவனெடுத்துக்கொண்டு போக, அபவாதமாய் எப்படிக் கையிலே வில்லை வைத்துக்கொண்டு சும்மாவிருக்கிறதென்று, நிராயுதன்மேல் மறைந்து அஸ்திரம் பிரயோகத்ததல்லவோ வில் வீரம் !'' என்று பொறி பறக்கப் பல்லைக்கடித்து, மனங்கொதித்து, அதிக கோபமாய்க் கண் ணின் வழியே நெருப்புச் சிந்தும்படி பேசினுன்.

ஸ்ரீராமர், "நீ முன்னுளிலே பிலத்துவாரத்தில் புகுந்து நெடுநாள் வெளி வாராமலிருந்தாய். அப்போது உன் தம்பி மிகவும் துயரப்பட்டுத் தானும் அந்தப் பிலத்துவாரத்திற்குள் உன்னிடத்தில் வரப் புறப்பட்டான். இவனை உங்கள் குலத்தி லுள்ள பெரியவர்களும் படைத்தலைவர்களும் பிடித்துக் கொண்டு, 'நீயும் போய்விட்டால் எங்களுக்குக் கதி யார்? இனி நீயாவது இருந்து அரசாட்சிசெய்,' என்று வெகுவாய்ச் சொல்லி நிறுத்தினுர்கள். அவர்கள் இப்படிச் சொல்லியும் இவன், 'என் தமயன் இறந்து போய் நான் மாத்திரம் உயி ருடனே இருக்கிறதா ? இப்பொழுதே இறந்து போகிறேன்! அரசுஞ் செய்கிறதில்லை! நீங்கள் என்ன சொல் சொன்

னீர்கள்!' என்று மறுத்துவிட்டான்; மறுபடியும் அவர்கள் பல விதத்திலும் இணங்கும்படி சொன்னதைக் கண்டு, அரசாட்சி செய்யச் சம்மதித்தான். நீ வந்தவுடனே உன்னை வணங்கி, உன் ஆட்சியை உன் வசஞ்செய்து, நடந்த சமாசாரஞ் சொன்னான். அப்போது நீ இவன்மேல் கோபித்துக்கொண்டு, இவனிடத்தில் குற்றமில்லாமலிருந்தும், இவனைக் கொல்லுகிறதற்கு நினைத்து மிகவும் உபத்திரவஞ்செய்தாய். அத்தருணத்திலே இவன், 'என் பிழையெல்லாம் பொறுத்துக்கொள்! உனக்கு அபயம்!' என்று சொன்னான். அல்லாமலும் மகா பலவானாகிய இந்தச் சுக்கிரீவன், 'உனக்கு யுத்தத்தில் நான் தோற்றேன்!' என்று கைகளை உயர எடுத்துக் கும்பிட்டும், 'இவன் பிராணனை எமனுக்கு உணவாகக் கொடுக்கிறேன்!' என்று சீறினாய்: இவன் நடுங்கி அப்புறத்தே ஓடினான். அதையறிந்தும் நீ மனமிரங்காமல், தம்பியென்றும் பாராமல், துரத்தினாய். நீ வந்தால் உன் தலை வெடித்துப் போம்படி ரிஷி சாபம் உண்டாயிருக்கின்ற மலையின்மேல் இவன் போய் ஏறினான். நீ அவ்விடத்திற் போகவில்லை. அதனால், இவன் உயிர் தப்பிப் பிழைத்தான். எப்போதும் தெளிவினையுடையவர்களுக்கெல்லாம் பரதாரத்தை இச்சியாமலிருக்கின்றதே அன்பும், நல்ல குடிப்பிறப்பும், வீரமும், வித்தையும், மெய்ம்மையும், நீதியுமாம். மேலும், நாம் பலவானாயிருக்கிறோமென்று எளியவரைத் துன்பப்படுத்துகிறதே வீரங்குன்றுவதும், ஒருவர் விவாகம் செய்துகொண்ட ஸ்திரீகளைக் கற்பழிக்கிறதே தருமங் தவறுவதுமாம். இப்படியிருக்க, நீ தருமம் இன்னதென்பதையும் இம்மை மறுமையையும் யோசித்துப் பாராமல், உனக்குள்ள பெருமையையும் விட்டு, உன் அருமைத் தம்பியின் பிராணபதமாகிய மனைவியையும் பலாத்காரமாய் அபகரித்துக்கொண்டாயாகையினாலும், இவன் எனக்குப் பிராண சினேகிதனானபடியினாலும், இவனுடைய துயரத்தை நிவர்த்தி செய்கிறது என் கடனாகையினாலும், அந்நியர்க

ளாகிலும் எளியவர்களாய் இருக்கின்றவர்களுக்கு வந்த ஆபத்தைத் தீர்க்கிறதே என்னுடைய மனேபீஷ்டமாகையிஞலும் இப்படிச் செய்தேன்,'' என்று சொன்ஞர்.

வாலி, "ஐயா, நீ தகாதவை என்று சொல்லிய இவ்வளவு செய்கைகளும் எங்களுக்கு இயற்கையாய் இருக்கின்றன. கற்புடைய உங்கள் குலத்து ஸ்திரீகளின் புணர்ச்சி போலப் பிரமதேவன் எங்களுக்கு உண்டுபண்ணவில்லை; தாயென்றும், தங்கையென்றும், மகளென்றும், மனைவி என்றும், தமையன் மனைவி, தம்பி மனைவி என்றும் கிரமமில்லாமல் நேர்ந்தபடி புணரும்படி செய்தான். மேலும், நாங்கள் கல்யாணம் செய்கிறதுமில்லை. எங்கள் மிருக ஜாதிக்குத் தக்கப்படி மனம் போனவாறு நடந்துகொள்ளுகிறதேயல்லாமல், வேத மார்க்கத்துக்கு ஒத்த குணமுமில்லை. ஆகையால், சிறிதும் குற்றமேயில்லை. இதை நீ அறி,'' என்று சொல்ல, ஸ்ரீராமர், "நீங்கள் சிரேஷ்டர்களாகிய தேவர்களுக்குப் புத்திரர்களாய்ப் பிறந்து, தரும மார்க்கத்தை அறிகிறபடியால், உங்களுக்கு மிருகத்துவமே இல்லையென்பது தெரிய வந்தது. ஆகையால், அதர்மஞ் செய்வது அடாது, தர்மத்துக்கு இருப்பிடமாயிருக்கின்றது பேரறிவுணர்வில்லாத ஜடமாகிய சரீரமாய் ஐம்புலன்களையும் பகுத்தறிகின்ற அறிவல்லவா? சாஸ்திர தர்மங்களைச் செவ்வையாக அறிந்த நீ பிழை செய்து பாவத்தையடையலாமா? முதலையானது பிடித்திழுக்கச் சங்கு சக்கரமேந்திய ஆதிமூலமாகிய ஸ்ரீமந் நாராயணனைக் கூவியழைத்துப் பேரறிவிஞலே மோட்சானந்தத்தைப் பெற்ற அந்தக் கஜேந்திரனும் மிருக ஜாதிதானே? தரும சிந்தையிஞலே சீதையின் துக்கத்தை ஆற்றும்படி இராவணனுடனே யுத்தஞ்செய்து மோட்சமடைந்த எங்கள் பிதாவாகிய ஜடாயுவும் கழுகுகளுக்கு ராஜாவாகிய ஒரு பட்சி தானே? ஆகையால், அறிவே பிரதானம். நல்லது தீயது அறியுந் தன்மை இல்லாததல்லவோ மிருகம்? நீதி சாஸ்திரத்தின் கருத்து நீயறியாதது மற்றென்றுமில்லை என்கிறதை

உன் வார்த்தையே தெரிவிக்கின்றதே! 'இன்னது தக்கது; இன்னது தகாதது,' என்று சரியாக அறியாதிருக்கின்றவர்கள், உயர்ந்த மனிதர்களானாலும் மிருகமே. மிருகமானாலும் மநு நீதி தவறாமல் நடக்குமாகில், அது தேவர்களுக்குச் சமானமே. நீ காலனுடைய பராக்கிரமத்தையழித்த சிவனைப் பத்தியுடனே பூசை செய்து, அந்தப் புஜபலத்தால் ஆகாய மட்டுமன்றி மற்ற நான்கு பூதத்தின் வலிமையையும் பெற்றிருக்கின்றாயே! அனேகம் பேர் தர்மமார்க்கத்தை அடைந்திருக்கின்றார்கள். அனேகம் பேர் அதை இழந்திருக்கிறார்கள். தேவர்களிலும் தீமை செய்து திருத்தப்பட்டவர்கள் இருக்கிறார்கள். இப்படியிருக்கிறபடியினாலே, எந்தக் குலத்திலும் பிறந்த எப்படிப்பட்டவர்களுக்கும் மேன்மையும் கீழ்மையும் அவரவர் செய்யும் வினையினாலே உண்டாகின்றன. அந்தத் தன்மையை அறிந்தும், நீ இல்லறத்தைக் கெடுத்து நடந்தாய்," என்று சொன்னார்.

அது கேட்ட வாலி, "நல்லது! அப்படியானாலும், என்னெதிரே வந்து யுத்தஞ்செய்யாமல், வேடர் மிருகங்களை எய்கிறது போல மறைந்திருந்து அம்பு விட்டது ஏன்?" என்று கேட்டான். அதற்கு இலட்சுமணர், "முன்பு உன் தம்பியாகிய இந்தச் சுக்கிரீவன் வந்து சரணாகதி பண்ணினான். அப்போது எங்கள் தமையனார் முறைதவறிய உன்னைக் கொன்று இவனை இரட்சிக்கிறதாக அபயாஸ்தம் கொடுத்தார். ஆகையால், உன்னெதிரே வந்தால்,நீயும்பிராணன்மேல் இச்சையையுடையவனாய்ச் சரணாகதியடைந்தால், அவனுக்குக் கொடுத்த வாக்குத் தவறிப்போகுமென்று, மறைந்திருந்து பாணப்பிரயோகம் செய்தார்," என்று சொல்லினர்.

அவ்வார்த்தையை வானரகுலத்திற்கு ராஜாவாகிய வாலி கேட்டு, மெய்தானென்று எண்ணிக் கோபமடங்கித் தர்ம சொரூபரான ஸ்ரீராமர் குற்றஞ்செய்ய மாட்டாரென்று மனம் சம்மதித்து, மெய்யறிவு பிறந்து, நமஸ்காரஞ் செய்து சொல்லுகிறான்:

"தாய் போலச் சகல ஜீவராசிகளுக்கும் கிருபை செய்து, தர்மமும் தகுதியும் மேன்மையும் நீயேயென்று சொல்லும்படி நிற்கின்ற பரமாத்துமனே, நீ விசேஷமாகக் குறித்துப் பார்க்கும் தர்மத்தை நாய்க்குச் சமானமாகிய எங்களிடத்திலேயா பார்க்கிறது ? நான் செய்த தீமைகளைப் பொறுத்தருள வேண்டும் ! யாதொன்றுந் தெரியாத குரங் கென்று நினைத்து, நாயேன் சொன்ன சொற்களைப்பற்றி உனது திருவுளத்திலே சீற்றங்கொள்ளாதே ! மிக்க துக்கத் தைத் தருகின்ற என்னுடைய ஜனனமரண வியாதிகளுக்கு அருமையாகிய ஒரு சஞ்சீவி மருந்து போலத் தோன்றிய ஐயனே, கேட்ட வரங்களையெல்லாம் கொடுக்கின்ற வள் ளலே, அடியேன் ஒரு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளு கிறேன் ; அதைக் கேட்டருள வேண்டும்: கூர்மையாகிய அஸ்திரத்தினால் எய்து நாயடியேனுடைய பிராணன் பிரிந்து போகிற சமயத்திலே மெய்யறிவைக் கொடுத்து இரட்சித் தாய். பிரம விஷ்ணு ருத்திரரென்கிற மும்மூர்த்திகளும் நீயே. அம்மூவர்களுக்குள்ளும் முதல்வனாயிருக்கின்றவனும் நீயே. பகையும் நீயே. உறவும் நீயே. மற்றுஞ் சகலமும் நீயே. முப்புரங்களையும் எரித்த சிவன் முதலானவர்களால் நான் பெற்ற வரங்களையெல்லாம் உருவி, என் வலிமை மிகுந்த மார்பையும் உருவி, உயிரையும் உண்ட உன்னுடைய அஸ் திரமேயல்லாமல் தர்மமென்பது வேறுண்டோ ? மனிதர்கள் தேவர்கள் முதலியவர்களுமாய், கார்கால முதலாகிய அறு வகைப் பருவங்களும் அந்தந்தப் பருவத்திற்கு உரிய பயனு மாய், பூவும் மணமும் போலச் சர்வ பதார்த்தத்தையும் விட்டு நீங்காமற் கலந்து பொறுமையாயிருக்கின்றவனே, உனது கடாட்சத்தினாலே நீ இன்னானென்றும் உனது தன்மை இது வென்றும் அறியும்படி எனக்குத் திவ்விய ஞானம் உதய மானபடியினாலே, இனிப் பரமபதங் கிடைப்பது அருமையோ? தர்ம ஸ்வரூபனாகிய உன்னைப் பிரத்தியட்சமாகக் கண்ட நான், இன்னம் காண வேண்டுவது வேறென்ன இருக்

கின்றது? ஜன்ம ஜன்மாந்தரங்கள் தொடங்கி வந்த மகத்தாகிய என் கர்மத்திற்குப் பிராயச்சித்தம் என்னவென்ருல், அடியேனுக்கு நீ முத்தி கொடுத்து இரட்சிக்கிறதுதான்!

"உயர்ந்த பெருமை பொருந்திய ஸ்ரீராமா, என்னைக் கொல்லும்படி என் தம்பி உன்னைக் கொண்டு வந்து விடுத்து, சிற்றினமாகிய குரங்குகளுடனே கூடியிருந்து ஆலோசித்தும், சம்பாஷித்தும், அரசாண்டு வந்த இந்த வெறுமையாகிய இராச்சியத்தைத் தான் பெற்றுக்கொண்டு, எனக்கு மோட்ச இராச்சியத்தைக் கொடுத்தான். இதைப் பார்க்கிலும் அதிகமாகிய உதவி மற்ருென்றுண்டோ? சுவாமி, உன்னிடத்தில் நான் ஒரு வரம் கேட்கிறேன்: அது என்னவென்ருல், என் தம்பி குரங்கின் சேஷ்டையாய்க் கள்ளைக் குடித்த மயக்கத்தினுல் அறிவு தடுமாறி, உனது விஷயத்தில் ஏதாகிலும் அபசாரப்பட்டால், என்மேல் ஏவிய அம்பென்கிற கூற்றுவனை அவன்மேல் ஏவவேண்டா. இதுவுமல்லாமல், இன்னமொன்று நான் சொல்வதுண்டு: உன் தம்பிமார்கள் என் தம்பியைப் பார்த்து, தமையனைக் கொல்லுவித்தானென்று இகழ்ச்சி செய்யாமல் காத்துக்கொள்ள வேண்டும். நீ முன்னமே, 'உன் குறையை முடிக்கிறேன்,' என்று அவனுக்கு அபயாஸ்தம் கொடுத்திருக்கின்ருய். மேலும், இது கர்மாநுசாரமாகையால் இதைக் கடக்கக்கூடுமா? மாயையையுடைய அந்த இராட்சதனைப் பிடித்து வந்து உன் முன்னே விட்டு, என் ஆற்றலைக் காண்பிக்கிறதற்குப் பாக்கியஞ் செய்யாமற்போனேன்! இனியதைச் சொல்வதனுற் பிரயோஜனமில்லை! ஆயினும், இப்பொழுது நீ நினைத்ததைச் செய்ய வேண்டும் என்ருலும் இந்த அனுமனே அதைச் செய்கிறதற்கு உரியவன். இவனை உன் கையிலிருக்கிற வில்லைப் போலவே திருவுள்ளத்திலே வைத்தெண்ணுக. என் தம்பியை உன் தம்பியாகவே நினைக. இவர்களுக்குச் சமானமாகிய துணைவர்கள் உனக்கு வேறில்லை. இவர்களைக் கொண்டு உலகமாதாவாகிய பிராட்டியைத் தேடிக்கொள்,"

என்று சொல்லிச் சமீபத்தில் பிரலாபித்துக்கொண்டு நிற்கின்ற தன் தம்பியைப் பார்த்து, "அப்பா, அங்கலாய்க்காதே! வா. வேதமும் ரிஷீஸ்வரர்களும் பிரமாவும் மற்ற ஆகம சாஸ்திரத் துறைகளின் முடிவும் சொல்லுகின்ற அநாதியாகிய வஸ்துவே வில்லை ஏந்திக்கொண்டு ஸ்ரீ ராமனென்கிற நாமந்தரித்துத் தர்மத்தை நிலை நிறுத்துகிறதற்கு இங்கு அவதரித்திருக்கின்றது! இதை எவ்வளவாகிலும் சந்தேகமாக நினைக்கப்போகிறாய்! நிலைபெற்றிருக்கின்ற மோட்ச ஐசுவரியத்தை விரும்பி அதற்குத் தகுதியாகிய மார்க்கத்தில் நிற்கின்ற ஜீவாத்துமாக்களெல்லாம் இவனுடைய நாமத்தை யோசிக்கின்றன; இவனையே, தியானிக்கின்றன. இதற்குச் சாட்சி வேண்டுமானால், என்னைக்கொன்ற மகத்துவமே போதும். வேறோர் ஏதுவும் வேண்டுவதில்லை. நாள்தோறும் இவனுக்கு அளவில்லாத பொல்லாங்குகளைச் செய்தவர்களும் நற்கதியடைவார்களானல், இவனுடைய பாதாம்புயத்தைச் சார்ந்திருந்து ஏவல் செய்கிறவர்கள் பெறும் பதவியானது சொல்லும் தரமாமோ? உனக்கு விதியே உதவி செய்ததனல் அருமை என்ன? நீ இகபரமிரண்டும் கொண்டாய்! இனிச் செய்யத்தக்கது என்னவென்றால், ஸ்ரீமகாலட்சுமியையும் மறுவையும் மார்பிலுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவாகிய இந்த இராமசந்திரனது ஏவலைச் சிரசாக வகித்துக்கொண்டு, மனத்தை ஒரு வழியிலே நிறுத்தி, மூன்று உலகத்தாரிலும் மிகவும் உயர்ந்திருக்கக் கடவாய். மதத்த குரங்கின் புத்தியைக் காட்டாமல், அதை நிவர்த்தி செய்து, செய்த நன்றியை நினைத்து, இவனுக்கு ஆபத்து வந்த போது உன்னுயிரையாவது கொடுத்து, சகலருக்கும் மோட்சபதத்தைத் தருகின்ற இந்த ராகவன் சொன்னவைகளையெல்லாம் தடுக்காமற்செய்து, நெடுங்காலமளவும் ஒழியாத ஜனனத்தை ஒழித்துவிடு. ஆட்சியின் பெருக்கத்தினல் களிப்படைந்து, மறந்து, இகழ்ச்சி செய்யாமல், இவனுடைய திருவடித் தாமரையை நீங்காது வாழக்கடவாய்! ராஜாக்களும் எரி

கின்ற நெருப்பும் சரியென்று நினை. அடிமைகள் செய்த குற்றம் அற்பமானாலும், அரசர்கள் பொறுப்பார்கள் என்று நினைக்க வேண்டா. அகலாமலும் அணுகாமலுமிருந்து தீக் காய்கின்றவர்களைப் போலப் பக்குவமாக நடந்துகொள்,'' என்று இவ்வித உறுதிகளையெல்லாங்கொண்டு தம்பிக்குப் புத்தி சொல்லினான்; பிறகு ஸ்ரீராமரைப் பார்த்து, "ஐயா, தாசரதீ, இந்தச் சுக்கிரீவனும், இவன் சுற்றத்தாரும் இன்று முதல் உனக்கு அடைக்கலம்,'' என்று அவனைச் சுவாமி கையில் ஒப்புவித்துத் தன் கையைச் சிரசின்மேற்கூப்பி அஞ்சலி செய்து, உடனே தன் தம்பி முகத்தைப் பார்த்து, "என் புத்திரனாகிய அங்கதனைச் சீக்கிரத்தில் அழைப்பி,'' என்று சொல்ல, அவனிருக்குமிடத்திற்குச் சுக்கிரீவன் ஒரு வானரப் படைத்தலைவனை அனுப்பினான். உடனே வாலி குமாரன் பாலசந்திரனைப் போல வந்தான். துக்கப்படுகிறவர் களைக் கருத்திலும் நினைத்தறியாத அந்த அங்கதன் வந்து, பருவதத்தின்மேல் புஷ்ப சயனத்தில் சயனிக்காமல் இரத்த சமுத்திரத்திலே சாய்ந்து கிடக்கின்ற தகப்பனைக் கண்டான்; காணவே, கண்கள் காறுறு போல உதிரத்தையும் ஜலத்தை யும் கக்க, பூமியில் விழுந்து கிடக்கின்ற சந்திரன்மேல் ஆகா சத்திலிருந்து ஒரு நட்சத்திரம் விழுந்தது போல மண்ணின் மேற்புரள்கின்ற தந்தையின்மேல் விழுந்து பிரலாபிக்கத் தொடங்கினான் :

"தந்தையீர், நீர் இந்த எழுகடல் சூழ்ந்த உலகத்தில் ஒருவருக்கும் ஒரு தீங்காகிலும் செய்ததுமில்லை; மனத்தில் நினைத்ததுமில்லை. அப்படியிருக்க, என்ன காரணத்தினால் இந்த ஆபத்தை அடைந்தீர்? அதிருக்கட்டும். கூற்றுவன் உம்முடைய முகத்தைப் பார்த்தும் பயப்படாமல் வந்தான் அல்லவா? அவனுடைய ஆண்மையை இனி யார்தான் அடக்குவர்? திக்குகளைத் தாங்குகின்ற அஷ்டகஜங்களையும் ஜயித்து அவைகளின் தந்தங்களை முறித்த இராவணனுடைய மனமானது உம்முடைய வாலை நினைக்கும்போதெல்லாம்

திடுக்கிடச் செய்துகொண்டிருந்த அந்தப் பயமும் பறந்ததே!' தேவர்கள் மந்தரகிரியையும், வாசுகியென்னும் பாம்பையும், சந்திரனையும், மற்றவைகளையும் தாங்கி, இன்னம் ஒரு தரம் சமுத்திரத்தைக் கடைந்து அமிர்தம் கொடுக்க வேண்டு மென்று கேட்டால், யார் கடைந்து கொடுப்பார்கள்? பார்வதி சமேதனுகிய சிவனுடைய உபயபாதத்தையல்லாமல், மற் றென்றையும் அஞ்சலி செய்தறியாத கையில் ஆஞ்ஞா சக்க ரத்தையுடைய உம்மால் தேவர்களெல்லாம் இறவாமலிருக்க, அவர்களுக்கு அமிர்தம் கடைந்து கொடுத்த நீரோ இறந்து போனீர்! உமக்குச் சமானமாகச் சொல்லத்தக்கவர்கள் யாரிருக்கிருர்கள்!" என்று பலபல விதமாகச் சொல்லித் துக்கப்பட்டான்.

இப்படித் துக்கப்படுகின்ற புத்திரனைப் பார்த்து, வாலி சரீரம் வெதும்பி, அக்கினியைச் சேர்ந்த மெழுகு போல மன முருகி, "அடா, அப்பனே, என் கண்மணியாகிய அங்கதா, இனி நீ துயரப்படாதே! உலகநாயகனுகிய ஸ்ரீராமன் செய்த நல்வினைப் பயன் இது. பிறப்பும் இறப்பும் நன்ருக நிச்சயித் துப் பார்த்தால், திரிலோகத்திலுமிருக்கின்ற சகல ஜீவகோடி களுக்கும் ஆதியிலேயே ஏற்பாடாயிருக்கின்றன. பூர்வம் நான் செய்த தபோ பலத்தினுல் எனக்கு இப்படிப்பட்ட நன் மரணம் கிடைத்தது! சர்வ சாட்சியான இந்த ஸ்ரீராகவன் எதிரே வந்து எனக்கு மோட்சம் கொடுத்தான். நீ பால்ய குணத்தை விட்டுப் பாரமார்த்திகத்தை வகித்து, என் வார்த் தையை உறுதியாகப் பற்றுக. தனக்கு மேலாகிய வஸ்து வேறென்றுமில்லாத உண்மைப் பொருளாயிருக்கின்ற ஒரு வனே வில்லைக் கையிலே தாங்கிக்கொண்டு திருவடி நிலத் திலே தோயும்படி மானிட வடிவங்கொண்டு வந்து, அனைவர் கண்ணுக்கும் எளிதிற் பிரசன்னமானுன். மயக்கத்தைத் தருகின்ற பிறவிப்பிணிக்கு மருந்தும் இவனே. ஆகையால், என் புத்திரசிகாமணியான அங்கதா, நீ இவனையே சேவிக் கக் கடவாய்! என் பிராணனை வதை செய்தானென்று

சிறிதாகிலும் மனத்திலெண்ணுமல், உன் உயிருக்கு உறுதியாகிய தர்ம நெறியிலே நடந்துகொள். இவனுக்கு யுத்தம் நேரிட்டால், நீயும் உபபலமாகப் போ. இவன் பெரும் பாலும் தர்மாத்துமாக்களுக்கே உதவி செய்வான். இவனுடைய பாதாரவிந்தத்தைச் சிரசிலே தாங்கிக்கொண்டு வாழ்ந்திரு,'' என்று உறுதிகளெல்லாம் சொல்லி, தன்னுடைய இரண்டு கைகளாலும் குமாரனை அணைத்துக் கொண்டு, பர்வதத்தைப்பார்க்கிலும் மிகவும் உயர்ந்த பராக்கிரமமுடைய தோள்களையுடைய வானராதிபதியான வாலி, ஜகத்ரட்சகராகிய ஸ்ரீ ராமரைப் பார்த்து, "பொய்ம்மை குடிகொண்டிருக்கின்ற மனமுடையவர்களால் அறியப்படாத பரிசுத்தனே, இந்த அங்கத குமாரன் கறுத்த நிறத்தையுடைய இராட்சதர்களென்னும் பஞ்சைத் தகிக்கின்ற தீக்குச் சமானமாகிய புஜபலத்தையுடையவன்; குற்றமற்ற நல்ல செய்கையுமுள்ளவன். இவன் உன் அடைக்கலம்!'' என்று காட்டிக் கொடுத்தான். அப்போது அங்கதன் சுவாமி திருவடியைச் சேவித்துக்கொண்டான். உடனே புண்டரீகாக்ஷராகிய ஸ்ரீராகவர், அவனைச் சமீபத்தில் வாவென்று அழைத்துத் தம் உடைவாளை அவன் கையிலே கொடுத்து, "நீ இதைத் தாங்கிக்கொண்டிரு,'' என்று மிகுந்த அன்புடனே அருளிச் செய்தார். அப்படி அவர் சொல்லவே, சத்த லோகத்தாரும், "இந்த அங்கதகுமாரன், உலகாராட்டியனது கிருபைக் குப் பாத்திரமானது என்ன ஆச்சரியம்!'' என்று துதி செய் தார்கள்.

பின்பு வாலி வலித்துப் பிடித்திருந்த இராமபாணத்தைக் கைந்நெகிழ விட, அந்தப் பாணமானது அவனுடைய மார்பைத் துளைத்துக்கொண்டு உயர எழுந்து போய், சுத்தோதக சமுத்திரத்தில் ஸ்நானஞ்செய்து, தேவர்கள் புஷ்பமாரி பொழிய, ஸ்ரீ ராமருடைய பின் பக்கத்தில் நீங்காதிருக்கின்ற அம்பறாத்தூணியில் வந்து சேர்ந்தது.

இந்திர குமாரனுகிய வாலி இறந்து, தேவர்களுடைய

உலகங்களையெல்லாந் தாண்டி, அப்புறத்துள்ள பரமபதம் போய்ச் சேர்ந்தான். அந்த வாலிக்கு எவர்க்குங்கிடையாத பரமபதங்கொடுத்தருளின ஸ்ரீ ராமசந்திரர் சுக்கிரீவன் கையைப் பிடித்துக்கொண்டு, அங்கதனும் சமீபத்திலிருக்க, அவ்விடத்தில் ஒரு பக்கத்திலிருந்தார்.

## 8. தாரை புலம்புறு படலம்

அப்போது, தாரை இச்செய்தி கேட்டுப் பிரலாபித்துக் கொண்டுவந்து, வாலியின்மேல் விழுந்து, அவனது இரத்த மானது ஸ்தனங்களின்மேல் குங்குமம் பூசினதுபோலப் படிய, தலை மயிருஞ்சிவக்க, கணவன் மார்பிலே புரண்டாள். அது எப்படியிருந்ததென்றால், செவ்வானத்திலே மின்னற்கொடி பிரகாசிக்கிறது போலிருந்தது. பின்னும், வேணுக்குழலும் யாழும் வீணையுமென்கின்ற இவைகளெல்லாம் நாணிப் போக ஏங்கி இரங்கி விம்மி, இரண்டு கைகளையுங் கூப்பித் தலை மயிர் அவிழ்ந்து விழுந்து சோர்ந்து சரியத் துக்கிக் கின்றாள் :

" என்னுயிரே, என்னுள்ளமே, என்னரசே, மலைக்குச் சமானமாகிய உம்முடைய தோளினிடத்தில் எந்நாளும் வாழ்ந்திருந்த நான், இப்பொழுது துயரக்கடலில் விழுந்து கரை காணாமலிருக்கிறதுமல்லாமல், உமக்குச் சம்பவித்த அபாயத்தைப் பார்க்கவும் பயப்படுகிறேன்! பகையில்லாத அன்பாளரே, துக்கத்தினாலே இறவாமலிருக்கின்ற என்னை யும் மறக்க மாட்டீரோ! ஆ! விதியே, உயிர் போனால் உடல் மாத்திரம் பிழைத்திருக்குமா? என்னையுங் கொன்று இந்தக் குற்றத்தையும் தீர்த்துவிடு! என் நாயகரானவர் திவ்விய பரி மளத்தையுடைய நல்ல அமிர்தத்தைத் தேவர்களுண்ணும் படி கொடுத்தபடியினாலே, அவர்கள் இறவாமல் சாசுவதமா யிருக்கின்ற உயிரை அடைந்த தன்மையை அந்தத் தேவர்

களில் ஒருவராகிய நமனுர் அறியாரோ? அறிந்தாராகில், உபகாரத்தை நினையாமல் இருப்பாரோ? அல்லது, அவ ரென்ன சிறியவரோ? ராஜாவே, பார்வதி பாகனைத் திக்கு தோறும் போய்ப் புதிதாகிய மலரைக்கொண்டு உள்ளன் புடனே திரிகாலமும் பூஜித்து வணங்குகின்ற நீர், இந்நேரம் வரையில் சும்மா இருப்பீரோ? புஷ்பசயனத்தில் சயனிக் கின்ற நீர், மண்ணின்மேற் கிடக்கின்றதைக் கண்டு மனங் கரையாத நான் அழுகுரலைக் கேட்டும் வாய்திறந்து ஓர் உத் தரமும் சொல்லாமலிருக்கின்றீரே! என்னிடத்தில் என்ன குற்றந்தான் நேரிட்டதோ! நான் இப்படியிருந்து வருத்தப்பட, நீர் சொர்க்கத்திற்போய் அரம்பா ஸ்திரீகளுடைய ஸ்தனத் தைத் தழுவுகின்றீரே! தேவரீர் என் பிராணனென்பதும் பொய்யோ? பொய் பேசாத புண்ணிய புருஷரே, மற்போர் செய்கின்ற புஜபல பராக்கிரமத்தையுடையவரே, உம்முடைய மனத்தில் அடியேனிருந்தாலும், சத்துரு விட்ட பாணமானது உம்மைக் கொன்றது போல என்னையும் கொல்லுமே! அல் லது, என் மனத்தில் நீரிருந்தாலும், அந்தப் பாணத்திற்குத் தப்பி என்னைப்போலப் பிழைத்திருப்பீரே! நாம் இருவரும் ஒருவர் மனத்திலொருவராய் இராமற்போனேமே! சொர்க்கத் தில் தேவர்கள் எல்லாம் உம்மைக் கண்டு, ‘எங்களையனே, நீ அமிர்தங்கடைந்து கொடுக்க அதையுண்டு நாங்களெல் லாம் பிழைத்திருக்கின்றேம்!’ என்று சொல்லி, நன்றி மற வாதவர்களாகி, புஷ்பம் சந்தனம் முதலானவைகளை ஏந்தி வந்து இஷ்டத்துடனே உம்மை எதிர்கொண்டு அழைத்துப் போனர்களோ? வேகமுடைய பாணத்தை ஒளித்திருந்து எய்யும்படி உடன்பட்டு வந்த ஸ்ரீராமர், வாயினுல் ஒரு சொல் சொல்வாராகில், தம்பியாருக்கு உம்முடைய வாழ்வெல்லாம் கொடுக்க மாட்டீரோ? அந்நியர்களாகிய தேவர்களுக்கும் அமிர்தத்தைக் கொடுத்தீரே! நீர் புறப்படும் பொழுதே அப் படியும் நான் சொன்னேனே! அந்தச் சொல்லைக் கேளாமல், ஸ்ரீராமர் நல்லவராகையால், அதர்மஞ் செய்ய மாட்டாரென்று

சொல்லி, ஊழி கால பரியந்தம் இறவாதிருக்கத்தக்க நீர் தம்பியைக் கொல்ல வந்து இறந்து போனீரே! இனி உம்முடைய திருமுகத்தை நான் என்றைக்குக் காண்பேன்! நீர் நெருக்கினுல் மகாமேருவும் நீருப்ப்போமே! அப்படிப்பட்ட உம்முடைய மார்பைச் சத்துருவின் பாணம் துளைக்குமா? நானிதை அறிய மாட்டேன்! தேவர்கள் செய்த மாயந் தானே! இப்பொழுது இறந்த நீர் வேருெரு வாலிதானே!

"அப்பா, மகனே, அங்கதா, நாள்தோறும் உன் பிதாவின் தம்பியார் பெருமை பொருந்திய கீர்த்தியை வகித்திருந்து இன்று பகையாய் எதிர்த்ததனுல் உன் பிதா மாண்டு போக நம்முடைய வாழ்வெல்லாம் சிந்தி உலர்ந்து அழிந்து போய்விட்டது பார்த்தாயா! அருமருந்து போல அனைவருடைய ஆபத்தையும் நீக்குகின்ற ஸ்ரீராமர், என்னுடைய ஒரு புத்திரனுக்கு மாத்திரம் தகாத நினைவு நினைத்தார் போலும்! தர்மத்தைக் கைப்பற்றிய பெரியோர்களுக்கெல்லாம் நல்லொழுக்கம் பிரமாணமென்பதும் போய்விட்டதோ!" என்று சொல்லி அழுது, துன்பம் அதிகரிக்கப்பட்டவளாகி, ஸ்மரணையில்லாமல் மூர்ச்சித்திருந்தாள்.

இவ்வண்ணம் இருந்ததை அனுமன் பார்த்துச் சுக்கிரீவனுடைய ஆக்கினையினுலே அங்கு வந்திருந்த தாரைக்குத் தேறுதலைச் சொல்லித் தேற்றி, வானர ஸ்திரீகளுடனே கூட்டி, அவள் முன்பு வாழ்ந்திருந்த மாளிகையிற்போய்ச் சேரும்படி அனுப்பிவிட்டு, வாலிக்கு நடக்க வேண்டிய கர்மாதிகளையெல்லாம் அங்கத குமாரனைக்கொண்டு நடப்பித்து, ஸ்ரீராமரிடம் வந்து சொன்னுன். அத்தருணத்தில், இருளானது வேரற்றுப்போம்படி கிரணங்களை வீசுகின்ற சூரியன் மேற்குத் திசையிலுள்ள அஸ்தமனகிரிக்குப்போய்ச் சேர்ந்தான். அந்தச் சூரிய பிம்பமானது வாலி முகத்தைப்போலச் சிவந்தது. அப்படிச் சூரியன் மறைந்து இராத்திரிக் காலமாகவே, இரகுநந்தனர் சீதையை நினைத்து, மனம் இளைத்துத் 'துயரப்பட்டு, அந்த இராத்திரியென்கின்ற சமுத்திரத்

தைக் கடந்தார். சூரியன், தன் குமாரனுகிய சுக்கிரீவன் மகுடந்தாங்கும்படியிருப்பதனுல், சந்தோஷத்துடனே அதி சீக்கிரமாய் வந்து, இலட்சுமி வாசஞ்செய்கின்ற தாமரை யென்னும் வீடுகளின் இதழ்களென்னும் கதவுகளைத் தன் கிரணமென்னும் கைகளால் திறந்துவிட்டான்.

## 9. சுக்கிரீவன் அரசியற்படலம்

அந்தச் சமயத்திலே ஸ்ரீராமர் நல்ல விவேகத்தை யுடைய தம்பியாரை நோக்கி, "அப்பா, நீ போய்ச் சுக்கிரீவ னுக்குப் பட்டாபிஷேகத்துக்கேற்ற பிரயத்தனங்களைச் செய்து, உன் கையினுலே மகுடஞ்சூட்டிவா," என்று ஆக் கியாபித்தார். 'அப்படியே செய்கிறேன்,' என்று இலட்சு மணர் அனுமனை அழைத்துப் பட்டாபிஷேகத்துக்கு வேண் டிய சாமக்கிரியைகளையெல்லாம் சேகரிக்கச் சொல்லிக் கட்டளையிட்டார். அந்த அனுமனுனவன், தீர்த்தம் முதலான வைகளும், கிரீடம், குண்டலம், புஜகிருதி, வாகு வலயம், மதாணி முதலான ஆபரணுதிகளும் மற்றும் வேண்டிய சகல பதார்த்தங்களும் கொண்டுவந்தான். இலட்சுமணர் போயி ருந்து, சாஸ்திர விதிப்படி முன்பு நடக்க வேண்டியவைகள் எல்லாம் நடப்பித்து, பின்பு பிராமணர்களெல்லாம் ஆசீர் வாதஞ்செய்யத் தேவர்கள் புஷ்பமாரி பொழியப் பெரியோர்க ளெல்லாம் கண் களிக்கச் சுக்கிரீவனுக்குத் திருமுடி சூட்டினுர்.

சுக்கிரீவன் வந்து ஸ்ரீராமரைச் சேவித்துக்கொண்டான். அவர் அன்புடனே அவனை மார்பில் தழுவிக்கொண்டு இருக் கும்படி ஆக்கியாபித்து, "அப்பா, சுக்கிரீவா, நீ இவ்விடத்தி லிருந்து உன் பட்டணத்துக்குப் போய் ராஜரிகத்தைக் குறித்த காரியங்கள் என்னென்ன விசாரிக்க வேண்டுமோ அவைகளையெல்லாம் பரிஷ்காரமாக ஆலோசித்து விசா

ரித்து, விதிப்படி செய்து, இறந்துபோன உன் தமையன் குமாரனுடனே சுகமாய் வாழ்ந்திரு; சத்தியசந்தரும் விவேகிகளுமாகிய மந்திரிமார்களுடனும், சேனுபதிகளுடனும் சேர்ந்து மனங்கலந்து பேசி, குற்றமற்ற செய்கையுடையவனுகி, சகலரையும் நீங்காமலும் நெருங்காமலும் இருந்து தேவர்களைப் போலத் துல்லியமாக நடந்துகொள்; உலகமானது புகையுள்ள இடத்தில் நெருப்புண்டென்று நினைக்கத் தக்கதாகையால், இந்த அனுமானப் பிரமாணத்திற்கு ஒத்தபடி உன்னிடத்தில் கிருபையுண்டென்பது தெரிய, பகையாளிகளுடனும் கடூரமான வார்த்தை சொல்லாமல், நகைமுகத்துடனே இனிய வசனங்களைச் சொல்; பெரியோர்கள் அனுசரிக்கின்ற நற்செய்கைகளையுந் தழுவிக்கொள். தேவர்களும் மதி மயக்கம் கொள்ளத்தக்க அரசாட்சியாகிய சம்பத்தை நீ பெற்றிருக்கின்ருய். அது மகா பிரயாசமானது; எளிதாக நினைக்கக்கூடாதது. செவ்வையாய் ஆலோசித்துப் பார். முனீஸ்வரர்களும், திரிலோகத்திலுமுள்ளவர்களும், சினேகிதர் பகையாளர் அந்நியரென்னும் மூன்று வகைப்பட்டிருப்பார்கள். அவர்களில் ஒருவரிடத்திலும் தீங்கு நினையாமல், செய்ய வேண்டியவைகளைச் செய்வதையும் நிந்திக்கும்படி அடாத காரணங்கள் வந்த போது நல்ல வசனங்களையே சொல்வதையும், உண்மை பேசுதலையும் தவருமல் பாதுகாக்க வேண்டும். உருவத்தாற் சிறியவர்களென்று எண்ணி எவர்களுக்கும் துன்பத்தைச் செய்யாதே. நான் பாலியத்திலே ஒரு துஷ்கிருத்தியத்தைச் செய்து, அறிவு மிகுத்து வடிவு சிறுத்த கூனியினுலே அதி சீக்கிரத்தில் சகல சாம்ராஜ்யத்தையும் இழந்து துக்கத்துக்காளானேன். 'ஸ்திரீகளாலே புருஷர்களுக்கு மரணமுண்டாம்,' என்பதை உன் தமையனுகிய வாலியினிடத்திற் பார்த்துக்கொள். அல்லாமலும், நாங்களும் ஸ்திரீகளாலேதானே இத்தனை அல்லல் அனுபவிக்கின்ருேம்? இதைப்பார்க்கிலும் சாட்சி வேறென்ன வேண்டும்? 'நம் ராஜா பெற்ற தாயினும் அதிக அன்

புள்ளவர்!' என்று பிரஜைகளெல்லாம் சொல்லும்படி காருணியத்துடனே சம்ரக்ஷணே செய்; குற்றஞ்செய்தவர்களைத் தர்மம் தவருமல் தண்டனை செய். இறக்கிறதும் பிறக்கிறதும் ஆலோசிக்குமிடத்தில் சகல பிராணிகளுக்கும் செய்த வினையினுலே வருகின்றவை அல்லவோ? பிரமாவுக்கும் அவன் செய்த நல்வினையின் முடிவே அவனுடைய ஆயுளின் முடிவாகும். சாஸ்திரிகள், 'செல்வமும் கேடும் அவரவர் செய்த புண்ணிய பாவங்களினுலேயே உண்டாகின்றன,' என்று சொல்வார்கள். ஆகையால், பாக்கியத்தைக் கொடுக்கின்ற புண்ணியத்தையல்லாமல், நிர்ப்பாக்கியத்தைத் தருகின்ற பாவத்தைக் கைப்பற்றலாமா? இப்படியிருப்பதனுல், இவைகளையெல்லாம் கிரமமாகத் தேர்ந்து, யுக்தாயுக்தம் பார்த்து, ராஜரிகம் செய்துகொண்டிருந்து, வருகின்ற மழைக்காலம் கழிந்தவுடன் உன் சேனு சமுத்திரத்தைக் கூட்டிக்கொண்டு நம்மிடத்தில் வந்து சேர்," என்று சொன்னுர்.

அந்த நீதி வார்த்தைகளையெல்லாம் கேட்டு மிகுந்த அன்புடனே சுக்கிரீவன், "சுவாமி, நாங்களிருக்கின்ற இடம் குரங்குகளிருக்கின்ற இடமென்கிற சொற்குற்றம் ஒன்றேயல்லாமல், அது சுவர்க்கலோகத்திற்கும் ராஜதானியைப் போல அதிக சிறப்பும் மனேகரமும் உண்டாக்கத்தக்கது. அதிலே நீங்கள் சில நாள் எழுந்தருளியிருக்கவும் நாங்கள் உங்கள் கைங்கரியத்தைச் செய்யவும் வேண்டும். உங்களைப் பிரிந்திருந்து என்ன பாக்கியம் அனுபவித்தாலும், அது வறுமையை அனுபவிக்கிறதற்குச் சமானமே அல்லாமல் வேறன்று. உம் திருத்தேவியாராகிய சீதாபிராட்டியாரைத் தேடுகிறதற்குச் சவுகரியமான கால பரியந்தம் தேவரீர் இவ்விடத்திலேயே எழுந்தருளியிருக்க வேண்டும்," என்று சாஷ்டாங்கமாய்ச் சேவித்தான்.

அந்த வசனத்தைக் கேட்டு ஸ்ரீராமர் புன்சிரிப்பாய் நகைத்து, "தம்பி, ராஜாக்களிருக்கின்ற அரண்மனையில்

என்னைப்போன்ற விரதிகளிருக்கக்கூடாது. அப்படியல்லவென்று வந்திருந்தாலும், உனக்கு எங்களை உபசரிக்கிறதற்கே பொழுது சரியாய்ப்போம்; அப்புறம் ராஜரிகம் செய்கிறதற்கு அவகாசமிராது. அதுவுமல்லாமல், பதினுலு வருஷம் ஆரணிய வாசம் செய்ய வந்த நான், வனத்திலிருக்கலாமேயல்லாமல், ராஜாக்களிருக்கின்ற நகரத்திலிருக்கக்கூடாது. சீதையைப் பிரிந்தும், நான் வாசயோக்கியமும் சௌக்கியமும் தேட வேண்டுமா? அது நீ அறியாயோ? 'தேவியை இராட்சதன் சிறையிலே கொண்டுபோய் வைத்திருக்க, சினேகிதர்களிடத்திலிருந்து இராமன் சௌக்கியம் அனுபவித்தான்,' என்கிற வார்த்தை யுண்டானல், அந்த அபவாதம் மூன்றுலகமும் அழிகின்ற ஊழிக்காலத்திலும் தீருமா? நானிப்போது இல்லறச் செய்கைக்கு அபாத்திரனுனலும், வில்லைக்கொண்டு யுத்தஞ்செய்கின்ற வீர தர்மத்தைக் கைவிட்டிருப்பதற்கு வெட்கப்படுகிறேன்! சத்தியத்தைப் பாதுகாக்கிறதுமல்லாமல், அதற்கு ஒப்பாகிய சில தர்மத்தையுஞ் செய்து, என்னைச் சூழ்ந்த தீமைகளெல்லாம் நிவாரணமாகும்படி துறவறத்திற்குப் பழுது வாராமல் தவஞ்செய்துகொண்டிருக்கிறேன். நீ ராஜரிகத்திற்குத் தகுதியானவைகளையெல்லாஞ்செய்து நடப்பித்திருந்து, உன்னுடைய வானர சைனியத்தையெல்லாம் சேர்த்துக்கொண்டு இந்த மாரிக்காலம் நாலு மாதமும் போனவுடனே வந்து சேர். இதைக் குறித்து உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன்,'' என்று சொன்னர்.

சொல்லுதற்கு எளிமையாயும் அருமையாயுமிருக்கின்ற ஸ்ரீராமர் சொல்லை மறுத்து ஒன்றும் பேசாமல் குறிப்பறிந்துகொண்ட சுக்கிரீவன், கண்களில் கலகலவென்று நீர் பெருகச் சகிகக மாட்டாத துயரத்துடனே சுவாமியைச் சேவித்துக்கொண்டு போனன்.

பின்பு தம்மைச் சேவித்தெழுந்த அங்கதனை ஸ்ரீராமர் கிருபையுடனே பார்த்து, "அங்கதா, நீ புத்திசாலி. உனக்குச் சொல்ல வேண்டுவதில்லை. சுக்கிரீவனைச் சிறிய தகப்ப

னென்று எண்ணுமல், உன்னுடைய பிதாவாகிய வாலியாகவே எண்ணி, அன்புடனே அவனிடத்தில் அநுகூலமாகவேயிரு. போய்வா,'' என்றருளிச் செய்தார். அந்த வார்த்தையைச் சிரசாக வகித்துக்கொண்டு அவனும் போனுன்.

அப்பால் ஸ்ரீராமர் அஞ்சலியஸ்தனுய் நிற்கின்ற அனுமனேப் பார்த்து, "அனுமனே, நீயும் கூடப்போய்ச் சுக்கிரீவ மகாராஜன் செய்யும் அரசாட்சிக்கு ஏற்ற காரியங்களென்னென்ன உண்டோ, அவைகளையெல்லாம் ஜாக்கிரதையாகப் பார்,'' என்று ஆக்கியாபித்தார்.

அந்த வாாத்தையைக் கேட்ட அனுமனுனவன் கண்களில் ஜலந்ததும்ப, "சுவாமி, நாயேன் இவ்விடத்திலிருந்து தேவரீர் ஆக்கியாபித்த அடிமைத் தொழில்களே அடியேனுல் இயன்ற மாத்திரம் செய்துகொண்டிருக்கிறேன்,'' என்று சொல்லி மகத்தாகிய பத்தியுடனே சாஷ்டாங்கமாகச் சேவித்தான். அப்போது, ஸ்ரீராமர், "அனுமனே, ஒருவன் அரசாண்டுகொண்டிருந்த ராஜ்யத்தை அபேட்சித்து அவனே ஜயித்து மற்றெருருவன் அதற்கு அதிபதியானுன். ஆகையால், எத்தனேயோ பேர் நல்லவருமிருப்பார்; எத்தனேயோ பேர் கெட்டவருமிருப்பார். அக்காரியங்களெல்லாம் உன்னேப்போல் சாந்தமும் தத்துவக்கியானமும் உடையவர்கள் இருந்து செம்மைப்படுத்திலுலல்லவோ செம்மைப்படும்? மந்திரிகளில்லாத ராஜரிகம் நிலே நிற்குமா? அந்தக் காரியத்தை நிர்வகிக்கிறதற்கும், அப்பால் மாரிக்காலம் போனவுடனே நம்முடைய காரியத்தை அனுகூலம் செய்விக்கிறதற்கும் உன்னேயொத்த பேரறிவாளன் வேறெருருவனுமில்லே. ஆகையால், நீ அவ்விடத்திலே போயிருந்து காரியம் பாரென்று உன்னே நானே ஆக்கியாபிக்கிறேன்,'' என்று சொல்ல, "தேவரீர் ஆக்கியாபித்தபடி நடந்துகொள்ளுகிறேன்,'' என்று சாஷ்டாங்கமாகச் சேவித்துக்கொண்டு அனுமன் போனுன்.

பின்பு, ஸ்ரீராமரும் தம்பியாரும் கிஷ்கிந்தா பர்வதத்தை

நாடிப் போனார்கள். ஸ்ரீராமர் நியமித்தபடி போன சுக்கிரீவன் கிஷ்கிந்தா பட்டணம் போய்த் தமையன் மனைவியாகிய தாரையைச் சேவித்துக்கொண்டு, அவளைத் தாயாகப் பாவித்து, மந்திரிகள் சூழ, அங்கதன் இளவரசனாயிருந்து சகல காரியமும் பார்த்து வர, ராஜரிகமாகிய சாம்ராஜ்ய சுகமனுபவித்துக்கொண்டிருந்தான். ஸ்ரீராமரும் மதங்காசிரமமாகிய மேற்சொன்ன பருவதத்தில் ஒரு பக்கத்தில் வாசயோக்கியமான இடம் பார்த்து இலட்சுமணர் கட்டின பன்னசாலையிலே தேவர்கள் துதிக்க எழுந்தருளியிருந்தார்.

## 10. கார்காலப் படலம்

மாரிக்காலத்திலே, சூரியன் உத்தராயணத்திலிருந்து தட்சிணாயனமாகத் தென்திசையில் பிரவேசித்தான். ஆகாயத்திலே மேகம் பரவியது. பரவிய மேகத்தினால் கடலிற் பிறந்த விஷத்தையுண்டு கறுத்த சிவனுடைய கண்டத்தைப் போல ஆகாயங் கறுத்தது. அம்மேகத்தின் குளிர்ச்சியினால் சூரிய கிரணமும் உஷ்ணமடங்கிக் குளிர்ந்தது. அல்லாமலும், ஆலகால விஷத்தைப்போலவும், கருங்கடலைப் போலவும், ஸ்திரீகளுடைய மையணிந்த கண்ணைப் போலவும், அவர்கள் கூந்தலைப்போலவும், இராக்ஷதர்களுடைய உருவத்தைப்போலவும், அவர்கள் செய்யும் பாவத்தைப்போலவும், நன்மை தீமையைப் பகுத்தறியாதவர்களுடைய நெஞ்சைப்போலவும், அம்மேகமானது கறுத்தது. அந்தக் கறுத்த மேகத்தின் மத்தியில் மின்னல்கள் அதிக பளபளப்பாய்த் தோன்றினது, யுத்தத்திலே வாள் முதலாகிய ஆயுதங்களினாலே யானைகளின் சரீரம் கிழிந்து புண்பட்டது போன்றிருந்தது. நீல மலைகளை நிறைத்தது போலச் சூல் கொண்ட மேகங்கள் நெருங்கிக் குமுறினது, சமுத்திரம் ஆகாயத்தில் ஏறி முழங்குகின்றது போன்றிருந்தது. கொடி-

மின்னல்கள் தோன்றுவது, இந்திரன் முதலான தேவர்கள் தங்களுடைய இரத்தினுபரணங்களை விரித்து உதறுகிறது போலவும், மலையின்மேல் உலைக்களம் வைத்து எரிக்கிறது போலவும், திக்குகள் சிரிக்கிறது போலவுமிருந்தது. மற்றும் அம்மின்னல்கள் திசையாகிய கருமான், மேகமாகிய கரிகளையிட்டு, காற்ருகிய துருத்தியைக்கொண்டு ஊதுகின்ற உலைக்களத்தினது அக்கினி ஜொலிக்கிறதை ஒத்திருந்தன. புருஷர்களைப் பிரிந்திருக்கின்ற ஸ்திரீகளும், புற்றுக்குள்ளிருக்கின்ற பாம்புகளும், உடலெரிந்து உயிர் நடுங்கும்படி அஷ்ட திக்குகளிலும் மின்னல்கள் பிரகாசிக்கின்றது, சூரியகிரணங்கள் துண்டித்து விழுகிறது போலவும், இடிகளின் நாவைப் போலவுமிருந்தது. மேலும், விஞ்சையர்கள் உறையிலிருந்து கழற்றிய உதிரந்தோய்ந்த வாள்கள் ஜொலிக்கிறது போலவும், திக்குப்பாலர்கள் ஏறி நடத்துந்தோறும் திக்கஜங்களின் நெற்றியிலணிந்த வீரபட்டங்கள் விளங்குகிறதுபோலவுமிருந்தது. அஷ்டமாநாகங்கள் நாவை வளைக்கிறது போல எங்கெங்கும் மின்னல்கள் பிரகாசிக்க, மேகம் சுவாசம் விடுகிறது போல ஊதைக் காற்ருனது வீசத்தலைப்பட்டது. ஓர் இடத்தில் நிலைபெற்றிராமல் பொருளுள்ள பல இடங்களிலும் நாடிப் போகின்ற வேசிகளுடைய மனம் போல, ஆகாயமுதல் பூமி வரையிலும் நீங்காமல் மலைகளிலும் மரங்களிலும் மற்றுமுண்டாகிய சகல சராசரங்களிலும், காற்ருனது உலாவியது. நாயகர்களை நீங்கி வருந்துகின்ற நாயகிமார்களுடைய ஸ்தனங்கள் கொதிக்கும்படி அவைகளினிடத்திற்புகுந்து உலாவி, அந்த ஸ்தனங்களை மாமிசத் துண்டமென்று அரிந்து விழுங்க வந்த பேய்கள் போல வாடைக் காற்று அதிகரித்தது. அவ்வாடைக்காற்றினல் தூசுகள் எழும்புகிறதனுலும் மின்னல்கள் வாள் போலப் பிரகாசிக்கிறதனுலும், மேகங்கள் பேரிகை போல முழங்குகிறதனுலும், ஆகாயம் இரணக்களம் போல விளங்கியது. ஜானகியைப் பிரிந்திருக்கின்ற ஸ்ரீராமர் மேல் மன்மதன் புஷ்ப பாணங்களைப் பிரயோகித்தது போல,

இமய பர்வதத்தின்மேல் மேகங்கள் தாரை தாரையாக மழை யைப் பொழிந்தன. மேகத்தில் காண்கிற பச்சை வில்லிலே பூட்டி எய்த அஸ்திரங்கள் போல மழைத்துளிகள் விழுந்தன. மற்றும், யானைகளின்மேல் வெள்ளி வேலை எறிகிறது போல மலைகளின்மேல் அம்மழைத் துளிகள் விழுந்தன. அந்த வேல் பட்டு மதயானைகள் புரள்கிறது போல, அமிதமாகிய மழை யினால் மலைகளும் பிளந்து சரிந்தன. 'இனி ஸ்ரீ ராமரும் வான ரங்களும் கூடி வந்து இராட்சதர்களைச் சங்காரஞ்செய்து நம் முடைய துயரத்தைத்தீர்ப்பார்கள்!' என்று தேவர்கள் பேசிக் கொண்டு ஆர்ப்பரித்தது போல, மேகங்கள் மேன்மேலும் முழங்கின. அந்தத் தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தது போல மழை பொழிந்தது. பின்னும் சீதையை இராவணன் பூமி யுடனே பேர்த்துக்கொண்டு ஆகாயமார்க்கமாய்ப் போகிற போது, அவளுடைய கண்கள் நீரைப் பொழிந்ததுபோலவும் மழை பொழிந்தது. பொழிந்த மேகங்கள் திரும்பிப் போகிற தும், பொழியும் மேகங்கள் எதிரே வருகிறதும், வெள்ளை யானையும் கறுத்த யானையும் எதிர்த்துப் போர் செய்கிறது போலிருந்தன. காற்றினாலே மழைத்துளிகள் பல திசையி லுஞ் சிதறுகிறது திசையோடு திசை போர் செய்கிறது போன்றிருந்தது. மேலும், பூமியாகிய தாயினது மலை யாகிய ஸ்தனத்திற் பால் சுரந்து ஒழுகுவது போல வான மெல்லாம் கானாறுகள் பெருகிப் பாய்ந்தன.

பொருள் தேடப்போன புருஷன் வந்து கூடிய ஸ்திரீ யைப்போல உலர்ந்து போன விருட்சங்களெல்லாம் தளிர்த் தன. அப்போது பாதிரி மரங்களுக்குத் தரித்திரமும், சூரிய னுக்குக் குளிர்ச்சியும், வெண்காந்தளுக்குப் பெருமையும், பூமிக்குச் சிறுமையும், மயில்களுக்குச் சந்தோஷமும், குயில் களுக்குத் துயரமும் உண்டாயின. ஸ்திரீகளின் இடையைப் போலப் புஷ்பக்கொடிகள் துவண்டன. அவர்கள் கையைப் போலக் காந்தள்கள் எங்கும் மலர்ந்தன. அவர்களுடைய செம்பஞ்சூட்டிய பாதம் போலத் தாமரைகள் பிரகாசித்தன.

கணவர்களைப் பிரிந்து புணர்ந்த ஸ்திரீகள் புணர்ச்சிக் காலத்தில் பல தரம் தின்று உமிழ்ந்த தம்பலம் போல, சிவந்த இந்திரகோபப் பூச்சிகள் எள்ளிடுதற்கு இடமில்லாமல் பூமியில் பரவின. நித்திரை செய்கின்ற ஸ்திரீகளுடைய கண்களைப்போலக் குவளைகள் குவிந்தன. நாயகன் வரக்கண்டு சந்தோஷிக்கின்ற நாயகியின் பற்களைப்போல முல்லைகள் அரும்பு விட்டன. கூத்தாடிகள் போல மயில்கள் நடனஞ் செய்ய, பரிசு கொடுக்கின்ற வள்ளல்களைப்போல மலையருவிகள் பொன் கொழித்தன. விருந்தாளிகள் வரக்கண்டு மனங் குளிர்கின்ற உத்தம ஸ்திரீகளின் முகம் போல விருட்சக்கிளைகள் தழைத்தன.

இப்படி அநேக அதிசயமுண்டாகிய சரற்காலத்திலே சீதையின் திருமுகத்தைக் காணாத ஸ்ரீ ராமர், யார் முகத்தைக் கண்டு உயிர் தரித்திருப்பார்? மன்மதனாலே அறிவழிந்து, அவன் பிரயோகிக்கின்ற புஷ்ப பாணமாகிய மழையைக் கண்டு அதிக வருத்தமடைந்தார். கார் காலம் வந்த காலத்தில் தவசிகளும் வருத்தப்படுவார்களென்றால், தேனைப் பார்க்கிலும் மிகவும் மதுரமாகிய வசனத்தையுடைய சீதையின் தோளைத்தழுவி இன்பம் அனுபவித்த ஸ்ரீராமர் வருந்துகின்றது சொல்ல வேண்டுமோ? பின்னும் சுவாமியானவர் புலம்பித் தளர்ந்து, பிராணனுஞ் சிறிது உண்டென்று சொல்லும்படி சோர்ந்து பிரலாபிக்கத் தலைப்பட்டார்: "மேகமே, சீதையை ஒளித்து வைத்திருக்கின்ற இராட்சதர்கள் வாழும் ஊரை நானறியாமல் உயிருடன் உழல்கின்றேன். நீ உலகத்தை இரட்சிக்குந் தன்மையைக் கொண்டிருந்தும், என் ஆவியைக் கலக்குகின்றாயே! இது உன் தயாளகுணமாகுமா? மின்னலாகிய கோரப்பல்லைக் காட்டிக் கோபித்து ஆகாயம் முழுமையும் கறுத்துத் தோன்றிப் பாதகர்களாகிய இராட்சதர்களை ஒத்திருக்கின்ற மேகமே, நீ என்னுயிரை வாங்காமற் போகமாட்டாயோ? கொடுமையுடைய மயிலே, நீ சீதையைக் கொண்டு வரமாட்டாயா? நித்திரையில்லாத என்

னுடைய பிராண சோகத்தை அறியாயா? வீணுக என்னுடன் ஏன் போராடுகின்ருய்? மானே, நான் ஆசையினுலே அறிவில்லாமையாய்க் குற்றத்தைச் செய்யாதவனுயிருக்க, ஜானகியானவள் என்னுயிருடனே பிரிந்து போனதனுல் இனிப் பிழைக்க மாட்டேன்! என்னுயிரே, சீதையுடன் உறவு ஒழிந்தாயோ? அவள் போனவுடனே மறவாமல் நீ போகவு மில்லையே! ஐயோ! கெடுவாய்! நெடுநாள் பழகிய நட்பை யாவது நினையாயோ? என் பிராணநாயகி என்னை விட்டு நீங் கத்தக்க உபாயத்தை நினைத்து முன்பு மாரீசனுனவன் ஒரு பொன் மானுனன். இப்பொழுது என்னுயிரைக் கிரகிக்கும் உபாயத்தை நினைத்து எமனும் வாடைக் காற்ருக உருக் கொண்டு வந்தான். ஒருவருக்குக் கேடு நினைக்கின்ற வஞ்சகர் களுக்குத் தாங்கள் வேண்டிய வடிவத்தைக் கொள்ளக் கிடைத்திருக்கின்றதல்லவா? மன்மதா, என்னுயிர் எரியவும், நெஞ்சு புண்ணுகவும் பாணப்பிரயோகஞ் செய்வதனுல், உனக்கு மகத்தாகிய கேடு வரும்! என் தம்பி உன்னைக் கண்டானுனல் அவனுக்கு உண்டாகும் கோபத்தை யார் தணிக்கத் தக்கவர்கள்?'' என்று இரக்கப்படுகின்ற இரகுபதி யாரைப் பார்த்து, இளையபெருமாள் கிலேசப்பட்டு, "சுவாமி, நீர் உம்மை எத்தன்மையராக மதித்தீர்?'' என்று இரண்டு கைகளையும் சிரசின்மேல் கூப்பிக்கொண்டு சேவித்து, அவ ருடைய சிந்தை தேறும்படி சொல்லுகின்ருர்:

"ஐயா, காலதாமசப்படும்படி மாரிக்காலம் வந்ததென் கிற கிலேசமோ? இராட்சதர்களுடைய சௌரியத்தை நினைத்து இளைத்த தன்மையோ? பிராட்டியாரைத் தேடுகிற தற்கு வானரசேனை இன்னம் வந்து சேரவில்லையென்கின்ற கவலையோ? சர்வஞ்ஞரான தேவரீர் இப்படித் தளர வேண் டிய நிமித்தமென்ன? வேதஞ்சலித்தாலும், சூரிய சந்திரர் சலித்தாலும், கடல் சலித்தாலும், ஆகாயம் பூமி முதலான வைகள் சலித்தாலும், உங்கள் திருவுளம் சலிக்கின்றதல் லவே! அறிவில்லாத இராட்சதர்களுடைய பெருமையெல்

லாம், உமக்குக் கோபமுண்டாகி உம்முடைய புருவமாகிய வில் வளைந்தால் அதோகதியாய்ப் போமே! அனுமனுடைய அறிவும் பலமும், அங்கதன் முதலியவர்களுடைய புஜபலமும் எவ்வளவோ, நாமறியவில்லை. எழுபது வெள்ளம் வானரசேனை களும் சாமானியமானவைகளாயிருக்குமா? மழைக்காலமும் கழிந்து போயிற்று. இனி என்ன தடையிருக்கின்றது? உம் முடைய தேவியார் இதோ வந்தார் வந்தாரென்றே உமது திரு வுள்ளத்தில் எண்ணித் துயரத்தை விட்டுவிடும். ரிஷீஸ்வரர் களுக்கு, 'இராட்சதர்களைச் சங்கரித்து உங்களுடைய குறை யைத் தீர்க்கிறோம்,' என்று அபயாஸ்தங் கொடுத்திருந்தீரே! அதுவும் விதியின் உபேட்சையினலேமுடிந்தது. இனி நீர் அந்த இராட்சத வமிசத்தை இமிசித்துக் கீர்த்தி வகித்துத் தேவர் களுக்கு உரிய பதவிகளை அவர்களுக்குக் கொடுத்தருளும். இதை விட்டுத் தேவரீர் இவ்வண்ணம் கிலேசிக்கிறது தர் மமோ? ஜயமானது உமக்கே உண்டாகுமல்லாமல் அந்த இராட்சதர்களுக்கு ஒரு போதும் கிடைக்க மாட்டாது. சும்மா வேதனைக்கு இடங்கொடுக்கிறது வீரமன்று. வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறதனல் நாள் கழிந்து போகிறதேயல்லாமல் ஒரு பிரயோஜனமுமில்லை. நீர் பிரயத்தனம் செய்வீரேயாகில், எது உமக்குக் கிட்டாது? ஆகையால், வருத்தப்பட வேண்டா,'' என்று சொன்னர்.

அந்த வார்த்தையைக் கேட்டுச் சிறிது சோகந் தீர்ந்து ஸ்ரீராமரிருக்க, மேன்மேலும் பிணிகள் வருகிறது போல மறு படியும் மழை பெய்யத் தலைப்பட்டது. குளங்களெல்லாம் நிறைந்தன. சமுத்திரங்குறைந்தது. குயில்கள் குரல் ஒடுங் கின. மலைகள் குளிர்ந்தன. வழிகளுந் திசைகளும் மறைந் தன. பிரிந்த ஸ்திரீ புருஷர்கள் வருந்தினர்கள். அன்றிற் பேடும் சேவலும் பிரியாமற்சேர்ந்திருந்தன. ஆண் குரங்கு கள் பஞ்சேந்திரியங்களை அடக்கிய யோகிகள்போலக் குளிரி னல் ஒடுங்கியிருந்தன. யானைகளெல்லாம் ரிஷிகள் போல நித்திரை நீங்கி இருந்தன. அன்னங்கள் தாமரைப் புஷ்பங்

களாகிய ஆசனங்களை விட்டு மரப்பொந்துகளிற் போய்ப் பதுங்கியிருந்தன. குறத்திகளும் குறவர்களும் சந்தன மரங்களால் கட்டப்பட்ட பரண்மேலிருக்கும் குடிசைகளில் நித்திரை செய்துகொண்டிருந்தார்கள். வள்ளிக்கொடிகள் சுற்றிக்கொண்டிருக்கிற சிறிய இலைகளையுடைய மரத்தின் கீழே கோபாலர்கள் ஆட்டுக்குட்டிகளை அணைத்து வைத்துக்கொண்டிருந்தார்கள். பேய்கள் திருடர்களைப்போல ஒளித்துக்கொண்டு பல்லைக் கடித்துப் பசியினால் வருந்தியிருந்தன; சூரிய உதயமானது தெரியவேயில்லை. இப்படிப்பட்ட தன்மையையுடைய மழை நாளில் இருள் வந்தது.

ஸ்ரீராமர் ஜானகியை நினைத்துக்கொண்டு லட்சுமணரைப் பார்த்து, "அப்பா, இராட்சதர்கள் எடுத்துப்போன ஜானகியும் இந்தச் சரற்காலத்தைப் பார்த்துப் பயத்துடனே வருந்துவாளே! நான் ஒன்றிலும் பிழைக்கிறதாகக் காணவில்லையே! அம்பருத்தூணியில் அஸ்திரங்கள் நிறைந்திருக்க நான் வச்சிர ஸ்தம்பத்துக்குச் சமானமாகிய தோளுடனே நாணமில்லாமல் உயிரை வைத்துக்கொண்டிருக்கத்தகுமோ? தூக்கணங்குருவியும் தன் கூட்டுக்குள்ளே மின்மினிப் பூச்சியை விளக்காக வைத்துக்கொண்டு தன் துணையைப் பிரியாமலிருக்கின்றது. நான் அவ்வளவுமில்லாமல், மனைவியைப் பிரிந்து மன்மத, பாணத்தினால் உபத்திரவப்பட்டுக் கொண்டிருக்கிறேன்! மேகம் மின்னினாலும் குமுறினாலும் பாம்பைப்போல மனம் வருந்துகின்றேன்! ஆரணியத்திலே வந்து நான் முடித்த காரியத்தைப் பார்த்தால், தேவர்களும் மனிதர்களும் சிரிப்பார்கள்! இனி இதைப்பார்க்கிலும் வேறே அவமானம் வேண்டுமா? இப்படி மழை விடாமல் பெய்து கொண்டிருக்கிறதனால், இறந்து போகிறதே நல்லதாகக் காண்கின்றது. இன்னமொரு ஜன்மத்திலாவது இந்தப் பழியைத் தீர்த்துக்கொள்வேனோ? அல்லது சந்நியாசம் வாங்கிக்கொண்டாவது கிலேசமொழிவேனோ? இங்கிருந்து அந்த இராட்சதர்களிருக்குமிடம் அறிகிறதற்கு இன்னம் எத்தனை

காலம் செல்லுமோ! அதைப் பார்த்துக்கொண்டிருக்கிறதிலும் மாண்டு போவதே நல்லது. நான், செம்பையுருக்கி வீசுகிறது போல இந்த மழைத்துளிகள் என் சரீரத்தை வெதுப்பும்படி வேகிறதா? ஜனகராஜர் அக்கினி சாட்சியாக, 'இவள் உன்னடைக்கலம்,' என்று சொல்லிக் கொடுத்திருக்க, அந்த வார்த்தையை நிர்வாகஞ் செய்ய மாட்டாத நான், இனிப் பூமியிலிருந்துதான் என்ன செய்கிறது? நீயொருவன் பக்கத்தில் வந்து தேற்றிக்கொண்டிருக்க, அந்த வார்த்தையைக் கேட்டு நான் தேறியிருந்ததனுலே சீதை வருவாளா? இந்தத் துன்பத்தை இனி வேறே யார்தான் தீர்க்கத் தக்கவர்? ஒரு பாணத்தை விட்டுத் தேவலோகத்தையும் சகல ஆத்துமாக்களையும் அதம்பண்ணினுலல்லாமல் சீதையைக் காணக் கூடாது! தர்மமென்கிற ஒரு பொருளுக்கல்லவோ பயந்து அப்படிச் செய்யாமல் இத்தனைத் துயரத்துக்கும் ஆளாயிருக்கிறேன்! சத்துருக்களும் தேவர்களும் ஒன்ருகக்கூடி எதிர்த்து வந்தாலும் பிழைத்துப் போவார்களா!" என்று சொன்னவைகளையெல்லாம் கேட்டு இலட்சுமணர், "சுவாமி, மாரிக்காலமும் முடிந்து போயிற்று. அந்தத் திருடர்களான இராட்சதர்களைக் காண்கின்ற காலமுஞ் சமீபித்திருக்கின்றது. நீர் ஏன் கிலேசிக்கிறீர்? எந்தக் காரியத்தையும் தகுந்த பிரயத்தனஞ் செய்தே முடிக்க வேண்டும். ஸ்ரீமகாவிஷ்ணுவும் தேவர்கள் அமிர்தந் தர வேண்டுமென்று கேட்ட மாத்திரத்தில் தாம் கொடுக்கிறதாயிருந்தாலும், மத்தும் கயிறும் தூண் முதலானவைகளும் தேடிவைத்துக்கொண்டல்லவோ கடலைக் கடைந்தார்? பின்னும், அவர் உலகங்களையெல்லாம் நினைத்த மாத்திரத்தில் உண்டாக்கி உட்கொண்டாலும் சக்கரம் முதலான ஆயுதங்களைக் கொண்டு உபாயத்துடனே போர் செய்தல்லவோ பகையாளிகளையெல்லாம் ஜயஞ் செய்கிருர்? சிவபிரான் திரிபுரதகனஞ் செய்யும்போது, எண்ணிய தந்திரமும், ஏறிய தேரும், எடுத்த வில்லும், தொடுத்த அம்பும் ஒருவரால் சொல்

லத்தக்கவைகளோ? நமக்குத் துணையாய்ச் சேரத்தக்கவர்களையெல்லாம் சேர்த்துக்கொண்டு, யுத்தத்திற்குப் போகத் தக்க காலத்திலே போய், யோசிக்கவேண்டுவனவற்றைப் பல முறை செவ்வையாய் யோசித்துச் செய்தால், ஜயம் கிடைக்காமற்போகுமா? பாவ கர்மிகளான இராட்சதர்கள் எப்போதும் தங்களுக்கே வெற்றியுண்டாகுமென்று நிச்சயிக்கிறவர்கள். நீதி தவறுமாயின், அந்த வெற்றியும் கீர்த்தியும் யார் பட்சத்திலுண்டாகும்? அது தேவரீரே சாதித்தருள வேண்டும்,'' என்று சொல்ல, மெய்தானென்று ஸ்ரீராமர் நினைத்து, 'இந்த மழைக்காலமும் போமா?' என்று கிலேசப்படும்போது அந்த மாரிக்காலம் போய்விட்டது. இல்லையென்று சொல்லாமல் கேட்ட பொருள்கள் எல்லாவற்றையுங் கொடுத்து வறுமையையடைந்த போது, யாசகர்களுக்குக் கொடுக்கிறதற்கு இல்லாமையால் லச்சையடையும்படியான வள்ளல்களைப்போல, மேகங்கள் வெளுத்தன. நல்வினை இதுவென்றும் தீவினை இதுவென்றும் ஒருவன் அறிந்து பரமாத்துமாவைக் காணப்பெற்ற தத்துவஞானம் வர, அவனை விட்டுப் பிரபஞ்சமாயை நீங்குவது போல, மாரிக்காலத்திலுண்டான இருளானது நீங்கியது. யுத்தம் முடிந்தவுடனே பேரிகையோசை அடங்கியது போல மேககர்ச்சனையும் அடங்கியது. அப்பொழுது அஸ்திரங்கள் பிரயோகிக்கப்படாததுபோல மழைத்துளிகள் சிந்தப்படவில்லை. சக்கரவர்த்தி திருமகனுர் வருத்தந் தீரும்படி நல்ல காலமும் பிறந்தது. மருத நிலத்தில் தாமரை இலையினுடைய மறைவிலேயிருந்த நண்டுகள் உலோபிகள் போல உள்ளே புகுந்து வளையை அடைத்துக்கொண்டு பதுங்கின. சங்குகளெல்லாம் தாம் பெற்ற முத்துக்களைத் தோற்கும்படி செய்கின்ற தந்தங்களையுடைய ஸ்திரீகள் முகத்தைப் பார்க்க வெட்கப்பட்டவை போலத் தண்ணீரில் மூழ்கி ஒளித்துக்கொண்டன.

# 11. கிஷ்கிந்தைப் படலம்

இப்படி மழைக்காலம் போகவே, ஸ்ரீராமரானவர் தம்பியாரைப் பார்த்து, “அப்பா, லட்சுமணா, அந்தச் சுக்கிரீவன் இன்னம் வரவில்லையே! என்ன நினைத்திருக்கின்றானோ, தெரியவில்லையே! தனக்குப் பாக்கியமானது வரவே, நன்றி நினையாமல், ஒழுக்கமும் நீங்கித் தர்மத்தையும் தவறி அன்பையுங் கைவிட்டாலும் விடட்டும். நம்முடைய சாமர்த்தியமும் அறியாதவனாய் இந்தச் சொற்ப வாழ்வினிடத்திலே மயங்கியிருக்கின்றான். இப்படிச் செய்த உதவியை மறந்து அருமையான சினேகத்தை வேரறும்படி களைந்து, சத்தியத்தை அழித்துச் சொன்ன சொல் தவறினவனைக் கொன்றாலுங் குற்றமில்லை! நீ போய் அவனுடைய அபிப்பிராயத்தை அறி. அவனுடனே நீ சொல்லத் தகுந்த வார்த்தைகளை நான் சொல்லுகிறேன், கேள்: ‘கண்டகர்களைச் சங்கரித்துத் தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவே கையிலெடுத்த வில்லுமுண்டு; உங்களுடைய உயிரை வாங்குகின்ற அம்புமுண்டு. அவ்வுயிரை அபகரித்துக்கொண்டு போகிற எமனுமுண்டு,’ என்பது என் ஆக்கினை எனச் சொல். நஞ்சுக்குச் சமான மானவர்களைத் துன்பம் அடையச் செய்வது பாவமன்று மனுநீதி. ஆகையால், அது அவர்களுடைய நெஞ்சினில் நன்றாய் உறுத்தும்படி சொல். மேலும், ‘நீங்கள் சொல்லிவந்த நாட்களும் கழிந்து போய்விட்டன. இப்போதாவது வாருங்கள். வாராதிருந்தால் உங்ளுடைய நகரமும், நீங்கள் ஆளும் அரசும், உங்களுடைய சுற்றத்தாரும் அழிய, நீங்களும் இறந்து போவீர்கள். அல்லாமலும், குரங்கு என்னும் பெயரும் இன்றைய தினத்தோடே ஒழிந்துபோம்,’ என்றும் சொல். அவர்கள், ‘இந்த இராம லட்சுமணர்களைவிட அதிக பலமுடையவர்களை நாம் தேடிக்கொள்வோம்,’ என்று நினைத்து வாராமற் போய்விடுவார்களானால், உன்னை ஜயிப்பதற்குத் திரிலோகத்திலும் வேறொருவரில்லை என உன் சாமர்த்தியத்தை அவர்

கட்கு நன்ருய்த் தெரியும்படி காட்டு; நீதிகளையும் சொல். அதற்கும் அவர்கள் பேதியாதிருந்தால், நீ கோபித்து யுத்தஞ் செய்து அவர்களை இமிசிக்காமல் அவர்கள் சொன்ன சொற்களை என்னிடத்திலே வந்து சொல். துரிதமாய்ச் சென்றுவா,'' என்று கட்டளையிட்டார்.

அந்த ஏவலைச் சிரசாக வகித்துக்கொண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்து, அவ்விடத்தில் சிறிது நேரமாயினும் தாமசியாமல், முதுகிலே அம்பருத்தூணியைக் கட்டி வில்லைக் கையிலே தாங்கிக் கொண்டு இராகவருடைய இருதயத்தைச் சர்வகாலமும் நீங்காதிருக்கும் இளைய பெருமாள் புறப்பட்டு, வழியில் உள்ள மரங்களும் மலைகளும் நடுநடுங்கும்படி சாதாரணமான வழியை விட்டுக் குறுக்கு வழியை மிதித்துப் போனுர். அப்படி ஆரணியத்திலே போகின்ற இலட்சுமணர் மராமரங்களைத் துளைத்துக்கொண்டு போன ஸ்ரீ ராம பாணம் போலவும், ஒரு திக்கஜமானது மற்றொரு திக்கஜத்தை அதன் காலின் அடியை நாடித் தேடியோடுவது போலவும், அதி வேகமாய் நடந்து, சூரியன் உதயகிரியிலேயிருந்து அஸ்தகிரியில் தாவிப் போவது போல ஒரு பர்வதத்திலிருந்து மற்றொரு பர்வதத்தைத் தாண்டி, ஒரு மலையிலேயிருந்து மற்றொரு மலையில் குதிக்கின்ற சிங்கம் போல அதிகமான கோபத்தோடே கிஷ்கிந்தா பர்வதத்திலே போய்ச் சேர்ந்தார். அங்கேயிருக்கின்ற வானரவீரர்கள், அவர் வருகிற வேகத்தையும் கோபாவேசத்தையும் கண்டு பயந்து ஓடி, அங்கதனைக் கண்டு, "சுவாமி, இளைய பெருமாள் அதிக கோபமாய் வருகிருர்! ஏதாய் முடியுமோ!'' என்று சொன்னுர்கள். அந்த வார்த்தையை வாலி புத்திரன் கேட்டு, அவர் வந்த சமாசாரத்தை அறியும்படி இலட்சுமணரிடம் வந்து, அவரைக் கண்டுகொள்ளாமல் தூரத்திலேயிருந்து, அவருடைய திருவுள்ளக் கருத்தைக் குறிப்பினுல் அறிந்துகொண்டு, தன் சிறிய பிதாவான சுக்கிரீவ மகாராஜனுடைய அரண்மனைக்குப் போனுன். அப்போது சுக்கிரீவ மகாராஜன், நளனுலே

செய்யப்பட்ட இரத்தினகசிதமான மாளிகையில் பஞ்சணை மெத்தையின்மேலே அனேக ஸ்திரீகள் கால்களை வருட, இராம லட்சுமணர்கள் உதவிய செல்வமான மதுவினாலே மிகவுஞ் செருக்குற்றவனாய், ஒரு பொன் மலையின்மேலே ஒரு வெள்ளி மலை கிடப்பது போலச் சயனித்திருந்தான். அகிற் காட்டிலும் சந்தனக்காட்டிலும் ஸ்திரீகளுடைய கூந்தற் காட்டிலும் தாவித் தவழாநின்ற தென்றற்காற்றானது வந்து முகத்தில் வீச, ஸ்திரீகளின் முத்துப்போலவும் முல்லையரும்பு போலவும் பிரகாசியாநின்ற தந்தங்களினிடத்திலே ஊறுகின்ற தேனையுண்டு அந்தத் தேனானது தனக்குப் பயித்தியத்தையும் மயக்கத்தையும் அதிகரிக்கச்செய்ய, மதம் பிடித்த யானையைப்போல மயக்கத்தையடைந்து, சிரசிலே மகுடமும் காதிலே மகரகுண்டலமும் பிரகாசிக்கத் தன்னுடைய முகம் சூரியமண்டலம் போல ஜொலிக்கச் சயனித்திருந்தான்.

அந்தச் சிறிய தகப்பனை அங்கதன் கண்டு, நித்திரையினின்றுமெழுப்பி, வந்தனஞ்செய்து, "ஐயா, ஸ்ரீ ராமருக்கு இளையவர் மனத்துக்குள்ளிருக்கின்ற கோபத்தை அவர் திருமுகமானது வெளிப்படுத்தும்படி அதி வேகமாய் வருகிறார்! உம்முடைய மனக்கருத்து என்ன?" என்று கேட்கவே, இன்ன சொல்லைச் சொன்னானென்றுந்தெரியாமல், பாக்கியத்தின் மயக்கமும் கள்ளின் மயக்கமும் நிறைந்த சுக்கிரீவன், தன்னையுமறியாமல், அங்கதனுடைய முகத்தைப் பார்த்தும் பிரதியுத்தரமொன்றும் சொல்லாமல், மறுபடியும் அந்தப் புட்பமெத்தையிலேயே படுத்துக்கொண்டான். அது கண்டு அங்கதன், 'இனியென்ன செய்வோம்!' என்று யோசனை செய்து, வெளியிலே வந்து, மந்திரியான அனுமனை அழைத்துக்கொண்டு, சில வானரப்படை வீரர்களுடன் தன் தாயான தாரையினிடத்திலே வந்து, அவளைச் சேவித்து, இலட்சுமணர் அதிக கோபத்தோடே வரும் செய்தியையும், சிறிய தகப்பன் மயக்கத்தோடே நித்திரையாயிருப்பதையுஞ் சொல்லி, மேலென்ன செய்யலாமென்று கேட்டான். அதற்கு

அந்தத் தாரையானவள், அனுமனையும் தன் குமாரனுன அங்கதனையும் பார்த்து, "செய்யப்படாத பொல்லாங்குகளைச் செய்தீர்கள்! அவைகளை எளிதிலே நீக்கப் பார்க்கிறீர்கள். நன்றி மறந்த நீங்கள் சுகப்படுவீர்களா? படையைக் கூட்டிக்கொண்டு வரச்சொன்ன நாளிதுவே; அந்த வார்த்தை தவருமற்போய்ச் சேர்ந்தாலல்லவோ உங்களுக்கு க்ஷேம முண்டாகும்? வாலியாகிய வீரருடைய பிராணனை எமனும் கொள்ளை கொள்ளும்படி பாணப் பிரயோகஞ்செய்து சகல பாக்கியத்தையும் கொடுத்தவரை எவ்வளவு சிரேஷ்டராக எண்ண வேண்டும்? அவரிடத்திலேயும் அபசாரப்படலாமா? தேவர்களைப்பார்க்கிலும் சிறந்த அந்த மகா புருஷரானவர், தேவியைப் பிரிந்து, உயிர் நீங்கினவரைப்போலத் துயரப் பட்டுக்கொண்டிருக்கின்ருர். அதை நினையாமல், நீங்கள் ஸ்திரீகளுடனே கூடிக்கொண்டு மதோன்மத்தராய்ச் சத்தியம் தவறிப்போனீர்கள்! அவர் செய்த நன்றியையும் மறந்து போனீர்கள்! உங்களுக்குத் தீவினை வந்து நேர்ந்தது! ஆகையால், சண்டை செய்தீர்களானுல் மாண்டு போவீர்கள். வேறே இனிப் பிரயத்தனம் செய்துதான் ஆகத்தக்கதென்ன? உங்களை ஒரு பொருளாய் எண்ணி அவர்கள் சினேகித்ததற்காக நல்ல உபகாரம் செய்தீர்கள்!" என்று இவ்விதம் சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்திலே, இலட்சுமணர் வருவதைக் கண்ட குரங்குகள் கோட்டை வாயிற்கதவைச் சாத்தித் தாளிட்டு, பின்னும் கற்களையும் கொண்டு வந்தடுக்கின. அதைக்கண்டு, "நம்மை வாராமல் தடுக்கிறதற்காகவா இந்த யோசனை செய்தார்கள்?" என்று நினைத்துக்கொண்டு, இளைய பெருமாளானவர் நகைத்துத் தாமரைப் புட்பத்திற்குச் சமானமான தம்முடைய பாதத்தினுலே அந்தக் கிஷ்கிந்தா பட்டணத்தின் கோட்டைவாயிற்கதவை எட்டியுதைத்தார். பகவானுடைய திருவடி ஸ்பரிசமான மாத்திரத்தில் பத்தர்களுடைய பாவங்களெல்லாம் பற்றற்றுப் போனது போல, ஸ்ரீ ராமாநுஜருடைய பாதம் தாக்கவே, கோட்டை மதிலும் கத

வும் வானரங்களானவை அடுக்கிய கற்களும், இடிந்து, உடைந்து, தகர்ந்து, தூள்தூளாய்ப் போயின. வானரக் கூட்டங்களெல்லாம் பயப் பிராந்திகொண்டு திசைதோறும் ஓடத் தலைப்பட்டன. அந்தக் குரங்குகள் பயந்து கூச்சல் இட்டுக்கொண்டு பல திசைகளிலும் ஓடிப்போனது சொல்லுவதற்கே அருமையாயிருந்தது. மந்தரகிரியை நாட்டிக் கடைந்த காலத்தில் பாற்சமுத்திரமானது பட்ட பாடு, அந்தக் கிஷ்கிந்தையானது அன்றைய தினம் பட்டது. இவ்விதம் வானரங்கள் கிஷ்கிந்தா பர்வதத்தை விட்டுக் காடுகளிலே ஓடிப்போய்விடவே, அந்தப் பட்டணம் நட்சத்திரங்களில்லாத ஆகாயம் போன்றிருந்தது. அத்தருணத்தில் அந்நகரத்திற்குள்ளே இலட்சுமணர் பிரவேசித்து, வீதியில் வருகிறபோது, தாரையுடனே பேசிக்கொண்டிருந்த அனுமனும் அங்கதனும் பார்த்து, அதிக பயம் கொண்டவர்களாகி, “அம்மா, இதோ இளையபெருமாள் வந்துவிட்டாரே! என்ன செய்யலாம்!” என்று தாரையைக் கேட்டார்கள். தாரை அவர்களைப் பார்த்து, “நீங்களெல்லாரும் அப்பாலே விலகிப் போங்கள். நான் போய்க் கண்டு அவரது மனோபாவத்தை அறிகிறேன்,” என்று அனேக ஸ்திரீகளுடனே புறப்பட்டாள். தாரை நடந்து, வானர வீரர்கள் வாசஞ்செய்கின்ற ராஜ வீதிகள் எல்லாவற்றையுந் தாண்டி, சுக்கிரீவ மகாராஜனுடைய அரண்மனைக்கு நேராய் நடக்கின்ற இலட்சுமணப் பெருமாளுக்கு எதிரே வந்து நின்றாள். இப்படிச் சிலதியரின் சிலம்புகளே பேரிகையாக முழங்கவும், நிதம்பமான தேர்கள் சூழவும், கண்ணான வேல்களும் புருவமான விற்களும் நெருங்கவும், ஸ்திரீ ஜனங்கள் அடர்ந்து வந்த பொழுது, இலட்சுமணப் பெருமாளுக்கு மாருத கோபமும் மாறிப்போய்விட்டது. இலட்சுமணர் செவ்வையாய் அவர்களைப் பார்க்கவும் அஞ்சினவராகி, அலர்ந்த செந்தாமரைப் புட்பத்தைப்போலிருக்கும் முகத்தைச் சாய்த்துக்கொண்டு, மாமியார் கூட்டத்தின் நடுவே வந்த புதுமருமகளைப்போலச் சங்கோசமாய்நின்றனர்.

அவ்வண்ணம் நின்ற வீராதிவீரரான இலட்சுமணப் பெருமாளைக் கண்டு, மாதர்கள் கூட்டத்தின் நடுவே வந்த தாரையானவள் அஞ்சி நடுக்கமுற்று, "சுவாமி, தேவேந்திரன் முதலான தேவர்களும் அனேக காலங் தவம் செய்தாலும் அவர்கள் முன்பு நீங்கள் வரக்கூடியவர்களா? அப்படியிருக்க, உங்களுடைய பாதாம்புயம் வருந்த எங்களுடைய மனைக்கு வரக்கிடைத்தது நாங்கள் பூர்வம் செய்த தபோபலமேயன்றி வேறில்லை! நாங்கள் கிருதார்த்தர்களானோம்! வாழ்ந்தோம்! இரு வினைகளுந் தீர்ந்தோம்! இதைப் பார்க்கிலும் எங்களுக்கு வேறென்ன உறுதியிருக்கின்றது? நீங்கள் அதிவேகமாய் வந்ததைப் பார்த்து உங்களுடைய திருவுளக் கருத்துத் தெரியாததனாலே உங்கள் சேனைகள் பயப்படுகின்றன. பெரிய பெருமாளுடைய பாதாரவிந்தத்தை விட்டுப் பிரியாமலிருக்கும் தேவரீர், இப்பொழுது வந்த சமாசாரம் அருளிச்செய்ய வேண்டும்," என்று வீணையின் இசையைப் பார்க்கிலும் இனிமையாகச் சொல்ல, அந்த வசனத்தை இலட்சுமணர் கேட்டருளி, "யாரிப்படிச் சொன்னவர்?" என்று கோபம் நீங்கிக் கிருபை பெருகத் திருமுகத்தை ஏறெடுத்துப் பார்த்து, பகற்காலத்திலே உதயமான பூரண சந்திரனைப்போல அழகு ஒழுகுகின்ற தாரையினுடைய முகத்தை நோக்கித் தம்முடைய தாய்மாரை நினைத்து மிகவும் மனம் நைந்து, கழுத்திலே மாங்கல்யமில்லாமல், பலவித இரத்தினபரணங்களையும் துறந்து, வஸ்திரத்தினால் கழுத்தையும் மறைத்துப் போர்த்துக்கொண்டிருக்கும் கோலத்தைக்கண்டு, கண்களிலே நீர் ததும்பக் கிலேசித்தார். பின்பு, "இப்படித்தானே என்னைப்பெற்ற தாய்மார் இருவரும் இருப்பர்!" என்று துயரத்தோடே மனம் தளர்ந்து, நெடுநேரம் சும்மாவிருந்து, பின்பு கேட்ட வார்த்தைக்கு உத்தரம் சொல்லவேண்டுமென்று திருவுளத்திலே எண்ணித் தாம் வந்த காரியத்தைத் தாரைக்குச் சொல்லத் தொடங்கினர்:

"கேளும் அம்மா : சூரியபுத்திரனுன சுக்கிரீவன் சுவாமியினிடத்திலே, 'இந்த மழைக்காலம் போனவுடன் சேனையைக் கூட்டிக்கொண்டு நானும் வந்து, தேவியாரைத் தேடிப் பார்த்துக் கொண்டு வந்து கொடுக்கிறேன்,' என்று சொல்லியிருந்த சொல் மறந்து போனுன். ஆகையால், ஸ்ரீ ராகவர், 'அந்தச் செய்தியை நீ போய்ச் சீக்கிரத்தில் அறிந்துவா,' என்று ஆக்கியாபிக்க, அது நிமித்தமாக நான் வந்தேன். அப்பால் அவருடைய திருவுள்ளம் நினைத்தபடியெல்லாம் முடிந்துவிடும்,'' என்று இளையபெருமாள் சொன்னுர். அவ் வார்த்தையைத் தாரை கேட்டு, "சுவாமி, கோபஞ்செய்ய வேண்டா. சிறியவர்கள் தீமைகளைச் செய்தாலும், பொறுத்துக்கொள்வதற்கு நீங்களல்லாமல் வேறே யாரிருக்கின்றுர்கள்? உங்களுடைய காரியத்தை மறந்து போகவில்லை. நீங்கள் செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரமும் உண்டோ? வானரசேனைகளை அழைத்து வரும்படி உலகமெல்லாம் தூதர்களை அனுப்புவிக்க உங்களுடைய ஆக்கினையினுலே அவர்கள் போயிருக்கிருர்கள். அந்தச் சேனைகள் வந்து சேரத்தக்க காலமானது சமீபித்தது. அதைக் குறித்து தான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிருர்கள். சரணமடைந்தவர்களுக்குத் தாயைப்பார்க்கிலும் விசேஷ அன்புடையவர்களாயிருக்கின்ற நீங்கள், கோபத்தைத் தணித்துக்கொள்ள வேண்டும்! பொல்லாங்கு செய்யாமலிருந்தால் யார்தான் கெட்டவர்களாவார்கள்? அடைக்கலமென்று வந்தவர்களுக்கு நீங்கள் அபயாஸ்தங் கொடுத்த மாத்திரத்திலே சம்பத்துண்டாயிற்றேயென்று அந்த நன்றியை நினையாமல் உங்களுடைய காரியத்தை மறந்தால், அதுவும் உங்களால் உண்டானதல்லவா? பிராட்டியார் நிமித்தம் இரணக் களத்திலே மாண்டு கிடந்ததல்லவோ உங்களைச் சினேகித்த சினேகத்திற்குப் பொருளாகும். நன்மையே குடிகொண்டிருக்கிற நெஞ்சையுடைய நீங்கள் அரசாண்டுகொண்டிருக்கும்படி கடாட்சித்துப் பேருதவி செய்தீர்கள். அப்படிப்பட்ட உங்

களையே இகழ்வதாயிருந்தால், அது எளிதாய்ப்போகிறதன்று மறு பிறப்பிலே அடையத்தக்க நரகவாதனையை இப்பிறப் பிலேதானே அடைந்து, எழு பிறப்பினுடைய பயனையும் இழந்து போவார்கள். வாலியினுடைய ஆயுளையும் ஆண்மை யையும் அழித்த பாணம் உங்களிடத்திலே இருக்கும்போது உங்களுக்குப் படைத்துணையும் வேறே வேண்டுமா ? உங்க ளுடைய கையிலேந்திய வில்லைப்பார்க்கிலும் மேலான துணையுமுண்டோ ? தேவியாரைத் தேடுவதற்கு இவர்களைத் தேடுகிறீர்களே அல்லாமல், வேறென்ன இருக்கின்றது ? அவ்வளவு ஏவல் இவர்களுக்குக் கிடைத்தது இவர்கள் செய்த தவமென்று எண்ண வேண்டுமே! இப்போதும் அந்தக் காரி யத்தைச் செவ்வையாகச் செய்து உஜ்ஜீவிக்கத் தக்கவர்கள் உங்களைச் சரணகதியடைந்த சுக்கிரீவ ராஜா முதலானவர் களே," என்று சொன்ன சொற்களையெல்லாம் இளைய பெருமாள் சந்தோஷமாகக் கேட்டுத் தயையுண்டாகி, "இந் தப் புண்ணியவதி பல விதமான தர்மங்களையும் கேட்டறிந் திருக்கின்ற நல்ல விவேகி," என்று நினைத்து மனத்திலே நாணங்கொண்டு நின்றார்.

இது கண்டு அனுமனானவன், "இவருக்குக் கோபம் தணிந்தது! இதுதான் நல்ல சமயம்!" என்று இலட்சுமணர் சமீபத்திலே வந்து, அவருடைய திருவடியில் வணங்கி நின் றான். இலட்சுமணர் மாருதியினுடைய முகத்தைப் பார்த்து, "அனுமரே, நீர் சகல சாஸ்திரங்களையும் அறிந்தவராயிருந் தும் சுவாமியினுடைய ஆக்கினையை மறந்துவிட்டீரோ ?" என்று கேட்க, "சுவாமி, கேட்டருளும்," என்று நவவியா கரண பண்டிதனான அனுமன் சொல்லுகின்றான்: பெற்ற தாயையும், தந்தையையும், குருவையும், தெய்வத் தன்மை யையுடைய பிராமணர்களையும், பசுக்களையும், சிசுக்களையும், ஸ்திரீகளையும் வதை செய்தவர்களுக்கும் அந்தந்தப் பாவத் தைப் பரிகரிக்கத் தக்க உபாயம் உண்டு. அழியாத உத வியை அழித்தவர்களுக்கு மாத்திரம் எந்தக் காலத்திலானு

லும் அந்தக் குற்றத்தை ஒழிக்கத் தகுந்த உபாயமுமுண்டோ? சுவாமி, உங்களுக்கும் எங்களுடைய வானராதிபதியான சுக்கிரீவ மகாராஜாவுக்கும் சினேகமுண்டான போது பேசின வார்த்தைகளெல்லாம் அடியேன் முகாந்தரமாகவல்லவோ? அதற்குப் பழுது வருமானல், அப்பால் பிழைக்கத் தகுந்த மார்க்கம் எவர்க்காவதுண்டோ? பின்னும் அறிவு கெட்டுப் போய்விட்டதாகுமல்லவா? உங்களுடைய கிருபைக்குப் பாத்திரமான அடியேன் ஈனனுவேனே? தேவரும், தவமும், தர்மமும், சகலமும் நீங்களே என்கிறது சத்தியமாய் என்னுடைய மனத்தில் இருக்கின்றது. அதிருக்கட்டும். மூன்று உலகங்களையும் இரட்சிக்கின்ற உங்களுக்குக் கோபம் ஜனித்தால், நாங்களோடியொளிக்கத் தகுந்த அரணுமுண்டோ? பிராணனுடனேயுமிருப்போமா? சுக்கிரீவ மகாராஜாவும் மறந்து போகவில்லை. சேனைகளை அழைத்து வரும்படி தூதர்களை எங்கும் அனுப்பி, அவர்கள் வந்து சேர்வதையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறுர். தர்மத்தைத் துணையாகக் கொண்டுள்ள உங்களிடத்தில் தாம் சொன்ன சொல்லை அழித்து நடந்தால், அவர் உலகத்திலே பிறந்தவரே அல்லர். அது ஒன்று மாத்திரமா! நரகப் பிராப்தியாவது தப்பிப்போமா? ஒருவன் செய்யாமற்செய்த உதவிக்குப் பதில் உதவி ஒன்றுமில்லையாயினும், அவனுக்கு முன்னே இரணக்களத்திலே போய்ச் சத்துருவை மார்பிலே உதைத்துக் கொல்லவேண்டும். அது முடியாவிட்டால், சத்துருவினுலாவது தான் உதையுண்டு உயிர் மாய வேண்டும். அப்படியுமில்லாவிட்டால், வேறென்ன இருக்கின்றது? இனித் தேவரீர் இவ்விடத்தில் நிற்கின்றது காரியமன்று; சத்துருக்கள் அறிந்தாலும் இது சினேகமற்ற செய்கையாகக் காணும். ஆண் சிங்கத்திற்குச் சமானமான பராக்கிரமத்தையுடைய நீங்கள் கொடுத்த பாக்கியத்தையும், அதை அனுபவிக்கின்ற எங்கள் அரசரான சுக்கிரீவ மகாராஜாவையும் வந்து பார்க்கலாம்,'' என்று சொல்ல, அந்தச் சொல்லைக் கேட்டு இராமானுஜர் கோப

மாறித் திருவுளம் மகிழ்ந்து, "இவர்கள் சுவாமியின் கட்டளையை அகங்காரத்தாலே கடக்க வேண்டுமென்று கடந்தவர்களல்லர். தாங்களடைந்த போக பாக்கியத்தில் தோய்ந்தும் தோயாதவர்களாயிராமல், கேவலம் மூழ்கிவிட்டவர்களாயிருந்ததனுலேயே கடந்தார்கள்," என்று சிந்தித்தவராய், அனுமனைப் பார்த்துச் சொல்லுகின்றார்: "அனுமரே, என்னுடைய நெஞ்சிலிருப்பவைகளை அவசியம் உம்மிடத்திலே சொல்ல வேண்டும். ஆகையால் சொல்லுகிறேன். அவற்றைச் செவ்வையாய் ஆலோசித்துப் பாரும். சுவாமியானவர் பிராட்டியாரைக் குறித்துக் கொண்ட கோபமும் அபிமானமாகிய நெருப்பும் அவருடைய பிராணனை வாட்ட, அதைக் கணட நான் சகித்திராமல் ராஜதர்மம் அழியக் கொடுமையுடனே சம்பந்தப்பட்டு, பாவிகள் செய்கிற துஷ்கிருத்தியங்களைச் செய்வதற்கு மனஞ்சம்மதித்தேன். பழிக்கும் அஞ்சமாட்டேன். ஆயினும், என் கோபத்தை நானே தணித்துக்கொண்டு உயிர் தரித்திருந்து சுவாமியினுடைய கோபத்தையும் தணித்து, அவருடைய துக்கத்தையும் ஆற்றித் தேற்றுவதிலே பல நாள் கழிந்து போய்விட்டன. அல்லவென்று எத்தனித்தால், மூன்றுலகமும் எரிந்து தீய்ந்து போம். தேவர்களும் மாண்டு போவார்கள். தர்மமும் இறந்து போம். விதிக்கும் விதியாய் ஒருவராலும் விலக்கக்கூடாததாய் முடியும். என் தமையனர் உம்மைக் கண்டு, உம் ராஜாவைச் சினேகித்து, ஆபத்து வந்த போது உதவி செய்வாரென்று எண்ணி, பொறுத்துக்கொண்டிருந்தார். அல்லாவிட்டால் தம் கையிலிருக்கின்ற வில்லிலே ஓர் அஸ்திரத்தை அனுசந்தானஞ் செய்து பிராட்டியாரிருக்குமிடத்தை அறிந்து வாவென்று அபிமந்திரித்துவிட்டால், அந்த க்ஷணம் இந்த அண்டமெல்லாம் தேடித் தெரிந்துவரும். அதை ஒருவராலே தடுக்கக்கூடுமா ? அன்று நீங்கள் சொன்ன வார்த்தையின்படி செய்யாமல் காலதாமசப்படுத்திவிட்டது உங்களுக்குத் தர்மம் அன்று. ஆயினும், நீங்கள் காலதாமசப்படுத்தினவர்

களுமல்ல. அனேக காலமாய் மதத்து அகங்கரித்திருந்த இராட்சதர்களைப் பின்னும் வாழச் செய்தீர்கள் ; தேவர்களுக்கும், ரிஷீஸ்வரர்களுக்கும், மகத்தாகிய பிரயாசத்தைக் கொடுத்துப் பாவத்தை மேன்மேலும் வளரச் செய்தீர்கள். அல்லாமலும், கோபம் கொள்ளாத சாந்தமூர்த்திக்கும் கோபம் வரும்படி செய்தீர்கள்,'' என்று இவ்விதம் சொல்ல, அனுமனானவன் நமஸ்காரஞ் செய்து, "வேத சாத்திரங்களில் பூரண பாண்டித்தியமுள்ள சாதுரியரே, கேளும்: நடந்து போன காரியங்களைக் குறித்து இனித் திருவுளத்தில் எண்ண வேண்டா. இந்தக் காரியத்தை நாங்கள் ஏந்திக்கொண்டு அவசியம் முடிக்கிறோம். முடியாவிட்டால், இது நிமித்தம் இறந்தாகிலும் தீர்வோம்! இவைகளுக்கெல்லாம் அடியேனே சாட்சியாயிருக்கின்றேன். சுக்கிரீவ மகாராஜாவிடத்திற்கு எழுந்தருளுக, '' என்று சொல்ல, இலட்சுமணப் பெருமாள், "ஐயா, முன்னம் நீர் சொன்னபடிதானே நடந்து வந்தது? இன்னமும் நீர் எப்படிச் சொல்லுகிறீரோ அப்படியே செய்யச் சம்மதித்திருக்கிறோம்,'' என்று சொல்லி அனுமனுடனே சுக்கிரீவனுடைய மனத்தையும் அறிவோமென்று அப்பால் நடந்தார். அது கண்டு தாரையானவள் வேலையொத்த கண்களையும், அல்லி மலரையொத்த சிவந்த வாயையும், வில்லையொத்த புருவத்தையும், அன்னத்தையொத்த நடையையும், மயிலையொத்த சாயலையும், முத்தையொத்த தந்தங்களையும், பச்சை மூங்கிலையொத்த தோள்களையும், குயிலையொத்த சொல்லையும், சுவர்ண கலசத்தையொத்த ஸ்தனங்களையும், மின்னலையொத்த இடையையும், குமிழம்பூவையொத்த மூக்கையும், மேகத்தையொத்த அளகத்தையுமுடைய பெண்கள் கூட்டத்துடனே தன் மாளிகையிற்போய்ச் சேர்ந்தாள்.

அப்போது நீதி சாஸ்திரத்திலே வல்லவர்களாயிருக்கின்ற சில மந்திரிமார்களுடனே வாலி புத்திரனாகிய அங்கதன் வந்து, ராமாநுஜருடைய பாதகமலங்களைச் சேவித்துக் கொண்டு, பயந்தீர்ந்தான். அத்தருணத்தில் இலட்சுமணர்

அவனைப் பார்த்து, "அங்கதா, சீக்கிரத்தில் உன் பிதாவினிடத்திற் போய் நாம் வந்த செய்தி சொல்," என்று சொல்லினர். அவனும், "நல்லது! அப்படியே செய்கிறேன்," என்று பின்னும் அவரைத் தொழுதுகொண்டு, சுக்கிரீவ மகாராஜனுடைய கிருகத்திற்குப்போய், அவனுடைய பாதத்தைத் தடவிப் பிடித்து, அவனை நித்திரையினின்றும் எழுப்பி, "ஐயா, இளைய பெருமாள் வந்து இதோ நம்முடைய வாயிலிலே நிற்கிறார். அவருக்குக் கோபம் சமுத்திரத்தைப்பார்க்கிலும் அதிகமாய் மூண்டிருக்கிறது. அது சொல்லி முடியாது. இவ்விதம் வந்து விளைந்தது!" என்று சொன்னான்.

அந்த வார்த்தை கேட்டுச் சுக்கிரீவன் நித்திரை நீங்கி, அங்கேயிருக்கின்ற ஸ்திரீகூட்டங்களையெல்லாம் அப்புறம் போகச் சொல்லித் தான் எழுந்திருந்து, தன்னிடத்தில் முன்பு அந்த அங்கதன் வந்து சொன்ன சமாசாரம் மது மயக்கத்தினாலே தெரியாதிருந்தவனாகையால், "நாம் செய்த குற்றம் ஒன்றுங் காணோமே! அப்படியிருக்க, இளைய பெருமாள் கோபஞ்செய்ய வேண்டிய காரணம் என்ன?" என்று கேட்க, அங்கதன், "இன்ன தினத்தில் வருகிறோமென்று உடன்பட்டுச் சொல்லி வந்து அந்த நாளில் நீர் போய்ச் சேரவில்லை. போகபாக்கியத்தை அடைந்து, அதையே நினைத்து, செய்த நன்றி மறந்ததாகவும் அபத்தம் சொன்னதாகவும் எண்ணி அவருக்குக் கோபம் உண்டாயிற்று. அத்தருணத்திலே அந்தச் செய்கையின் நயத்தையறிந்த அனுமன் போய் வேண்டிக்கொண்டபடியால் இன்னம் நம்முடைய பிராணன் நிலைத்திருக்கின்றது. அவர் வந்த வேகத்தைக் கண்டு வானரவீரர்கள் கோட்டை வாயிற்கதவைச் சாத்தி, கற்களை மேன்மேலும் கொண்டு வந்து அடுக்கி, கோபாக்கினியானது பொங்கி எழ, அவருடனே யுத்தஞ் செய்ய எத்தனித்திருந்தார்கள். அதை ராமாநுஜர் கண்டு, தம்முடைய திருவடியினால் அக்கோட்டை வாயிற்கதவை உதைத்தார். அந்த வாயிலும் கதவும் இடிந்து சிதைந்து தூள் தூளாய்ப் போயின.

அதைக் கண்ட வானர சேனைகள் பயந்து பறந்து ஓடி எந்த மலைகளிலேதான் ஒளிந்தனவோ, இன்னும் தெரியவில்லை, இதைக்கண்டு என் தாயார் ஸ்திரீ கூட்டத்துடன் லட்சுமணப் பெருமாளுக்கு எதிரேபோய் நிற்க, அவர் ஸ்திரீகளின் வடிவத்தைப் பாராதவரானபடியினுலே மனத்தினிற் பொங்கி எழுந்த கோபத்துடனே அப்புறம் அடி பெயர்த்து வையாமல் வருத்தமுற்று அந்த இடத்திலேயே நின்ருர். அந்தச் சமயத்தில் என் தாயார் அவருக்கு இனிய வார்த்தைகளைச் சொல்லி, 'சுவாமி, எங்களிடத்திற்கு நீங்கள் இப்பொழுது தயவு செய்து வந்த காரியமென்ன? அருளிச்செய்ய வேண்டும்,' என்ருர். அவர் வந்த காரியத்தைச் சொன்னுர். அந்த வார்த்தை கேட்டு என் தாயார் அவருடைய கோபத்தை யாற்றி, 'சுவாமி, இவர்கள் உங்கள் ஆக்கினையை மறந்து சும்மா இருக்கவில்லை. வானர சேனைகளைச் சீக்கிரத்தில் கொண்டு வரும்படி தூதர்களைப் போக விடுத்து, அவர்கள் வந்து சேருகிறதைக் குறித்துதான் வழி பார்த்துக்கொண்டிருக்கிருர்கள்,' என்று சொன்னுர். இவை இவ்விடத்தில் நடந்த செய்தி,'' என்று சொன்னுன்.

இப்படியவன் சொல்லக்கேட்ட சூரிய குமாரனுகிய சுக்கிரீவன், "அப்பா, அந்த மகானுபாவர்கள் கோபித்து எதிர்த்தால் அவர்களுக்கு எதிரே நிற்கத் தக்கவர் யார்? அப்படிப்பட்ட வில் வீரர்கள் உக்கிரங்கொண்டு வந்தால் எனக்கு வந்து சொல்லாமல், நீங்களே இப்படியெல்லாம் ஏன் செய்தீர்கள்? நீ தெரிந்தவனுயிருக்கின்ருயே!'' என்று சொல்ல, அங்கதன், "ஐயா, முன்னே ஒரு தரம் வந்து எழுப்பிச் சொன்னேன். உமக்கு மயக்கந் தெளியாமையால் நீர் அதை அறியவில்லை. அப்பால் வேருேர் உபாயமில்லாதது கண்டு அனுமனிடம் சொல்லப் போனேன். இனி நீர் சீக்கிரமாய்ப் போய்க் காண்கிறதே உத்தமம்,'' என்று சொன்னுன்.

அந்த வார்த்தையைக் கேட்டுச் சுக்கிரீவன் மனம் தெளிந்து, "அப்பா, அவர்களால் நான் பெற்ற சாம்ராஜ்யத்

தைப் போல மற்ஞெருவர் பெற்றிருப்பாரா? அப்படிப்பட்ட அமிதமாகிய சம்பத்தை எனக்குக் கொடுத்து இரட்சித்த மகானுபாவர் படுகின்ற வருத்தத்தையெல்லாம் கள்ளுண்ட மயக்கத்தினுலே மறந்து போனேன்! ஆகையால், நான் அவர்களைக் காண வெட்கப்படுகிறேன்! இப்பொழுது எனக்குச் சம்பவித்த இதைவிடப் பேதைமையான காரியம் வேறென்ன இருக்கிறது? கொலை செய்தல், களவு செய்தல், பொய் பேசுதல், கள்ளுண்டல், குருவை நிந்தித்தல் ஆகிய இந்தப் பஞ்சமா பாதகத்தில் கள்ளுண்டல் ஒரு பாதகமா மல்லவா? அல்லாமலும், ஜனித்தது முதல் நாம் பிரபஞ்ச மாயைக்கு உட்பட்டு மயங்குகின்ரூேம். அந்த மயக்கத்தையே ஒழிக்க நமக்குத் திராணியில்லாமலிருக்க, அதற்கு மேல் இந்த மயக்கத்தையும் அடைந்தோம்! விவேகத்தைப் பெற்றுத் தீவினையையொழித்தவர்கள் ஜனன மரணத்தை நீக்கி முத்தியடைவார்களென்று சபலமில்லாத பரம ஞானிகளும் வேதமும் சொல்லவும், அதை யோசியாமல், மதுவை அதிலே நெளிகின்ற புழுவையெடுத்து எறிந்துவிட்டு மனங் கூசாமல் குடித்து உழல்கின்றது எப்படியிருக்கின்றதென்ருல், வீடு பற்றிக்கொண்டு எரியும் போது அந்த நெருப்பை நெய்யினுலவிக்கின்றது போல இருக்கின்றது. ஜீவாத்தும நிலை இப்படிப்பட்டதென்றும், பரமாத்துமநிலை இப்படிப்பட்டதென்றும் ஒருவன் அறிந்தால்தான் அவனுடைய பிறவித் தடுமாற்றம் போமென்று வேதங்களும் மற்றச் சாஸ்திரங்களும் சொல்லுகின்றன. அப்படியிருக்க, தன்னிலையை அறியாதவனுய் ஜனன வியாதியில் அழுந்தியிருக்கின்றவன், அதன் மேலும் கள்ளுண்டு மயங்குகின்ற மயக்கத்தையா பெறுகின்றது? அஞ்சி அபயமென்றடைந்தவர்களை இரட்சித்தவர்களும், பிரமஞானிகளும், சுகதுக்கங்களை ஒளித்த எதீஸ்வரர்களும் மோட்சமடைந்தார்களல்லாமல், ஒளிந்திருந்து மதுவை உண்டு உலகத்தாரெல்லாம் அறிந்து நகைக்க இங்கும் அங்கும் ஓடிக் களித்தவர்களில் ஒருவராவது மோட்சமடைந்

ததைக் கண்டதுண்டா? சத்துருக்களை ஜயித்ததையும், சினேகிதர்கள் செய்த உதவியையும், தாங்கள் கற்ற கல்வியையும், பிரத்தியட்சமாகக் கண்ட அனுபவங்களையும், சாஸ்திரங்கள் சொல்லியிருக்கின்றதையும், தங்களுக்குச் செல்வம் வந்து சம்பவித்ததையும், தரித்திரத்தினுல் துன்பம் வந்ததையும், தெளிவாக அறிவார்களாகில் அதைவிட உறுதி வேறென்றுண்டோ? வஞ்சனையும், களவும், பொய்யும், தெரியாமையும், துராசாரமும், தஞ்சமென்றவர்களை இரட்சியாமல் நீக்கிவிடுகின்றதும், இறுமாப்பும், கள்ளுண்டு மயங்குகின்றவர்களுக்கு உண்டாகும்; இலட்சுமி கடாட்சமும் மாறிப்போம். விஷமானது கொல்லுமேயல்லாமல் மதுவைப்போல நரகத்தைத் தரமாட்டாது. மதுவினுலே கேடு வருமென்று நான் கேள்விப்பட்டேன். குடித்த பின்பு அந்தச் சொல்லின் பிரயோஜனத்தை அனுபவமாகக் கண்டேன். அந்த மட்டில் அனுமன் நீதியையுடைய கல்வியினுலல்லவா மதுவைக் குடியாமல் விலக்கினன்? இனிச் சொல்லுகின்றதில் என்ன பயன்? அதிசீக்கிரமாய் வந்த வீராதிவீரராகிய இலட்சுமணர் மிகவும் கோபிப்பாராகில், நானும் என் படைத் தலைவர்களும், மற்றும் என் குலத்தாரெல்லாரும் இன்றே இறப்பதற்குச் சந்தேகம் எவ்வளவுமில்லை. அப்பா, அங்கதா, நான் இந்தக் கள்ளினுலாகிய பெருங்கேட்டைக் குறித்து நெஞ்சம் திடுக்குற்றுப் பயப்படுகிறேன்! ஆகையால், இதைக் கையினுலே தொடவுங்கூடாது. மனத்தில் நினைக்கிறதும் யுக்தமல்ல,'' என்று பலவாறு எடுத்துச்சொல்லி, "இனி இந்தக் கொடிய மதுவை இச்சித்தேனுகில் ஸ்ரீ ராமசந்திரருடைய திருவடிக்கு அபசாரப்பட்டவனுவேன்!'' என்று பிரதிக்கினை செய்து, 'இளைய பெருமாளை எதிர்கொண்டு போய்க் காண்பதற்கு உரிய சத்திரம், சாமரம், பரிவட்டம் முதலியவுங்கொண்டு இன்னமும் நீயே போய்க் காண்,'' என்று அங்கதனை அனுப்பிவிட்டு, தன்னுடைய பட்டமகிஷியும் மற்றப் பரிஜனங்களும் தன்னைச் சூழும்படி தான் வந்து ராஜ அரண்

மனையின் தலை வாயிலில் நின்றுகொண்டு, லட்சுமணர் வரவை எதிர்பார்த்திருந்தான்.

இவனிப்படியிருக்க, இளைய பெருமாள் வருவதைக் குறித்து, வீதியினிடமெல்லாம் சந்தனமும், வாசனைப் பொடிகளும், அகிற்புகையும், பூரண கலசங்களும், முத்து விதானங்களும், மகரதோரணங்களும், துவஜங்களும், சங்கு முதலாகிய பல வாத்தியங்களும், மங்கல பேரியும் நிறைந்தன. அப்போது துல்லியமாகிய பளிங்குக் கற்களால் செய்யப்பட்ட சுவர்த் தலங்களிலும் வச்சிரத் தூண்களிலும் இளைய பெருமாளுடைய திருமேனியின் சாயை பிரதிபலித்தலால், பார்த்தவர்களெல்லாம் சந்தேகிக்கும்படி கையில் தாங்கிய வில்லுடனே அவரைப்போல ஆயிரம் புருஷ சிரேஷ்டர்கள் அந்த நகரத்தில் வந்தது போல அவர் வருகின்ற சமயத்தில், அங்கதன் வந்து, இலட்சுமணருடைய உபயசரணங்களையும் வணங்கிக் கைகூப்பிக்கொண்டிருந்தான். அவர் அவனைப் பார்த்து, "உங்கள் ராஜா எங்கிருக்கிறார்?" என்று கேட்டார். அதற்கவன், "அவர் தேவரீரை எதிர் கொள்ளும்படி அரண்மனை ஆசாரவாயிலில் இருக்கிறார்," என்று சொல்லினன். இப்படிச் சொல்லிக்கொண்டிருக்குமளவில் ஸ்திரீ ஜனங்கள் கதம்பப்பொடிகளை இறைத்து வஸ்திரங்களை வீசிச் சாமரைகள் போட, பூரண சந்திரனைப்போல முத்துக் குடை பிரகாசிக்க, ஸ்ரீ ராமாநுஜருக்கு முன்பாக வானர குலாதிபதியாகிப சுக்கிரீவ மகாராஜன் வந்தான். இளையபெருமாளுடைய திருவடியை அர்ச்சித்துப் பூஜிப்பதற்கு ஏற்ற அர்க்கியமுதலாகிய பூஜா திரவியங்களெல்லாம் ஸ்திரீகள் ஏந்திவர, மங்கல முரசுகள் மேகம் போல முழங்க, முனீஸ்வரர்கள் வேதங்களோத, சங்கீத ஓசை அஷ்டதிக்குகளையும் அளாவ, இந்தச் சிறப்பைத் தேவர்களுங்கண்டு மகிழ்ச்சியடைய, ஸ்திரீ கூட்டங்கள் நட்சத்திரங்களைப்போலப் பிரகாசிக்க, ஆகாயத்தில் உலாவுகின்ற சோடசக்கலைகளையுடைய சந்திரன் ஒரு மலையின்மேல் உதயமானது போல

வும், அந்தக் கிஷ்கிந்தா பர்வதத்தில் உதித்த தன் பிதாவாகிய சூரியனைப் போலவும், பல சின்னங்களுடனே எதிர்கொண்டு அழைக்கும்படி வந்த அந்தச் சுக்கிரீவ மகாராஜனை இலட்சுமணர் நேரிலே கண்டார். கண்ட மாத்திரத்தில், அவருக்கு அதிக கோபம் ஜனித்தது. அப்படி எழுந்த கோபத்தை அவர் தமது தர்ம நினைவினாலே தாமே தணித்துக்கொண்டார். பின்பு இருவரும் ஒருவரையொருவர் மலையைப்பார்க்கிலும் மிகவும் உயர்ந்த தோள்களால் தழுவிக்கொண்டு, பெண்கள் கூட்டத்துடனேயும், வானர வீரர்களுடனேயும், மகா சம்பிரமமாய்ப் போய், சுவர்ணமயமாகிய மாளிகையில் சேர்ந்தார்கள். சுக்கிரீவன் அவ்விடத்தில் அதிக சிங்காரமாக ஜோடித்திருக்கின்ற சிங்காசனத்தை அன்புடனே காட்டி, "இதிலெழுந்தருளுங்கள்," என்று சொல்லினன். இராமாநுஜரானவர், "ஸ்ரீ மகாலட்சுமி நாயகராகிய நம்முடைய சுவாமியானவர் அங்கே புல்லின்மேல் எழுந்தருளியிருக்க, எனக்கு இந்த இரத்தின சிங்காசனந் தகுமா?" என நினைத்தவராய், "கல்லைப்போலும் கடினமாகிய நெஞ்சினையுடைய கைகேசி செய்த வஞ்சனையினாலே மணி முடி துறந்து வந்து ஆரணியத்திலே எங்கள் தமையனார் புல்லின்மேல் தங்கியிருக்க, நான் பொன்னினாற் செய்து புஷ்பத்தால் அலங்கரித்திருக்கின்ற மிருதுவாகிய அணையின்மேல் இருக்கவும் வேண்டுமா?" என்று சொன்ன சொல்லைக் கேட்கவே, சூரிய குமாரனாகிய சுக்கிரீவன் நின்றபடியே விம்மிக் கண்களிலே ஜலம் பெருகும்படியிருக்க, மனு வமிச சிரோமணியாகிய இலட்சுமணரும் நின்றபடியே இருந்தார். அவ்விடத்தில் இருக்கின்ற பால்யர்களும், பெரியோர்களும், ஸ்திரீ கூட்டங்களும், மனம் நொந்து உருகிக் கண்ணீரைச் சிந்தி அழுது, ஐம்பொறிகளையும் அடக்கினவர் போல ஸ்தம்பித்து ஓர் உத்தரமுஞ் சொல்லத் தெரியாதவர்களாய் இருந்தார்கள். அப்போது சுக்கிரீவன், "சுவாமி, திருமஞ்சனமாடி நீங்கள் போசனஞ் செய்தால் நாங்கள் கிருதார்த்தர்களாய் உஜ்

ஜீவிப்போம்,'' என்று சொல்லினன். அதற்கு இராமாநுஜர், "நாங்கள் வருத்தமும் நிந்தையுமாகிய இரண்டும் வயிறு நிரம்பும்படி உண்டிருக்கின்றேமென்றால் எங்களுக்கு இன்பப் படத்தக்கது எது? அல்லவென்று ஓர் அபேட்சையுண்டா யிருந்தாலும், மனமும் வேறுபட்டதனால் அமிர்தமும் கசக்கும். அபகீர்த்தியாகிய அக்கினியை அவித்து எங்கள் இராமபிரானுடைய தேவியாரைத் தேடி இன்னவிடத்திலிருக்கிறாரென்று மாத்திரம் காட்டுவாயானால், அதுவே கங்கா ஜலத்தைக்கொண்டு ஸ்நானஞ்செய்வித்துத் திருப்பாற்கடலிற் பிறந்த தேவாமிர்தத்தைப் புசிக்கச் செய்வதற்குச் சமானம்; பின்னும் பிராணனைக் கொடுத்ததுமாகும். மேலும், காய், கனி, கிழங்கு, இலை முதலானவைகளில் எங்கள் சுவாமி அமுது செய்து சேஷமாகிய பிரசாதமே உண்கின்றதல்லாமல், நான் வேறொன்றும் இச்சிக்கிறதே இல்லை. அல்லவென்று இச்சித்தால், அது நாயுண்ட எச்சிலை உண்டதற்குச் சமானமாம். இதற்கு ஐயமேயில்லை. அல்லாமலும், இன்னம் ஒன்று இருக்கிறது. நான் இனி அவ்விடத்திற்குப் போய்க் கந்தமூல பலாதிகள் கொண்டு வந்து திருத்திக் கொடுத்தால்தான் நம்முடைய தமையனார் பட்சிக்க வேண்டும். ஆகையால், இவ்விடத்தில் இப்பொழுது ஒரு க்ஷண மாகிலும் நான் காலதாமதமாயிருக்கிறது நன்மையன்று,'' என்று சொன்னார்.

அது கேட்கவே சுக்கிரீவன் மனம் உருகி, "சுவாமி, துன்பம் அனுபவிக்கிறது புத்தியில்லாத குரங்குகளாகிய எங்களுக்குச் செல்லுமேயல்லாமல், உங்களைப் போன்ற மகா புருஷர்களுக்குக் கூடுமா?'' என்று சொல்லி உயிர் நிலையழிந்து விம்மி, கண்களிலிருந்து நீர் துளித்துளியாய் விழ, போக பாக்கியங்களையெல்லாம் வெறுத்து, அனுமனைப் பார்த்து, "அனுமரே, இவ்விடத்திலிருந்து போயிருக்கின்ற தூதர்கள் இன்னம் வாராமையால், நீரும் போய் அதி சீக்கிரமாக வானர சேனைகள் உள்ளவைகளையெல்லாம் கூட்டிக்

கொண்டு வந்துவிடும். நீரிங்கேதானே நில்லும்,'' என்று சொல்லி ஸ்ரீ ராமபிரானுடைய சேவைக்கு இளைய பெருமாளுடனே புறப்பட்டான். அங்கதன் தன்னுடனே வரவும், வானரப் படைத்தலைவர்கள் முன்னே போகவும், ஸ்திரீகளுடைய மனமும் தொடர்ந்து வரவும், வழிகள் பின்னிட்டுப் போகவும், வானரசேனைகள் முன்னும் பின்னும் இருபக்கமுஞ் சூழ்ந்து வரவும், பந்து ஜனங்கள் இடப் புறத்திலும் வலப் புறத்திலும் வரவும், கொடிகள் பல பறக்கவும், பேரிகை இடி போல முழங்கவும், சங்கவாத்தியங்கள் ஒலிக்கவும், காற் பொடிகள் எழும்பிப் பூமியையும் ஆகாயத்தையும் மறைக்கவும், சுவர்ணத்தினுலும், வெள்ளியினுலும், முத்தினுலும், இரத்தினங்களாலும், பளிங்கினுலும் விலையுயர்ந்த மகமல் முதலாகிய பட்டுகளினுலும் விசித்திரமாகச் செய்யப்பட்ட பற்பல தண்டிகைகள் நெருங்கவும், வெள்ளைக் குடைகள் சூழவும், இளையபெருமாள் பாதம் வருந்தப் பூமியில் நடந்து வருகிறபடியினுலே சூரியகுமாரனுகிய தானும் தன் காலிற்கட்டிய வீரகண்டைகள் ஒலிக்கச் சிவிகைமீது ஏருமல், தரையிலே கால் நடையாய் நடந்தான். இப்படி நடந்த அந்தச் சுக்கிரீவன், ஸ்ரீ ராமசந்திரர் இருக்கின்ற ரிஸ்யமுக பர்வதத்தினிடத்தில் வந்து, வானர சேனைகளெல்லாம் பின்னிட்டு நிற்க, அங்கதன் பக்கத்தில் வர, சீக்கிரத்தில் லட்சுமணருடனே தானும் தன் ஆசையும் முன்னேயோடி, கணிக்கப்படாத ராஜசம்பத்தின் அபேட்சை நீங்கி, சுவாமி திருவடியைச் சேவிக்கும்படி முன்னுளிலே ராஜ்யாபேக்ஷையைத் துறந்து சித்திரகூட பர்வதத்தை நாடி வந்த புண்ணியாத்துமாக்கள் சேவிக்கின்ற பரதாழ்வானைப்போலப் போய், நொடிப் பொழுதாவது பிரியாத தம்பியும் பிரியும்படி உலக முடிவிலே தாம் மாத்திரம் சேஷமாயிருக்கின்ற தம்மைப் போலவே தனியே எழுந்தருளியிருந்த ஸ்ரீ ராமபிரானை மார்பிலணிந்த ஹாரங்கள் பதக்கங்கள் பூமாலை முதலாகிய சகலமும் பூமியிற்படியவும், சுவாமியினுடைய திருவடிகள்

தன் சிரசிலே பொருந்தவும், சாஷ்டாங்கமாகச் சேவித்தான்.

அப்படிச் சேவித்த அன்பனுகிய சுக்கிரீவனைப் பெரிய பெருமாள் தம்முடைய மார்பிலிருக்கின்ற மகாலட்சுமியும் திருமேனி வருந்தக் கைகளினுலே தழுவிக்கொண்டு, மூண்டெழுந்த கோபமானது ஓடியொளித்து முன்பு போலக் கிருபை தோன்ற, அவனைச் சமீபத்தில் ஆசனங் கொடுப்பித்து இருக்கச்சொல்லி, "அப்பா, சுக்கிரீவா, உன்னுடைய ராஜரிகமும் உன்னுக்கினையும் செவ்வையாய் நடக்கின்றனவா? உன்னுலே சம்ரக்ஷணை செய்யப்படுகின்றனவா?" என்று வினவினுர். இந்த வார்த்தைகளைக் கேட்ட சுக்கிரீவன், "சுவாமி, உலகத்தைச் சூழ்கின்ற இருளையெல்லாம் தகிக்கின்ற சூரியபகவானைப்போல நீங்கள் இங்கு எழுந்தருளியிருக்க, உங்களுடைய கிருபைக்குப் பாத்திரமாகிய எனக்கு என்ன குறையிருக்கின்றது? மற்றும் எதுதான் அருமையானது? தேவரீர் கடாக்ஷித்தருளிய பாக்கியத்தையடைந்து மதி மயங்கி, நீங்கள் ஆக்கியாபித்த ஊழியத்தையும் மறந்திருந்து, அற்பமாகிய என் குரங்கின் புத்தியை நன்ருகத் துலக்கிக் காட்டினேன்! நான் திக்குகளையெல்லாம் ஆராய்ந்து தேடித் தேவியாரைக் கொண்டு வந்து கொடுக்கிறேனென்று சம்மதித்துச் சொல்லியிருந்தும், அப்படிச் செய்யாமல், பிராட்டியாரைக் குறித்து நீங்கள் திருவுளம் வருந்தியிருக்க, நான் போக பாக்கியங்களை அனுபவித்துக்கொண்டிருந்தேன்! என்னுடைய செய்கையும் நிலைமையும் இப்படிப்பட்டவைகளாயிருக்குமானுல், இனி நான் செய்யுங் காரியமும் ஆண்மையும் சொல்லவேண்டுமா?" என்று சொல்ல, ஸ்ரீ ராமர் கிருபை கூர்ந்து, "சுக்கிரீவா, என்னிடத்திலே பரதன் எப்படியோ அப்படி அன்புள்ள நீ இப்படிச் சொல்லலாமா? சகல விஷயங்களையும் நன்ருக யோசித்து அறிகின்ற விவேகியாகிய அனுமன் எங்கே இருக்கிருன்? ஏன் வரவில்லை?" என்று கேட்க, சுக்கிரீவன், "சுவாமி, வானரசேனையை

அழைத்து வருகிறதற்குப் பல தூதர்கள் போயிருக்கிறார்கள். அவர்கள் சீக்கிரமாக வாராததனால் அவரும் போயிருக்கிறார். சேனைகளுடனே இன்றைய தினத்திலாவது அல்லது நாளைய தினத்திலாவது வந்து சேர்வார். இப்பொழுது இங்கே வந்து உங்கள் ஏவலைச் செய்யக் காத்துக்கொண்டிருக்கின்ற சேனைகள் ஒன்பதினாயிரங்கோடி. மற்றச் சேனைகள் வந்து சேரத் தக்க தவணை நாள் நாளைய தினமாகையால், அவைகள் வந்த பின்பு செய்ய வேண்டுவதைக் குறித்துப் பேசிக் கொள்ளலாம்,'' என்று சொல்ல, ஸ்ரீ ராமர் சந்தோஷமாகி, "அப்பா, சுக்கிரீவா, அது உனக்கு அருமையாகுமா? நல்லது! பகற்பொழுது போய்விட்டது. இப்பொழுது நீயும் பட்டணத்திலே போயிருந்து சேனைகள் வந்தவுடனே அவைகளோடு வா,'' என்று விடை கொடுத்தார். சுக்கிரீவன் சுவாமியைத் தொழுது தன் பட்டணத்துக்குப் போனான்.

பின்பு சுவாமி அங்கதனைப் பார்த்து, இனிய வார்த்தைகள் சொல்லி, "நீ போய் உன் பிதாவுடனே இருந்து அவன் வரும் பொழுது வா,'' என்று அனுப்பிவிட்டு, கமலநேத்திரங்களையுடைய தாம் தம்பியாருடனே இதயகமலத்திலே சீதா பிராட்டியார் எழுந்தருளியிருக்க அவ்விடத்திலிருந்தார். இவ்விதமிருக்கும்பொழுது சுவாமியானவர் திரிலோகத்திலும் ஓங்கிய கீர்த்தியையுடைய இளையபெருமாளை அவர் சுக்கிரீவனிடத்திற்போனதும் அங்கு நடந்ததுமாகிய சமாசாரங்களையெல்லாம் ஒன்றுவது ஒளியாமல் சொல்லும்படி கேட்க, அவர் அந்த இடத்தில் நடந்த செய்திகளையெல்லாம் சவிஸ்தாரமாகச் சொன்னார்.

# 12. தானை காண் படலம்

இப்படி இலட்சுமணர் சொன்னவைகளைக் கேட்ட சுவாமியானவர், அன்று இராத்திரி அந்த ரிஸ்யமுக பர்வ தத்திலிருக்க, சூரியன் மறு நாள் உதயமானுன். உதய மாகவே, முன்பு வானரச் சேனைகளை அழைக்கப் போயிருந்த தூதர்கள் அழைக்க, பத்து நூருயிரம் மதயானைகளின் பல முடைய வானரப் படைத்தலைவர் ஆயிரம் பேர் சூழப் பதி ஞயிரங்கோடி வானர சேனைகளுடனே **சதவலி** என்பவன் வந்தான். ஒவ்வொன்றும் மகாமேருவையும் பெயர்த்தெடுக் கத்தக்க பலமுடையவைகளாகிய பத்துலட்சங்கோடி வானர சேனைகளுடனே **சுசேணன்** என்னும் படைத்தலைவன் வந் தான். முடிவு காணப்படாத சமுத்திரத்தையும் ஓர் இமைப் பொழுதில் கலக்கிச் சேறு செய்யத்தக்க பலமுடைய நாற் பத்தெண்ணுயிரங்கோடி வானர சேனைகளுடனே சுக்கிரீவ மகாராஜன் மனைவியாகிய **உருமை**யின் தகப்பனுன **தாரன்** வந்தான். பர்வதத்திற்குச் சமானமாகிய ஸ்தூல தேகத்தை யுடைய ஐம்பதுலட்சங்கோடி வானரசேனைகளுடனே தேவ லோகத்திலும் பூலோகத்திலும் பிரசித்தமாகிய கீர்த்தியை யுடைய ஆஞ்சனேயனைப் பெற்ற **கேசரி** என்பவன் வந் தான். ஒவ்வொன்றே சூரியனுக்கும் முடிவுண்டாகும்படி கோபிக்கத் தக்கவைகளாயும், அகங்காரம் பிறந்தால் உல கங்களையும் குத்திக் குமைக்கத்தக்கவைகளாயுமிருக்கின்ற நாலாயிரங்கோடி வானரசேனைகளுடனே **கவாட்சன்** என் பவன் வந்தான். பூமியைக் கொம்பிலெடுத்த ஆதி வராகத் தின் பலமும் எவ்வளவென்று சொல்லும்படி வச்சிரமலை களை மயிர் முனையில் ஒட்டிக்கொண்டிருக்கின்ற தூசுகளாகக் கருதும் மகா பலமுடைய ஆயிரங்கோடி கரடிச் சேனை களுடனே **இடும்பன்** என்பவன் வந்தான். கொடிதாகிய ரௌத்திரத்தையுடைய பன்னீராயிரங்கோடி வானர சேனை களுடனே மலை போலப் பருத்த காத்திரத்தையுடையவனும்,

கோபத்தால் ஆலகால விஷம்போலவும் பிரளயகால இடி போலவும் யாவரும் கண்டு நடுங்கத்தக்கவனுமாகிய *பனசன்* என்பவன் வந்தான். இடியோசையும் கடலோசையும் அஞ்சும்படி கர்ஜிக்கின்றவைகளும், அதிவேகத்தையுடையவை களும் பொல்லாத எமனுக்கு ஒப்பானவைகளுமாகிய பதி னைந்து கோடி வானர சேனைகளுடனே *நீலன்* என்பவன் வந் தான். முப்பது கோடி வானரசேனைகளுடனே *கவையன்* என்பவன் வந்தான். ஆயிரத்து அறுநூறுகோடி வானரசேனை களுடனே *சாம்பன்* என்பவன் வந்தான். இருநூறு லட்சங் கோடி வானரசேனைகளுடனே *துன்முகன்* என்பவன் வந் தான். கோடாகோடி நூறுயிர வானர சேனைகளுடனே *துமிந்தன்* என்பவன் வந்தான். நூறு லட்சங்கோடி வானர சேனைகளுடனே *மயிந்தனும் கஜகோமுகனும்* வந்தார்கள். ஒன்பது கோடி வானரசேனைகளுடனே *ரிஷபன்* என்பவன் வந் தான். எண்ணிறந்த கோடிக் கருமுக வானரசேனைகளுடனே *தீர்க்கபாதனும் வினதனும் இரம்பனும்* வந்தார்கள். பஞ் சாயுதங்களைக் கையிலேந்திய மகா விஷ்ணுவாகிய ஸ்ரீ ராம ரைத் தரிசிப்பதற்குப் பூமி தாழவும் திக்கிடம் சிறிதென்று சொல்லவும் சஞ்சரிக்கின்ற இருபத்தையாயிரங்கோடி வானர சேனைகளுடனே அனுமன் வந்தான். தேவர்களும், 'எப்படி முடியுமோ!' என்று பிரமிக்கவும், காலனும் மனமயக்கங் கொள்ளவும், நூறுயிரங்கோடி வானரசேனைகளுடனே தெய் வத்தச்சனுன மயனுடைய குமாரனுகிய *நளன்* என்பவன் வந்தான். ஸ்ரீராமருடைய அம்புக்கூட்டிலிருக்கின்ற பாணங் கள் போல அனேக அனேகமாகிய சங்கைகளையுடைய வானரக்கூட்டங்களுடனே *கும்பனும் சங்கனும் வன்னியும்* ஆகிய படைத்தலைவர்கள் வந்து சேர்ந்தார்கள்.

இப்படிப் பர்வதத்துக்கு ஒப்பாகிய ஸ்வரூபத்தையும், இடி முழக்கமும் கடல் முழக்கமும் அஞ்சுகின்ற குரலோசை யும், கண்களில் நெருப்பு ஜொலிக்கின்ற கோபக்குறியும், தேவர்களும் நடுங்குகின்ற சௌரியமும், சக்கரம் போலவும்

காற்றைப்போலவும் திரிகின்ற அதிவேகமும், கூற்றுவனிலும் அதிகமான கொடுமையும், மிதமற்ற பராக்கிரமமுமுடையவைகளான வெண்முக வானரங்களும் கருமுக வானரங்களும் செம்முக வானரங்களும் கரடிகளும் வந்து ஏக கூட்டமாய்க் கூடின. இந்தச் சேனைகள் விழுந்து குளித்தால் ஏழு சமுத்திரமும் குழம்பிச் சுவறி உலர்ந்து தூளாய்ப் பறந்துபோம். இவைகள் ஒரு பக்கத்தில் சாய்ந்தால், அண்ட கடாகமும் மேருவும் ஒருமிக்கச்சாய்ந்து போம்; சஞ்சரித்தால், பூமியில் எள்ளிடுதற்கு இடமில்லாமற்போம். ஒவ்வொரு குரங்கும் கோபித்ததாகில் சூரியனும் அக்கினியும் எரிந்து கரிந்து போம். உண்ண ஏற்பட்டால், அனேக அண்டங்களும் ஒவ்வொரு வானரம் ஒவ்வொரு பிடி அள்ளிக்கொள்ளுகிறதற்கே போதா. கண்ணினலே பார்த்தால் அந்தத் திரிநேத்திரனுகிய உருத்திரமூர்த்தியையும் ஜயிக்கும். பெயர்க்க வேண்டுமென்ருல், மகாமேரு பர்வதத்தையும் வேரோடே பெயர்த்துவிடும். இடிக்கவேண்டுமென்ருல் அண்டத்தின் முகட்டையும் எட்டியிடிக்கும். பிடிக்க வேண்டுமென்ருல், காற்றினையும் கூற்றினையும் ஓடிப்பிடிக்கும். குடிக்க வேண்டுமென்ருல், சத்த சமுத்திர ஜலத்தையும் வரளும்படி குடிக்கும்.

இவ்விதமாகிய சேனைகளுக்குச் சேனை நாயகர்கள், இந்தத் திசைகளைத்தாண்டி அப்பாலுங் குதிக்கத்தக்கவர்களும், தங்கள் ராஜா எதைச்சொன்னுலும் அதை அந்த க்ஷணம் முடிக்கத் தக்கவர்களுமாகிய அறுபத்தேழு கோடி வானரர்கள். அவர்கள் இந்தச் சேனைகளைக் கூட்டிக்கொண்டு வந்தார்கள்.

அப்படி வந்த படைத்தலைவர்கள் சத்த சமுத்திரத்திலும் அதிகமென்று சொல்லப்பட்ட வானரசேனைகளை வெளியிலே நிறுத்திவிட்டு, அழைக்க வந்த தூதர்களுடனே சுக்கிரீவ மகாராஜாவினுடைய சமுகத்துக்குப் போய், "சுவாமீ, பராக்கு!" என்று சொல்லி வணங்கி, அந்தச் சேனைகள் வந்து சேர்ந்தன என்று மிகுந்த அன்புடனே விண்ணப்பம்

செய்தார்கள். அதுகண்டு ஸ்ரீராமர் ஜானகியார் வந்து சேர்ந்தது போல முகமலர்ந்து, திருவுளமகிழ்ந்து, அச்சேனையைப் பார்க்க அங்கே வேறோர் உயர்ந்த மலையின்மேலேறி அவ்விடத்தில் எழுந்தருளியிருந்தார். சூரியபுத்திரனாகிய சுக்கிரீவன் திரும்பி அந்தச் சேனா சமுத்திரத்தினிடத்தில் வந்து சேனையைப் பதினைந்து யோசனை அகலமுடையதாய் அடக்கி வடக்கேயிருந்து தெற்கே நடக்கும்படி திட்டஞ்செய்து, படைத் தலைவரை மாத்திரம் அழைத்துக்கொண்டு மறுபடியும் ஸ்ரீ ராமரிடத்திற்கு வந்து, "சுவாமி, சேனையைப் பார்த்தருளும்," என்று சொல்லி வானரங்களைக் கிரமமாகத் தெரியக் காட்டிக்கொண்டிருந்தான்.

ஸ்ரீ ராமர் சுக்கிரீவன் சொற்படி தம்முடைய திருக்கண்களால் பார்க்க, அந்தச் சேனை பாற்சமுத்திரமானது வழிகொண்டு நடக்கிறது போல நடந்தது. அப்போது எட்டுத் திக்குகளையும், பூமி முழுவதையும், தேவலோகத்தையும், சத்தசமுத்திரத்தையும் மறைத்து மேலெழுந்து பறந்த தூசுகளினாலே இந்த அண்டமானது புழுதியையிட்டு நிறைத்து வைத்த குடத்தை ஒத்திருந்தது. சமுத்திரத்தை ஒப்பிட்டுச் சொன்னால், அதன் அளவைக் கண்டவர்களுண்டு; இந்தச் சேனையினுடைய கணக்கை யாரும் அறியமாட்டார். ஆகையால், இனி அறிவுடையவர்களால்சொல்லத்தக்க உவமானம் வேறெதுதானிருக்கின்றது? இருபது பகலும் இரவும் ஒழிவில்லாமல் பார்த்தும் ஒரு விதத்தினாலும் அதன் நடுவையே காணவில்லை. ஆகையால், முடிவு என்னவாகும்? சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்கின்ற மூன்றுலகத்திலும் தமக்குத்தாமே ஒப்பல்லது வேறொருவரும் ஒப்பில்லாத ஸ்ரீ ராமர் அந்தச் சேனா சமுத்திரத்தைக் கண்ணினாலும் மனத்தினாலும் தமது கல்வியினாலும் ஞானத்தினாலும் பார்த்துத் தம்பியாரை நோக்கி, "அப்பா, இலட்சுமணா, இந்தச்சேனையை நாமும் நம்முடைய அறிவைக்கொண்டு பார்த்தும், நடுவே சிறிது மட்டும் கண்டோமேயல்லாமல், முடிவைக் காண்கிறதற்கு

நம்மாலேயாகுமா? பூமியிலிருக்கின்ற மனிதர்கள் கடலைக் கண்டோமென்று சொல்லுகிறார்களேயல்லாமல், அந்தக் கடலை முழுதும் கண்டவர்கள் யார்தானிருக்கிறார்கள்? அது போல ஜகதீஸ்வரனான சர்வசாக்ஷியினுடைய ஸ்வரூபத்தையும், பத்துத்திசைகளையும், இந்த வானர சேனையையும், பஞ்ச பூதங்களையும், அறிவையும், பேசுகின்ற வார்த்தையையும், சமயவாதிகளுடைய வாழ்க்கையையும், யார்தான் முற்றும் எண்ணியறிகின்றவர்களிருக்கின்றார்கள்? இந்தச் சேனையை முழுதும் பார்த்துப் பின்பு நினைத்த காரியத்தைச் செய்வோமென்றால், அனேக நாள் கழிந்து போய்விடும். ஆகையால், காரியத்தில் பிரவேசிக்கின்றதே உறுதி,'' என்று சொல்லினர்.

இளைய பெருமாள், "சுவாமீ, இந்தச் சேனா வீரர்கள் எந்த லோகத்துக்குப் போக வேண்டுமென்றாலும் போவார்கள்; எந்தக் காரியத்தைக் குறித்துச் சொன்னாலும், இவர்களுக்கு அருமையான காரியம் ஒன்றுண்டென்று சொல்லலாமோ? தேவரீருடைய தேவியாரைத் தேடுகிறது இவர்களுக்கு மிகவும் எளிதாயிருக்கும். இந்தச் சேனையினாலே பாவமே தோற்கும்; தர்மமே ஜயிக்கும். எட்டுத் திக்குகளிலும் பிராட்டியாரைச் சீக்கிரமாய்த் தேடுகிறவர்களை விடாமல், இவ்விடத்தில் சும்மாவிருந்து காலதாமதம் செய்து பயன் என்ன?'' என்று சொல்லினர்.

## 13. நாட விட்ட படலம்

"அப்பா, சூரிய குமாரனே, ஒன்றுக்கொன்று பேதமும்' தேகாபிமானமும், தமக்குள் மாறுபட்டு எதிர்த்துச் சண்டை செய்கின்ற சத்துருத்துவமும் இல்லாமல், கிரமமாய்ப் பரவியெழுந்த இந்தச் சேனைக்கு இவ்வளவென்கிற ஒரு தொகையும் உண்டாயிருக்குமோ?'' என்று ஸ்ரீ ராமர் கேட்க, சுக்கிரீவன், "சுவாமி, ஆதி காலத்திலே பிரமதேவன் எழுபது

வெள்ளமென்று ஒரு தொகை சொல்லியிருந்ததுண்டு. அதன் பின்பு அனேக வானரங்கள் உற்பத்தியாயிருக்கின்றன. இந்த வானர சேனைக்கு அறுபத்தேழு கோடிப் படைத்தலை வர்களுண்டு. அவர்களுக்கெல்லாம் நீலன் என்பவன் அதி பதியாய் இருக்கிறான்,'' என்று சொன்னான்.

அந்த வார்த்தையை ஸ்ரீ ராமர் கேட்டு, சுக்கிரீவ மகா ராஜனை அதிக சந்தோஷத்துடனே பார்த்தருளி, "அப்பா, சும்மா இருந்து பல பேச்சுக்களைப் பேசுகிறதனால் ஆகவேண் டுவதென்ன ? இனிக் காரியத்தைப் பார்,'' என்று ஆக்கியா பித்தார்.

அவன் அனுமனைப் பார்த்து, "அனுமரே, உம்மு டைய பிதாவைப்போலத் திரிலோகத்திலும் புகுந்து சஞ்சரிக் கின்ற உம்முடைய அதிவேகத்தை யோசியாமலும் பிராட்டி யாரைத் தேட வேண்டுமென்கின்ற நினைவில்லாமலும், நீர் இப்படிக் காலதாமசமாயிருக்கலாமா ? உம்முடைய செய்கை யைக் குரங்கின் செய்கையாகவா எண்ணிக்கொண்டிருக் கிறீர் ? அதிசீக்கிரத்தில் புறப்பட்டு வாயுவேக மனோவேக மாய் லோகமாதா இருக்குமிடத்தைப் பாதாளத்திலும், பூலோ கத்திலும் தேடி ஆராய்ந்துபார்த்து, போகபூமியாகிய ஸ்வர்க் கத்திலும் பிரவேசிக்கத்தக்க உம்முடைய மகா வேகத்தை இந்தச் சமயத்தில் பிரத்தியக்ஷமாகக் காண்பிக்க வேண்டும். இராவணனானவன் ஸ்ரீ ராமருடைய தேவியாரை எடுத்துக் கொண்டு போகும்போது தென்திசையை நோக்கிப் போன படியினாலே, அந்தத் திசையிலேதான் அவனுடைய நகர மிருக்கலாமென்று தோன்றுகின்றது. அது பற்றி அவ்விடத் திற்குப்போய் வரத்தக்கவர் உம்மையல்லாமல் வேறே யாரி ருக்கிறார்? ஆகையால், அங்கதனும், *சாம்பன்* முதலாகிய சில படைத் தலைவர்களும், இரண்டு வெள்ளம் வானர சேனை களும் உம்முடனே வர நீர் தென்திசைக்கு நடந்து போம். மேற்குத் திசைக்கு விருஷபனும், வடக்குத் திசைக் குச் சதவலியும், கிழக்குத் திசைக்கு வினதனும், தங்களுக்கு

வேண்டிய வானர சேனைகளைக் கூட்டிக்கொண்டு நடக்கக் கடவர்கள். நீர் நான் சொன்னபடி இரண்டு வெள்ளம் வானர சேனைகளுடனே பிரயாணப்பட்டுப் போய்ச் சுற்றித் தேடி, ஒரு மாதத்திற்குள் வந்து சேரும். இங்கேயிருந்து புறப் பட்டால் ஆயிரம் யோசனைத் தூரத்திலே விந்தியகிரி இருக் கின்றது. அங்கே போய்ச் சேர்ந்து, அந்த மலையினிடத்தில் தேடிப் பார்த்து, அதை விட்டுத் தேவர்களும் வந்து ஸ்நானஞ் செய்யத்தக்க மகத்துவத்தையுடைய நருமதை நதியினிடத் தில் போய்ச் சேர்ந்து, அங்கே தேடிப் பார்த்து, அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, அப்பால் தேவரம்பைகள் ஊசலாடும் பொழுது பாடுகின்ற இசையாகிய மதுவைச் செவியாகிய வாயினுலுண்டு அசுணப் பட்சிகள் நித்திரை செய்கின்ற *ஏமகூடபர்வதம்* போய்ச்சேரும்; அங்குந் தேடிப்பாரும். அவ் விடத்தில் *அங்கெங்கரா* என்கின்ற பொய்கைஇருக்கின்றது. அந்தப் பொய்கையையுந் தாண்டி, அப்பால் *பெண்ணைப்* பொய்கையிலும், அங்குள்ள பனந்தோப்பிலும், சில நாள் தேடி, அப்புறம் சீக்கிரமாய் நடந்து, விதர்ப்பதேசம் போய்ச் சேர்ந்து, அங்கிருந்து புறப்பட்டு, மத்தியிலுள்ள நாடுகளை யெல்லாம் கடந்து, அதிக மகிமையான தமிழையுண்டாக்கிய *அகஸ்தியர்* பூர்வம் வாசமாயிருந்த தண்டகாரணியம் போம். அங்கே *முண்டகத்துறை* என்னும் ஒரு சோலையிருக்கின்றது. அது, உலகத்தாரெல்லாம் உண்டு சுகிக்கும்படி பிரயோ சனப்படுகின்ற தர்மாத்துமாக்களுடைய பொருளைப்போல, அதிக மனோகரமாகிய சகல வஸ்துக்களையும் கொடுக்கத் தக்கது. அந்தச் சோலையிலே சுந்தரமான ஸ்திரீகளுடைய மதுரமாகிய அதரம் போல இனிமையாகிய கனிகள் எக் காலத்திலும் பழுத்திருக்கும். அவ்வனத்திலிருக்கிறவர்கள் கண்ணை இமைக்கிறதுமில்லை; நித்திரை செய்கிறதுமில்லை. அந்தப் பூமியிலே சூரியனுக்கு உத்தராயணமும் தக்ஷிணு யனமுமில்லை. அவ்விடத்தில் ஸ்திரீ போகமே முக்கியமா யிருக்கும். அங்கேயெல்லாம் தேடிப்பார்த்து, அவ்விடம்

விட்டு அப்பால் மிக உயரமாயிருக்கின்ற **பாண்டு** என்னும் பர்வதம்போய்ச் சேர்ந்து, அதன் சமீபத்திலே முத்துகளை யும், ஸ்வர்ணங்களையும், இரத்தினங்களையும், ஆயர்கள் தயிர் கடைகின்ற மத்துகளையும், மரங்களையும், மலைகளையும், மிரு கங்களையும், புஷ்பங்களையும் இழுத்துக்கொண்டு தேனுடனே பெருகி வருகின்றதும், சகலமானவர்களுக்கும் ஸ்வர்க்க பதவியைக் கொடுக்கின்றதுமாகிய **கோதாவிரி நதி** இருக் கின்றது. அங்கேபோய்ப் பார்த்து, அதைக் கடந்து தர்மமும் தயையும்போலக் குளிர்ந்து சூரிய ரஸ்மி தோன்ருமல் சோலை கள் தழைத்திருக்கின்ற **சுவண நதி**க்குப்போய், அதையும் தாண்டி, அப்புறம் **சூரியகாந்தம் சந்திரகாந்தம்** என்கின்ற மலைகளிலுந் தேடிப் பார்த்து, அவைகளைக் கடந்து, அப்பால் அனேக நாடுகளையும் தாண்டிப்போனுல், அனந்தனுகிய நாகராஜன் கருடனுக்குப் பயந்து ஒளிந்துகொண்டிருக்கின்ற **கொங்கணம் குலிந்தம்** என்கின்ற ஸ்தானங்கள் இருக்கின் றன. அவ்விடங்களில் போய்ச் சேர்ந்து, அங்கே தேடிப் பார்த்து, அப்புறம் நடந்து, அரனதிகம் அரியதிகமென்று சொல்லிக்கொண்டு திரிகின்ற மூடாத்துமாக்கள் பரகதியை அறிகின்றது அருமையாயிருக்கின்றது போல, யாவராலும் அறிகிறதற்கு அருமையாயிருக்கின்ற மஹா உன்னதத்தை யுடைய **அருந்ததி** என்னும் பர்வதத்தைக் கண்டு வணங்கி, அப்பால் நடந்து, அஞ்சத்தக்க வெப்பத்தையுடைய பாலை நிலங்களையும், அனேக நதிகளையும், சுனைகளையும், மலைகளை யும், நாடுகளையும் கடந்துபோனுல், **வாசுகி** முதலாகிய சர்ப் பங்களுக்குக் கருடன் அமிர்தங் கொடுத்த **மரகத பர்வதம்** இருக்கின்றது. அதைக் கண்டு வணங்கி அப்புறம்போனுல், சம்ஸ்கிருத பாஷைக்கும் தமிழாகிய திராவிட பாஷைக்கும் எல்லையாகியும், சதுர் வேதங்களும் மற்றச் சாஸ்திரங்களும் சொல்லும் பொருள்களுக்கெல்லாம் முடிவாகியும், நல்ல தர் மத்திற்கு வரம்பாகியும், வேறென்றும் தனக்கு ஒப்பில்லாமல் பெருமை பொருந்திய மெய்போலப் பிரகாசிக்கின்ற நெடிய

சாரலையுடையதாகியும், ஸ்வர்ணமயமாகியும் ஓங்கிய *திரு* **வேங்கடமலை** இருக்கின்றது. அதிலே நல்வினை தீவினைக ளாகிய இரு வகை வினைகளுடனே சம்பந்தப்பட்டிருக்கின்ற ஆகாமிய கர்மங்களைச் செய்யாமல், தேவர்கள் அனுபவிக் கின்ற ஸ்வர்க்காதி போக பாக்கியங்களையும் ஒருவரிடுகின்ற பிச்சைச் சோற்றை எதிர் பார்த்துக்கொண்டிருக்கும்படி செய்யும் தரித்திரத்தையும் சமத்துவமாகப் பார்த்து, 'இந்தப் பிறப்பு இறப்புகளுக்கு மூலமாவது சஞ்சிதவினையே,' என்று தெளிந்து, அதை வேரறக் களைகின்ற முடிவில்லாத மெய்ஞ் ஞானத்தையுடைய மகாத்துமாக்கள் தங்கி யிருக்கின்றார் கள். அவர்கள் நாம் இவ்விடத்திலிருந்தும் சேவிக்கத்தக்க மேன்மையுடையவர்கள். மற்றும் அவ்விடத்தில் ஆகுசங்க ளெல்லாம் நீங்கும்படி பிராமணர்கள் வந்து ஸ்நானஞ் செய் கின்ற *பொன்முகலி* என்னும் நதியிருக்கின்றது, முனிவர் களின் ஆசிரமங்களும் அனேகம் இருக்கின்றன. மேலும், தேவகன்னியர்கள் கின்னரங்களையும் வீணைகளையும் வாசிக் குந்தோறும் அவைகளிற்பிறக்கின்ற நாதத்தைக் கேட்டு, யானைக்கன்றுகளும் புலிக்குட்டிகளும் நித்திரை செய்யும். அந்தத் திருமலைக்கு *அஞ்சனாத்திரி - தர்மாத்திரி -* ***சேஷாத் திரி - சிங்காத்திரி - நாராயணாத்திரி - தீர்த்தாத்திரி - வராகாத்திரி - ஸ்ரீநிவாசாத்திரி - புஷ்கலாத்திரி - ரிஷ பாத்திரி - ஸ்ரீ சைலம் - சிந்தாமணிகிரி - மேருசிகரம் - கன காசலம் - கருடாசலம் - வேங்கடாசலம்*** முதலிய நாமங்க ளுண்டு! அப்படிப்பட்ட பர்வதத்திற்குப் போனீர்களே யாகில், நீங்கள் யாவரும் பாபவிமோசனமாய் அந்தக்ஷணமே பரமபதமடைவீர்கள்! அப்பால் சுவாமி காரியம் விக்கினப் பட்டுப்போம்! ஆகையால், அதன் பக்கங்களில் தேடிப் பாருங்கள். பின்பு, அதைக்கடந்து, அந்தச் சேடாசலத் திற்கு அப்புறமாயிருக்கின்ற தொண்டை நாடு சேர்ந்து, அங்கே தேடிப் பார்த்துக்கொண்டு போய்த் திவ்வியமாகிய காவேரி நதியின் இரு கரையிலும் தேடிப் பாருங்கள்.

மோக்ஷாத்துமாக்களுடைய மனம் போல மிகவும் துல்லிய மாகிய அந்தச் சோழநாட்டைக் கடந்து, மலை நாட்டிற் போய்த் தேடி, அப்பால் தமிழ் நாட்டிற்குப் போங்கள். அங்கே அகஸ்தியருடைய *பொதியமலை*யும் தமிழ்ச் சங்க மும் இருக்கின்றன. அவ்விடத்திற்குப் போவீர்களேயாகில், எப்போதும் அதை விட்டுவருகிறதற்கு மனம்வாராது. ஆகை யால், அந்தப் பர்வதம் வலத்திலிருக்கும்படி நடந்து ஸ்வர் ணங்களைக் கொழிக்கின்ற *பொருனை நதி*யையும் *திருச்சங் கணித் துறை*யையும் தரிசித்துக்கொண்டு போனால், அப் பால் மகேந்திர பர்வதத்தையும் சமுத்திரத்தையும் காண்பீர் கள். அவ்விடத்தைக் கடந்து போகிறதும், அதன் பின் இப்பால் நடந்து வருகிறதும், ஒரு மாதத் தவணையாக, அதற்குள்ளே இவ்விடத்தில் வந்து சேருங்கள். இதுவே உங்களுக்கு உத்தரவாகப் பெற்றுக்கொண்டு சீக்கிரத்தில் நடவுங்கள்,'' என்று சொல்லினன்.

அப்போது ஸ்ரீராமர் அனுமனைச் சமீபத்திலே வரச் சொல்லிக் கடாட்சித்து, அவனைத் தனியே அழைத்துப் போய் வைத்துக்கொண்டு, “அந்த ஜானகியினுடைய ஸ்வ ரூபம் எப்படியிருக்குமென்றால், பாற்சமுத்திரத்திலே பிறந்த செம்பவளத்திற்குச் செம்பஞ்சூட்டி அதன்மேல் சந்திரனைச் சேர்த்து வைத்தது போல விரல்களும் நகங்களும் பிரகா சிக்கின்ற அவளுடைய பாதத்திற்குத் தாமரைப் புஷ்பம் முதலானவைகளும் உவமானமாகா என்றால், வேறென்ன இருக்கின்றது! அனுமனே, நன்றாய்க் கேள்: உலகத்தி லிருக்கின்ற உத்தம ஸ்திரீகளின் புறவடிக்கு மகாகவிக ளாகிய வித்துவ ஜனர்கள் உவமையாக இலட்சண சாஸ் திரங்களிலே சொல்லி வைத்திருக்கின்ற ஆமையையும் மற் றவைகளையும் சமானமாகுமென்று சொன்னாலும், அவை கள் அந்தச் சீதையினுடைய புறவடிக்குத் தோற்றுப் போகும். கணைக்காலின் அழகுக்கு உவமானம் வித்துவாமி சர்கள் சூல் கொண்ட வராலென்றும், அம்பருத்தூணியென்

றும், சினையாயிருக்கின்ற நெற்கதிரென்றும் சொல்லுவார்கள். அவைகளையே நானுஞ் சொன்னல் இன்பமென்ன இருக்கின்றது? பூச்சக்கரத்தையெல்லாம் பிடரிலே தாங்குகின்ற ஆதிசேஷனையும், ஒரு சக்கரத்தினுல் நடக்கின்ற சூரியனுடைய இரதத்தையும் கண்டிருக்கின்ற உனக்கு நான் சொல்வதென்ன? பிரமதேவன் இனியொரு ஸ்திரீயைச் சிருஷ்டிக்க வேண்டுமென்ருல் அடையாளமாகப் பார்த்துக் கொண்டு செய்யத்தக்க சுந்தரமுண்டாகிய ஜானகியினுடைய இடை கண்ணுக்குத் தெரியும்படியிருந்தாலல்லவோ உவமை சொல்லலாம்? மேலும், அவளுக்கு இடையுண்டென்று யாராயினும் சொல்லுவார்களோவென்ருல், அந்த வார்த்தையுமில்லை. ஆகையால், நானென்ன சொல்லப் போகிறேன்! அவள் வயிற்றழகுக்கு ஆலிலையும், உருவெழுதுகின்ற பலகையும், வெள்ளித்தகடும், கண்ணுடியும், உவமானமாகுமென்று சொன்னுலும், துதி செய்வதாகக் காணுமேயல்லாமல், எதார்த்தமாக மாட்டாது. அவளுடைய உந்திச்சுழிக்கு நந்தியாவர்த்தமென்னும் புஷ்பத்தின் புரையை உவமையாகச் சொன்னுல், அற்பமாகக் காணும். நான் கங்கையின் நீர்ச்சுழியைக் கண்ட போது அதுதான் சமானமாகுமென்றுநினைத்துச் சந்தோஷப்பட்டதுண்டு. நீயும் வழியிலே அதைப் பார்த்துக்கொண்டு போகலாம்; அவள் வயிற்றினிடத்தில் மயிரொழுக்கென்று ஒன்றுண்டு. அதற்கு ஒப்புச்சொல்ல வேண்டுமானுல், என்னுயிரொழுக்கென்றே சொல்ல வேண்டும். அல்லவென்ருல், அவளுடைய சிற்றிடையென்னும் வல்லிசாதக் கொடிக்கு அது துவண்டு சாயாமலிருக்கும்படி பொருத்தி வைத்த கொழுகொம்பாகுமென்பதை அறிந்துகொள். தாமரைப் புஷ்பத்திலிருந்தால் அதன் அகவிதழ்கள் உறுத்துமென்று அஞ்சி அதைத் துறந்து வந்த மகாலட்சுமியாகிய அந்த ஜானகியின் வயிற்றிலே கொடி போல மூன்று வரைகள் இருக்கின்றன. அவளுடைய ஸ்தனங்களை இரத்தினச் செப்பென்பேன்; ஸ்வர்ண

கலசமென்பேன் ; செவ்விளநீர் என்பேன் ; பவளத்தாற் கடைந்த சொக்கட்டானென்பேன்; யானைத்தந்தமென்பேன்; சக்கரவாகமென்பேன்; சும்மா இப்படிச் சொல்லிக்கொண் டிருக்கிறதே அல்லாமல் உலகத்தில் அவைகளுக்கு உள்ள படி சரியான உவமானம் ஒன்றும் காணவேயில்லை. இன்னம் பல விதமாக நினைத்து வருத்தப்படுகிறேன்! நானெங் கேயாகிலும்கரும்பைக்கண்டாலும்பச்சை மூங்கிலைக்கண்டா லும், எனக்குக் கண்களில் நீர் தாரைதாரையாய்ப் பெருகுகிற தேயல்லாமல் அவளுடைய மிருதுவாகிய தோள்களுக்கு அந் தக் கடினமாகிய கரும்பையும் மூங்கிலையும் ஒப்புச் சொல்லு கிறதற்கு என்னெஞ்சு இரும்பல்லவே! ஆதலால், என்ன சொல்லுகிறது? அவளுடைய முன் கைகளுக்கு உவமை ஒன்றுண்டென்பதற்கு மூன்று லோகத்திலுமில்லை. ஆயினும், சொல்ல வேண்டுமென்று வேறொன்றை உவமானமாகச் சொல்லாமல் காந்தளாகுமென்றும் மகரயாழாகுமென்றும் சொன்னாலும், அவைகள் அந்தக் கைகளுக்கு ஒப்பாகுமா? அல்லாமலும், அழகின்மேல் அழகுமுண்டோ? மேலும், அசோகந்தளிரைச் சொல்வதென்ன? அதிருக்கட்டும். கற் பகத்தளிரும் தாமரைப் புஷ்பமும் சீதையினுடைய காலுக்கே ஒப்பாகாமல் தோற்குமானால், கைக்கு ஒப்பாக வைத்துச் சொல்லலாமா? அவளுடைய கூர்மையாகிய கைந்நகத் திற்கு நம்மாலே தெளிவாய் உவமை சொல்லக்கூடுமா? அதற்குத் தோற்ற மூக்கினையுடைய கிளிப்பிள்ளைகள், 'எங் கள் மூக்கைப் பழிக்கின்றவர்கள் நீங்களா!' என்று முருக் கம்பூவை அந்த மூக்கினால் மாச்சரியத்துடனே கொத்திக் கிழிக்கின்றனவே! அதை எப்படிச் சொல்லுகிறது? நீ சீதையின் உள்ளங்கையையும் உள்ளங்காலையும் காண வேண்டுமாகில், செந்தாமரைப்புஷ்பத்தை நினைத்துக்கொள். கழுத்தைக் கண்டு இளங்கமுகும் சங்கமும் நினைவிலே வந் தால், அவைகள்தாம் என்று நிதானித்துக்கொள். அனு மனே, அவளுடைய சிவந்த வாயைக் குறித்து என்ன

தான் சொல்லுவேன்! பவளமும், செங்கிடையும், கொவ்வைப்பழமும், செவ்வல்லிப் புஷ்பமும், இலவம்பூவும், இந்திரகோபமும், முருக்கமலருமாகிய இவைகளெல்லாம் அதற்கு முன்னே வெள்ளை நிறமுடையவைகளென்றே சொல்ல வேண்டும்; அவைகளிலும் அதிக சிவப்பாய்த் தேனூறிக் கொண்டிருக்கும். அதுவே அதற்கு அடையாளம். அது தவிர, உவமானம் ஒன்று சொல்லவேண்டுமென்றால், சிவந்த அமிர்தமுமன்று; சிவந்த தேனுமன்று; அவைகள் உண்ட போது தித்திக்குமேயல்லாமல், மனத்திலே நினைத்த போது தித்தித்துக் களிப்பைக் கொடுக்கமாட்டா. ஆகையால், அவளுடைய செவ்வாய்க்கு எப்போது எப்போது எப்படி எப்படி மனோகரப்பட்டு, எந்த எந்த விதமாகப்பாவனை செய்து சொல்லுகின்றோமோ, அந்த அந்த விதமெல்லாம் ஒத்திருக்கும். அவளுடைய தந்த பந்திக்கு உவமானம் முல்லையரும்பும், மயிலின் அடியிறகும், முத்துக்களும் ஆகுமென்று சொன்னால், அவ்வார்த்தைக்கு அமிர்தமும் பாலும் தேனும் உவமானமாகுமென்று சொல்லப்படும். ஆகையால், அவைகளைச் சொல்லக்கூடாது. மூக்கினுடைய அழகுக்குப் பச்சோந்தியும், எள்ளுப்பூவும், குமிழ மலருமாகிற இவைகளை உவமானமாகச் சொல்லுவோமென்றால், அந்த மூக்குக்கு உண்டாகிய பொன்னிறமும், இரத்தினப்பிரகாசமும் இவைகளுக்கில்லை. மேலும், அவள் மூக்கு ஒருவராலும் எழுதப்படுவதன்று. ஆகையால், அந்த நியாயத்தைப் பார்த்து நீயே அறிந்துகொள். அவளுடைய காதுகளுக்கு உவமானமாக அறியாதவர்கள் சொல்லுகின்ற வள்ளைக் கொடியையும் கத்திரிகையையும் பெரியவர்கள் சொன்னால், அவர்களைப் பைத்தியக்காரர்களென்றல்லவோ சொல்லுவார்கள்? ஆகையால், அவைகளிலே வாசமாயிருக்கின்ற குழைகள் செய்த தவமே காதாய் வந்திருக்கின்றதென்று நினைக்கவேண்டுமேயல்லாமல், உலகத்திற்கெல்லாம் உவமானமாயிருக்கின்ற அவைகளுக்கும் உவமான

முண்டாயிருக்குமா? அவளுடைய கண்களின் விசாலத்திற்குச் சமுத்திரமும் சமானமாகமாட்டாது. ஆயிரந்தரம் பார்த்தாலும் பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கின்ற தேவதேவனுகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் போலவே அது கறுத்தநிறமும் வெளுத்த நிறமுமாய் அகன்றிருக்கும்; பார்த்துக்கொள். அவளுடைய புருவம் தமக்குள்ளே ஒன்றுக்கொன்று உவமானமாகுமே அல்லாது வேருென்றை உவமையாகச் சொல்லுதல் இழிவாகும். மன்மதன் கையிலிருக்கின்ற கருப்பு வில்லைச் சொல்லலாமென்ருல், அதுவும் இரண்டன்று. சந்திரன் அந்தச் சீதையின் நெற்றியழகைக் கண்டு பல நாளும் அதையே நினைத்து நினைத்து மதியென்னும் பெயரையுடையவனுகி நாளுக்கு நாள் முறைமுறையாகக் குறைந்து வளர்ந்துகொண்டிருப்பானுனுல், அவன் அந்த நெற்றிக்குச் சமானமாவனு? அவளுடைய கூந்தலை ஆரணியத்திற்கு வந்தது முதல் வாரிச் சீவுகிறவர்களில்லை. அப்படியானுலும், அதனழகுக்கு ஓரழிவில்லை; ஒருவரால் கோதிக் கைசெய்யப் படுவதனுல் மிருதுவும் வாசனையும் உண்டாயிருக்கின்றது மன்று. மேலும், அந்தக் கூந்தலின் கறுத்த நிறமானது பிரம சிருஷ்டியிலேயே ஸ்வபாவமாய்த் தோன்றியதாகையால், உவமானம் சொல்லப்படுவதன்று; கரிய நிறத்தையுடைய மேகக் கொழுந்தும், செவ்வல்லிப் புஷ்பமும், வளைவாகிய வில்லும், வள்ளையும், சேற்கெண்டையும், முத்துகளும் சேர்ந்திருக்கின்ற ஒரு பூரண சந்திரனையே பிரமதேவன் முகமாகக் குறித்து வைத்திருக்கிருனென்று அவளுடைய திருமுக மண்டலத்தை அறிந்துகொள். அவளது பின்னிய ஜடையினழகைச் சொல்லுகிறேன்; கேள்: நெருக்குற்று மெல்லியதாகிய மயிரைப் பருமனுக்க வேணுமென நினைத்து மேகத்தைக் கிழித்துக்கட்டி, அதற்குத் தேனைத்தடவி, அகிற்புகையூட்டி, இருட்குழம்பிலே தோய்த்து அதனுடனே ஒன்ருகச் சேர்த்து வைத்திருக்கின்றதென்றே சொல்ல வேண்டும். பலபல வார்த்தை ஏன் சொல்ல

வேண்டும்? தெய்வத்தன்மையையுடைய தாமரைப் புஷ்பத்திற்கும் அற்பமாகிய புல்லிதழுண்டு. பிரகாசமாகிய சந்திரனுக்கும் களங்கமுண்டு. மற்றும் உலகத்திலுள்ள நல்ல வஸ்துக்களுக்கெல்லாம் ஒவ்வொரு குற்றம் சிறிது சிறிதுண்டு. சீதைக்கு மெய் முழுமையும் நன்மையே உற்பத்தியாயிருக்கின்றதல்லாமல்,குற்றமென்று எவ்வளவுமில்லை. ஸ்திரீகளுக்குச்சொல்லியிருக்கின்ற இலட்சணங்களில் ஒன்ருவது அந்த ஸ்ரீ மகாலட்சுமிக்கும் பூரணமாயிராது. என் பிராண நாயகியாகிய ஜானகிக்கு அவைகளில் ஒன்ருகிலும் குறைவில்லாது பரிபூரணமாயிருக்கின்றன. அதுவே உனக்குக் குறியாகப் பார்த்துக்கொள். வேணுகானத்தையும், யாழோசையையும், குயிலின் குரலையும், கிளியின் வார்த்தையையும், நாகணவாய்ப்பறவை முதலானவைகளின்மதுரமாகிய மழலைச்சொற்களையும் பிரமதேவன் தேடிப் பொறுக்கி அவைகளையெல்லாம் ஒன்ருகக் கூட்டி வடித்தெடுத்து அந்தச் சீதைக்கு வார்த்தையாகப் படைத்திருக்கிருன். அவன்மேல் பிழையில்லை. ஆயினும், அந்த வார்த்தைக்கு உவமானமாத்திரம் காண்பிப்பதற்கு அவனுக்கு ஒரு பொருளுங் கிடைக்கவில்லை. இனிமேல் கிடைக்குமோ என்னவோ, தெரியாது. நாமாவது அதற்கு உவமை சொல்லுவோமென்ருல், அமிர்தம் ஒன்றிருக்கிறது; தேன் ஒன்றிருக்கின்றது. அந்த இரண்டையும் சொல்லலாம். ஆயினும், அவைகள் நாவிற்கு இன்பங் கொடுக்குமேயல்லாமல், காதுக்கு இன்பங் கொடுக்கமாட்டா. நடையில் அன்னத்தையும் பெண் யானையையும் அதிசயமானவைகள் என்றல்லவோ சொல்லுகிருேம்? அவைகளைச் சொல்லவும் எனக்குச் சம்மதமில்லை. பின்னை எதைத்தான் சொல்லலாமென்ருல், மகா புருஷர்களாகிய வித்வஜன சிரேஷ்டர்கள் தங்கள் நாவினுலே எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்னும் பஞ்சலட்சணக் கிரமத்துடனே பாடுகின்ற பாடலின் நடையையே அந்தச் சீதையின் நடையென்று சொல்லலாம். அவளுடைய

திருமேனிநிறத்தைக் குறித்து இளமையாகிய மாந்தளிரினிற மென்றால், அது முதிர்ந்த நிறமாயிருக்கும்; பொன்னிறமென்றால், அந்தக் காந்தி இதற்கிருக்க மாட்டாது; அவள் நிறத்திற்கு முன்னே இதைக் கறுப்பென்றே சொல்லவேண்டும்; இரத்தின நிறமும் ஒளி போதாது; மின்னலின் நிறமோ, அவள் நிறத்தைக் கண்டு வெட்கி ஒளித்துக்கொள்கின்றது; புஷ்பத்தின் நிறமும் மழுங்கி வெளுத்துக் காண்கிறது. ஆகையால், எந்த நிறத்தைச் சொல்லுவேன்! அது தனக்குத்தானே சமானமல்லாமல், அதற்கு வேறென்ன சமானம் இருக்கின்றது? ஸ்திரீகளில் அவளுக்கு நேரானவர் மற்றொருவரில்லை. அதுவே சாட்சியாகப் பார்த்துச் சமீபத்திலே போய், அவளுக்கு உன்னிடத்திலே நம்பிக்கை உண்டாக்கத் தக்க சில அடையாள வார்த்தைகளையும் சொல். முன்னாளில் நான் மிதிலைக்கு விஸ்வாமித்திரர் பின்னே போன போது, அன்னங்கள் விளையாடுகின்ற அகழ் சூழ்ந்த கன்னிகா மாடத்தினருகில் சிங்காரத் தோட்டத்தில் சீதை நின்றுகொண்டிருந்தாள். அவளை நானுங்கண்டேன்; அவளும் என்னைக் கண்டாள். இந்த அடையாளத்தைச் சொல். பின்பு ஜனக மகாராஜன் ராஜசபைக்கு அழைப்பிக்க, அவள் மின்னற்கொடி போல அங்கு வந்த போது நான் பார்த்தேன். அவளும் தன் கை வளையைத் திருத்துகின்றது போலக் கடைக்கண்ணினால் என்னைப் பார்த்திருந்தாள்; அதையும் சொல். அல்லாமலும், பர்வதத்தைப் போல அபாரமாகிய வில்லை நான் ஒடித்த சமாசாரத்தை அவள் கேள்விப்பட்டவுடனே, 'இந்த வில்லையொடித்தவர் நான் கன்னிகா மாடத்திலிருந்து கண்டு மோகிக்கும்படி அந்த விஸ்வாமித்திர மகரிஷியுடனே வந்த மகா புருஷரேயாக வேண்டும். அவரல்லாவிட்டால், என் கற்புக்குப் பின்னம் வரும். ஆகையால், என்னுயிரை விட்டுவிடுவேன்!' என்று கடலினும் பெரிய கற்பினையுடைய சீதையானவள், தெரிந்து சொல்லியிருந்தாள். இதையும் சொல். நான் வனத்திற்கு வர எத்தனித்த போது

அவளும் என்னுடனே வருகிறேனென்றாள். நான் அது கேட்டு, 'பெண்ணே, முன்பு நான் போயறியாத காட்டில் என் பின்னே வரும்படி நினைத்தாயே! எனக்கு இன்பமாகியும் பிராணனுக்கு இனிமையாகியும் இருக்கின்ற நீ, காட்டில் இனித் துன்பப்படுவாயோ?' என்று நான் சொன்னேன். அதையும் சொல். மற்றும், 'அரசாளுதலை விட்டு ஆரணிய வாசம் செய்யப்போகின்ற உமக்கு நான் மாத்திரந்தானா துன்பமாய் இருக்கின்றேன்? என்னை அல்லாதவைகளெல்லாம் இன்பமாய் இருக்குமா?' என்று கண்களினின்றும் நீரைச் சொரிந்து துயரப்பட்டாள். அதையும் சொல். நகரத்தை விட்டு வனவாசத்துக்குப் புறப்பட்ட போது அரண்மனை ஆசாரவாயிலைக் கடந்த மாத்திரத்தில், 'ஆரணியம் எங்கே?' என்று அவள் என்னைக் கேட்டாள். அதையும் சொல்,'' என்று இவ்விதம் சொல்லி, நவரத்தின கசிதமாய்க் கோடி சூரியர்களைப்போலத் தகத்தகாயமான திருவாழியைக் கொடுத்து, ''உன்னுடைய காரியமெல்லாம் ஜயமாகக் கடவன. போய் வா,'' என்று விடை கொடுத்தருளினார்.

அனுமன் ஸ்ரீ ராமரை நமஸ்காரஞ்செய்து, அவருடைய கடாக்ஷத்தைப் பெற்றுக்கொண்டு நடந்தான். அங்கதனும், மற்றப் படைத்தலைவரும், இரண்டு வெள்ளம் வானரசேனையும் ஸ்ரீ ராமலட்சுமணர்களைச் சேவித்துக்கொண்டு, தங்கள் ராஜாவான அந்தச் சுக்கிரீவனையும் வணங்கி, அந்த அனுமனோடு நடந்தார்கள்.

## 14. பிலம் புக்கு நீங்கு படலம்

அப்பால் சுக்கிரீவன் மற்ற மூன்று திசைகளுக்கும் முன்பு திட்டஞ் செய்திருந்த படைத்தலைவர்களையும் வானர சேனைகளையுங் கூட்டி அனுப்பினான். அவர்களும் அதிவேகமாகத் தங்கள் தங்களுக்குக் குறித்திருந்த திசைகளுக்குப்

போய், அதிக அன்புடனேபிராட்டியாரைத்தேடினுர்கள்.தெற்குத் திசையில் தேடிப்போன அனுமன் அங்கதன் சாம்பன் முதலானவர்களுடைய செய்தியை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன்: அனுமன் அங்கதன் முதலானவர்கள் அந்தக் கிஷ்கிந்தா பர்வதம் விட்டுப் பிரயாணப்பட்டு, அதிக வேகமாய் நடந்து, பதுமராகம் முதலாகிய பல வகை இரத்தின காந்திகள் அந்திப்பொழுது போலச் சிவந்து பிரகாசிக்கின்றதனுலும், சர்ப்பங்களும் சந்திரனும் அருவியாறும் ஓடிக்கொண்டிருக்கின்றதனுல், சிவனுடைய சடாமகுடம் போலப் பிரகாசிக்கின்ற விந்தியகிரியினிடத்திற் போய்ச் சேர்ந்தார்கள். அந்த மலையையும் மலைச்சிகரங்களையும், கொடுமுடிகளையும், குகைகளையும், பக்கங்களையும், அடிவாரங்களையும், ஒரு பகலிலே அனேகநாள் தேடிப் பார்க்கிறது போலத் தேடிப் பார்த்து, மற்றும் அவ்விடத்தில் இருக்கின்ற தேவர், மானிடர், மிருகம், பறவை, நீர் வாழ்வன, ஊர்வன, தாவரம் ஆகிய எழுவகைத் தோற்றங்களாகப் பிரமாவினுலே சிருஷ்டிக்கப்பட்டவைகளையெல்லாம் ஒன்று விடாமல் ஆராய்ந்து பார்த்துவிட்டார்கள். இப்படி ஜானகியைத் தேடிக்கொண்டு போகின்ற வானர சேனு வீரர்கள், சமுத்திரம் பரவிப்போகின்றது போலப் பரவி, சிறிதிடமாகிலும் விடாமல், அதிசீக்கிரமாய்ப் பார்த்துக்கொண்டு, அங்கிருந்து பதினுலு யோசனைத் தூரத்துக்கு அப்பாற்போய், நருமதையாற்றினிடத்தில் சேர்ந்தார்கள். அங்கே அன்னங்கள் விளையாடுகின்ற இடங்களையும், தேவரம்பைகள் வந்து ஸ்நானஞ் செய்கின்ற இடங்களையும், சுவர்க்கலோகத்தார் வந்து வாசஞ்செய்கின்ற இடங்களையும், வண்டுகள் கீதம் பாடப் புஷ்பங்கள் நிறைந்திருக்கின்ற சோலையின் இடங்களையும் சுற்றிப் பார்த்தார்கள். அந்த அதிக சிங்காரமாகிய நதியை விட்டு அப்பால் நடந்து, **ஏம கூடபர்வதம்** போய்ச் சேர்ந்து, அதன் பக்கத்திலிருக்கின்ற பர்வதங்கள் முதலாகிய இடங்களிலும் தேடி, மகாமேருவோவென்று சொல்லத்தக்க உயரமாய் இருக்கிற

அந்த ஏமகூடத்தைக் கண்டு, 'இதுதான் இராவணன் இருக்கின்ற மலை,' என்று ஏறிப்பார்த்து, 'இவ்விடத்திலே சீதையைக் காணலாம்,' என்று அதிலிருக்கின்ற யானை, யாளி, சிங்கம், புலி, கரடி, மான், மரை முதலானவைகள் பயப்பிராந்தி கொண்டு ஓட நூறு யோசனைத்தூரம் அகன்று ஆகாயத்தைத் தொடும்படி உயர்ந்த அந்தப் பர்வதமெல்லாம் ஒரு பகற்பொழுதிலே தேடிப்பார்த்து, சீதையைக் காணுததனுலே அங்கிருந்து குதித்து, அப்பால் நடந்தார்கள்.

அவ்விடத்தில் அங்கதன் முதலான வீரர்கள் தங்களோடு வந்த இரண்டு வெள்ளம் சேனையை நோக்கி, "நீங்கள் எல்லாம் ஒருபுறமாய்த் திரிந்து உலகமெல்லாம் தேடிக்கொண்டு சமுத்திரத்தின் ஓரத்திலிருக்கின்ற மகேந்திரகிரியினிடத்தில் வந்து எங்களுடனே கூடுங்கள்," என்று திட்டம் செய்து பிரித்து அனுப்பிவிட்டு, அனுமன் அங்கதன் சாம்பன் முதலாகிய வீரர்கள் ஒரு கூட்டமாய்க்கூடி, அதிவேகமாய் நடந்தார்கள். அப்படி நடக்கையில், ஒரு பாலை நிலம் மிகக் கடூரமாய்க் காலாக்கினி போல எரிந்துகொண்டு ஜலமென்னும் பெயரே வழங்காமையால் சூரியனும் பயப்படத்தக்கதாயிருந்தது. அவர்கள் அந்தச் சுரத்திலே போய்விட்டார்கள். அதிலே பட்சிகளும் மிருகங்களும் சேரமாட்டா; மரங்கள் செடிகளுமில்லை; கற்களுந்தீய்ந்து எங்கும் வெளியாயிருக்கின்றதேயல்லாமல் வேருென்றுமில்லை. அந்தப் பூமியிலே அவர்கள் அகப்பட்டுக்கொண்டு, ஐம்புலன்களும் நடுங்க, அறிவு பெயரற்றுப்போக, மனமும் கலங்கி, தங்கள் சரீரம் புழுங்கி, நரகத்திலே பதைக்கின்ற எலும்பில்லாத புழு முதலாகிய ஜீவ ஜந்துக்களைப்போல அதியுஷ்ணத்தையடைந்து, நாவை நீட்டிக்கொண்டு, பூமியிலே அடியெடுத்து வைக்குந்தோறும் பாதங்கள் கொப்புளித்து, காய்ந்த சட்டியிலிருந்து சிதறுகின்ற பொரிகள் போலத் துள்ளித் துள்ளிப் பதைபதைத்து, கொஞ்சமாவது ஒதுங்க நிழல் கிடையாமல், பிராணன் பிரிந்து போகத்தக்க அளவில்லாத அவஸ்தையுடன்

ஓடுகிறார்கள். இப்படி ஓடுகிற போது, அந்நிலத்தின் மத்தியில் ஒரு பிலமிருந்தது. அதிலே குதித்து, அங்கிருந்து, 'இனி இந்தப் பாலை நில வழியாய் நடந்து போகிறது மிகவும் அருமையாகும். அல்லவென்று நடந்தால், நாமெல்லோரும் இறந்து போவோம். ஆகையால், இந்தப் பிலத்தின் வழி யாய்ப் போகிறதே மிகவும் உத்தமம்,' என்று நிச்சயித்துக் கொண்டு, 'இந்தப் பிலத்துவாரம் எந்த மட்டும் போகின் றதோ! அதையும் அறிவோம்,' என்று அதற்குள்ளே புகுந்து, ஒரு க்ஷணப் பொழுதுக்குள்ளே அந்தப் பிலத்தின் வழி முழுதும் போனார்கள். அங்கே உலகத்தில் நிறைந்திருக் கின்ற இருளெல்லாம் சூரியனுக்குப் பயந்து வந்து புகுந்து கொண்டிருக்கிறது போல இருண்டிருக்கின்ற ஓரிடத்திலே போய் அகப்பட்டுக்கொண்டார்கள். அப்போது அனுமனல் லாத மற்ற யாவரும் அசைவற்றார்களாகி, அடியெடுத்து வைத்து அதை விட்டு அப்பால் நடக்க வேண்டுமென்னும் எண்ணமும் இல்லாமல், அதற்கு அப்புறம் ஏதாவது வழி யிருக்கின்றதாவென்று அறியத்தக்க அறிவுமில்லாதவர் களானார்கள். அன்றியும், மிகுந்த இருளாகிய வெள்ளத்தில் மூழ்கிக் கண்கள் தெரியாமல் பெருமூச்செறிந்துகொண்டு நின்று, செய்யத்தக்க காரியத்தையும் ஆலோசியாமல் திகைப்புற்று, 'இனி நாம் பிழைக்கிறதேயில்லை! இது என்ன அவஸ்தை!' என்று மனங்கலங்கினவர்களாய், 'ஆஞ்ச நேயரே, இந்தச் சமயத்தில் நீரெங்களை இரட்சிக்கமாட்டு வீரா?' என்று அவனைக் கூப்பிட்டுக் கையெடுத்து இரந்து துதி செய்தார்கள். அனுமன் அவர்களைப் பார்த்து, "பயப் படவேண்டா! ஸ்ரீராமருடைய கிருபையினாலே நமக்குப் பிராணபயம் வாராது. நீங்களெல்லாரும் என் வாலை விடாமல் பிடித்துக்கொள்ளுங்கள்," என்று சொல்லி, தன்னுடைய சரீ ரத்தை வளர்த்து, வாலை நீளும்படி செய்தான். அப்படியே அனைவரும் அவனுடைய வாலைப் பிடித்துக்கொண்டனர். பின்பு அனுமன் கையை நீட்டித் தடவிப் பார்த்துக்கொண்டு

காலினுலே மெள்ள மெள்ள நடந்து பன்னிரண்டுயோசனைத் தூரம் பரந்திருக்கிற ஸ்தூல காத்திரத்தையுடையவனுகித் தன்னுடைய காதிலிருக்கின்ற குண்டலங்களின் பிரகாசத்தினுலே இருள் நீங்க நடந்து போகிற போது, ஒரு பட்டணத்தைக் கண்டான். அப்பட்டணம், சூரிய மண்டலமானது வந்து ஒளித்துக்கொண்டிருக்கிறது போலவும், ஸ்ரீ மகாலட்சுமியின் திருமுகம் போலவும் தேவலோகமும் நாணும்படியான அதிக சிங்காரமுடையதாய் கற்பகச்சோலைகளும், தாமரைத்தடாகங்களும், கோபுரங்களும், மதில்களுமுடையதாய், தேவர்களும் வந்து கண்டு அதிசயிக்கத் தக்கதாயிருந்தது. தெய்வத்தச்சனுகிய மயனென்பவன் மனம் வருந்திச் செய்ததாய், இந்திர நகரத்தைப்பார்க்கிலும் அதிக சிலாக்கியமாய், ஒப்பற்றதாய், இரத்தினகசிதமாய், ஸ்வர்ணமயமாய், பூமியில் தீபம் முதலானவைகளின் பிரகாசமும், ஆகாயத்தில் சூரியன் சந்திரன் முதலானவைகளின் பிரகாசமும் இல்லாவிட்டாலும் இருளையெல்லாம் நீக்கிப் பிரகாசிக்கின்றதாய், சோழராஜாவினுடைய கீர்த்தியைப் பாடிப் புகழ்கின்ற வித்துவாமிசர்களுடைய வீடுகளைப்போல, ஸ்வர்ணக் குப்பல்களும், இரத்தினக் குப்பல்களும், நல்ல வஸ்திரங்களும், சீதளச் சந்தனமும், கதம்பப் பொடிகளும் அளவில்லாமல் நிறைந்திருக்கின்றதாய், ஸ்திரீகளும் புருஷர்களும் இல்லாமையால் நிர்மானுஷியமாய், உயிரில்லாத சித்திரம் போல இருந்தது. இப்படியிருக்கின்ற அந்த நகரத்தை எதிரே கண்டு, "இந்தப்பட்டணம் இராவணனுடைய பட்டணமா!" என்று நினைத்து, ஒருவரோடொருவர் சொல்லிச் சந்தோஷித்து அதிசயித்து, ஸ்வர்ணசாயையாகிய அதன் வாயிலுக்குள்ளே புகுந்து போய்ப் பார்த்தார்கள். அதற்குள்ளே வானத்திலும் பூமியிலும் வாழ்கின்ற தேவர்கள் முதல் மனிதர்கள் வரையிலுள்ள சகல ஆத்துமாக்களின் உருவங்களும் சித்திரரூபமாக எழுதியிருக்கின்றனவே அல்லாமல் நிஜ ஸ்வரூபமாய் ஒன்றுமில்லை. வாவிகளுண்டு; பொய்கைக

ளுண்டு; திவ்வியமாகிய பரிமளம் வீசுகின்ற மனோகரமான நாநாவிதப்புஷ்பச்சோலைகளுமுண்டு. அவைகளில், மயில்கள், குயில்கள், கிளிகள், பூவைகள், அமிசங்கள் சகலமுமுண்டு. இவைகளுக்கெல்லாம் உயிர் மாத்திரமில்லை. இப்படிப்பட்ட நகரத்தினுடைய சிங்காரத்தை எல்லாம் பார்த்து, 'இது வென்ன! மாயைதானோ!' என்று எண்ணி, 'முன்பு அந்தப் பிலத்துவாரத்தில் நாம் விழுந்த போது அப்பிறப்பு நீங்கிப் போய், சுவர்க்கத்தில் வந்திருக்கிறோம்!' என்று மனத்திலே நிச்சயித்துக்கொண்டவர்களாகி, மற்றும் யோசிக்கிறார்கள்: "என்ன! நாம் இறக்கவுமில்லையே! நமக்கு முன்னிருந்த சரீரந்தானே இருக்கின்றது! அல்லாமலும், இப்படியாக வேண்டுமென்று ஏதாயினும் நினைத்திருந்தோமா? முன் னிருந்த நினைவு எவ்வளவும் மறக்கவுமில்லையே! கிலேசமு முண்டாய் இருக்கின்றதே! கண்களையும் இமைக்கின்றோமே! இவைகளெல்லாம் சுவர்க்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு இருக்கமாட்டாவே! மயக்கமென்று நினைத்தால், மயக்கங் கொண்டவர்கள் செய்தற்குரிய பிழையும் நம்மிடத்திலே இல்லையே! இதை என்னவென்றறியலாம்!" என்று சொல் லித் திகைத்தார்கள்.

அந்தச் சமயத்தில் சாம்பவந்தர் பயமடைந்து, கைகால் நடுங்கி, "ஐயன்மீர், கேளுங்கள்: இது என்னவென்றால், பிராட்டியாரைத் திருடிக்கொண்டு போன கள்ளனான இராவ ணன் நாமெல்லாம் விழும்படி ஒரு படுகுழி செய்து வைத்தது போலவே இருக்கின்றது. இதற்கு ஒரு முடிவோ இல்லை. இதிலே நாம் அகப்பட்டுக்கொண்டோம். இனி நம்முடைய விதிப்படிதான் முடியும்," என்று சொன்னார்.

இப்படிச் சொன்ன சாம்பவந்தரைப் பார்த்து அனுமன், "இப்பொழுது இந்தப் பிலத்துவாரத்திலேயிருந்து மேலே ஏறு வதற்கு வழி கிடையாமல் போகுமானால், பூர்வகாலத்திலே சகரர்கள் செய்தபடியே இந்தப் பூமியைப் பேர்த்துத் தின்று கொண்டே வெளியே போவோம்! அப்படியல்லவென்றால்,

அந்த வஞ்சனையையுடைய இராட்சதர்களையெல்லாம் கொன்று தீர்த்துவிட்டுப் போவோம்! பயப்பட வேண்டா!'' என்றுகோபாவேசத்துடனேசொன்னான். அங்கதன் முதலான மற்ற வீரர்களும் அவ்வாறே செய்வோமென்று தங்கள் மனத்தில் நிச்சயம் பண்ணிக்கொண்டு, அந்தப் பட்டணத்தைச் சுற்றிப் பார்க்கும் பொழுது, அதனடுவே நல்ல தவங்களெல்லாம் திரண்டு ஓர் உருவமானது போலப் பிரகாசிக்கின்ற ஒரு பெண்ணைக் கண்டார்கள். அவள் தங்கக் கம்பிகள் போல விளங்கும் சடையும், இடையில் மரவுரியும், சக்கரவாகப் பட்சிக்குச் சமானமான ஸ்தனமும், மாசடைந்த சரீரமும், பூரண சந்திரன் போன்ற முகமுமுடையவளாய், மூக்கு நுனியில் பார்வையை வைத்துப் பார்த்த வண்ணமாய் சுவாச பந்தனம்செய்திருக்கிறபடியினாலே, இளைத்தஇடையானது பருத்த ஸ்தனத்தைச் சுமந்தும் வளையாமல் நிற்க, இரண்டு கைகளையும் தொடையினிடத்திலே பொருந்த வைத்துக்கொண்டு, காமாதிகளாகிய உட்பகையெல்லாம் கால் தளர்ந்து போக, ஆசையானது நாமமற்றோட, நல்லறிவானது உதயமாக, இரு வினைகளும் பற்றற, சங்கற்ப விகற்பங்கள் இல்லாமல், கண்களின் வழியே கிருபை ஜொலிக்கும்படி வீற்றிருந்தாள். அப்படியிருந்த *சுயம்பிரபை* என்னும் நாமத்தையுடைய தெய்வப் பெண்ணை வானர வீரர்கள் கண்டு, நமஸ்காரஞ் செய்து, அவளை அருந்ததிக்குச் சமானமான ஜானகிதானோ வென்று நினைத்துச் சந்தோஷமடைந்து, மனம் பதைத்து, அனுமானை நோக்கி, "ஐயா, அந்த லோகமாதா இவள் தானோ? பாரும்!'' என்று சொன்னார்கள். அதற்கு அனுமன், "நன்றாயிருந்தது! பிராட்டியாருக்கு உரிய குறி குணங்களில் எந்தக் குறிதான் எந்தக் குணந்தான் இவளிடத்திலிருக்கின்றதென்று சொல்லுவேன்? புருஷோத்தமரான ஸ்ரீராமருக்கு இப்படிப்பட்ட குறி குணங்களையுடையவளா தேவியாயிருப்பாள்? முத்து மணிக்கு அக்குமணியொப்பானால், அந்த ஜானகியாருக்கு இவள் ஒப்பாவாள்!'' என்று சொன்னான்.

அத்தருணத்திலே மகா தபோநிஷ்டாபரையாயிருந்த சுயம்பிரபை, அந்தத் ததேகத்தியானம் நீங்கிச் சித்தவிர்த்தியையுடையவளாய், அவர்களைப் பார்த்து, "இவர்கள் முன்னையவர்களல்ல. ஆரோ பாட்டைசாரிகளாயிருக்கின்ருர்கள்!" என்று எண்ணி, "நீங்கள் ஆரப்பா? இந்த நகரத்தினிடத்தில் முன்பு ஒரு நாளும் வந்தவர்களாய்க் காணப்படவில்லையே! வந்த காரணமென்ன?" என்று கேட்டாள். அவர்கள் அவளை நோக்கி, "பெண்ணே, பாதகர்களான இராட்சதர்கள் ஏதோவொரு மாயை செய்து சீதா பிராட்டியாரை அபகரித்துக்கொண்டு போய் ஒளித்து வைத்தார்கள். அவர்கள் ஒளித்து வைத்த இடத்தைத் தேடிக்கொண்டு நாங்கள் திரிகின்ருேம்; நாங்கள் இராம தூதர்கள்," என்று சொன்னுர்கள். அந்த வார்த்தையைக் கேட்டு, உட்கார்ந்திருந்தவள் எழுந்துநின்று, கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழிய, மகா ஆனந்த பரவசையாகி, "உங்களுடைய வரவு நல்வரவாகுக!" என்று சொல்லிக் கொண்டாடி, "ஸ்ரீராமர் எங்கே எழுந்தருளியிருக்கிருர்?" என்று கேட்டாள். அதற்கு ஆதியந்தமாக நடந்த செய்திகளையெல்லாம் அனுமன் அவளுக்குத் தெரியும்படி சொன்னுன். அது கேட்ட சுயம்பிரபை, "என்னுடைய தவம் இன்றைக்கு முடிந்தது! நான் மோட்சமடைந்தேன்!" என்று அனைவரையும் கானூற்றிலே ஸ்நானஞ் செய்து வரும்படி சொல்லி, இஷ்டான்னம் பரிமாறிப் "போஜனஞ்செய்யுங்கள்," என்று மிகவுமுபசாரஞ் செய்தாள். அப்படியே எல்லாரும் போஜனஞ்செய்து எழுந்த பின்பு, அனுமன் அந்தச் சுயம்பிரபையென்பவளுக்கு நமஸ்காரஞ் செய்து, "அம்மையீர், நீரார்? உம் பெயரென்ன? இந்த நகரத்தின் வரலாறென்ன? இதற்குத் தலைவரார்? நீரிவ்விடம் வாசஞ்செய்யக் காரணம் என்ன? தெரியச் சொல்ல வேண்டும்," என்று கேட்க, அந்தத் தவச்சொரூபியானவள், "இந்நகரமானது மயனுடைய தபோ பலத்தினுலே பிரமா சிருஷ்டித்தது. நான் தெய்வலோகத்திலிருப்பவள்.

என் பெயர் சுயம்பிரபை; தெய்வலோகத்திலுள்ள அரம்பைகளில் ஒருத்தி எனக்கு மிகவும் பிரியமான உயிர்த்தோழியாயிருக்கிருள். அவளையோர் அசுரன் சேர்ந்து சுகமனுபவிக்க வேண்டுமென்றிச்சித்தான். அவளும் அவனிடத்திலே இஷ்டமானபடியினுலே, அவர்களுக்கு நானிந்த நகரத்தைத் தெரியப்படுத்தி, 'அதிலேபோய் உங்களுடைய மனோபீஷ்டப்படி இருங்கள்,' எனச் சொன்னேன். அப்படியே இதனிடத்தில் வந்து அனேக காலம் கூடிப் போகித்துக்கொண்டிருந்தார்கள். அந்த அரம்பையினிடத்தில் இஷ்டமுடையவளாகையால், அவளை விட்டுப் பிரிந்திருக்க மாட்டாமல், நானும் இவ்விடத்திலே வந்திருந்தேன். அப்படியிருக்கும் காலத்திலே தேவேந்திரனுனவன் அவளைத் தேடிக்கொண்டு இவ்விடத்திற்கு வந்து, அவ்வசுரனைக் கொன்றுவிட்டு, அவளைக்கண்டு, அவள்மேல் மிகவும் கோபித்துக்கொண்டு, 'நடந்த செய்தியை உள்ளபடி சொல்,' என்று கேட்டான். அந்த அரம்பை பயமடைந்து நடுங்கி, என்னைக் கடைக்கண்ணிஞற்காட்டி, 'சகலமும் இவளாலே வந்தன,' என்று சொன்னுள். அப்போது ஸகஸ்திர நேத்திரனுகிய தேவேந்திரனுனவன் என்னைப் பார்த்து, 'நீ தெய்வலோகத்திற்கு வாராமல் இந்த நகரத்திற்குக் காவலாய் இவ்விடத்திலேயே இருக்கக்கடவாய்,' என்றும், 'இந்தப் பிலத்தின் வழி இருள் சூழ்ந்திருக்கக் கடவது,' என்றும் ஆக்கியாபித்துச் சபித்துவிட்டான். அப்பொழுது நான் அவனை வணங்கி, 'இதற்கு என்றைக்கு முடிவு?' என்று கேட்பதற்கு முன்னே அவன், 'ஸ்ரீராமதூதரான அனுமரானவர் வானர வீரருடனே உன்னிடத்திற்கு வருவார். அப்பொழுது உனக்கு இது விமோசனமாகி, நீ தெய்வலோகத்திற்கு வரக்கடவாய,' என்று சொல்லிப்போனுன். எனக்கு உண்ணுகிறதற்குப் பரமான்னமும், உடுப்பதற்குப் பீதாம்பரமும், பூசுவதற்குப் பரிமள கந்தமும், சூடுகிறதற்குப் புட்பமாலைகளும், அணிகிறதற்கு இரத்தினுபரணங்களும், மற்றும் வேண்டிய சகல வஸ்துக்களும் இவ்விடத்தில்

உண்டாயிருக்கின்றன. அவைகளிலெல்லாம் நான் இச்சை வையாமல் தேவேந்திரன் கொடுத்த சாபத்தை வெல்லுவதற்காக உங்களைக் காண வேண்டி, எண்ணுவதற்கருமையான இத்தனை நாள் தவஞ்செய்துகொண்டிருந்தேன். இந்தப் பிலமோ, நூறு யோசனை விஸ்தீரணமுள்ளது. இங்கிருந்து தெய்வலோகத்திற்குப் போக வேண்டுமென்றால், இருள் சூழப்பட்டிருப்பதனால், வழி அகப்படவில்லை. என்னை எவ்விதத்திலாவது சுவர்க்கம் போய்ச் சேரும்படி உபாயஞ் செய்யும்படியான வகையுண்டானால், நீங்கள் திருவுளம் பற்றுங்கள்,'' என்று சொன்னாள்.

அதைக்கேட்ட வானர வீரர்கள் அனுமனை நோக்கி, "பிலத்துவாரத்தில் இருளிலே மூழ்கிக் கண் தெரியாமல் வருத்தப்பட்டு இறந்து போகத் தக்கவர்களாயிருந்த எங்களை அதிலிருந்து நீக்கிக் காப்பாற்றிய மகானுபாவராகிய ஆஞ்சநேயரே, இவ்வளையும் உம் செய்கையினாலே இரட்சியும்,'' என்று சொன்னார்கள். அனுமன், "நீங்கள் நடுங்க வேண்டா,'' என்று சொல்லிக் குறுநகை செய்து, சிங்கத்தைப்போல வீராவேசத்துடனே எழுந்திருந்து, வேதங்களும் காணாத பரமபதத்திற்கும், அந்தப் பிலத்திற்கும், ஏக வழியாய்விடுமென்று சொல்லும்படி பிலமும் பூமியும் ஒன்றாகுமாறு அதனைப் பீறிக்கொண்டு, முன்னாளிலே இரணியாட்சனைச் சங்கரித்துவிட்டுப் பூமியைக் கொம்பினாலெடுத்துக் கொண்டு பாதாளத்திலிருந்து மேலெழுந்த ஆதி வராகத்தைப் போலச் சிரசானது ஆகாயத்தை அளாவும்படி இரண்டு தோள்களும் இரண்டு தந்தம் போல விளங்கப் பூமியைப் பிளந்துகொண்டு வந்தான். மகாபலி சக்கரவர்த்தியினிடத்தில் மூன்றடி மண் தானம் வாங்கி இரண்டடியினால் அளந்தபோது பிரமாண்டத்தைத் துளைத்துக்கொண்டு ஓங்கிய ஸ்ரீ மகா விஷ்ணுவினுடைய திருவடியைப்போல, அனுமனானவன் நூற்று நாற்பது யோசனைத் தூரம் பிலத்தை இடித்துப்பேர்த்துத் தூக்கிக்கொண்டு நிமிர்ந்து அதை மேற்சமுத்திரத்தில்

விட்டெறிந்து கொக்கரித்தான். அது இன்றைக்கும் அந்த மேற்சமுத்திரத்திலே *பிலத்தீபம்* என்று சொல்லப்பட்டிருக் கின்றது. அப்போது பூமிக்கும் அவ்விடத்திற்கும் வெளிச்ச மாய் வழியுண்டாயிற்று. அவ்வழியாய் எல்லாரும் சுயம் பிரபையை அழைத்துக்கொண்டு பூமியில் வந்து சேர்ந்தார் கள். இப்படி வந்தவுடனே, அந்தச் சுயம்பிரபை அனுமன் செய்த உதவியைக் குறித்துப் பல விதத்திலும் சந்தோஷப் பட்டு, கற்பகச்சோலை சூழ்ந்த சுவர்ணமயமாகிய தேவ லோகத்திற்குப் போனாள். வானர வீரர்களும் அனுமனுடைய புஜபலத்தைக் கொண்டாடிப் பேசிக்கொண்டு வழி நடந்து போனார்கள்; அங்கே ஒரு பொய்கையைக் கண்டு அவ் விடத்திற்போய்ச் சேர்ந்தார்கள். அத்தருணத்தில் சூரியனும் மேற்சமுத்திரம் போய்ச் சேர்ந்தான்.

## 15. ஆறு செல் படலம்

அந்தப் பொய்கையிலே மதுரமான ஜலத்தை எல்லாரும் குடித்துத் தாகம் தணிந்து, திருப்தியாகி, அங்குள்ள காய் கனிகளையும் தேனையும் புசித்து, அந்தப் பொய்கைக் கரை யில் ஓரிடத்தில் படுத்து நித்திரை செய்தார்கள். அப்பொழுது ஓர் அசுரன் வந்தான். அவன் மலை போன்ற உயரமும், கடல்போன்ற சரீர விரிவும், கூற்றுவனைப்போன்ற கொலைக் கொடுமையும், அக்கினி ஜொலிக்கும் கண்களும், பால சந்திரனைப்போன்ற இரண்டு கோரதந்தமும் உடையவன்; மேகங்கள் உன்னதமாகிய அவனுடைய தோளின்மேலே தவழ்ந்து மழை பொழிகின்றபடியினாலே, அருவியோடுகிற மலைக்குச் சமானமானவன்; தேவர்கள் அசுரர்கள் முதலிய எவர்களுக்கும் அடங்காத பலவான். எப்படிப்பட்டவர்களுக் கும் அவனுடனே யுத்தம் செய்யலாமென்று ஒரு விதத்தினா லாயினும் எண்ணக்கூடுமா? அப்படிப்பட்ட அசுரன் செம்

பட்டமயிர்கள் பிரகாசிக்கக் கைகளைப் பிசைந்துகொண்டு, காற்ருடி போல வேகமாய் வந்து பார்த்து, "இது நம்முடைய பொய்கையென்றறிந்தும் பயமென்பதில்லாமல் இவர்கள் வந்திறங்கி உறங்குவது நன்ருய் இருக்கின்றது!" என்று அதிக கோபமடைந்தவனுகி, வழி நடந்த வருத்தத்தினுல் அயர்ந்து நித்திரை செய்கின்ற வானர வீரர்கள் இருக்கு மிடத்தில் வந்து, அங்கதனுடைய மார்பில் ஓர் அறை அறைந்தான். அறையவே, அதிசீக்கிரமாய் அங்கதன் நித்திரை தெளிந்து எழுந்திருந்து, "இவன்தான் இராவணன்!" என்று நினைத்து, அவன் மார்பில் தானும் ஓர் அறை கொடுத்தான். அந்த அறை படவே, அவ்வளவு பலசாலியான அவ்வசுரனுனவன், இடி விழுந்து ஒரு பர்வதம் சிதைந்து விழுந்தது போல, அலறிக்கொண்டு பூமியிலே விழுந்தான். அப்பொழுது வானரவீரர் எல்லோரும் விழித்துக்கொண்டு எழுந்து வந்து சுற்றிக்கொண்டனர். மாண்டு விழுந்து கிடக்கும் அவ்வசுரனைக் கண்டு அனுமன், "இவனர்? என்ன செய்தான்?" என்று கேட்க, "நான் ஒன்றுமறியேன்!" என்று அங்கதன் சொல்லினுன். அப்போது, சாம்பவந்தர், "ஐயா, இவனை நானறிவேன். இவன் இந்தப் பொய்கைக்கு நாயகன்; மகா பலவானுன *துமிரன்* எனவும் *புட்கலன்* எனவுஞ் சொல்கின்ற பெயரினையுடைய அசுரன் இவன்தான்," என்று சொல்லினுர். அது கேட்டு வானரவீரர்களெல்லாரும், "அவ்விதமாய்த்தான் இருக்கலாம். அல்லவென்ருல், மற்றெருருவர் இங்கே வருவாரா?" எனச் சொல்லிக்கொண்டார்கள். பின்பு, யாவரும் உறக்கம் தெளிந்தபடியினுலே அங்கிருந்துபுறப்பட்டு அப்போதே நடந்து, சூரியன் உதயமாகிற வேளைக்குப் பெண்ணை நதியினிடத்தில் வந்து சேர்ந்தார்கள்.

மணற்குன்ருன ஸ்தனபாரங்களையும், ஆம்பற்புட்பமான வெண்பற்களையும், தாமரைப் புட்பமான முகத்தையுமுடையதாய் ஒரு பெண்ணுக்கு ஒப்பான அந்தப் பெண்ணை நதியினிடத்தில் சீதையென்கிற பெண்ணைத் தேட வந்தவர்கள்,

அந்நதித் துறைகளையும், மயில்கள் கூத்தாடும் இடங்களையும் நதியினுடைய மத்தியிலுள்ள திட்டுகளையும், பூஞ்சோலைகளையும், குளிர்ந்த சாரலையும், கயங்களையும், தடாகங்களையும், பளிக்கறைகளையும் தேடி ஆராய்ந்து, மூழ்கினவர்களுடைய பிறவிப் பிணியின் வேரையறுத்துத் துணிக்கிறதும், நீர்ச்சுழி தோறும் இரத்தினங்கள் கொழிக்கின்றதுமான அந்தப் பெண்ணை நதியின் கரையிலேயே அன்றைய தினம் தங்கியிருந்தார்கள்; மறுநாள் ஆற்றைத் தாண்டி, காடுகள் மலைகளெல்லாவற்றையும் கடந்து, ஒரு நாடு வந்து சேர்ந்தார்கள். அங்கே இருக்கிற சிங்காரங்களெல்லாம் பார்த்து, அந்த நாடு கடந்து, **உசனவன்** எனச் சொல்லும் பெயரினையுடைய சுக்கிரன் பிறந்த விதர்ப்ப தேசம் போய்ச் சேர்ந்து, மார்பிலே பூணூலானது பிரகாசிக்கும்படி கையிலே தர்ப்பை தாங்கி இருடிகள் போல வேடம் தரித்துக்கொண்டு சீதையை எங்கும் தேடிப்பார்த்து, அங்கிருந்து சிந்து தேசம் வந்து, அதை விட்டுப் புறப்பட்டுத் தத்துவங்களையறிந்த மகா இருடிகள் வாசஞ்செய்யும்படியான தண்டகாரணியம் வந்தார்கள். அந்தத் தண்டகாரணியமெல்லாம் தேடி ஆராய்ச்சி செய்து முண்டகத் துறைக்கு வந்து சேர்ந்தார்கள். அங்குள்ள தடாகங்களிலே சர்வதா தேவரம்பைகள் வந்து ஸ்நானஞ்செய்கிறபடியினால், அத்தடாக ஜலமெல்லாம் அவர்களுடைய ஸ்தனங்களில் தரித்திருக்கிற சந்தன கதம்பங்களும், கூந்தலில் தடவிய மயிர்ச்சாந்தும் கலந்து பரிமளிக்கிறதனால் அதனிடத்திலுள்ள மீன்களினுடைய புலால் நாற்றம் மாறிப்போய்விடுகிறது. அதனாலங்கே வாசமாயிருக்கும் பட்சிகளெல்லாம் அம்மச்சங்களைப் பட்சிக்கிறதில்லை. மத யானைகள் அனேகமாய் வந்து அவைகளில் மூழ்கி விளையாடுகிறதும், விஞ்சைய ஸ்திரீகளும் புருஷர்களும் கோலாகலமாய் ஆடுவதும், கமுகமரத்தில் ஊஞ்சல் இட்டு ஸ்திரீகளே ஆடுவதும், இவ்விதமான பலபலவாகிய சிங்காரங்கள் உண்டாயின. அம்முண்டகத் துறையெல்லாம் தேடிப் பிராட்டி

யைக் காணுமல் மனம் நோகும்படி அதை விட்டுப் புறப்பட்டுத் திரிவிக்கிரம சொரூபமாய் உலகத்தையளந்த நாராயணனுடைய திருவடியினின்றும் கங்கை இழிவதுபோலத் தாவள்யமாய்க் காணப்படுகின்ற பாண்டு பர்வதத்தைக் கண்டு, ஆகாயத்தையளாவிய அதன் சிகரத்திலே ஏறினுர்கள். இருளை நீக்கி வானத்திலெழுந்த சந்திரனுக்கு மருட்சியையுண்டாகும்படி தவள நிறமாய்ப் பிரகாசித்தலால் கிருபையில்லாத இராவணனை முன்னுளில் அழுத்திக்கொண்டிருந்த கைலாச பர்வதம்போன்று இருக்கிற அம்மலையினிடத்திலும் தேடிப் பார்த்து ஜானகியைக் காணுதவர்களானுர்கள். அப்போது வானரர்கள் கிலேசப்பட்டு அதை விட்டு நீங்கி, இராட்சதனுல் வஞ்சிக்கப்பட்டுப் போகும் பொழுது பிராட்டியினுடைய கூந்தலினின்றும் சோர்ந்து பூமியிற் சேர்ந்த மலர்மாலை போலக் காட்சியளிக்கும் கோதாவரி நதியினிடத்தில் வந்து சேர்ந்தார்கள். அலையெழுந்து இறைந்து விழுந்து முத்துகளை ஒத்த நீர்த்துளிகளைச் சிந்தியோடுகிற அம்மகாநதியானது, பூமியான தாயானவள் தன்னுடைய மகளான சீதையினுடைய துயரத்தை நினைத்துக்கொண்டு அழுகிறது போல இருந்தது. பின்னும் அனேக இரத்தினங்களையும் சொர்ணங்களையும் வீசிப் பிரகாசிக்கின்ற அந்நதியானது, ஜடாயு இராவணன்மேல் போய் விழுந்து அவனுடைய மார்பிலிருந்து பறித்தெறிந்த இரத்தின ஆரம் கிடக்கிறது போலவுமிருந்தது. அவ்விதமான கோதாவிரி நதித் துறைகளிலெல்லாம் தேடிப் பார்த்து லோகமாதாவைக் காணுதவர்களாய், அதை விட்டுத் தீவினைகளை நிவர்த்தி செய்கின்ற சுவணத் துறை வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்தில் எங்கும் தேடிப் பார்த்துக் குலிந்த தேசத்திற்கு வந்து, அவ்விடத்திலும் தேடிப் பார்த்து, அதை விட்டு, எழுவகைப்பட்ட கொங்கணங்களிலும் தேடிப் பார்த்து, அவற்றைக் கடந்து நெய்தனிலங்களெல்லாவற்றையும் தாண்டி,சந்திரமண்டலமட்டும் உயர்ந்து தேவர்களும் நமஸ்காரஞ் செய்யும்படியாய்ப் பிரகாசித்துக்

கொண்டிராநின்ற அருந்ததி பர்வதத்தின் சமீபத்தில் வந்தார்கள். அவ்விடத்திலும் சீதையைத் தேடிப் பார்த்துங் காணுமல், அப்பால் போய், இடைப்பெண்கள் மலைமேலிராநின்ற வேடப் பெண்களிடத்தில் தயிரைக்கொடுத்து மலைத்தேனை வாங்கிக்கொள்கின்ற சிறப்பினையுடைய மரகத பர்வதமெல்லாம் தேடிப் பார்த்து, அவ்விடத்திலும் ஜானகியைக் காணுமல், அப்பால் நடந்து, பூமிக்குத் திலகமான திருவேங்கட பர்வதம் வந்து சேர்ந்தார்கள்.

அவ்விடத்திலுள்ள கோனேரித் தீர்த்தத்தில் முனீஸ்வரர்களும், வைதிகர்களும், வினைகளெல்லாவற்றையும் ஒழித்த மெய்ஞ்ஞானிகளும், சகலமான தேவர்களும், அவர்களுடைய நாயகிமார்களும், சித்தர்களனைவரும் அனவரதமும் வந்து ஸ்நானஞ் செய்வார்கள். அது ஐவகைப்பட்ட இந்திரிய சேஷ்டைகளும், காமமும், மன்மதனுடைய பாணமும் ஒழியும்படி அனேக தேவர்கள் தவம் செய்கின்றதும், சக்கராயுதத்தை வலக் கரத்திலேந்திய கார்மேகத்தைப் போலும் கரிய திருமேனியையுடைய பரந்தாமன் திருவடியைத் தாங்கியதுமாகும். அத்திருவேங்கட பர்வதத்திலுள்ள மிருகங்களும் பரமபதமடையுமாயின், திருவேங்கடத்தானை மனத்திஞல் தியானித்து, வாக்கிஞல் தோத்திரஞ்செய்து, தலையிஞல் வணங்குகின்ற நன்னெறியினையுடைய பெரியோர்களுக்கு அம்மோக்ஷம் சித்திக்காமற்போகுமா? அப்படிப்பட்ட திருமலையினிடத்தில் போய் அவ்விடத்திலிருந்து அருமையான தவம் செய்கின்றவர்களைத் தரிசித்து, திருவேங்கடநாதனைச் சதாகாலமுஞ் சேவித்துக்கொண்டிருக்கும் பாகவதர்களுடைய திருவடிகளுக்குத் தாளும் தடக்கையும் கூப்பித் தண்டம் சமர்ப்பித்து, அனுமன் அங்கதன் சாம்பவந்தர் முதலானவர் எல்லாரும் அங்கே பிராட்டியைத் தேடிப் பார்த்து, அதைக் கடந்து, வேதப் பிராமணர்களைப் போல எஞ்ஞோபவீதம் - தர்ப்பை - மௌஞ்சி - மான்தோல் - துளபமாலை முதலானவைகள் தரித்து, துவாதச

ஊர்த்துவ புண்டரமிட்டுக்கொண்டு, தண்டக நாட்டிற்கு வந்தார்கள்.

அந்த நாட்டிலுள்ள தென்னமரத்தினுடைய இளம் பாளையைப் பார்த்து நாரையென்று நினைத்துச் சேற்கெண்டைகள் நடுங்கியோடுவதும், செவ்வல்லி அரும்பினைச் சாரைப் பாம்பென்று நினைத்துத் தேரைகள் வாய் விட்டுக் கதறுவதும், பள்ள ஸ்திரீகள் சங்குகள் ஈன்ற முத்துகளை யெடுத்துப் பார்த்து நாரையின் பொரியாத முட்டையென்று நினைத்து ஆமை முதுகின்மேல் உடைக்கிறதும், கடுவன் குரங்குகள் பூமியைத் தோண்டி வேர்ப் பலாச்சுளைகளைப் பீறி எடுத்து அங்குள்ள தேனில் தோய்த்து விழுங்குகிறதும், அனேக மலைகளும் காடுகளும் கிராமங்களும் பல வகை விருட்சங்களும் நெருங்கியுள்ள சோலைகளும், செந்நெல் - கமுகு - வாழை - கரும்பு முதலானவைகள் நிறைந்திருக்கிறதும், அன்னங்கள் - மயில்கள் - கொக்குகளிருக்கிறதும், அவ்விடத்திலுள்ளவர்கள் வடகலை தென்கலைகளுக்கு உரியவர்களாய்த் தர்மம்-தானம் - தியாகம் முதலானவைகளையும் மறவாமல் துஷ்டநிக்கிரகஞ் செய்து இல்வாழ்க்கை தவருமல் இருக்கிறதுமான பல வகை வளப்பங்களையும் பார்த்து, அத் தண்டகநாட்டைத் தாண்டிக் காவேரி சூழ்ந்த சோழநாட்டிற்கு வந்தார்கள்.

அந்நாட்டில் செந்நெற்பயிரும் - கரும்புகளும் - கமுக மரங்களும் எங்கும் நெருங்கிப் போகிறதற்குத் தடையாயிருக்கும் மார்க்கத்தை அருமையாய்க் கடந்து, சோலைகளிலிருக்கின்ற புட்பங்கள் தேனை மிகுதியுஞ் சொரிகிறபடியினுலே அதனையறியாமல் ஜலப்பிரவாகமானது வந்ததென்று பயந்து குரங்குகளெல்லாம் மரங்களின்மேலேறிப் பூமியில் இறங்காதிருக்கின்றதும், ஆலையாடின கருப்பஞ்சாறு நிறைந்த கூபங்களை மச்சமிருக்கும் குட்டைகளென்று எண்ணி நீர்க்காக்கைகளானவை அவைகளிலே மூழ்கி மூழ்கி எழுகின்றதும், தாழம்பூவின் வாசனை மாங்கனிக்கு உண்டாயிருக்கின்

றதும், செங்கழுநீரினுடைய வாசனை சேற்றுக்கு உண்டா யிருக்கின்றதும், மற்றும் இவ்விதமான அனேக சிங்காரங் களையும் பார்த்து, அதிசயித்துத் தேங்காய்களிடறவும், தேன் களில் கால் வழுக்கவும் நடந்து, அச்சோழ தேசத்தைத் தாண்டி, அப்பால் சேர நாட்டிற்குப்போய், அவ்விடத்திலும் தேடிப்பார்த்துச் சீதையைக் காணுமல், அதைக்கடந்து, தமிழ் நாடான பாண்டி நாட்டில் வந்து சேர்ந்தார்கள்.

அப்பாண்டி நாடானது முத்தையும், இயல் - இசை - நாடகமென்னும் முத்தமிழான மூவகை அமிர்தங்களையும் கொடுக்கிறபடியினுலே, ஒரு வகை அமிர்தத்தை மாத்திரம் கொடுக்கும்படியான தேவலோகத்தை அதற்குச் சமான மாகுமென்று சொல்லலாமா? அப்படிப்பட்ட நாட்டு வளப் பங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு, அந்த நாடெங்கும் பிராட்டியைத் தேடிக் காணுமல் சோர்ந்து, நிர்ஜீவர்களாய் நடந்து, திக்கஜம்போல இருக்கும் மகேந்திர பர்வதத்தினிடத் தில் வந்து சேர்ந்தார்கள்.

## 16. சம்பாதிப் படலம்

அங்கே நீருண்ட மேகத்தைப்போல முழங்கி, அலையான கையை மேலே தூக்கி, ஜானகியானவள் இலங்கையிலிருக் கின்ருளென்று சொல்லி எதிரே வந்து வாருங்களென்று அழைக்கிறதற்கு ஒப்பாயிருக்கின்ற தென்சமுத்திரத்தைக் கண்டார்கள். அப்போது முன்பு, “நீங்கள் பிரிந்து எட்டுத் திக்கிலும் பரவிப் பார்த்துக்கொண்டுபோய், மஹேந்திர பர்வ தத்தில் வந்து எங்களுடனே கூடுங்கள்,” என்று அங்கதன் முதலானவர்களால் அனுப்புவிக்கப்பட்ட வானர சேனையும், ஒரு பெரிய சமுத்திரம் வந்தது போல அங்கே வந்து கூடி யது. எல்லாரும் அவ்விடத்தில் வருத்தமில்லாமல் வந்தும் பிராட்டியைக் காணுதபடியினுலே, அப்பால் செய்யத்தக்கது

ஒன்றும் அறியாதவர்களாய்க் கிலேசித்து நாக்குழற, "நம்முடைய ராஜா நமக்குச் சொன்ன நாளும் கழிந்து போய் விட்டது! நாம் நாடி வந்த காரியத்தை இன்னம் முடிக்கவில்லை. பிராட்டியாரைக் காணுமற்போனுல், ஸ்ரீராமருக்குப் பிராணனிராது. நம்முடைய ராஜாவின் ஆக்கினையினுலே அவர் சொன்ன இடமெல்லாம் தேடினேம். இனி நம்மால் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை. ஆதலால், அருமையாகிய தவம் செய்வோமா? விஷமாகிலுங் தின்று இறந்து போவோமா? எப்படியாவதிந்த இரண்டு விதத்தில் ஒரு விதம் அவசியஞ் செய்து தீர்வோம்! ஆகையால், பிராணத் தியாகம் பண்ணிக்கொள்ளுகிறதே நன்மை," என்று இவ்வண்ணம் சொல்லிக்கொண்டு, கடலின் பக்கத்திலே அனேக மகமேருகிரி கூடியிருக்கிறது போலக் கூடியிருந்து விசாரப்படுகின்ற வானரவீரர்களுக்கு இளவரசாகிய அங்கதன் துயரத்துடனே, "வீரர்களே, நாம் அந்தப் புருஷோத்தமரிடம், 'உலகமெல்லாம் தேடிப் பார்த்து உம்முடைய தேவியாரைக் கொண்டுவந்து விடுகிறேம்,' என்று வாய்ப்பெருமையாகச் சொன்னேம்; சொன்னதை அந்தப்படிச் செய்யாமற் போனேம். சீக்கிரமாய்ப் போய் நடந்த சமாசாரத்தையுஞ் சொல்லவில்லை. இனிமேலாகிலும் நாம் எண்ணி வந்த காரியம் கைகூடி வருமென்று எண்ணுகிறதற்குத் தைரியமுமில்லை. இப்படியெல்லாம் வந்து நேர்ந்தபடியினுலே, இனி ஜீவனை விட்டுவிடாமலிருந்தால், சுவாமிக்கு நாம் அடிமை என்பதில் என்ன இருக்கின்றது! எங்கள் பிதாவும் கோபித்துக்கொள்ளுவார். ஸ்ரீராமரும் திருவுளம் வருந்துவார். அதை என் கண்ணினுலே பார்க்கமாட்டேன்! நான் பிராணனை விட்டுவிடுகிறேன்! நீங்கள் போய் இந்தச் செய்தியைச் சொல்லுங்கள்," என்று சொன்னுன்.

இவ்விதம் அங்கதன் சொல்லவே, ஜாம்ப வந்தரானவர் அவனை நோக்கி, "விஜயலட்சுமி வாசஞ்செய்கின்ற தோளினையுடைய அங்கதனே, நன்ருகச் சொன்னுய்! நீ

இறந்து போனல், நாங்களெல்லாம் இவ்விடத்திலிருந்து அழுவோமா, எங்கள் அன்பெல்லாம் பாழாய்ப்போகச் சுவாமியினிடத்திலும் உன் பிதாவினிடத்திலும் போய்த் தொழுவோமா? மீண்டு போய்ச் சொல்லுகிறதற்குத்தான் விசேஷமான சமாசாரம் என்ன இருக்கின்றது? ஆகையால், நாங்களும் மாண்டுபோகிறதே சரியென்று உறுதிப்படுத்திக் கொண்டோம். நீயோ, எங்கள் ராஜாவின் புத்திர சிகாமணி யாயும் எங்களுக்கெல்லாம் இளவரசாயுமிருக்கிறவனுகை யால், நீ இப்படிச் செய்கிறது தர்மமன்று. நீ உயிருடனே சுகமாய்ப் போய்ச் செய்தி சொல்லலாம்,'' என்று சொல் லினர்.

''ஐயா, நீங்களெல்லாம் இறந்து போக நான் மாத்திரம் உயிருடனே போய்ச் சேர்வேனேயாகில், அது எனக்குத் தான் நன்மையாயிருக்குமா? இதற்கு நான் சம்மதித்தாலும் உலகம் சம்மதிக்குமா? 'பெரியவர்கள் சொல்லும் பழிச் சொல்லுக்கு அஞ்சிக் கூடப்போன தன்னுயிருக்கு ஒப்பான வர்களெல்லாம் பிராணனே மாய்த்துக்கொள்ளத் தான் மாத்திரம் பிராணனுடனே வந்து சேர்ந்தான்!' என்று உல கத்திலுள்ளவர்கள் சொல்லிக்கொள்ளுகிற வசைமொழிக்கு முன்னே, நான் பிராணத் தியாகம் பண்ணிக்கொண்டு ஸ்வர்க் கலோகம் போய்ச் சேர்வேன். நானிவ்விடத்திலே மாண்டு போன செய்தி என் தாய்க்கும் தந்தைக்கும் எப்படியும் தெரியும்படி யாராவது சொல்லவுங்கூடும். இதைக் கேட் டால் அவர்கள் உடனே மாண்டு போகவுங்கூடும். அதைக் கண்டு ஸ்ரீராம லட்சுமணராகிய இருவரும் இறந்து போவ தும் சித்தம். இந்தச் செய்தி அயோத்திக்குப் போனல் பர தாழ்வானும், சத்துருக்கின ஆழ்வானும், பெற்ற தாய்மார் களும், அந்நகரத்தார் சகலரும் பிராணனுடனுமிருப்பார் களா? சத்தியமாக ஒருமிக்க மாண்டுபோவார்கள்! ஜானகி யார் என்று உலகத்தாராலே சொல்லப்பட்ட மகத்தாகிய தவத்திணையுடைய இரத்தின தீபத்தையொத்த ஒரு பாக்கிய

வதியாராலே, உலகத்திலுள்ள எல்லாருக்கும் கரை தெரியாத துயரம் வந்து விளைந்ததே!'' என்று சொல்லி அங்கதன் கோவென்று அழுதான்.

இப்படி அதைரியத்துடனே துக்கித்துத் தைரிய புருஷனுகிய இளஞ்சிங்கத்தையொத்த புஜபலத்தையுடைய அங்கதன் சகிக்காமல் சொன்ன சொல்லைத் தடுக்கப்படாத பெருநெருப்பை மூட்டினது போல மனமுருகக்கேட்டு, அவன் முகத்தைப் பார்த்து ஜாம்பவந்தர், "ஐயா, நீயும் உன்னுடைய பிதாவுமாகிய இருவர் தவிர, உங்கள் வமிசத்திற்கு வேறே புத்திரன் இல்லை. அதை யோசித்து நான் சொன்னேன். அல்லவென்று உங்களுக்கு அபாயமானுல், அப்பால் என்ன காரியம் கைகூடிவரப் போகின்றது? ஆதலால், நீ துயரத்தை விட்டு, அவ்விடத்திற்குப் போய், பிராட்டியாரைக் காணுததையுஞ் சொல்லி, எங்கள் மரணத்தையும் தெரியப்படுத்து. இனிச் சோகத்தை அடைய வேண்டா,'' என்று சொல்லினர்.

இவ்வார்த்தை கேட்ட அனுமன் அவர்களைப் பார்த்து, "ஏன் இத்தனை அதைரியப்படுகிறீர்கள்? இந்தத் திரிபுவனங்களிலும் நாம் ஒரு பக்கத்திலாவது செவ்வையாகத் தேடிப்பார்க்கவில்லை. மிகுந்த விவேகத்தையுடைய நீங்கள் வஞ்சகர்களைப் போலவும், வீரமில்லாதவர்களைப் போலவும் இப்படிப் பேசுவதென்ன? பாதாளத்திலும், தேவலோகத்திலும், மகமேரு பர்வதத்திலும், மற்றுமுள்ள அண்டங்களிலும் தேடிப்பார்த்து அந்த மகாலட்சுமியைக் கண்டோமேயானுல், நம்முடைய ராஜாவானவர் சொன்ன தவணையில் ஏன் வரவில்லையென்று கேட்பாரா? அவருக்குக் காரியானுகூலமாகிறதொன்றே பிரதானமாகையால், நாம் இன்னமும் தேடத்தக்க இடமெல்லாம் தேடிப்பார்க்கிறதே நல்லது. அப்படித் தேடியும் அகப்படாவிட்டால், முடிவிலே அந்தச் சீதாபிராட்டியார் நிமித்தமாகப் போய் யுத்தத்தில் பிராணனை விட்ட ஜடாயுவைப்போல நாமும் இறந்து போவதே பெருமை.

அப்படிச் செய்யாமல் முந்தி உயிர் விடுவது பழியாகும்,'' என்று சொன்னான்.

இந்தப் பிரகாரம் அனுமன் சொன்ன சொல்லை அங்கே உயர்ந்த மலையின்மேலிருந்த அந்த ஜடாயுவின் தமையனாகிய *சம்பாதி* என்னும் பெயரினையுடைய கழுகின் கூட்டத்திற்கு ராஜாவானவர், சத்தியசந்தராகிய தம் தம்பியான ஜடாயு மாண்டு போன செய்தி காதில் விழக் கேட்டு, "முறை தவறாத என் தம்பி இறந்து போனானா!'' என்று தம் நெஞ்சம் பறையடிக்க, சரீரம் பதைக்கத் தேவேந்திரனானவன் வச்சிராயுதத்தைக் கொண்டு சேதிக்காததற்கு முன்னே சிறகு அறுபடாதிருந்த ஒரு மலை வருகிறது போல இவர்களுக்குச் சமீபத்தில் வரத்தொடங்கினார்; "பராக்கிரமசாலியாகிய என் தம்பியைச் சத்துருக்கள் அஸ்திரத்தால் கொன்றதைக் குறித்து உலகத்தார் துக்கப்படுகிறது போலக் காண்கின்றது!'' என்று நினைத்துக் கண்ணீரானது மலையருவிபோலப் பெருகி வழிய அழுகின்ற கண்ணையுடையவராகியும், மரங்கள் மலைகளெல்லாம் பொடியாகப் பிரசண்ட மாருதம் போலப் பூமியினின்றும் பெயர்ந்தெழுந்த வெள்ளி மலைக்குச் சமானமாகிய மேனியையுடையவராகியும் வந்தார். அப்படி வந்த சம்பாதியைக்கண்டு அங்கிருந்த வானரவீரர்களெல்லாம் பயந்து ஓடினார்கள். அத்தருணத்தில் எங்களையனாகிய அனுமன் அவ்விடத்திலேயே நின்றுகொண்டு, "அடா வஞ்சகனே, நீ இந்தக் கள்ளமாகிய ராக்ஷஸ ரூபத்தையெடுத்துக்கொண்டு வந்தாயே! பிழைப்பாயா?'' என்று சொல்லிக் கண்கள் நெருப்பைச் சொரிய உற்றுப் பார்க்கும்போது, மனத்திலே கோபமில்லாமல் அதிக துக்கத்தையும் சோகத்தையுமுடையவராகியும், விழிகளிலிருந்து நீர் பெருகும்படி சங்கை படுதற்குரிய குற்றமாகிய குறியொன்றுமில்லாதவராகியுமிருக்கின்ற அந்தச் சம்பாதியின் தன்மையானது சமீபத்தில் அவர் வந்தபோது செம்மையாய் விளங்கியது. அதைக் கண்டுகொண்டு அதி நுட்பமாகிய சாஸ்

திரக் கேள்வியையுடைய அனுமனானவன் தன் வாயைத் திறந்து யாதொரு சொல்லுஞ் சொல்லாததற்கு முன்னே, "கொல்லவியலாத ஜடாயுவைக் கொன்றவர் யாரையா? சொல்லுங்கள்," என்று சம்பாதி கேட்டார். அப்போது அனுமன், "நீ யார்? உண்மையாக உன்னைத் தெரியும்படி எனக்கு முன்னே சொன்னால், பின்பு நீ கேட்டதைக் குறித்து நான் சொல்லுகிறேன்," என்று சொன்னான். அது கேட்டுச் சம்பாதியானவர் அவனைப் பார்த்து, "ஐயா, ஜடாயு என்பவன் எனக்குத் தம்பி; அந்தத் துணைவனையிழந்த பேதையாகிய நான், அவனுக்குத் தமையன். என் பெயர் சம்பாதி," என்று சொன்னார். அவர் சொன்ன சொல்லைக் கேட்ட அனுமனானவன் துக்க சமுத்திரத்திலே மூழ்கி, அதன் கரையேறின்வனாகி, "உம்முடைய தம்பியாகிய ஜடாயுவை இராவணன் வாளினாற்கொன்றான்," என்று சொன்னான். அந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் சம்பாதி இடி விழுந்து முறிந்த பர்வதம் போலப் பூமியிலே விழுந்து மூர்ச்சித்து, பெருமூச்செறிந்து விம்மி, உயிர் பதைக்க அழத் தொடங்கினார்:

"என் தம்பீ, நீயும் நானும் பாலியத்திலே வேகத்துடனே வானத்தில் உயர்வாய்ப் பறந்த போது, சூரியனுடைய கிரணத்தின் உஷ்ணத்தினால் சிறகு வெந்து உதிர்ந்து போகப் பூமியில் விழுந்து எழுந்திருக்க மாட்டாமல் ஒளித்துக் கொண்டு கிடக்கின்ற நானல்லவோ இறக்க வேண்டும்! அந்தச் சூரியனுடைய வெப்பத்திற்கு இளையாமல் சகித்திருந்த நீ, முன்னே இறந்து போனது என்ன மாயமோ! பிரமதேவனிருக்கிறான். பூமியும் ஆகாயமுமிருக்கின்றன. தர்மமும் இருக்கின்றது. கற்பமுமிருக்கின்றதே! நீ மாத்திரம் இராமற்போனாயே! இது எத்தன்மையோ! பூர்வம் நீயும் நானும் உடனாக இரண்டு முட்டையினின்று உதிக்கின்ற பருவம் வந்து பிறந்து ஒன்றாய் வளர்ந்திருந்தோம். இப்போது நான் பிரிந்து நிற்க, நீ மட்டும் தனியே போனது சகோதர

உரிமையாகுமா? கருடனுக்கும் மேலாகிய பராக்கிரம முடையவனே, அந்த இராட்சதனுகிய இராவணன் மூன்று லோகங்களையும் ஜயித்தவனுனாலும், உன் முன்னும் எதிர்த்து நின்ருனு? உன்னையுங் கொன்ருனு? இது என்ன ஆச்சரிய மடா!'' என்று சொல்லிச் சொல்லி ஏங்கி இரங்கி, அதிக துக்காக்கிரந்தராய்த் தாமும் இறந்துபோக எத்தனித்தார்.

அப்போது அந்தச் சம்பாதியைப் பார்த்து அனுமன், "ஐயா, ஸ்ரீராமருடைய காரியநிமித்தமாய் இறந்த அந்த மகானுபாவருடைய பாக்கியமே பாக்கியம்!'' என்று சொல்லித் தேற்றத் தேறி, அவர் அனுமனை நோக்கி, எமனுக்குச் சமானமாய்க் கொலை செய்கின்ற வாளையுடைய அரக்கனுடனே எதிர்த்து என் தம்பி சண்டை செய்ததற்கு ஏது என்ன? சொல்லுமையா,'' என்று கேட்க, வாயுகுமாரனுகிய அனுமன், "எங்கள் நாயகராகிய ஸ்ரீ ராகவருடைய தேவியும் செங்கோலைச் செலுத்துகின்ற ஜனக மகா ராஜனுடைய குமாரியுமாகிய சீதாபிராட்டி தன் பிராண நாயகரை விட்டுப் பிரியும்படி கொடுங்கோலையுடைய வஞ்சகனுகிய இராவணன் மாயை விளைத்து எடுத்துக்கொண்டு போகும் போது, உம்முடைய தம்பியாரானவர்கண்டு தர்மந் தவருதவராகி, அதிக கோபத்துடன் எதிரே ஓடி வந்து நின்று, 'அடா பாவி! லோக மாதாவை வைத்துவிட்டு அப்பாலே போ!' என்று தகைந்து, அவன் ஏறிய தேரைச் சிதைத்து, அவனுடைய தோள்களையும் சின்னபின்னமாகக் கீறி, அழித்து, மூர்ச்சிக்கும்படி அவனை அபஜயப்படுத்தினுர். அவன் பயந்து, பின்பு திடசித்தனுகி, மகாதேவருடைய வாளினுல் வெட்டினுன். அதனுல் சத்தியசந்தராகிய உம் தம்பியார் விழுந்தார்,'' என்று சொல்லினன்.

இதைக் கேட்டுச் சம்பாதி தெளிந்து, "என் தம்பி, ஸ்ரீ ராமபிரானுடைய விஷயத்தில் உயிரைக் கொடுத்தானே! அது நல்ல காரியம்! நல்ல காரியம்!'' என்று கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருகும்படி சந்தோஷப்பட்டவராகி, "என்

தம்பி அந்தப் பகவானுடைய தேவியார் நிமித்தம் இறந்து பூமியில் எந்நாளும் புகழுடம்புடனே கூடி உஜ்ஜீவித்திருக்கிருனேயல்லாமல், அவனை மெய்யாய் இறந்தவனென்று சொல்லக்கூடாது. தர்மஸ்வரூபராகிய தாசரதியாருடனே என் தம்பி அன்பாய் உறவு கொண்டாடிப் பிராணனையிழந்து, ஒருவருக்கும் பெறக்கூடாத பேறு பெற்றுனே ! இதைப்பார்க்கிலும் இன்பம் என்ன இருக்கின்றது !'' என்று சொல்லி, மனமுருகித் தம்பியைக் குறித்து ஸ்நானம் முதலானவைகளுஞ்செய்து தீர்ந்த பின்பு, "ஐயன்மீர், கேளுங்கள் : நீங்கள் வந்து என்னை இரட்சித்தீர்களேயல்லாமல், எனக்குத் துன்பத்தைக் கொடுக்கவில்லை. மேலும், என்னுடைய பாவ கர்மத்தைக் கெடுத்து அஞ்ஞானமாகிய இருளைப்போக்கிக் கிருதார்த்தனுகச் செய்தீர்கள். ஆனபடியால், நீங்கள் எல்லீரும் ஸ்ரீ ராமநாம சங்கீர்த்தனம் செய்யுங்கள். அதனுல், எனக்குக் குறைந்து கூழையாயிருக்கிற சிறகு வளரும். இவ்வளவு என்னிடத்தில் தயை கூருங்கள் !'' என்று சொல்ல, அந்த அதிசயமும் பார்ப்போமென்று அனுமன், அங்கதன், ஜாம்பவந்தர் முதலானவர்களும் இரண்டு வெள்ளம் வானர வீரர்களும் அதிக அன்புடனே 'ஸ்ரீ ராமா!' என்று அந்த நீலமேக சாமள ஸ்வரூபரின் திருநாமத்தைச் சொன்னுர்கள். அப்படிச் சொல்லும் போதே முன்னுளிலே தீய்ந்து அனேக நாளாய்க் கட்டையாயிருந்த சிறகு தளிர்த்து வளர்ந்து ஓங்கி, ஆகாயமட்டும் அளாவச் சரீரமுங் குளிர்ந்து, சம்பாதி பராக்கிரம சௌரியவந்தராய் வாளுக்கு உறையுண்டானது போலக் குறைவற்ற உறுப்புண்டாய்ப் பிரகாசித்தார். அப்போது வானரர்களெல்லாம் அந்தச் சம்பாதி வந்ததும் சிறகில்லாமல் உருண்டதும் பார்த்திருந்தவர்களாகையால், உண்மைப் பொருளாகிய இரகுநாயகருடைய திருநாமத்தை உச்சரித்த மாத்திரத்தில் அவருக்குச் சிறகுண்டாகிய மகிமையைக் கண்டு, ஆச்சரியமடைந்து, பயந்து, தேவாதி தேவராகிய ஸ்ரீ ராமரை வாழ்த்திக் கொண்

டாடி, அந்தச் சம்பாதியை நமஸ்கரித்து, "ஐயா, பூர்வத்திலே நடந்த உம்முடைய விருத்தாந்தம் சொல்லும்,'' என்று கேட்க, அவர் சொல்லுகிறார் :

"சம்பாதி ஜடாயுவென்கிற நாங்களிருவரும் ஆதிகாலத்திலே உலகத்தைச் சூழ்ந்த இருளை நீக்குகின்ற சூரியனுடைய இரதத்தை நடத்துகின்ற சாரதியாகிய அருணனுக்குப் பிள்ளைகளாய்ப் பிறந்தவர்கள். கழுகின் கூட்டங்களுக்கெல்லாம் ராஜாவாகி ராஜரிகஞ் செய்துகொண்டிருக்கையில், ஒரு நாள் தெய்வலோகத்தைப் பார்க்க வேண்டுமென்று எங்களுக்கு நினைவு பிறந்து, இருவரும் வானத்திலே உயரப் பறந்தோம். அவ்வண்ணம் பறக்கிற போது சூரிய மண்டலத்திற்குப்போய், சூரியனுடைய தேரைக் கண்டுங் காணுததற்கு முன்னமே அக்கினியையும் தகிக்கின்ற கிரணங்களையுடைய அந்தச் சூரியன் சீறுதலால், முன்னே பறந்துபோன என் தம்பியின் மேனியைச் சூரியனுடைய கிரணுக்கினியானது வெதுப்ப, அவன் என்னைப் பார்த்து, 'அண்ணு, அண்ணு, என்னை இரட்சி! இரட்சி!' என்று சொன்னுன். அப்படிச் சொல்லவே, நான் முன்னே பறந்து, என்னுடைய இரண்டு சிறகையும் விரித்து ஏந்தி, அவனுக்கு அந்த உஷ்ணங் தாக்காமல் மூடிக்கொண்டு வந்தேன். அதனுல், அவன் தன் சிறகு வேகாமல் என் சிறகின் மறைவிலேயே வந்துவிட்டான். என்னுடைய சிறகும் சரீரமும் வெந்து தீய்ந்து நான் இறவாமல் பூமியில் விழுந்தேன். இவ்விதம் விழுந்த என்னை ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற சூரிய பகவான் கண்டு, கிருபையுடையவனுய், 'இனி ஒரு காலத்திலே ஜனக புத்திரியாகிய சீதா பிராட்டியைக் காணுமல் தேடிக்கொண்டு வானர வீரர்கள் வருவார்கள். அவர்கள் உன்னைக் கண்டு இராமஸ்மரணை செய்தால் அப்போது உனக்கு இறகு வளர்ந்து சுகமாய் எழுந்திருப்பாய்,' என்று அனுக்கிரகஞ் செய்தான். நான் சிறகு தீயும்படி விழுந்த போது **லோகசாரங்கர்** என்னும் ரிஷியானவர் வாசம் செய்

கின்ற மலைச்சாரலில் வந்து விழுந்து பெருமூச்சு விட்டு, மனம் பேதித்துச் சரீரமும் சிதைந்து, அதிக வருத்தமுண் டானதால், உயிரோடு கூடியிருப்பதற்குச் சம்மதியில்லாமல் பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ள எத்தனித்த என்னை, அந்த ரிஷியானவர் கண்டு, 'அப்பா, மகாராஜனே, கல்லாத வர்களைப் போல மனக்களிப்பினால் நீ தெய்வலோகத்திற்குப் போக நினைத்து வானத்தில் பறந்து போய்ச் சூரியனுடைய கிரண உஷ்ணத்தினால் சரீரம் வெந்து பூமியில் வந்து விழுந் தாய். இனிச் சில காலம் மாத்திரம் இந்த வருத்தத்துடனே உயிரைக் காப்பாற்ற மாட்டாமல் விட்டுவிடத் துணிந்த தென்ன? இதுவுமொரு ஒழுக்கமா? எப்பொழுதும் செருக் குற்றவர் அழிவது நிச்சயம். ஆனதால், இனிக் கபடனாகிய இராவணன் ஜானகியை எடுத்துப்போய் ஒளித்து வைத்த இடத்தைத் தேடி வருகிற வானரர்கள் ராமஸ்மரணை செய்ய, உனது சிறகு வளர்ந்தோங்கும். இப்படி வீணாகச் சோகப் படாதிரு,' என்று சொன்னார். அதனால், பிராணனை வைத் துக்கொண்டிருந்தேன். என்னுடைய துயரத்தைப் பார்த்து என் தம்பியும் துக்கப்பட்டு இறக்கத் துணிந்தான். அப் போது நான், 'நீயும் இறந்தால் கழுகுகள் ராஜா இல்லாமல் அலைந்துபோம்,' என்று சொல்ல, என் ஆக்கினையை மறுக் கப் பயந்து, அப்படியே அவன் கழுகுகளுக்கு அரசனானான். தேவர்களும் சந்தோஷிக்கத்தக்க உத்தமர்களே, என் பூர் வோத்திரம் இதுவாகும். நீங்கள் வந்த வரலாறென்ன? அதை எனக்குத் தெரியச் சொல்லுங்கள்,'' என்று சம்பாதி கேட்க, அனுமன் முதலானவர்கள், "இராமபத்திரா, இராம சந்திரா, இரகுநந்தனா, தாசரதி, சீதாபதி, கருணாநிதி, ஹர சாப கண்டனா, கோதண்ட தீட்சா குரு, தீன ரட்சகா, மநு குலோத்தமா, சாமளஸ்வரூபி, சத்தியசந்தா, தைத்திய குலாந்தகா, குகபாந்தவா, சுக்கிரீவ மித்திரா,'' என்று ஸ்ரீ ராகவரை ஸ்தோத்திரஞ் செய்து அவரெழுந்தருளியிருக் கின்ற திக்கு நோக்கித் தண்டம் சமர்ப்பித்து, சம்பாதியைப்

பார்த்து, "கேளுமையா, அற்பச் செய்கையினையுடைய பாவியாகிய அந்த இராவணன் சீதா லட்சுமியை எடுத்துக் கொண்டு தெற்குத் திசையில் வந்தானென்று எண்ணித் தேடி வந்தோம்," என்று சொன்னார்கள்.

அது கேட்ட சம்பாதி அவர்களைப் பார்த்து, "அன்பர் களே, இது நல்ல காரியம்! நீங்கள் பயப்படாதிருங்கள்! நானிதைக் குறித்துச் சொல்லுகின்றேன்; கேளுங்கள்: அந்த லோகமாதாவை இராவணன் பூமியுடனே எடுத்துக் கொண்டு போகின்ற போது நான் கண்டேன். இலங்கை யிலேதான் கொண்டு போய்ச் சிறை வைத்திருக்கின்றான். அவ்விடத்திற்குப் போனால், ஜானகியைக் காண்பீர்கள். அன்னை இன்னமும் இருக்கின்றாள். இலங்கையோ, எழு நூறு யோசனை விஸ்தீரணமுள்ளது. அந்தப் பட்டணத்தை எமன்கூடக் கண்ணை விழித்துப் பார்க்கப் பயப்படுவான். அந்த நீசனாகிய இராட்சதனுடைய கோபாக்கினியானது வடவாமுகாக்கினியையும் தகித்துவிடும்! ஆதலால், குற்ற மற்ற குணத்தையுடையவர்களே, நீங்கள் எவ்விதத்தில் அந்த இலங்கைக்குப் போவீர்கள்? சதுர்முகப் பிரமாவி னாலும், பார்வதி சமேதனாகிய சிவனாலும், திருப்பாற்கட லிலே சேஷசயனத்தில் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ மகா விஷ்ணுவினாலும், இந்தக் கடலைக் கடக்கின்றதோ அருமை! அதனால் உங்களுக்கு இனி வருவதைக் குறித்துத் தீர்க்கா லோசனை செய்து பார்த்துக்கொண்டு போங்கள். சிரஞ்சீவி யாகிய அனுமன் முதலான வானர வீரர்களே, 'எல்லாரும் போவோம்,' என்ற யோசனையை விட்டுவிடுங்கள். அந்த இலங்கை அப்படி எளிதானதன்று. சமர்த்துண்டானால், ஒருவர் மாத்திரம் மறைந்து போய், அவ்விடத்திலே சேர்ந்து, பிராட்டியைக் கண்டு, சுவாமி சொன்ன செய்திகளைச் சொல்லித் தைரியப்படுத்தித் துன்பத்தை நீக்கித் திரும் பலாம். அல்லவென்றால், என் சொல்லை நீங்கள் உண்மை யாகத் தெளிந்து இங்கிருந்து மீண்டும் சுவாமியினிடத்திற்

போய்ச் சொல்லுங்கள். என்னுடைய தம்பி இறந்து போன தனுலும், இனி அந்தக் கழுகின் கூட்டங்களுக்கெல்லாம் தலைவராயிருந்து காக்கின்றவர் இல்லாததனுலும், அவைக ளிருப்பிடத்தை விட்டு அலைந்து போய்விடும். ஆதலால், அவைகளைப் பாதுகாப்பதற்குத் துரிதமாய்ப் போகவேண்டி யிருக்கின்றது. நீங்கள் மிகவும் தெரிந்தவர்களானபடியி ஞலே நான் சொல்லிய இரண்டு காரியத்தையும் செவ்வை யாக எண்ணிப் பார்த்து, சரியானதைச் செய்யுங்கள்,'' என்று சொல்லி மேலே எழும்பி, ஆகாயத்தையெல்லாம் தம் சிறகு மறைக்கும்படி பறந்து போனுர்.

## 17. மயேந்திரப் படலம்

அனுமர் முதலானவர்கள் ஒருவரையொருவர் பார்த்து யோசிக்கத் தலைப்பட்டார்கள். ஆஞ்சநேயர் மற்றவர்களை நோக்கி, "யாவராலும் செய்யக் கூடாத காரியங்களையெல் லாம் எளிமையாகச் செய்து முடிக்கின்ற வல்லமையுடைய வர்களே, சம்பாதியானவர் பொய் சொல்லுகிறவரல்லர். அவர் சொன்ன சொல்லால் சகல சமாசாரத்தையும் கரதலா மலகம் போலக் கண்டோம்; நாம் பிழைக்கத்தக்க மார்க்கத் தையும் அறிந்துகொண்டோம். ஆகையால், செய்யத் தக்க காரியங்களையெல்லாம் பகிஷ்காரமாக யோசித்துச் செய்யுங்கள். சூரிய குமாரராகிய சுக்கிரீவ மகா ராஜாவை யும், கோதண்டபாணியாகிய ஸ்ரீ ராமரையும் போய் வணங்கி நடந்த சமாசாரத்தைச் சொல்லலாம். மேலும், முழுதும் தேடிப் பார்க்கிறதே எந்தவிதத்திலும் சிறந்ததாகும். ஆகை யால், இந்தச் சமுத்திரத்தைத் தாண்டுகிறவர் யார்?'' என்று உசாவினுர். அப்போது அவரவர்கள் தங்கள் தங் கள் பராக்கிரமத்தைச் சொல்லுகின்ருர்கள்: நீலன் முதலாகிய படைத் தலைவர்களெல்லாம், "சமுத்திரத்தைக் கடக்கிற

தற்கு எங்களால் ஆகாது! ஆகாது!'' என்று உள்ளபடி சொல்லிவிட்டார்கள். அத்தருணத்தில் வாலி புத்திரனாகிய அங்கதன், "நானிந்தக் கடலைத் தாண்டி அக்கரைக்குப் போவேன். ஆனால், அங்கிருந்து திரும்பி வர எனக்கு நிர்வாக மிராது,'' என்று சொன்னான். ஜாம்பவந்தர் யோசித்து, "நான் முன்னே இவைகளையெல்லாம் அலட்சியமாகத் தாண்டிக் கொண்டிருந்தேன். தேவநாயகனாகிய ஸ்ரீமந்நாராயணன் திரிவிக்கிரம ஸ்வரூபங் கொண்டு பூமியை அளந்த போது இந்தப் பூமியின் எட்டுத் திக்கிலும் பிரதக்ஷிணமாய் ஓடி ஓடிப் பறையறைந்து வந்தேன். அவ்விதம் வருகிற போது மகா மேருவானது என் கால்களில் மோத, அதனால் காலூனமாய் நொந்திருக்கிறேன். ஆகையால், நான் இப்போது கடலைக் கடந்து இலங்கைக் கோட்டை மதிலைத் தாண்டி அந்நகரத் திற்குள் பிரவேசித்துக் கொடியவர்களாகிய இராட்சதர்கள் அஞ்சத்தக்க சௌரியத்துடனே சீதா பிராட்டியாருடைய சமாசாரத்தை அறிந்துவரத் தக்க சத்தி எனக்கில்லை,'' என்று சொன்னார். அப்படிச் சொன்ன ஜாம்பவந்தர் மறு படியும் அங்கதனைப் பார்த்து, "அப்பா, அங்கதா, நாம் இப் படி மகத்தாகிய வருத்தத்தை அனுபவித்துக்கொண்டு இனி யாரைத்தான் போங்கள் என்று சொல்லுவோம்? இனி அப்படி நினைப்பது அறிவில்லாமையாகும். அது கீர்த்தியு மன்று. நம்முடைய பெயரை நிலை நிறுத்திப் புகழடையத் தக்க யோக்கியர் யார் என்றால், இவ்வளவுக்கு நம்மைக் கிருதார்த்தர்களாக்கினபடியினாலும், எந்தக் காரியங்களை யும் நிச்சயித்து அறிந்து சோர்வில்லாமல் முடிக்கத்தக்க சாமர்த்தியமுண்டாயிருக்கிறபடியினாலும், இந்த அனுமரைத் தவிர வேறொருவரும் இல்லை,'' என்று சொல்லிப் பின்பு அனுமனைப் பார்த்துப் பிரம புத்திரராகிய ஜாம்பவந்தர் தோத்திரஞ் செய்கின்றார்:

“மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகைநாளீர் !
நூலை நயந்து நுண்ணி துணர்ந்தீர் ! நுவல்தக்கீர் !
காலனு மஞ்சுங் காய்சின மொய்ம்பின் கடைநின்றீர் !
ஆல நுகர்ந்தா னுமென வெம்போ ரடர்கிற்பீர் !

“வெப்புறு செந்தீ நீர்வளி யாலும் விளியாதீர் !
செப்புறு தெய்வப் பல்படை யாலும் சிதையாதீர் !
ஒப்புறி னொப்பார் நும்மல தில்லீர் ! ஒருகாலே
குப்புறி னண்டத் தப்புற மேயுங் குதிகொள்வீர் !

“நல்லவு மொன்றோ தீயவும் நாடி நவைதீரச்
சொல்லவும் வல்லீர் ! காரியம் நீரே துணிகிற்பீர் !
வெல்லவும் வல்லீர் ! மீளவும் வல்லீர் ! மிடலுண்டேல்
கொல்லவும் வல்லீர்! தோள்வலி யென்றுங் குறையாதீர்!”

“மேரு கிரிக்கும் மீதுற நிற்கும் பெருமெய்யீர் !
மாரி துளிக்குந் தாரை யிடுக்கும் வரவல்லீர் !
பாரை யெடுக்கும் நோன்மை வலத்தீர் ! பழியற்றீர் !
சூரிய னைச்சென் றுண்கை யகத்துந் தொடவல்லீர் !”

“அறிந்துதி றத்தா றெண்ணி யறத்தா றழியாமை
மறிந்துரு ளப்போர் வாலியை வெல்லும் மதிவல்லீர் !
பொறிந்திமை யாக்கோன் வச்சிர பாணம் புகமூழ்க
எறிந்துழி யிற்றோர் புன்மயி ரேனு மிழவாதீர் !

“போர்மு னெதிர்ந்தால் மூவுல கேனும் பொருளாகா
ஓர்வில் வலங்கொண் டொல்கலில் வீரத் துயர்தோளீர் !”
பாருல கெங்கும் பேரிருள் சீக்கும் பகலோன்முன்
தேர்மு னடந்தே யாரிய நூலுந் தெளிவுற்றீர் !

“நீதியி னின்றீர் ! வாய்மை யமைந்தீர் ! நினைவானும்
மாதர் நலம்பே ணுது வளர்ந்தீர் ! மறையெல்லாம்
ஓதி யுணர்ந்தீர் ! ஊழிக டந்தீர் ! உலகீனும்
ஆதி யயன்று னேயென யாரு மறைகின்றீர் !

"அண்ணல மைந்தற் கன்பு சிறந்தீர்! அதனுனே
கண்ணியு ணர்ந்தீர் கருமநு மக்கே கடனென்னத்
திண்ணித மைந்தீர்! செய்து முடிப்பீர்! சிதைவின்ருல்
புண்ணிய மொன்றே யென்றும் நிலைக்கும் பொருள்
கொண்டீர்!

"அடங்கவும் வல்லீர் காலம தன்றேல்! அமர்வந்தால்
மடங்கல் முனிந்தா லன்ன வலத்தீர்! மதிநாடித்
தொடங்கிய தொன்ருே முற்று முடிக்குந் தொழிலல்லால்
இடங்கெட வெவ்வா யூறு கிடைத்தா லிடையாதீர்!

"ஈண்டிய கொற்றத் திந்திர னென்பான் முதல்யாரும்
பூண்டு நடக்கும் நன்னெறி யானும் பொறையானும்
பாண்டிதர் நீரே பார்த்தினி துய்க்கும் படிவல்லீர்!
வேண்டிய போதே வேண்டிய எய்தும் வினைவல்லீர்!

"ஏகுமின் ஏகி எம்முயிர் நல்கி இசைகொள்ளீர்!
ஓகைகொ ணர்ந்தும் அன்னையு மின்னல் குறையில்லாச்
சாகர முற்றுந் தாவிடு நீரிக் கடல்தாவும்
வேகம மைந்தீர்!"

"ஐயா ஆஞ்சநேயரே, பிரமா இறந்து போனுலும் மாளாத ஆயுளுள்ளவரும், சாஸ்திரங்களையெல்லாம் விசதமாயறிந்தவரும், ஒருவருக்குச் சொல்ல வல்லவரும், காலனும் அஞ்சத்தக்க பலமுள்ளவரும், கடல் போல அளவிடப்படாத பராக்கிரமமுடையவரும், பிரளயகால ருத்திரனைப் போல யுத்தம் செய்கின்றவரும், நீராலும் நெருப்பாலும் காற்றினுலும் இறவாதவரும், பல வகைப்பட்ட திவ்வியாஸ்திரங்களாலும் ஊறுபடாதவரும், உமக்குச் சமானமானவர் நீரேயல்லாமல் வேறில்லாதவரும், ஒரு தரம் குதிக்கும் போதே இந்த அண்டத்திற்கு அப்புறத்திலும் குதிக்கின்றவரும், நல்லது பொல்லாததையெல்லாம் நாடிச்சொல்ல

வல்லவரும், காரிய பாகங்களெல்லாம் தெரிந்து ஜயிக்க வல்லவரும், திரும்பி வர வல்லவரும், யாராகிலும் பலவந்தர்களாயெதிர்த்தால் கொல்ல வல்லவரும், புஜபலத்திலே எந்நாளும் கொஞ்சமாகிலும் குறையாதவரும், மகாமேருவைப்பார்க்கிலும் அதியுன்னதமாகிய ஸ்தூல காத்திரமுள்ளவரும், மேகஞ்சொரிகின்ற மழைத்துளிகளின் சந்திலும் நுழைந்து வரத்தக்கவரும், இந்தப் பூமியையும் எடுக்கத்தக்க ஆண்மையையுடையவரும், சிறிய குழந்தைப் பருவத்திலேயே பாய்ந்து சூரியனைத் தொடர்ந்து தொட வல்லவரும் நீரல்லாமல் வேறே யாரிக்கிறீர்கள் ? அன்றியும், தர்மந்தப்பாமல் நியாய பூர்வமாக வாலியை ஜயித்த விவேகமுள்ளவரும், இந்திரனுடைய வச்சிராயுதம் வந்து தாக்கியும் சரீரத்தில் ஒரு சிறு மயிரும் அறுதிருந்தவரும், ஏழு லோகத்தாரும் வந்து எதிர்த்தாலும் ஒரு பொருளாக எண்ணுமல் ஜயிக்கின்ற சௌரியவந்தரும், சூரியனுடைய இரதத்திற்கு முன்னே நடந்து வியாகரண சாஸ்திரங்கற்றுத் தெளிந்தவரும், நீதியின் வழியிலே நிற்கின்றவரும், பொய்ம்மையும் தீமையுமில்லாத வாய்மை நிறைந்திருக்கின்றவரும், ஸ்திரீ சம்போகமென்பதை மனத்திலே நினைத்தறியாதவரும், வேதங்களையெல்லாம் ஓதியுணர்ந்தவரும், மரணமில்லாத சிரஞ்சீவி பதம் பெற்றிருக்கின்றவரும், உலகத்தைச் சிருஷ்டித்த அந்தப் பிரமதேவரே நீர் என்று யாவரும் சொல்லும்படியிருக்கின்றவரும், சக்கரவர்த்தி திருமகனுரிடத்தில் அதிக அன்புடையவரும், அவருடனே கூட யோசனைக்கு யோக்கியராயிருக்கின்றவரும், அவர் தமது திருவாயினுல் 'இந்தக் காரியம் உம்முடையது' என்றும் 'உமக்கே கடன்' என்றும் சொல்லத்தக்க பெருமையுண்டானவரும், அவ்வண்ணமே அதைச் சிதையாமற்செய்து முடிக்கத் தக்கவரும், புண்ணிய புருஷர்களாலே 'இவர் புண்ணிய புருஷர்' என்று நினைக்கும்படி கீர்த்தி பெற்றவரும் நீரேயாவீர்; மேலும், சமயமல்லாத சமயத்தில் அடங்க வல்லவரும், யுத்தம் வந்து

வாய்த்ததேயாகில் அந்த நரசிங்க மூர்த்தியைப்போலக் கோபாவேசம் கொள்ள வல்லவரும், அறிவினில் யோசித்துத் தொடங்கிய காரியமொன்றை மாத்திரமல்லாமல், சகலத்தையும் முடிக்கத் தக்க சமர்த்துள்ளவரும், ஒரு வேளை ஸ்தானப்பிரஷ்டம் வந்தாலும் காரியக் கெடுதியானாலும் இடைந்து போய்விடாமல் முனைந்து சாதிக்க வல்லவரும், இந்திரன் முதலாகிய சகல தேவர்களும் பார்த்து இதுவே சிறந்ததென்று மேற்கொண்டு நடக்கத்தக்க நல்லொழுக்கத்தினாலும் பொறுமையினாலும் பாண்டித்தியமுடையவரும், அதைச் செவ்வையாக நடத்த வல்லவரும், வேண்டிய போதே வேண்டியவைகளையெல்லாம் நிறைவேற்றுகின்ற தபோ மகிமையுண்டாயிருக்கின்றவரும், உம்மையல்லாமல் வேறே யார் உளரென்று சொல்லுவேன்! ஆகையால், இப்பொழுது நீரே போம். உடனே சந்தோஷ சமாசாரம் கொண்டு வந்து எங்கள் பிராணனை எங்களுக்குக் கொடுத்து இரட்சித்துக் கீர்த்தி சம்பாதித்துக்கொள்ளும். பூரண விவேகத்தையுடைய ஆஞ்சநேயரே, அப்படிச் செய்தால், நம்முடைய தாயாகிய சீதையும் துக்கசமுத்திரத்தைக் கடந்து கரையேறுவாள்,'' என்று ஜாம்பவந்தர் சொல்லினர்.

அதை அனுமன் கேட்டுப் புளகாங்கிதமானவனாகி, மகிழ்ச்சியுடனே நகைத்து, கைகளைக் குவித்துக் கும்பிட்டுக்கொண்டு, வானர வீரர்களுக்குத் தன்னுடைய திருவுளத்தின் தாற்பரியத்தைத் தெரிவிக்கும்பொருட்டு, ''சினேகிதர்களே, மகானுபாவர்களாகிய நீங்கள், நினைக்கிறதற்கு முன்னே ஏழு சமுத்திரத்தையுந் தாண்டி உலகங்களையெல்லாம் ஜயித்து அனாயாசமாய் ஜானகியாரைக் கொண்டு வந்து கொடுக்கத் தக்கவர்களாய் இருந்தும், அடியேன்மேல் கிருபை செய்து, பலவீனனாகிய என்னை ஒரு பொருளாக எண்ணி, 'நீ போய் இதைச் செய்,' என்று ஆக்கியாபித்தீர்கள். ஆதலால், நான் பிறந்து செய்த தவமும் பெற்ற

பாக்கியமும் போல யார் செய்தார்கள், யார் பெற்ருர்கள்! உங்களுடைய கிருபையும் ஸ்ரீராமருடைய ஏவலும், இரண்டு பக்கத்திலுமிருக்கின்ற இரண்டு சிறகுகளாகக் கொண்டு, கருடனைப் போலக் கடந்து, அந்த இலங்கையை வேருடன் பேர்த்து இவ்விடத்தில் கொண்டுவர வேண்டுமென்ருலும், 'சத்துருக்களையெல்லாம் பொடிப்பொடியாக்கிப் பிராட்டியாரைக் கொண்டு வா,' என்று சொன்னுலும், அதி சீக்கிரத்தில் செய்து முடிக்கிறேன் பாருங்கள்! இந்த நூறு யோசனை விஸ்தீரணமான பெரிய கடலை ஒரு தாண்டிலே கடந்து, இராட்சதர்களையெல்லாம் அதஞ்செய்து, நினைத்த காரியத்தை அவசியம் முடிப்பேன்! நான் போய் வருகிற பரியந்தம் நீங்கள் இவ்விடத்திலேயே இருங்கள். அடியேனுக்கு விடை கொடுத்தருளுங்கள்,'' என்று சொல்லினன்.

அவர்களும் சந்தோஷித்து வாழ்த்தத் தேவர்கள் புஷ்ப மாரி பொழிய, அந்த மஹேந்திர பர்வதத்தின் மேலேறிக் கடலைக் கடக்க வேண்டுமென்கிற எண்ணத்தையுடைய அனுமனுனவன், உலகத்தையளந்த பரந்தாமன் உயரவெடுத்த திருவடி போல ஆகாயத்தில் ஓங்கி வளர்ந்து, திருவடியென்று சொல்லுகின்ற தனது திருநாமத்தின் காரணமானது சகலமானவர்களுக்கும் இப்படிப்பட்டதென்று விளங்க, வாசுகியென்கின்ற சர்ப்பத்தால் கட்டப்பட்டு ஆமை முதுகின்மேலிருந்த மந்தரகிரியைப்போல அந்த மகேந்திர பர்வதம் முழுமையும் கடலிலே மூழ்கும்படி தனது வாலை வளைத்துச் சுற்றிக்கொண்டு அதன் சிகரத்திலே நின்ருன்.

**கிஷ்கிந்தா காண்டம் முற்றிற்று.**

# ரு. சுந்தர காண்டம்

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவெனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டால் அவரென்பர் கைவில் ஏந்தி
இலங்கையிற் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவார்?

## 1. கடல் தாவு படலம்

அழிவில்லாப் பரமபத நாதராகிய ஸ்ரீராமசந்திரப் பிரபுவை அன்புடன் பஜித்து வரும் அனுமரானவர், மஹேந்திர பர்வதத்தின்மேல் நின்றவுடன் தம்முடைய திருஷ்டிக்கெதிரே அருகில் தெய்வலோகம் தோற்றுவதைப் பார்த்து, 'இதுதானே இலங்காபுரி!' எனத் தம்முள் நினைந்தவராய் அச்சப்பட்டு, உடனே தெளிவுற்று, 'இது மிக உயரமாய் இருப்பதனல், இலங்கையன்று; வானுலகமே,' என்றும், 'இதில் ஜானகியார் இல்லை' என்றும் அறிந்துகொண்டு, தமது நோக்கத்தைச் சிறிது தாழ்த்திப் பார்க்குங்கால் அந்த அமரர் லோகத்திலும் மிக உன்னதமாகியும், கந்த கதம்ப வாடை வீசாநின்ற சோலைகளும், சவுக்கந்தீர்ந்த தங்கமயமான மதில்களும், ஜயத்தைப்பெறும் துவஜம் நாட்டிய சிகரங்களும், மாணிக்கமயமாயும் சுவர்ணமயமாயும் பிரகாசியாநின்ற விநோதமான மாடமாளிகை கூடகோபுரங்களும், அழகான வீதிகளுமாய், பார்ப்பவர்கள் ஆனந்தங் கொள்ளும்படியானதாயும் விளங்கிய இலங்கைப்பட்டணத்தைக் கண்டு, மகா சந்தோஷமாகி, அண்டகடாகங்களும் எட்டுத் திக்குகளும் அஷ்ட குலாசலங்களும் கிடுகிடாய்க்கும்படி தம் புயாசலங்களைத் தட்டிக் கொக்கரித்து, ஆர்ப்பாட்டத்துடன்

யாவராலும் கண்டு தரிசிக்கக்கூடாமையான மகா ஸ்வ ரூபத்தைப் பெற்ற அனுமரானவர் அந்தப் பர்வதத்தின் மேலிருந்தபடி நின்று தம்முடைய பாதங்களை ஊன்றி, அதிவீர சௌரியத்துடன் அப்பால் பாய்ந்து போவதற்குப் பிரயத்த னப்பட்டார். அப்போது அந்தக் கிரியானது பூமி மட்டத் தழுந்தி அதன் உறுப்புகளும் வெளிக்கண்டது போல, அதில் நெடுநாளாகக் குடிகொண்டிருந்த மலைப்பாம்புகளெல் லாம் தங்களினத்துடன் நசுங்கி நெளிந்து வெளியிற்றலைப் பட்டு நகர்ந்தன. குகைகளிலும் சுனையிலும் துயின்று கொண்டிருந்த சிங்கங்களெல்லாம் குமுங்கிச் சரிந்து குருதியானது வாயினிடத்தில் பீரிட்டோடி வர மரணமாயின. பட்சிகளின் குழுவெல்லாம் தங்காமல் ஆகாயத்தெழும்பி, கடலிரைச்சலிலும் வெகு கோஷ்டமாய்ப் பறந்து இரவு பகல் தெரியாமல் வானத்தை மூடிக்கொண்டன. யானைக ளானவை இரண்டு காதுகளாலும் தம் தேகத்தில் புடைத் துக்கொண்டு சண்ட மாருதம் வீச, சூரிய சந்திராதிகளுங் கதி மாற, பிடி யானைகளும் நடுங்கி வந்து தங்களுடலைக் கட்டிப் பிணைத்துக்கொள்ள, தங்களது நீண்ட துதிக்கை களால் மரங்களை எல்லாம் வேருடன் பிடுங்கி எறிந்து கொண்டு கதறியோடின. பொன் மயமாகிய சிகரங்கள் பொடியாக, அனற்பொறிகள் சிதற, அந்த மலையின் முதுகு விரிந்தபோது, அங்கே மயிர் முளையாமலும் கண் திறவாமலு மிருக்கின்ற இளங்குட்டிகளை வாயிலே கௌவிக்கொண்டு புலிகளெல்லாம் பயந்தோடின. இருந்தாற்போல இருந்து அந்தப்பர்வதம் நெரிகின்ற முழக்கம் காணவே, அதில் வாசமாயிருந்த விஞ்சைய குமாரர்கள் எல்லாம் பயந்து, கையிலே வாளுங்கேடயமும் பிடித்துக்கொண்டு, அந்தர மார்க்கத்தில் எழும்பி, யுத்தகளத்திலே சத்துருக்கள் காலைத் துணிக்கும்படி கத்தியைக்கொண்டு ஓங்கிய போது, அதைத் தப்பித்துக்கொண்டு அதிக விசையாய் மேலெழும்பிய வீரர் களைப் போலப் போனார்கள். நட்சத்திரங்களும் சந்திரசூரி

யர்களும் மேகங்களும் மேலே தவழ்ந்துகொண்டிருந்த அந்தப் பர்வதமானது அவைகளெல்லாம் ஆகாயத்தில் நிற்க அனுமருடைய சரீர பாரத்தினுல் பூமியில் அழுந்து கிறது எப்படியிருந்ததென்ருல், கொடி மரமானது மேலே காணக் குமிழிகளுண்டாய்ச் சமுத்திரத்தில் பெரிய கப்பல் அமிழ்கின்றது போன்றிருந்தது. சந்தன விருக்ஷம் குங்கும விருக்ஷம் முதலானவைகள் கற்கள் நெரிகின்ற சந்துகளிலே அறைபட்டுச் சுனை நீரிலே கரைபட்டு, இங்குலிகப் பொடிகளுடனும் புட்பத்தின் மகரந்தப் பொடிகளுடனும் கலந்து சிவந்த வெளியிலே அருவியாயோடி வருகிறது எதுபோன்றிருந்ததென்ருல், அந்தப் பர்வதம் கிழிந்து அதனுடைய இரத்தம் வெளியில் புறப்படுகிறதுபோன்றிருந்தது. அதில் வாசம் பண்ணிக்கொண்டிருந்த தவசிகளெல்லாம் அந்தப் பர்வதமானது பூர்வத்தில் திருப்பாற்கடலில் நட்டுக் கடைந்த மத்தாகிய மந்தரகிரியைப் போலச் சுழலவே, தாங்கள் செய்கின்ற தவம் முடிந்தும் முடியாமலும் தேகபாசத்தை ஒழியாமலும் மோட்சப் பிரதேசத்திற்குப் போகின்றவர்களைப் போல ஆகாயமார்க்கத்திலெழும்பிப் போனுர்கள். அந்தப் பர்வதமானது நெக்கு விட்டுப் பிளந்த போது உண்டாகிய ஓசையைக் கேட்டு, தேவஸ்திரீகள் பயந்து நடுங்கி, தங்கள் தங்கள் நாயகன்மார்களைக் கட்டிக்கொண்டார்கள். அப்படி அவர்களால் தழுவப்பட்ட அந்தத் தேவர்கள் பூர்வம் கைலாச பர்வதத்தை இராவணனெடுத்த மாத்திரத்தில் பார்வதி பயந்து கட்டிக்கொள்ளும்படி அதிலிருந்த சிவபெருமானை ஒத்திருந்தார்கள். பின்னும் அந்த மலையில் பிணங்கி அதிக கோபமாயிருந்த அனேகம் தெய்வப் பெண்கள், இந்தப் பயத்தினுலே மனந்திடுக்கிட்டு, அந்தக் கோபம் நீங்கிப் புருஷர்களைத் தழுவிக்கொண்டவர்களாய் அந்தரமார்க்கத்திலெழும்பிப் பயந்தீர்ந்து, தாங்கள் விட்டு வந்த கிள்ளைகளைக் குறித்து இரங்கிக் கிலேசித்தார்கள். இப்படிப்பட்ட சமயத்திலே தேவர்களும் ரிஷீஸ்வரர்களும் மற்றும் மூன்று லோகத்

திலும் இருக்கின்ற உத்தம புருஷர்களும், வரிசை வரிசையாய் அந்தரத்தில் வந்து நின்று புஷ்பங்களும் சந்தனமும் வாசனைப் பொடிகளும் இரத்தினங்களுமாகிய இவைகளையெல்லாம் சொரிந்து, "மகானுபாவராகிய ஆஞ்சநேயரே, நடவுமையா!" என்று சொல்லி வாழ்த்தினார்கள்.

வீராதி வீரரான ஆஞ்சநேயரும் அதிசீக்கிரமாகத் தாவிப்போகத் தலைப்பட்டார். அப்போது கூட வந்திருக்கின்ற ஜாம்பவந்தர் அங்கதன் முதலானவர்களெல்லாம் பார்த்து, "ஐயா, அனுமரே, 'இந்தக் கடல் குறுமுனியாகிய அகஸ்தியராலே உண்ணும்படி அடங்கியதாகையால், இந்த அற்பமான சமுத்திரத்தையா நாம் தாண்டுகிறது!' என்று இகழ்ச்சியாய் மனத்தில் எண்ணாமல், போகின்ற காரியம் பெரிதானபடியினாலே, அதைப் பிரதானமாக நினைத்துக்கொண்டு, போய் வாரும்," என்று சொன்னார்கள்.

அப்போது தேவர்களெல்லாரும், "அனுமன் இப்பொழுது இந்த ஸ்வரூபமெடுத்தது அந்த இலங்கை மட்டும் போகிறதற்கன்றி, அதற்கப்புறமும் போகிறதற்காகவும் ஆமென்று காண்கின்றது!" என்று அதிசயித்துப் பார்க்க, ஆஞ்சநேயர் முன்னே தாழ்ந்து தம்முடைய காலினால் அழுத்தவே, அப்பர்வதத்தின் சிகரமும் அதன்மேலிருந்த அவருடைய பாதமும் பூமி மட்டும் அழுந்தின. வாலை வீசி நீட்டிக்கொண்டு, கால்களை மடக்கி, மார்பை ஒடுக்கி, தோள்கள் பூரித்து வளரக் கழுத்தைச் சுருக்கி, கைகளை நீட்டி, தலையை உயர எடுத்து, வாயினால் ராமஸ்மரணை செய்துகொண்டு, பார்க்கிறவர்களுடைய பார்வைக்கு எட்டாமல் அதிக விசையாக மேலெழும்பினார். உச்சியானது பிரமலோகத்தை அளாவும்படி அவரெழும்பினவுடனே அந்த விசையிலே அனேக மரங்களும், குன்றுகளும், யானை முதலாகிய பல வகை மிருகங்களும், 'இது ஸ்ரீ ராமகாரியம்' என்று அறிந்து தாங்களும் கூடப்போக எழும்பினாற்போல எழும்பின. இவ்விதம் எழும்பிய குன்றுகள் - கற்கள் - விருட்

சங்கள் - மிருகங்கள் - மற்றுமுள்ள சகல ஜீவராசிகளும், தென்திசையிற்போய் அனுமருடனே கூட இலங்கைக்குப் போகிறதற்கு விசை போதாமல் நின்று போனது போல அங்கங்கே விழுந்துவிட்டன. அப்படி அந்தச் சமுத்திரத்திலே மேலுங் கீழுமாக விழுந்த மிருகங்கள் - மரங்கள் - கொடிகள் - செடிகள் - குன்றுகள் முதலானவைகளும், அவ் விடத்தில் ஸ்ரீ ராமபிரான் வந்து கோபம் செய்வாரென்று முன்னமே அணை கட்டினது போலப் பிரகாசித்தன. அனுமர் பாய்கிற விசையினால் அந்தக் கடலானது கிழிபட்டுப் பாதாளமட்டும் வெளியாக, நாகலோகத்தின் மாணிக்கப் பிரகாசம் முதலானவைகளையும் கண்டு ஆஞ்சநேயர், "நமக்கு நாகலோகமும் காணக் கிடைத்தது என்ன பாக்கியம்!" என்று சந்தோஷித்தார்.

அப்போது அந்த நாகலோகத்தார்கள, "பூர்வத்திலே கருடனானவன் சமுத்திரநீர் கிழியச் சிறகை வீசிக்கொண்டு வந்து அமிர்தத்தை எடுத்துப்போனானே! அவன் இப்போதும் வருகிறதுபோலக் காண்கின்றதே! இனி எப்படி நாம் பிழைக்கப் போகிறோம்!" என்று பயந்து நடுங்கி, அப்பால் ஓடிப்போனார்கள். மேலும், சமுத்திரம் கிழிந்து மகரமீன்கள் துடிக்க, சுருமீன்கள் மிதக்க, பனைமீன்கள் இறக்க, யுகாந்த கால மாருதத்தைப்போல அனுமர் போகின்ற வேகத்தைச் சகிக்காமல் அலைகளெழும்பி இரைந்துகொண்டு அனுமருக்கு முன்னே போய் இலங்கையின்மேல் வீசின. திக்கஜங்கள் நடுநடுங்க வடக்கேயிருந்து தெற்கே போகின்ற அனுமரானவர் எப்படியிருந்தாரென்றால், பூர்வத்தில் சர்ப்பராசனுடன் பிரதிக்கினை செய்து வாயுவானவன் பிரபலமாக மோதியடித்து ஒடித்துக்கொண்டு போன திரிகூட பர்வதத்திற்குச் சமானமாயிருந்தார். பின்னும் அந்த அனுமரானவர் உச்சைச் சிரவமென்னும் வெள்ளைப் புரவியும் தெய்வ சம்பத்தின் ஆதியந்தமும் உடைய இந்திரனுடைய ஆயிரங் கண்களுக்கும் எட்டக்கூடாத விசையுடனே போகின்றது

எப்படியிருந்ததென்ருல், இந்த அண்டங்களையெல்லாம் கொல்கின்ற ஒரு புஷ்ப விமானம் இலங்கைக்குப் போகிறது போன்று இருந்தது. தேவர்கள் துதி செய்யவும், முனீஸ்வரர்கள் வேத வாக்கியங்களைச் சொல்லி ஆசீர்வதிக்கவும், பூலோகத்தார் வணங்கவும் போகின்ற ஆஞ்சநேயரானவர், இராவணனை முன்பு அமுக்கியது போல இன்னமும் அமுக்குவோமென்று நினைத்து நெற்றிக் கண்ணையுடைய சிவனை நீங்கிப்போகின்ற கைலாசபர்வதம் போலவும் விளங்கினுர். பிரமசாரி வேடந்தாங்கி, விவேகத்தில் பிரமாவைப்பார்க்கிலும் விசேஷப்பட்டு உலகத்திற்கெல்லாம் ஓர் அச்சாணி போல நிலைபெற்றிருந்து தர்மார்த்தங்களைப் பூர்த்தி செய்கின்ற அனுமரானவர், பொன் மயமாகிய மகமேருவானது தன்னை நீங்கித் தென்திசையிற்போயிருக்கின்ற திரிகூடமாகிய பிள்ளையைக்கண்டு வெகு நாளாயிற்றென்று பார்க்கப் புறப்பட்டு வருகிறது போலத் தோன்றினுர்.

மற்றும்யுகாந்த காலத்திலே மேகப்படலங்களைக் கிழித்து நட்சத்திரங்கள் உதிர, சமுத்திரம் பொங்கிப்பாய, திக்குகளெல்லாம் குழைய, மேரு கிரியும் குலுங்க, பிரசண்ட வேகமாய் வரும் தம்முடைய பிதாவான வாயு பகவானைப் போலவும் காணப்பட்டார்; பத்துத்தலைகளும் இருபது கைகளும் உடைய இராவணன் பஞ்சேந்திரியங்களையும் ஜயித்துச் செய்த தபோ பலங்களெல்லாம் மாண்டு போய்விட்டன என்று அறிந்து, கிழக்கிலிருந்து உதயமாகின்ற வழக்கம் தவிர்ந்து விபரீதமாய் வடக்கேயெழுந்து இலங்கையின்மேல் போகின்ற சூரியன் போலவும் பிரகாசித்தார்; மனுக் குலத்திலே அவதரித்த ஸ்ரீராமரென்கிற வீராதிவீரரைத் துணை பற்றிக்கொண்டு பாபகிர்த்தியத்தையுடைய இராட்சதர்கள் வாசஞ்செய்யும் இலங்கையின்மேல் போகின்ற ராஜாவின் ஆக்கினை சக்கரம் போலவும் விளங்கினுர். தம்முடைய தாவள்யமான தேக காந்தியானது இருளை நீக்கவும், மகமேரு கிரி நாணவும், கேசரி மார்க்கத்தில் எழும்பிப் போன ஆஞ்ச

நேயரானவர் உலகங்களையெல்லாம் வடவாமுகாக்கினியானது தகிக்கின்ற ஊழிக் காலத்திலே வடதிசையில் உதயமாகிற பூரண சந்திரனைப் போலவும், சக்கரதரனுன ஸ்ரீமந் நாராயணனுக்குத் தாம் வாகனமாயிருக்கின்ற தம்முடைய பராக்கிரமத்தைக் காட்ட இராட்சதர்களுடைய குடல்களெல்லாம் சிந்தவும், பர்வதங்களெல்லாம் பின் தொடர்ந்து வரவும், மேகங்கள் ஆகாயத்தில் ஒதுங்கவும், கடல்களெல்லாம் கலங்கவும், தாவிப் பறக்கின்ற கருடனைப் போலவும் காணப்பட்டார். 'பூர்வத்தில் அண்டகடாகத்தையெல்லாம் ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் காலினுல் அளந்தார். இவர் வாலினுல் அளக்கின்ருர்!' என்று சொல்லித் தேவர்களெல்லாம் பிரமிக்கும்படி பாய்ந்து போகின்ற வாயு புத்திரருடைய வாலானது, கிருபையையுடைய வேதத்தையொத்த அந்த ஆஞ்சநேயரான தர்ம தேவதையைத் துணை பெற்றுக்கொண்டு அற்பச் செய்கையையுடைய இராட்சதர்கள் பார்ப்பார்களென்று அவருக்குப் பின்புறத்திலே ஒளித்துப் போகும் எம பாசத்தைப்போன்றிருந்தது. பின்னும் அந்த வால் மகமேரு பர்வதத்தை முழுவதும் சுற்றிக்கொண்டிருந்த ஆதிசேஷன் ஸ்ரீ மகாவிஷ்ணு அனுப்ப வந்த கருடனைக் கண்டு மனஞ்சோர்ந்து சுற்றியிருந்த சுற்றுக்களை விட்டுப் பெயர்கிறது போலவும் பிரகாசித்தது. 'வச்சிர பாணியாகிய இந்திரனுடைய லோகமும் நடுங்குகின்றது! இப்பொழுது ஆஞ்சநேயருடைய கருத்து என்னவோ! இவருடைய வேகம் இலங்கை மட்டுக்கும் போகிறதற்காக அன்று,' என்று பூலோகமெல்லாம் அஞ்சியது. அளவிறந்த யோசனைப் பிரமாணமாகிய ஸ்தூல சரீரத்தையுடையவைகள் என்று சாத்திரங்களும் பெரியோர்களும் சொல்கின்ற திமிங்கிலம் திமிங்கிலகிலம் என்று சொல்லப்பட்ட மீன்களுடனே சமுத்திரமானது கலங்க, அனுமருடைய கரசரணுதி அவயங்களிலேயிருந்து தோன்றிய காற்றினுலே மற்றுள்ள மச்சங்களெல்லாம் இறந்து மிதந்தன. அனுமருடைய இரண்டு

கைகளும் நீண்டு வேகத்துடனே முன்னே போய்ப் பிரகாசிப்பது எப்படியிருந்ததென்றால், ஸ்ரீ ராமலட்சுமணர் இருவரும் அந்த ஆஞ்சநேயருக்கு முன்னே இலங்கைக்குப் போவது போன்றிருந்தது. இப்படியவர் வாயுவைப்போல விசையாய் ஆகாயத்தில் தாவிப் போகும் பொழுது, கீழ்த் திசைக்குக் காவலான ஐராவதமென்னும் யானையானது சமுத்திரத்தில் வந்து நின்றதுபோல அந்தக் கடலினிடத்தில் நெடுங்காலமாய் ஒளித்திருந்த மைநாகபர்வதம் மேலெழுந்து வந்தது. அவ்விதம் எழுந்த அம்மலையானது, தன்னுடைய ஆயிரம் சிகரங்களும் பொன் முடிகளைப் போலவும், ஓயாமல் ஓடுகின்ற அருவிக் கூட்டங்கள் தோளிலேயணிந்த உத்தரீயத்தைப் போலவும் பிரகாசிக்க எழுந்தது எப்படியிருந்ததென்றால், ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் துர்ச்சனர்களால் வந்த உபத்திரவத்தை நீக்கும்படி சமுத்திரத்திலிருந்து எழுந்தது போன்றிருந்தது. மேலும் அந்தப் பர்வதம் பூர்வத்தில் அமிர்தங்கடைந்த மத்தாகிய மந்தரகிரி பூமியிலே அழுந்தியது கண்டு ஸ்ரீ மகாவிஷ்ணு ஆமையுருவமெடுத்துத் தாங்கினதனால் அது உயர எழும்பியது போலவும் எழும்பியது. பின்னும் இரண்டு பக்கத்திலும் அதனுடைய சிறகுகள் தழைத்தோங்கி வெண்ணிறமானது பிரகாசிக்க மேலெழும்பியது எவ்விதமாயிருந்ததென்றால், பாதாள லோகத்திலே போய் அமிர்தமெடுத்துக்கொண்டு கடலைக் கிழித்துப் புறப்பட்ட பட்சி ராஜனான கருடனுக்குச் சமானமாய் இருந்தது. அன்றியும், உலகங்களையெல்லாம் சிருஷ்டிக்கும்பொருட்டுப் பிரமாவை உண்டாக்கும் நிமித்தம் மகா பிரளயத்தில் உற்பத்தியான சுவர்ணச்சாயையுடைய அண்டம் போலவும் இருந்தது. மற்றும், அந்த மகா பிரளயத்தில் உற்பத்தியான பிரமதேவனானவன், “இந்தப் பிரளயத்திலேயிருந்து என்னை உண்டாக்கின என்னுடைய பிதாவான அந்த நாராயணனைக் கண்டாலல்லாமல் நான் செய்யுங்காரியமொன்றுஞ் செய்கிறதில்லை!” என்று அவரைத் தியானம் செய்துகொண்டு

ஆதி காலத்திலே சமுத்திர ஜலத்திலே மூழ்கியிருந்து தவம் செய்து அந்தத் தவமுடிந்து அவன் அதிலிருந்து எழுந்தது போலவும் இருந்தது. அல்லாமலும், முற்காலத்தில், புஷ்ப மாலையை வெள்ளையானை தன்னுடைய காலின் கீழிட்டு மிதித்ததைக் குறித்துத் தூருவாச ரிஷி கோபித்துச் சபித்த தனாலே கடலிற்போய் ஒளித்த இந்திரனுடைய சம்பத்துகள் எல்லாம் மீண்டு வரும்படி, அழிவில்லாத ஆதி நாயகனான ஸ்ரீமந்நாராயணன் தேவதானவர்களுடனே அந்தச் சமுத் திரத்தைக்கடைந்த பொழுது அதிலிருந்து தோன்றிய சந்திர னைப் போலவும் இருந்தது. அந்தப் பர்வதத்தினுடைய சிக ரத்தில் பிணை மீனுடனே உறங்கியிருந்த மகர மீன்கள், அந்த மலை மேலெழும்பிய பொழுது சுவாசம் விட்டு ஓடியுலாவின. முத்துகளை ஈன்ற சிப்பிகள் நட்சத்திரங்கள் சூழச் சந்தி ரோதயமானது போலப் பிரகாசிக்கவும், உப்பரிகையின்மேல் கொடிகளானவை ஆடுவது போல அருவிகளானவை ஒழுக வும், சுனைகளிலேயிருந்த பனை மீன்கள் திமில மீன்களுடனே தொடர்ந்து துள்ளின. ஆறு பகையும் மூன்று குற்றமும் வெந்து போகும்படி ஞானோதயமாகி நிஷ்டை நீங்கின பெரிய வர்களைப் போல அனேக காலம் ஜலத்திற்குள்ளே கிடந்து வருந்தின நாகங்கள், அந்தப் பர்வதம் ஜலத்தை விட்டு வெளியிலே வந்தபடியினாலே, நெடுங்காலமாக அடக்கிக் கொண்டு இருந்த சுவாசம் விட்டுச் சந்தோஷமடைந்தன.

இப்படி மிதமற்ற சிங்காரங்களுடனே அந்த மைநாக பர்வதமானது ஆகாயமட்டும் வளர்ந்து எதிரே நிற்பதை அனுமர் பார்த்து ஆச்சரியப்பட்டு, அதற்குச் சிறிதும் அஞ்சாமல், 'இது என்ன !' என்று சந்தேகித்து, பின்பு பர் வதம் என்று அறிந்து, அந்தப் பர்வதத்தை அதி சீக்கிரத்தில் அலட்சியமாய்த் தலை கீழாகத் தள்ளிவிட்டு, ஆகாய மார்க் கத்திலே பாய்ந்தார். அந்தச் சமயத்தில் அந்த மைநாக பர் வதம் நடுநடுங்கிப் பயந்து, உடனே அதிக அன்புண்டாய் ஒரு மனுஷனைப் போல உருவமெடுத்துக்கொண்டு அனு

மரை நோக்கி, "ஐயா, யான் சொல்வதைக் கேளும்: நீர் என்னைப் பகையாளியென்று நினைக்க வேண்டா. பூர்வ காலத்தில் தேவேந்திரன் வஜ்ராயுதத்தினலே உலகத்தில் உள்ள மலைகளின் சிறகையறுத்தான். அப்போது என்னை வாயு பகவானனவர் இவ்விடத்தில் கொண்டு வந்து சேர்த்து இரட்சித்தார். நீர் அவருடைய குமாரரானபடியினலே, உமக்கு ஏதாயினும் உபகாரம் செய்ய வேண்டுமென்று மிகவும் ஆசையுண்டாய் இருக்கிறது! ஆகையால், என் சிகரத்தின்மேலாவது சிறிது நேரம் நின்று விருந்துண்டு இளைப்பாற்றிக்கொண்டு போம். சமுத்திர ராஜனனவன் என்னைக் கண்டு, 'ஸ்ரீ ராமருடைய் ஏவலை மேற்கொண்டு வாயு புத்திரரான ஆஞ்சநேயர் தேவர்கள் உஜ்ஜீவிக்கும்படி சீதாபிராட்டியாரைத் தேடிக்கொண்டு வருகிருர். நீ போய் அவரைக் காண். இதைப்பார்க்கிலும் பெறத்தக்க பேறு வேறென்றும் இல்லை,' என்று சொன்னன். அதைக் கேட்டு எனக்கு நீர் பெற்ற தாயினும் மிகவும் நல்லவரென்றெண்ணி வந்தேன். என்னல் இயன்றதை நீர் பெற்றுக்கொள்ளும்," என்று சொல்ல, அந்தச் சொல்லை அனுமரானவர் கேட்டு, 'இவன் குற்றமில்லாதவன்,' என்று நினைத்து, தாமரைப் புட்பத்திற்குச் சமானமான முகம் பிரகாசிக்கும்படி சிரித்தார்; சிரித்து, உடனே தாம் போகும் திசையை நோக்கி அந்தப் பர்வதத்தின் சிகரத்தைக் கண்டு, "மைநாகமே, சர்வலோக சரணியரான ஸ்ரீ ராமசந்திரரிடத்திலே கொண்டிருக்கின்ற பத்தியினலே நான் எவ்வளவும் வருத்தப்படமாட்டேன்; என்னுடைய இஷ்டத்தை நிறைவேற்ருமல் யாதொன்றும் பட்சிக்கவுமாட்டேன். நீ இவ்வளவு அன்பைச் செலுத்திய பொழுதே நான் இருந்தேன்; விருந்துண்டேன்! இதற்கு மேலும் நீ எனக்குச் செய்யத்தகுந்த உபசாரம் வேறென்று உண்டோ? அன்பைப்பார்க்கிலும் விசேஷமான பூசை யாரிடத்திலே இருக்கின்றது? இப்பொழுது நான் சீக்கிரமாய்ப்போய் இலங்காபுரியைச் சேர்ந்து, எங்களுடைய

ஆண்டவரான ஸ்ரீ ராமருடைய அடிமைத்தொழிலைச் செய்வ தைப்பார்க்கிலும் சிறந்த காரியம் என்ன இருக்கின்றது? அங்கிருந்து திரும்பி வரும் பொழுது விருந்துண்டு போகி றேன்,'' என்று உபசாரமாய்ச் சொல்லிவிட்டு, அதிசீக்கிர மாய் அப்புறம் போனார்.

இவ்வண்ணம் அவர் சமுத்திரத்தின்மேல் உயர்ந்து போவதைச் சூரியபகவான் பார்த்து, "பூமியில் பாதத்தை ஊன்றி நடவாத இளமைப் பருவத்திலேயே என்னுடைய தேரின்மேல் பாய்ந்த இந்த மகானுபாவன் இவ்வளவு வேக மாய்க் கடலைத் தாண்ட நினைத்தது யாரிடத்திலே போக வேண்டியோ!'' என்று சந்தேகப்பட்டான். அப்படி அதி விசையாய்ப் போகும் ஆஞ்சநேயரைத் தேவர்கள் பார்த்து அதிசயித்து, களங்கமற்ற மனத்தினையுடைய சுரசை என்ப வளை அழைத்து, "திரிலோகத்தாருக்கும் வந்த துன்பத்தை நீக்கும்படி வாயு புத்திரரானவர் வருகின்றார். நீ போய் அவ ருடைய பராக்கிரமத்தைப் பரிசோதித்து எங்களுக்குத் தெரி விக்க வேண்டும்,'' எனச் சொல்லி அனுப்ப, அவள், 'அவ் வண்ணமே செய்கிறேன்,' என்று சம்மதித்தவளாய், பெரிய வாயினையுடைய ஓர் இராட்சச ஸ்திரீ வடிவம் கொண்டு வந்து, அவர் போகும் மார்க்கத்தில் தன் சிரசு அண்டத்தை முட்டும்படி நின்று, "வானரனே, நான் இருக்குமிடத்தில் ஓர் அற்பக் குரங்கான நீ எப்படி வருவாய்? இப்பொழுது பிரளய காலாக்கினிபோல எரிகின்ற என்னுடைய பசிப்பிணியைத் தீர்க்கும்பொருட்டே நீ வந்தது போலக் காண்கின்றது! இந்த ஆகாசத்தில் உனக்குப் போவதற்கு வேறே வழியில்லை. ஆத லால், என் வாய்க்குள்ளே புகுந்து போ!'' என்று சொன்னாள்.

அதை அனுமார் கேட்டு, "இராட்சசி, பெண் பிள்ளை யான நீ பசியானது வருத்தும்படி நொந்தாயாதலால், உன் னுடைய இஷ்டப்படியே என்னைப் பக்ஷிக்கக்கடவாய். என் சரீரத்தை உனக்கு உணவாக நான் கொடுக்கிறேன். இத் தருணத்தில் தெய்வ நாயகரான ஸ்ரீராமசந்திரருடைய காரிய

நிமித்தம் போகின்றேன். அதைச் செய்து நான் திரும்பி வரும் பொழுது, அப்படியே உண்,'' என்று சொல்லி நகைத்தார். அதற்கு அந்த இராட்சசி உருவங்கொண்ட சுரசை கோபித்து, "ஏழுலோகத்தாரும் காணும்படி நான் உன் சரீரத்தைத் தின்று பசி தணிகின்றேன், பார்!'' என்று சொன்னாள். ஆஞ்சநேயர், அந்த வார்த்தையைக் கேட்டு, "நல்லது! அப்படியே உன் வாய்க்குள்ளேயே புகுந்து போகின்றேன். உனக்கு வல்லமை உண்டானால் தின்றுவிடு,'' என்று சொன்னார். அப்பொழுது அந்த இராட்சசியானவள் அனேக அண்டங்கள் ஒருமிக்கப் புகுந்தாலும் நிறையாமலிருக்கும் தன் பெருவாயைத் திறந்து ஆஞ்சநேயரைத் தட்டாமல் விழுங்கச் சித்தமாய் இருந்தாள். அனுமர் அது கண்டு அவளுடைய வாய் சிறியதும் தமது சரீரம் பெரியதுமாய் வளர்ந்தார்; அவ்விதம் வளர்ந்தவர் சுருங்கி, ஒரு தரம் சுவாசம் விடுவதற்குள்ளே அவள் வாயிலே புகுந்து வெளிப்பட்டார். அதைக் கண்ட தேவர்கள், "எங்களை ஆண்டுகொண்டவரான இந்த ஆஞ்சநேயர் மகா சமர்த்தர்!'' என்று சந்தோஷமடைந்து, புட்பமாரி பொழிந்து வாழ்த்தினார்கள். இப்படித் தோன்றி மறைகின்ற மின்னலைப்போல அதிசீக்கிரத்தில் சரீரமானது பருத்துச் சுருங்கும்படி அனுமரானவர் வாய்க்குள்ளே புகுந்து வெளிப்பட்டதைக் கண்டு அந்தச் சுரசை பழைய சொரூபமாய் நின்று, "இவரால் எந்தக் காரியந்தான் ஆகாது!'' என்று சந்தோஷமடைந்து தோத்திரஞ்செய்தாள். அனுமரும் அவளை ஆசீர்வதித்து அப்பால் போயினார். அத்தருணத்திலே கின்னரர்கள் கீதம் பாடினார்கள்; தேவரம்பையர்கள் நடனமாடினார்கள்; இருடிகள் வேதகோஷஞ் செய்தார்கள்; சகலமான ஜீவராசிகளும் தோத்திரஞ் செய்தன; இலங்கையிலிருந்த மந்தாரபுட்பத்தின் மகரந்தப்பொடிகள் மணக்கும்படியான தென்றற்காற்றானது வந்து அனுமருடைய செந்தாமரைப் புட்பத்திற்குச் சமானமான முகத்தில் வீசி வேர்வையை உலர்த்தி ஆயாசம் தீர்த்தது. விஞ்சை

யர்கள் தங்களுடைய கையினுல் இசையாநின்ற வீணை யோசையானது செவியில் வந்து நுழைய, அதைக் கேட்டு ஆனந்தப்பட்டுக்கொண்டு அவர் போகும் போது போகக் கூடாமல் தடைப்பட்டு, தாம் போகாநின்ற தென்திசையை விட்டு வடதிசையில் விலக எத்தனப்பட்டார். அதுவுங் கூடாமையால், கீழ்த்திசை மேற்றிசையிலாவது ஒதுங்கிப் போகலாமென்று பார்த்தார். அதுவும் முடியாமையால், ஊர்த்துவமுகத்திலாவது எழும்பிச் செல்லலாமென்று நினைத் தார். அதுவும் இசையாமையால், அதோமுகத்தில் வலிப்பது கண்டு, இதென்ன ஆச்சரியமென்று ஆஞ்சநேயர் பிரமித் தார். அப்பொழுது கடலிலே படுத்துக்கொண்டிருந்து ஆகா யத்தில் எவ்வளவு உயரத்திலானுலும் தனக்கு நேராய்ச் சஞ்சரிக்கும் ஜந்துக்களைக் கண்டால், அவைகளின் சாயையைக் கையினுல் பற்றித் தன் வாய்க்கு நேராய் இழுத்த மாத்திரத்தில் அந்த ஜந்துக்களெல்லாம் வாயில் வந்து விழ நாள்தோறும் விழுங்குகின்ற *அங்காரதாரை* என் னும் இராட்சசியானவள் எழும்பினுள். அவள் ஆலகால விஷ மெழும்பினது போல, "இங்கே யாரடா போகிறவன்?" என்று மகாகோர சொரூபத்தோடே எழும்பினுள். அவ்வண் ணம் எழும்பினவள், காற்சிலம்புகள் கடலோசை போலச் சத்திக்க, வேதமுடிவிலே நடனஞ் செய்யாநின்ற பரஞ் சுடரான ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு முன்னே, பூர்வகாலத் திலே சமுத்திரத்திலேயிருந்து யுத்தத்திற்குப் போய் எதிர்த்த மதுகைடவர்களைப்போல அனுமரை எதிர்த்து நின்ருள். இரண்டு பிறை போலப் பிரகாசிக்கும் வக்கிர தந்தங்களையும் யானைத்தோலான போர்வையையுமுடையவளாய், பிரமாவி னுல் இந்த அண்டத்திற்கு ஓர் உறை போலச் சிருஷ்டிக்கப் பட்ட பெரிய வாயைத் திறந்துகொண்டு, தன் காலானது சமுத்திரத்தைக் கலக்கவும், தலையானது அண்ட முகட்டை அளாவவும், பூமிக்கும் ஆகாயத்திற்கும் ஏகரூபமாய் நின்ற வளை அனுமர் கண்டார். கண்டதும், " இவள் தர்மத்தையும்

கருணையையும் அழித்த இராட்சசி. இவள்தான் நம்மைத் தடுத்துப் பிரமிக்கச் செய்தவள்,'' என்று நிச்சயித்தறிந்து, அவளுடைய பெரிய வாய்க்குள்ளே அல்லாமல் ஆகாயத்திலே போவதற்கு வேறே வழி கிடையாமையால், அவளுடைய வாயிலே புகுந்து வயிற்றைக் கிழித்துக் கொண்டு போக நினைத்து, “அடி இராட்சசி, நான் வரும் வேகத்தைக் கண்டறியாமல் வாயினாலே ஆகாய மார்க்கத்தை அடைத்துக்கொண்டு இப்படி இருக்கின்றாயே! நீ யாரடி?'' எனக் கேட்டார்.

அங்காரதாரையானவள் பார்த்து, “அடா குரங்கே, என்னைப் பெண்ணென நினையாமல் எதிர்த்தால் தேவர்களானாலும் எதார்த்தமாய் மாண்டு போவார்கள்! என்னுடைய கண்முன்னே யமன் வந்தாலும் கொன்று தின்றுவிடுவேன்!'' என்று சொல்லிப் பின்னும் பெரிதாகத் தன்னுடைய வாயைத் திறந்தாள். ஆஞ்சநேயரானவர் அந்தக்கணமே அவளுடைய வாயிலே நுழைந்து வயிற்றிலே புகுந்தார். அப்போது தர்மமானது 'முறையோ! முறையோ!' என்று அழுது துக்கித்தது. தேவர்களும் கிலேசமடைந்தார்கள். அக்கால் இறந்து போனவர் போல அவளுடைய வயிற்றிற்குள்ளே போன அனுமரானவர், ஓரிமைப்பொழுதிலே மறுபடியும் பிறந்தாரெனச் சொல்லும்படி சிங்கம் போல வெளிப்பட்டார். அவ்விராட்சசியானவள் கோவெனக் கதறும்படி அவளுடைய வயிற்றைப் பீறிக் குடல்களைப் பிடுங்கிக்கொண்டு ஆகாயத்திலெழும்பின அந்த அனுமரானவர், மலைக் குகையிற்புகுந்து அதற்குள்ளே இருக்கின்ற சர்ப்பங்களை வாரிக் கொண்டு மேலே எழும்பிய கருடனைப்போலப் பிரகாசித்தார்.

அசுவத்தாமர், மகாபலி, வியாசர், அனுமர், விபீஷணர், கிருபாசாரியர், பரசுராமர் என்று சொல்லப்பட்ட சப்த சிரஞ்சீவிகளுக்குள்ளே சிரேஷ்டரான அனுமரானவர், அந்த அங்காரதாரையினுடைய குடலைப் பிடுங்கிக்கொண்டு உயர எழும்பியது எப்படியிருந்ததென்றால், பெருங்காற்று வீச,

கயிறு பூமியிலிருக்க, வாலுடனே ஆகாயத்திலெழுந்து பறக்கும் காற்றாடியைப் போன்றிருந்தது. அசுரர்கள் வருத்தத்தினால் உடல் வியர்த்தார்கள். பிரமதேவரும் ஆச்சரியமடைந்து பூமழை பெய்தார். கைலாச கிரியிலே எழுந்தருளிய சாம்பவமூர்த்தியும் பார்த்துக் களி கூர்ந்தார். முனி சிரேஷ்டர்கள் ஆசீர்வாதம் பண்ணினார்கள். அந்த அரக்கி இறக்கும்படி வாய் முதல் வயிறு வரையிலும் கிழித்த அனுமரானவர் பின்பு மகமேருவும் தாழும்படி உயர்ந்து மனோ வேகத்திலும் அதிவேகமாய் அப்பால் போகத் தொடங்கி, "இந்தக் கடலானது முன்னே சம்பாதி முதலானவர்கள் நமக்குச் சொன்ன அளவையுடையதன்று; அதிலும் அதிகமான விஸ்தீரணமுடையது. அல்லாமலும், மத்தியில் பல பல இடையூறுகளும் சம்பவிக்கின்றன. எவ்விதத்திலாயினும் இலங்கையிலே போய்ச் சேர்ந்தால்தான் இவைகளெல்லாம் நீங்கும். தீமைகளெல்லாவற்றையும் நொடியிற்பொடி செய்வது தர்மமே; அப்படிப்பட்ட தர்மத்தை நினையாத அரக்கர்கள் செய்கின்ற துன்பங்களெல்லாம் நிவாரணமாவதற்குத் தக்கதாகிய ஏது இராம ஸ்மரணையே. இந்த இராமஸ்மரணை செய்தால் எல்லா இடையூறுகளும் நிவர்த்தியாகும். இதற்குச் சமானமானது வேறொன்றில்லை," என்று நினைத்து, ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு புறப்பட்டார். இப்படிப் புறப்பட்டவர், பூரணகலசங்கள் வைத்திருக்கின்ற சொர்ணமயமான இலங்கை மதிலின்மேலே போய்த் தங்காமல் சுவர்க்கத்தின் மார்க்கமாய் விலகிச் சென்று, அந்த இலங்காபுரியருகில் பசுமையான சோலை சூழ்ந்திருக்கும் உன்னதமான பவளமலையின்மேல் பாய்ந்தார். அனுமர் பாய்ந்த மாத்திரத்தில், கடல் சூழ்ந்த இலங்காபுரியான பர்வதமானது தன் நிலை பெயர்ந்து குலுங்கத் தலைப்பட்டது. அது எப்படியிருந்ததென்றால், பெருங்காற்றானது மோதக் கடல் நடுவிலிருக்கின்ற கப்பலானது அலைகின்றது போன்றிருந்தது. பூமியில் வேர் விழுந்து ஆகாய பரியந்தம்

உயர்ந்த அந்தப் பவளமலையின் சிகரத்தில் ஆஞ்சநேயர் நின்று நான்கு புறத்திலும் நோக்கி, ஸ்வர்க்கமாகிய ஸ்திரீ யானவள் அழகு பார்க்கும்படி நிலைக்கண்ணாடி வைத்தது போலத் தேஜோமயமாய்ப் பிரகாசிக்கின்ற இலங்கையைச் செவ்வையாகப் பார்த்தார். இவ்வண்ணம் பார்த்து ஆச்சரியப் பட்டுக் கை கொட்டி, "தேவர்களுடைய பொன்னகரமானது இதற்கு ஒப்பாகுமென்று சொல்லுவது புத்தியீனமாம்! அந் நகரமென்ன, இந்த இலங்கையைப்பார்க்கிலும் சிறந்ததா! சகல லோகங்களையும் ஆள்கின்றவன் எவனோ, அவனே இந்த நகரத்திலிருந்து வாழ்கின்றவனாக வேண்டும். ஒரு வகை இன்பத்தை மாத்திரமுடையது இந்த நகரமென்று சொல்லக்கூடாது. வேண்டுபவைகளை வேண்டியபடியே அடைந்து வெறுப்பில்லாமல் அனுபவிக்கும்படியான போக சுகங்களை முடிவில்லாதவைகளாயிருக்கும்படி எவ்விடத்தில் காண்கின்றோமோ, அவ்விடமே மோக்ஷமாகும். இந்தப் படியே இருக்கின்றது வேதத்தினுடைய நிச்சயமும். இதன் உள்ளிடமானது எழுநூறு யோசனையென்று சொல்லு வார்கள். திரிலோகங்களிலும் உள்ள பதார்த்தங்களெல் லாம் இந்த இலங்கைக்குள்ளே அடங்கியிருக்கின்றனவென் றால், சாத்திரக் கேள்வியையுடைய பேரறிவாளர்கள் பார்த் தாலும் அவர்களுடைய பார்வைக்குத்தான் அடங்குமா? இதென்ன ஆச்சரியம்!" என்று நினைத்து மறுபடியும் உற் றுப் பார்க்கின்றார்.

## 2. ஊர் தேடு படலம்

"மேகமண்டலத்தைத் தாண்டிச் சந்திர மண்டலத்தை முட்டுகின்ற உப்பரிகைகளெல்லாம், பொன்னினாற்செய்து இரத்தினங்கள் பதித்திருக்கிறவைகளும், மின்னலைக் கொண்டு சமைத்தவைகளும், வெயிலைக்கொண்டு அமைத்

தவைகளும், பின்னும் இவைகள் எதைக்கொண்டு செய்த வைகளென்று அறியப்படாதவைகளும், தேவலோகமும் நாகலோகமும் தமக்குள்ளே அடங்கும்படி மேலுங்கீழும் உயர்ந்தும் தாழ்ந்தும் இளந்தென்றற்காற்று வருகிற சாளரங்களையுடையவைகளுமாயிருக்கின்றன. இவைகளிலுள்ள ஸ்திரீகள் மின்னற்கொடிகளை மடக்கி அடுக்கித் துடைப்பக் கட்டைகளாற் பிடித்துக்கொண்டு மேல் தளங்களில் இருக்கும் புட்பத்தின் மகரந்தப் பொடிகளான குப்பையை விளக்கி, ஆகாய கங்கா ஜலத்தைக் கையினுல் அள்ளிச் சாணநீராய்த் தெளிக்கிருர்கள். வேணுக்குழலும் மகர வீணையும் குழையும்படி மிருதுவான தங்களுடைய மழலைச் சொற்களைக் கிளிகளுக்குக் கற்பிக்கின்ற ஸ்திரீகள், இந்த உப்பரிகைகளின் பளிங்கினுல் கட்டப்பட்ட சுவர்களில் பிரதி பலித்துக் காண்கின்ற சாயையையும் தம்முடைய உருவத்தையும் வேறுபாடறியாமல் மயங்குகின்ருர்கள். இப்படிப் பட்ட உப்பரிகைகளைத் தேவேந்திரனுடைய மாளிகைக்குச் சமானமாகச் சொல்வதெப்படி? சொன்னுல், அந்தச் சொல்லுக்குங் குற்றமுண்டாம். இவைகள் ஸ்ரீ மகாவிஷ்ணு மார்பிலே தரித்திருக்கின்ற கவுஸ்துவமணியைப்பார்க்கிலும் அதிக காந்தியையுடைய நவரத்தினங்கள் அழுத்தித் தெய்வத் தச்சனுலே செய்யப்பட்டிருக்கின்றன. சகல ஜீவகோடிகளும் ஒரு பக்கத்தில் அடங்கியிருக்கத்தக்க விசாலமுண்டானதனுல் இந்நகரம் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவயிற்றுக்கே ஒப்பாகும். இதற்குள்ளிருக்கின்ற விருக்ஷங்களெல்லாம் கற்பகங்கள்; வீடுகளெல்லாம் ஸ்வர்ணங்கள்; இராட்சத ஸ்திரீகளுக்குத் தாதிமார்களெல்லாம் தேவரம்பைகள்; இராட்சதர்களுக்கு ஏவலாளிகளெல்லாம் தேவர்கள்; சூரியனுடைய ஏழு புரவிகள் தவிர மற்றப் பிரபஞ்சத்திலுள்ள புரவிகளெல்லாம் இருக்கின்றன; இராவணனுடைய போரிலே தோற்றுப்போன திக்கஜங்களைக் குறித்துச் சொல்வதென்ன? ஐந்து கைகளையுடைய விக்கினேஸ்வரனுகிய

யானையும், சூரியனுடைய தேருமே இந்த நகரத்தில் இல்லை. மற்றத் தேவர்களுடைய விமானம் முதலாகிய வாகனங்களெல்லாம் வீதிகளிலே சஞ்சரிக்கின்றன. இந்தப் பட்டணத்தை ஆள்கின்ற ராஜாவுக்கு ஏவல் செய்யாத தேவர்கள் யாரிருக்கிறார்கள்? ஆஹா! ஆஹா! இவன் திரிமூர்த்திகளிலும் விசேஷப்பட்டவனென்றால் இவன் செய்த தவமல்லாமல் வேறொன்று இவனுக்கு இப்படிப்பட்ட சாம்ராஜ்யத்தைக் கொடுக்குமா! பேரிகையின் சத்தமும், யானைகளின் முழக்கமும், கடலோசையும், ஸ்திரீகளுடைய பாதச் சிலம்பொலியால் மறைந்து போகின்றன! மரகதத்தினாலும் மற்றுமுள்ள பல வகை இரத்தினங்களாலும் அழகாகச் செய்திருக்கின்ற குதிரைக் கொட்டாரங்களும் இரதசாலைகளும் சூரியனும் வெட்கும்படி பிரகாசிக்குமானால், இந்நகரத்திற்குச் சுவர்க்கநகரம் சமானமாகுமென்றல்லவோ சொல்ல வேண்டும்? அழகு நிலைபெற்றிருக்கின்ற இந்தப் பட்டணத்தின் பிரகாசம் பாய்வதனால் இதிலிருக்கின்ற இராட்சதர்களுடைய நிறம் கறுத்துக் காணவில்லை. உயரப்போகின்ற சந்திரனும் களங்கமற்றுப் பிரகாசிக்கின்றான். சமுத்திரமும் பொன்னுருகுகின்றதை ஒத்திருக்கின்றது. அண்ட முழுமையும் நிறைந்து இருளையோட்டுகின்ற சூரியன் இந்நகரத்திலிருக்கின்ற மாளிகையின் காந்திக்கு முன் தன் ஒளி மழுங்கி ஒரு மின்மினியளவும் பிரகாசிக்கமாட்டான். தேனும், சந்தனமும், கஸ்தூரியும், கற்பகப் புஷ்பங்களும், யானை மதமும் இந்தப் பட்டணத்து ஸ்திரீகள் ஸ்நானஞ் செய்கின்ற நீருடனே கலந்து பெருக்கெடுத்தோடி வந்து சமுத்திரத்தில் பாய்கின்றதனால், அதிலிருக்கின்ற மீன்களும் திவ்வியமாய்ப் பரிமளிக்கின்றன.

"தெய்வத் தச்சனைப் புகழ்துமோ! செங்கண்வா ளரக்கன்
மொய்யொத் தாற்றிய தவத்தையே வியத்துமோ! விரிஞ்சன்
அய்யப் பாடிலா வரத்தையே மதித்துமோ! அறியாத்
தொய்யற் சிந்தையாம் யாவரை யாதென்று துதிப்பாம்!"

"இந்த நகரத்தைச் சிருஷ்டித்த விஸ்வகர்மாவையே புகழ்வோமா! அல்லது இராவணேஸ்வரன் யதார்த்தமாய்ச் செய்த தவத்தையே அதிசயிப்போமா! அல்லது அவனுக்குப் பிரமதேவன் கொடுத்த சந்தேகமில்லாத வரத்தையே மதிப் போமா! அறியாத சபல சித்தத்தையுடைய நாம் எவ்விதத் தில் யாரைத்தான் துதி செய்வோம்? காடுகளும் சோலை களும் ஸ்வர்ணத்தினுலும் இரத்தினங்களினுலும் செய்யப் பட்டவைகளென்ருலும், தேனையும் புஷ்பங்களையும் கனிகளை யும் கொடுக்கின்றதனுல் இதைப்பார்க்கிலும் சுவர்க்கத்தா ரும் பூலோகத்தாரும் பெறத்தக்க வரம் வேறென்ன இருக் கின்றது? இந்த நகரத்திலுள்ள கோபுரத்தின் உயரத்தை மகாமேருவானது கண்டால் வெட்கிப்போமென்பதற்குச் சந்தேகமில்லை. இராவணனுடைய ஆக்கினைக்கு அஞ்சிச் சூரியன் இலங்கையின்மேல் போகிறதில்லையென்று சொல்லு வார்கள். அது உண்மையன்று; இந்த மதிலைத் தாண்டி அப்பு றம் போகமாட்டாமையாலல்லவோ சூரியன் ஒதுங்கிப் போ கின்ருன்! மற்றும், இராவணன் தேவர்கள் சத்துருக்களாகை யால் அவர்கள் வரத்தக்க வழியில்லாமல் ஓர் எல்லையை ஏற்படுத்துவோமென்று கருதி, அண்டமுகட்டையுங் கடந்து செல்லும்படி இந்த மதிலை உண்டாக்கினன்போலிருக்கின் றது! இப்படிப்பட்ட மதில் சூழ்ந்திருப்பதனுல் இந்தப் பட்ட ணத்திற்குள்ளே காற்று நுழையமாட்டாது; சூரியரஸ்மியும் பாயாது; யமனுடைய ஆக்கினையும் செல்லாது; சர்வ சங் காரகாலத்திலே சகலமும் அழிந்து போனுலும் அழியாம லிருக்கின்ற தர்மமும் பிரவேசிக்காது. ஆகையால், தேவர் கள் இதற்குள்ளே போகமாட்டார்களென்பது ஒரு புதுமை யன்று. தேவர்களில் அனேகர் பாடுவர்; அனேகர் ஆடுவர்; அனேகர் வாத்தியம் முழக்குவர்; அவைகளை இராட்சதர் களில் அனேகர் சபை கூடிக் காண்பர்; கேட்பர்; தேவ ரம்பைகள் ஆடுகிறதையும் பாடுகிறதையும் பழித்து விஞ் சைய ஸ்திரீகள் ஆடுவார்கள்; அவர்கள் ஆடல் பாடல்

களைப் பழித்து இராட்சதஸ்திரீகள் ஆடுவார்கள்; அவர்களாடவும் பாடவும் தொடங்கும் பொழுது நாககன்னியர்கள் லயை தாள சுருதி முதலாகிய நடனக்கிரியைகளைச் செய்வார்கள். இராட்சத ஸ்திரீகளுக்குத் தெய்வப் பெண்கள் பணிப் பெண்களாகி, ஆபரணங்களும், வஸ்திரங்களும், பூமாலைகளும், சந்தனமும் எடுத்துக் கொடுத்துக்கொண்டிருப்பார்கள். பிரமதேவர் சொல்லத் தெய்வத்தச்சனுகிய விஸ்வகர்மா அனேக காலமாக வருத்தப்பட்டுக் கை தேர்ந்து பொன்மலையின்மேல் இரத்தின மழை பொழிந்தது போல ஸ்வர்ணத்தினுற் செய்து இரத்தினங்களிழைத்து அருமையாகச் சிருஷ்டித்தான். வீணையோசையில் வேதகோஷம் மறைகின்றது. வேதகோஷத்தில் கடலொலி மறைகின்றது. உப்பரிகையினிடந்தோறும் ஸ்திரீகள் பரிமளமுண்டாகும்படி ஊட்டுகின்ற அகிற்புகையில் மேகம் மறைகின்றது. பளிங்கினுற் செய்யப்பட்ட மாளிகைதோறும், தேன் துளிக்கின்ற கற்பகச் சோலைதோறும், எல்லாரும் கள்ளுண்டு ஆடுகின்றவர்களும், பாடுகின்றவர்களுமாய்ச் சந்தோஷிக்கின்ருர்களேயல்லாமல், துக்கிக்கின்றவர்களைக் காணேன்! இராட்சத ஸ்திரீகளுக்குப் பிராணபதமாயிருக்கின்ற இராட்சதர்கள், அந்த ஸ்திரீகளுடைய அதராமிர்தத்தையுண்டு, அவர்களுடைய இனிமையான வார்த்தைகளைக் கேட்டு, அவர்கள் ஊடலைக்கண்டு அவர்களை வணங்கி, ஆவலைத் தீர்ப்பார்கள். இந்த இலங்கையானது இதில் வாசஞ்செய்கின்ற ஸ்திரீகளுடைய சிவந்த வாயினுல் சமுத்திரத்தில் பவளக்கொடி படர்ந்தது போலவும், அவர்களுடைய நேத்திரத்தால் குவளைகள் புஷ்பித்த தடாகம் போலவும், முகங்களினுல் தாமரைக் காடு போலவும் பிரகாசிக்கின்றது. இராட்சதர்கள் எழுந்து திரிகிறதனுலே இந்நாள் வரையில் அண்டமானது கிழிந்து போகாமலிருக்கிறது அதிசயமென்றே சொல்ல வேண்டும். பிரமாதி பிபீலிகாந்தமாகிய சீவகோடிகளெல்லாம் இந்த இராட்சத ராசிக்கு நூற்றுக்கு ஒன்ருக உறையிடுகிறதற்கும்

போதா. மற்றும், ஸ்தூல தேகத்தையுடையவர்களும், அளவில்லாத வரங்களையுடையவர்களும், எவர்களாலும் அறியப்படாத மாயையையுடையவர்களும், உலகத்தையெல்லாம் கொல்லுகின்ற பலமுண்டாகிய ஸ்திரீகூட்டத்தையுடையவர்களுமாயிருக்கின்றார்கள். இந்த நகரத்தின் தெருக்களில் ஒரு தெருவிலிருந்து மற்றொரு தெருவுக்குப் போகிறது, ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்துக்குப் போகின்றதாயிருக்கின்றது. வீரகண்டையில்லாத காலும், ஆயுதமில்லாத கையும், அக்கினிப்பொறி பறவாத கண்ணுமுடைய புருஷர்களே இல்லை. அவர்களுடைய உச்சியிலுதைத்துச் செம்பஞ்சழியாத பாதமுடைய ஸ்திரீகளுமில்லை. இந்தப் பட்டணத்தை அழிக்கிறதைக் குறித்துப் பின்பு பார்த்துக் கொள்வோம். முதல் நம்முடைய வானரசேனைகள் இதில் வந்து பிரவேசிக்கிறதே அருமை; ஆகிலும், அதுவும் பெரிதன்று. வந்தாலும், இராட்சத ஸ்திரீகளும் புருஷர்களும் பிணக்கினால் வீதியிடமெல்லாம் தூர்ந்துபோகின்றதனால், அந்த வானரங்கள் அடி பெயர்த்துச் சஞ்சரிக்க முடியாது. ஆரங்களும், பூமாலைகளும், சந்தனமும், யானை மதமும், குதிரைவாய் நுரையுமாகிய இவையெல்லாம் ஆற்று நீரோடு வந்து விழுந்து தனக்குள்ளே அடங்கும்படி கொள்ளுகின்ற இந்தச் சமுத்திரத்தைப் போல ஆழமுடையது வேறொன்றுண்டோ! இந்த இலங்கையைப்பற்றி நான் ஸ்ரீ ராமரிடத்திற்போய்ச் சொல்லுகின்ற காலத்தில், வில் வீரர்களே மிகுதியாயிருக்கின்றார்கள் என்பேனோ! வேல் வீரர்களே விஸ்தாரமாய் இருக்கின்றார்களென்பேனோ! தண்டு, பிண்டி, பாலம் முதலாகிய பல வித ஆயுதங்களைக்கொண்டு போர் செய்கின்றவர்களே பிரபலமாயிருக்கின்றார்கள் என்பேனோ! மற்சண்டை செய்கிறவர்களே அனேகராயிருக்கின்றார்கள் என்பேனோ!'' என்று இப்படி அனுமரானவர் அந்த இலங்கையைப் பார்த்து யோசித்து, "இங்கே இராட்சதர்கள் வத்து நம்முடனே யுத்தஞ்செய்தாலும் செய்வார்கள்!'' என்று

கருதி, தம்முடைய ஸ்தூல ரூபத்தைச் சுருக்கிக்கொண்டு சிறிய உருவமாய் அந்த மலையினிடத்திலிருந்தார். அப்பொழுது சூரியன் மேற்குச் சமுத்திரத்திற்போய் மறைந்தான்.

இப்படிச் சூரியன் மறையவே, உலகம் முழுவதும் இருளானது வந்து சூழ்ந்துகொண்டது எப்படியிருந்ததென்றால், பூர்வஜன்ம புண்ணியத்தினாலே அந்தியத்திலே பாக்கியத்தைப் பெற்று, ஸ்வய புத்தியுமில்லாமல், தெரிந்தவர்கள் சொல்லும் சொல்லையும் கேளாமல் தனக்கு எப்படியும் மரணம் வருமென்கிறதை நினையாமல், சத்தியமாகிய நிலையிலும் நில்லாமல் இருக்கின்ற ஒருவனுடைய பாவங்கள் அவனைச் சூழ்ந்துகொள்கிறது போல இருந்தது. பின்னும் சிவனுடைய போர்வையாகிய யானைத்தோலை வாங்கிப் பிரமதேவன் அண்டத்திற்கு ஒரு கௌசனையாகப் போர்த்தது போலவும், ஆதிசேஷன் தன்னுடைய ஆயிரம் வாய்ப்பற்களிலும் அனேக காலமாக ஊறிக்கொண்டிருந்த விஷத்தையெல்லாம் கக்க, அது உலகமெல்லாம் நிறைந்தது போலவும், மேலாகிய பிரம வமிசத்திலே தோன்றிய இராவணேஸ்வரன் கற்பினையுடைய பிராட்டியை எடுத்து வந்து சிறை வைத்த பின்பு அவனுடைய கீர்த்தியானது துல்லியமாகிய வெள்ளை நிறம் போய்க் கறுத்து அது புவனமுழுவதும் பரவியது போலவும், அண்டமுழுவதும் அந்த இருள் பரந்து மூடிக்கொண்டது.

அப்படி இருள் பரந்த வேளையில் இராவணேஸ்வரனுடைய ஏவலினாலே அனேக இராட்சதர்கள் அந்த இருளின் மார்க்கமாக இந்திரலோகத்திற்கு ஓடுவார்கள். அனேகர் யமலோகத்திற்குப் போவார்கள். "தேவர்கள் முன்னே போய்விட்டார்களே! இந்நேரம் வரையில் நாம் போகாமலிருந்தோமே! இதைக்குறித்து நீங்கள் தாமசமாயிருந்ததென்னவென்று நம்முடைய ராஜா கோபஞ்செய்வாரே!" என்று நினைத்துக் சித்தர்கள் முத்தாரங்களும், தலையிற்

சூடிய மாலைகளும், உத்தரீயமும் சரிந்து விழும்படி ஓடி வருவார்கள். தேவஸ்திரீகளும், விஞ்சைய ஸ்திரீகளும், நாக ஸ்திரீகளும், யக்ஷ ஸ்திரீகளும், கிரமங் கிரமமாகப் பணிவிடை செய்யும்படி மின்னற்கூட்டங்கள் நெருங்கி வருவது போல ஆகாயத்திலிருந்து வருவார்கள். தேவர்களும், அசுரர்களும், நாகலோகத்தாரும், யக்ஷர்களும், வித்தியாதரர்களும், மற்றுமுள்ள யாவரும் பிரதாப இலங்கேஸ்வரனுடைய குற்றேவல்களைச் செய்ய, வானத்திலிருந்து தங்கள் தேக காந்தியினுல் இருள் நீங்கும்படி கூடி வருவார்கள். இவைகளை யெல்லாம் ஆஞ்சநேயர் பார்த்துக்கொண்டிருந்தார்.

அச்சமயத்திலே சந்திரோதயமாயிற்று. அது எப்படியிருந்ததென்ருல், அரிதாகிய தீவினையென்னுங் கோடையானது தகிக்க உலர்ந்து தீய்ந்து போகிய தர்மமாகிய முளையானது, அனுமரென்கிற மழை வந்து உதவி செய்ய முளைத் தெழுந்ததுபோலிருந்தது. மற்றும், "இராமதூதராகிய ஆஞ்சநேயர் வந்தபடியினுலே என் நாயகனுகிய தேவேந்திரன் இனிச் சுகப்படுவான்," என்று சந்தோஷித்து எட்டிப் பார்த்த கீழ்த்திசையாகிய பெண்ணின் முகம் போலவும், "எங்கள் பகை இன்றைய தினத்துடனே தொலைந்தது!" என்று நினைத்தெழுந்த இந்திரனுடைய தவளக்குடைபோலவு மிருந்தது. உதயமாகிப் பிரகாசிக்கின்ற சந்திரனுகிய வெள்ளிக் குடத்தினுல் பாற்சமுத்திரத்தை மொண்டு வானமானது சொரிந்தது போல, நட்சத்திரமாகிய மீன்களுடனே நிலவின் பிரகாசம் பூமியெங்கும் பரந்து நிறைந்தது. வானமே காமதேனுவாகியும், சந்திரோதயமே அதன் மடியாகியும், சந்திரனே முலையாகியும், சந்திரப் பிரகாசமே தாரையாய்ச் சொரிந்த பாலாகியும் பிரகாசித்தன. அந்தத் தருணத்தில் ஆஞ்சநேயர்மேல் தேவர்கள் புஷ்ப வருஷம் வருஷித்தார்கள். அந்தப் புஷ்பங்கள் இராவணனுக்குப் பயந்து பூமியில் விழாமலும், அப்புறம் போகாமலும், அந்தரத்திலேயே தங்கி நிற்கிறது போல நட்சத்திரங்கள் பிரகாசித்தன. நிலவினுல்

அழிந்த இருளானது உருவமெடுத்து அங்கிலவின் குஞ்சுகளைக் கடித்து விழுங்குகிறது போல, மல்லிகைப் புஷ்பந்தோறும் வண்டுகள் மொய்த்துச் சூழ்ந்தன. சந்திர கிரணத்தின் பிரகாசம் இலங்கா பட்டணமெங்கும் நிறைந்தது எப்படியிருந்ததென்றால், வெள்ளை வஸ்திரத்தினாலே உறை செய்து அந்தப் பட்டணம் முழுமையும் மூடினது போல இருந்தது. பின்னும் அந்தச் சந்திரப்பிரகாசம் ஸ்ரீராம பாணத்தின் வேகத்தைப்போல அனுமார் வந்து சேர்ந்ததனால், அந்த ஸ்ரீராகவருடைய கீர்த்தி இலங்கையின் அகழ் அரண் முதலாகிய எவ்விடங்களிலும் போய் நிறைந்தது போலவுமிருந்தது. அப்போது ஆஞ்சநேயர் இலங்கைக்குள்ளே எந்த வழியினால் போகலாமென்று யோசனை செய்து, பின்பு ஒரு வழியால் போகும்படி பவளமலையை விட்டெழுந்து, அப்பால் நடந்தார். அது கண்டு தேவர்கள் வாழ்த்தினார்கள்.

பின்பு சமுத்திரமே அழகாக மேலேழு லோகத்திற்கு அப்புறத்திலும் உயர்ந்து மகாபிரளயம் வருங்காலத்திலும் அழியாதிருக்கின்ற சொர்ண மதிலின் உன்னதத்தைப் பார்த்து, "சந்திர சூரியர்கள் வஞ்சகனாகிய தசக்கிரீவனுடைய ஆக்கினைக்குப் பயந்து இந்த இலங்கையின்மேல் வருகிறதில்லையென்று சொல்லுகின்றார்களே! அது சரியன்று. இந்த மதில் உயர்ந்திருப்பதனால், ஏறி அப்பால் போகக்கூடாமையாலேதான் விலகிப் போகின்றார்கள். அன்றியும், இந்த இலங்கை மதில் சத்துருக்களுடைய அளவில்லாத சைனியங்களெல்லாம் பிரகாசிக்கத்தக்க விசாலமுடையதென்போமாகில், அவ்வளவு மாத்திரமேயல்ல; பிரமாண்டத்தின் மத்தியில் எவ்வளவு விசாலமுண்டோ, அவ்வளவு விசாலத்தையும், அதன் உன்னதமெவ்வளவோ அவ்வளவு உன்னதத்தையுமுடையது!" என்று எண்ணி, அதற்கு ராஜாவாகிய இராவணனைக் குறித்து மிகவும் அதிசயப்பட்டார். ஆஞ்சநேயர் சிங்கமும் மதயானையும் நாணும்படி நடந்து தனியே அந்தப் பட்டணத்திலே புகுந்து, பிராட்டி

யாரைத் தேடும்படி பிரயத்தனப்பட்டுப் போனவர், எமனுடைய வாய்க்குச் சமானமாகிய அந்தக் கோட்டை வாயிலை எதிரே பார்த்து, "இந்த வாயில் மகாமேருவை நிறுத்தி நடுவே வெளி செய்ததோ! தேவலோகத்திற்குப் போகும்படி சமைத்த படிக்கட்டோ! மேலேழு லோகமும் நிலை நிற்கிறதற்கு நடுவே நாட்டி வைத்த தூணோ! கடல் நீரெல்லாம் புகுந்து போகிறதற்கு விட்ட வழிதானோ! சத்த லோகங்களிலும் வாழ்கின்ற சகல உயிர்களும் இராவணனுடனே வந்து எதிர்த்தால் இதற்குள் ஒன்றன் பின்னேயொன்ருய்ப் புகவேண்டுமென்கிற கிரமம் வேண்டுவது இல்லை. ஏககாலத்திலேயே எல்லாம் ஒருமிக்க நுழைந்து போகத்தக்கதாயிருக்கின்றது. நம்முடைய வானரவீரர்கள் வந்து புகத்தக்க வழி இதுதானென்று நிச்சயிப்போமானுல், இங்கே பகைவர்கள் ஏழு சமுத்திரத்திலும் அதிகமாயிருக்கிருர்கள். இதற்கப்புறத்திலும் கள்ளச் செய்கைகளையும் மிகுந்த பராக்கிரமத்தையுமுடைய இருநூறு வெள்ளம் இராட்சதர்கள் இரண்டு கையிலும் வாளையுருவிப் பிடித்துக் கொண்டு, அந்த வாள்கள் பளபளவென்றும், முள்ளைப் போலும் கடுமையாகிய கோர தந்தங்கள் தகதகவென்றும் பிரகாசிக்க, ஒவ்வொருவர் ஒவ்வொரு கரியமலை போல நின்ற வண்ணம் இருக்கின்ருர்கள். பின்னும் அனேகர் சூலம், மழு, வேல், தோமரம், இருப்புலக்கை, வில், அம்பு, கப்பணம், முசுண்டி, கணையம், சக்கரம், வச்சிரம், சரிகை, குந்தம், பிண்டி, பாலம், அங்குசம், கவண், பாசம் முதலாகிய பல வகை ஆயுதங்களையும் ஏந்திக்கொண்டு, பங்குனி மாதத்திலே மலர்ந்திருக்கின்ற முருக்கங் காடு போலச் சிவந்த மயிரும் மிகுந்த கோபமும் உடையவர்களாகவுமிருக்கின்ருர்கள். அன்றியும், அனேக இராட்சதர்கள், இவ்வாயிலுக்கெதிரே ஆயுதபாணிகளாய் எமனுங் கண்டு நடுங்கும்படி கூட்டமாயிருந்து காவல் காக்கின்ருர்கள். ஆகையால், எந்தத் தேவர்கள், எந்த அசுரர்கள், எப்படிப்பட்ட

சாமர்த்தியர்களானாலும், இந்தக் கோட்டை வாயிலைக் கடக்க மாட்டுவார்களா? சத்துருக்களாகிய இவர்களுடைய காவல் இப்படிப்பட்டதானால், இனி ஸ்ரீராமரும் நாமும் வந்து யுத்தந் தொடங்கினால் ஏதாய் முடியுமோ! மேலும், அந்தக் கடலைக் கடந்தது பிரயாசமன்று; இந்த வாயிலைக் கடக்கிறதுதான் மிகவும் பிரயாசமாயிருக்கின்றது! மனம் சிறிது சலனப்பட்டால் நாம் எண்ணி வந்த காரியத்தை முடிக்க முடியாது. யுத்தஞ்செய்யத் தொடங்குவோமானால், இந்த இராட்சதர்கள் நெடுநாள் யுத்தஞ்செய்வார்கள். ஆகையால், இந்த வாயில் மூலமாகப் போகின்றது மகா கடினமாகும். நம்மைப் போலும் பராக்கிரமசாலிகளாயிருக்கின்ற பகையாளிகள் உண்டாக்கிய வழியால் போவது அழகன்று. சூரிய சந்திரர்களும் சஞ்சரியாத மதிலைத் தாண்டித்தான் உள்ளே போக வேண்டும்,'' என்று எண்ணி ஒரு பக்கத்திற்போனார்.

அப்போது அந்த இலங்காபுரியைத் தன் பிராணனைப் போலக் காத்துக்கொண்டிருக்கின்ற *இலங்கா தேவி* என்றும் *இலங்கிணி* என்றும் சொல்லப்படும் பெயரினையுடையவள், அனுமரைக் கண்டு சர்ப்பம் போலச் சீறி, கண்களில் நெருப்புப் பொறி பறக்க ஓடி வந்தாள். அவள் எட்டுத் தோளும், நாலு முகமும், சத்தலோகத்தையும் சூழ்ந்து கவிக்கின்ற சரீரப் பிரகாசமும், சுழல்கின்ற கண்களும், திரிலோகத்தாரையும் உள்ளே வாராமல் தடுத்துக் காக்கின்ற பலமும், பொறுமையில்லாமையும் உடையவள்; "யாராகிலும் இந்தப் பட்டணத்திற்குள் வருகின்றார்களோ!'' என்று நான்கு திசைகளையும் பார்த்து, மேக கர்ஜிதம்போலக் கொக்கரித்திருப்பவள்; காற்சிலம்புகள் சத்திக்க, மின்னலைப்போல ஆபரணங்கள் ஜொலிக்க, வேலாயுதம், சூலாயுதம், பாசம், சங்கு, அம்பு, வில் முதலானவைகளும் கையிலே தரித்துக்கொண்டு உலாவுகின்றவள்; மகாமேரு பர்வதம் போலப் பருத்து உயர்ந்த சரீரமும், அர்த்த சந்திரனைப் போல வளைந்த பற்களுமுடையவள்; வாய்களிலே

புகையெழும்ப எமனுங் கண்டு பயப்படும்படி கோபம் அதி கரிக்கின்றவள்; பஞ்சவர்ணப்பட்டுவஸ்திரமுடுத்து, ஸ்வர்ண உத்தரீயம் போர்த்து, முத்தாரம் தரித்திருக்கின்றவள்; கரு டனைப் போல அதிவேகமுடையவள்; மந்தாரமாலை பிரகா சிக்கக் கிரீடங்களணிந்து, இலங்கா பட்டணத்தைத் தன் கண்ணுக்குள்ளே வைத்துக் காத்துக்கொண்டு இருக்கின்ற வள்.

அப்படிப்பட்ட இலங்கா தேவியானவள் அனுமரைப் பார்த்து, "ஆரடா! நில்! நில்!" என்று அதட்டினுள். அது கண்டு அனுமரானவர் வாவென்று சொல்லிக்கொண்டு, அவ ளுக்குச் சமீபத்திலே போனர். அவள் அவரைப் பார்த்து, "அடா, புத்தியில்லாதவனே, அச்சமில்லாமல் தகாத காரி யம் செய்தாய்! நீ இலையும், காயும், கனியும் தின்று திரி கின்ற குரங்கானபடியினலே உன்னுடன் எனக்கு என்ன பேச்சு! மதிலின்மேலேறி உன்னுடைய பிராணனைப் போக் கடித்துக்கொள்ளாதே; சும்மா ஓடிப் போய்ப் பிழை!" என்று சொன்னுள். அந்த வார்த்தையைக் கேட்ட ஆஞ்ச நேயர், மனத்திற்குள்ளே களித்துப் பின்பு அதிக கோபங் கொண்டு, தாமும் அவளை அதட்டி அழைத்து, "நான் இந் தப் பட்டணத்தைப்பார்க்கவந்தேன். எளியவனுகிய நான் வந் தால் உனக்கென்ன நஷ்டம்?" என்று கேட்டார். , இலங்கா தேவி கோபித்து, "அடா, குரங்கே, நான் போகச்சொன்னு லும் போகாமல், எதிர் உத்தரம் சொல்லிக்கொண்டு, பயப் படாமல் நிற்கிருயே! நீ யார்? திரிபுராந்தகனுன சிவன் முத லானவர்களும் இந்த ஊர்க்குள் வரப் பயப்படுவார்கள்! அப் படியிருக்க, உன்னலே பார்க்கத்தகுந்த ஊரா இந்த ஊர்?" என்று கூறி நகைத்தாள். அவள் நகைத்தது கண்டு, அனு மரும் மனத்துக்குள்ளே நகைத்தார். அவள் அது தெரிந்து கொண்டு, "அடா, குரங்கே, நீ யாரனுப்ப வந்தாய்? உன் பிராணன் போனலல்லாமல் நீ ஓடப்போகிறதில்லை," என்று சொன்னுள். அதற்கு அனுமர், "நானிந்த ஊருக்குள்ளே

போய்ப் பார்த்தாலல்லாமற் போகிறதில்லை,'' என்று சொன்னார். அதைக்கேட்கவே, "இவன் வானரனல்லன்! வஞ்சகத்தைக்கொண்டு வந்தவனாக வேண்டும்! என்னைக் கண்டால் யமனும் திடுக்கிட்டு மூர்ச்சை போவான்! இவனோவென்றால், அதிக தைரியத்துடனே பிரளயகால ருத்திரனைப்போல நகைக்கின்றான்! ஆகையால், இவன் ஆரோ!'' என்று மனங்கலங்கிக் கோபம் அதிகரிக்க, "இவனை அவசியம் நான் கொல்வேன்! கொல்லாமற்போனால் இவ்வூருக்கே மோசம் வரும்!'' என்றெண்ணி, எட்டுக் கண்களிலும், நான்கு வாயிலும் திக்குத் திக்கென்று அக்கினியானது பொங்கி எழும்ப, "அடா, நீ மதிலின்மேல் போகாய்! போகாய்!'' என்று அதட்டித் தன் கையிலிருந்த சூலாயுதத்தை உக்கிரத்துடன் அனுமர்மேல் எறிந்தாள். அந்தச் சூலமானது மின்னலைப்போலத் தகத்தகாயமாய்ப் பிரகாசித்துக்கொண்டு தமக்கெதிரே வரக்கண்டு, ஆஞ்சநேயரானவர் அதைக் கையினாற்பிடித்து, ஆகாயத்திலே கருடன் சர்ப்பத்தைத் துணிக்கிறது போலத் தேவர்கள் சந்தோஷிக்கவும், அவள் நெஞ்சு திடுக்கிடவும், நொடிக்குள்ளே ஒடித்து எறிந்தார்; சூலாயுதம் ஒடிபட்டுப்போனது கண்டு இலங்கா தேவி யுகாந்த காலாக்கினி போல அதிக கோபங்கொண்டு, பின்னும் தெய்விகமாகிய பலவித ஆயுதங்களையும் பிரயோகம் செய்ய எத்தனப்பட்டாள். அதையறிந்த அனுமரானவர் அவள் கையிலிருந்த ஆயுதங்களையெல்லாம் ஒன்றொழியாமல் சீக்கிரத்தில் பறித்து ஆகாயத்தில் விட்டெறிந்தார். அது கண்டு, அனுமர்மேல் பிரயோகஞ் செய்வதற்கு வேறே ஆயுதம் இல்லாததனாலே இலங்கா தேவியானவள் பிரளயகால மேகம் போலக் கர்ஜித்து, பர்வதங்களை எடுத்தெறிந்து பந்தும் அம்மானையும் ஆடுகின்ற தன் கைகளினாலே நெருப்புப்பொறி சிதறும்படி ஆஞ்சநேயரை ஓங்கி அடித்தாள். அப்படி அடித்தும் அடியாததற்கு முன்னே அவர் அவளுடைய கைகளையெல்லாம் ஒருமிக்கத் தம் ஒரு

கையினாலே சேர்த்துப் பிடித்துக்கொண்டு, "இவள் பெண் பிறப்பையுடையவள்; இவளைக் கொன்றால் தோஷம் லபிக்கும். ஆகையால், கொல்லலாகாது," என்று நினைத்து, ஒரு கையினால் அவள் மார்பில் ஓர் அறை அறைந்தார். அந்த அறை படவே, இடி விழுந்த பர்வதம் போலத் திடீரென்று பூமியில் விழுந்து வாயினால் இரத்தங் கக்கிக்கொண்டு அந்த இரத்த வெள்ளத்தில் அழுந்தி மூர்ச்சித்து மனஞ்சலித்து, பூர்வத்தில் பிரமதேவன் தனக்குக் கட்டளையிட்டு இருந்ததை நினைத்துக்கொண்டு எழுந்திருந்து, சகல லோகங்களிலும் உள்ள யாவரும் யாவையும் சிரத்தா பத்தி விசுவாசத்துடனே நமஸ்காரம் செய்கின்ற திருவடித் தாமரையையுடைய ஸ்ரீ ராமபிரானுக்கு இணங்கிய தூதராகிய ஆஞ்சநேயருக்கு முன்னே வந்து நின்று, "ஐயா, மகானுபாவரே, முற்காலத்திலே பிரபஞ்சத்தையெல்லாம் சிருஷ்டி செய்த பிரமதேவரானவர் என்னை இந்த இலங்கையைக் காத்துக்கொண்டிருக்கச் சொல்லி ஆஞ்ஞாபித்தார். என் பெயர் இலங்கா தேவி. நான் கிருத்தியந்தப்பி மனம் திகைத்து உம்முடைய விஷயத்தில் இந்த அற்ப காரியத்தைச் செய்தேன்! நீர் என்னைக் கொல்லாமல் பிழைத்துப் போம்படி கிருபை செய்வீரேயாகில், உமக்கு உண்மையைச் சொல்லுகிறேன்," என்று சொல்லத்தலைப்பட்டாள்: "அந்நாளிலே அந்தப் பிரமதேவரை நோக்கி, 'சுவாமி, நான் எத்தனை காலம் இந்த இலங்கையைக் காத்துக்கொண்டிருப்பேன்,' என்று கேட்டேன். அதற்கு அவர், 'நீ நெடுங்காலம் காத்துக்கொண்டிருந்தால் ஒரு குரங்கு வந்து உன்னைக் கையினாலே தீண்டி அடிக்கும். அப்பொழுது இலங்கைக் காவலை விட்டு நீ நம்மிடத்திற்கு வந்துவிடுவாய். பின்பு, அந்தப் பட்டணம் அழிந்து போம்,' என்று சொன்னார். அவ்வண்ணமே வந்து முடிந்தது. 'தர்மம் வெல்லும்; பாவம் தோற்கும்,' என்பதைக் குறித்துச் சொல்ல வேண்டுமோ? இனிமேல் நீர் நினைத்த காரியமெல்லாம் யாதொரு தடையுமில்லாமல் முடியும். மேலும், உம்

மால் ஆகாத காரியம் ஒன்றுண்டோ ? நீர் சுகமாய்ப் பட்டணத்திற்குள்ளே போய் உம்முடைய காரியத்தைப் பார்த்துக் கொள்ளும்,'' என்று சொல்லி, ஆஞ்சநேயருக்குத் தண்டனிட்டு, அந்த இலங்காதேவி பிரமலோகம் போய்விட்டாள்.

வீராதி வீரராகிய ஆஞ்சநேயர் சந்தோஷமாய்ப் பார்த்து, அப்படித்தான் முடியுமென்றெண்ணி, தாரகபிரமமந்திரமாகிய ஸ்ரீ ராமருடைய நாமத்தை மனத்திலே தியானஞ்செய்து துதித்து, அவரை வணங்கி, அந்த இராட்சதர்களுடைய இலங்கை மதிலைத் தாண்டிப் பட்டணத்திற்குள்ளே போய்ப் பெரிய பாற்கடல் முழுதும் சிறிய மோர்த்துளியாகிய பிரை கலந்தது போல எங்கும் வியாபித்தவராகி, இரத்தினங்களினுற் செய்யப்பட்ட உன்னதமாகிய உப்பரிகைகளெல்லாம் ஜாஜ்வல்யமாய்ப் பிரகாசித்துப் பகலையுண்டாக்குகிறபடியினுலே, அதைக் கண்டு, "சூரியோதயமாயிற்ருே!'' என்று அச்சங்கொண்டார். உடனே செவ்வையாய்ப் பார்த்து, "சூரியோதயமானதன்று; இது இந்த நகரத்திலுள்ள மாட மாளிகைகளின் பிரகாசம்,'' என்று தெளிந்து, "ஆஹா! ஆஹா! இந்த இரத்தின காந்திக்கு முன்னே சூரியன் மின்மினிப்போலல்லவோ தோற்றுவான்!'' என்று அதிசயப்பட்டார். பின்னும், "மகாமேருவுக்கு ஒப்பாகிய சொர்ணமதிலின் மத்தியில் தோஷரகிதமாகிய இரத்தினங்களழுத்திய உப்பரிகைகளின் பிரகாசத்தினுல் இருள் நீங்குதலால், இந்த இலங்கையிலிருக்கின்ற இராட்சதர்கள் பகற்காலத்தில் சஞ்சரிக்கிறது போல, நிசியாகிய அர்த்தராத்திரிக் காலத்திலும் சாதாரணமாய்ச் சஞ்சாரம் செய்கிறபடியினுலே, இவர்களுக்கு அந்தக் காரணத்தைப்பற்றி நிசிசரரென்று பெயருண்டாயிற்றுப் போலும்!'' என்று நினைத்து, "இப்படிப்பட்ட பிரகாசத்திலே வீதியிலெல்லாம் பகிரங்கமாய் நடக்கிறதனுல் குற்றம் வரும்,'' என்று தமது சரீரத்தைக் குறுகச் செய்துகொண்டு, மாளிகையின் பக்கத்தில் மந்தரகிரியைப் போலவும், ஸ்ரீ ராமருடைய கீர்த்தியைப்போலவும் ஒதுங்கி

நடக்கத் தொடங்கினர். பசுக்கள் நெருங்கிய தொழுவந் தோறும், யானை கட்டிய கூடந்தோறும், பந்தி பந்தியாகிய குதிரைக் கொட்டாரந்தோறும், இலட்சுமி வாசஞ்செய்கின்ற வீடுதோறும், பரிமளம் வீசுகின்ற பூஞ்சோலைதோறும், கடலைக்கடந்த தமது பாதத்தினுல் தாவிப் புஷ்பந்தோறும் தாவிச் செல்கின்ற வண்டு போலப் போனர். சூரியன் சந்திரன் முதலாகிய நவக்கிரகங்களுக்கும் நட்சத்திரங்களுக்கும் ஒப்பாகிய அனேகவித இரத்தினங்களால் பந்தி பந்தியாக உண்டாக்கப்பட்டிருக்கின்ற சுவர்த்தலங்கள் சொரிகின்ற ஜோதிச்சாயைகள் தமது திருமேனியில் பாய்கின்றதனுல் வாயு குமாரராகிய ஆஞ்சநேயர் கறுத்த நிறத்தையுடையவராகியும், வெளுத்த நிறத்தையுடையவராகியும், சிவப்பு நிறத்தையுடையவராகியும் காணத்தலைப்பட்டார். ஆஞ்சநேயருக்கு அந்தக் காட்சி எப்படியிருந்ததென்றுல், காண்பதற்கு அரியவராகியும், எளியவராகியும், தமது இருதய கமலத்தில் வாசஞ் செய்கின்ற நாநாவித ரூபத்தையுடைய அந்தரியாமியாகிய ஸ்ரீ ராமசந்திரரைப்போலவேயிருந்தது. எங்குந் தேவகன்னியர்கள் சொர்ணக் குடங்களில் ஆகாய கங்கா ஜலத்தைக் கொண்டு வந்து ஸ்நானஞ்செய்விக்க, இராட்சத ஸ்திரீகள் மயில்களும் அன்னங்களும் நீர் விளையாடுகிறது போல ஸ்நானஞ் செய்கின்றதையும், இளந் தளிரையொத்த கைகள் நோவ வீணையை மீட்டி, லயைகான சுருதிகானப் பிரமாணத்துடனே பாடும் பாடல்கள் மேகம் கர்ஜிக்கின்றதனுல் அந்தப் பிரமாணம் தப்பிப் போகின்றதென்று விஞ்சைய ஸ்திரீகள் உப்பரிகைகளின்மேல் தவழ்கின்ற மேகத்தின் வாயைத் தங்கள் கைகளினுல் மூடுகின்றதையும் கண்டார். பூப்பந்தலிடப்பட்டு இரத்தின தீபங்கள் ஜொலிக்கின்ற பொன் மயமாகிய நடன சாலைகளில் புஷ்ப சயனத்தில் வந்திருந்து கந்தர்வஸ்திரீகள் ஆடுகின்ற நாட்டியத்தைப் பார்க்கின்றவர்களையும், பளிங்கினுற்கட்டிய மேடைகளின்மேலிருந்து பயிருக்கு நீர் பாய்ச்சுகிறது போலத் தங்

களுக்கு நாயகன்மார்களிடத்தில் காமம் அதிகரிக்கும்படி கள்ளுண்கிறவர்களையும், செம்பவளத்திற்குச் சமானமாகிய பாதத்தில் செம்பஞ்சின் குழம்பால் சித்திரமெழுதிச் சரீரத்தில் மிகுந்த வாசனையுடைய கலவைச்சாந்து பூசிக் கண்களில் மையிட்டுப் பலவித ஆபரணங்களும் கற்பக விருக்ஷம் கொடுக்க வாங்கி அணிந்துகொள்ளுகின்றவர்களையும், நாயகன்மார்கள் செய்த குற்றமானது தங்கள் உயிரை வருத்த ஊடிய ஸ்திரீகள் பெருமூச்செறிந்து இடை துவளக் காற்சிலம்பு சத்திக்கும்படி உதைக்கச் சந்தோஷித்து மயிர்க்கூச்செறிகின்றவர்களையும், கள்ளுண்டு கொண்ட மயக்கத்தினால் கண் சிவந்து வாயிதழ் வெளுத்துப் புருவம் வளைந்து துடிக்க, வெயர்வுண்டாகி முகமானது வேறுபட்டு அக்கள்ளை நிரப்பியிருக்குங் குடத்திலே காண அதைக் கண்ட மாத்திரத்தில் தங்கள் சகக்களத்தியென்று நினைத்துப் புருஷர்களைக் கோபிக்கின்றவர்களையும் கண்டார். நாயகன்மார்களைப் பிரிந்து ஸ்தனத்தின்மேல் அணிந்த சந்தனம் தீயும்படி தாமரை மலரின்மேல் வேறொரு தாமரை மலர் பூத்தது போல முகத்தினிடத்தில் கையை வைத்துக்கொண்டு அசைவற்றிருந்து பெருமூச்செறிகின்றவர்களையும், நாயகன்மார்களின் மேல் கோபத்தால் சயனத்தில் பிரஞ்ஞை தப்பிக் கிடந்து காமம் அதிகரித்ததால் அவர்கள் வரும் வழியைப் பார்த்துத் தாங்கள் அனுப்பின தாதிகள் நகைத்துக்கொண்டு வரக் கண்டு உயிர் வந்து துடித்தெழுகின்றவர்களையும், சகல வாத்திய முழக்கத்துடனே தங்கள் தங்கள் வீட்டுத் தெய்வங்களைக் கொண்டாடிப் புஷ்பத்தால் அர்ச்சித்துப் பூசை செய்கின்றவர்களையும், காமப் பிணக்கினால் புருஷர்களின் பக்கத்தில் படுத்துப் பொய்யுறக்கங் கொண்டிருந்து பின்பு அப்பிணக்கு நீங்கிச் சையோகஞ்செய்ய நினைத்துக்கொண்டு மெள்ளக் கண்ணைத் திறந்து பார்க்கின்றவர்களையும், அறிவுடனே அந்தக்கரணம் முதலானவைகளும் நாயகன்மார்களிடத்தில் சேர்ந்திருக்க, அவர்கள்மேல் பிணங்கிப்போய்க்

கதவைச் சாத்துகின்றவர்களையும், மேகத்தைப்போலப் பேரிகை முழங்கத் தேவர்கள் வந்து ஆசீர்வதிக்க முனீஸ்வரர்கள் சோபனங்கள் கூற, அரம்பா ஸ்திரீகள் பல்லாண்டு பாடக் கல்யாணஞ் செய்து மகிழ்கின்றவர்களையும் கண்டார். இப்படிப் பல விதச் செய்கைகளைச் செய்துகொண்டிருக்கின்ற யக்ஷ ஸ்திரீகள் கந்தர்வ ஸ்திரீகள் முதலாகிய அனைவரையும், அனுமரானவர் தெளிவர்கப் பார்த்துக்கொண்டே நடந்து, அப்பால் கும்பகர்ணனுடைய மாளிகைக்குப் போனார்.

அவ்விடத்தில் ஏழு யோசனை விஸ்தீரணம் அகன்று உயர்ந்து நவரத்தின கசிதமாய்த் தேவேந்திரனுடைய பட்டாபிஷேக மண்டபம் போல அதிக சிங்காரமாகிய ஒரு மண்டபம் இருக்கின்றது. அதன் நடுவே ஒரு பஞ்சு மெத்தையின் மேல் சர்ப்பராஜன் சயனித்துக்கொண்டிருக்கிறது போலவும், சமுத்திரம் கிடக்கிறது போலவும், இருளெல்லாம் ஓரிடத்தில் கூடியிருக்கிறது போலவும் பாவங்களெல்லாம் திரண்டு ஓர் உருவமெடுத்தது போலவும், கும்பகர்ணன் படுத்துக்கொண்டு சமுத்திரத்திலே மூழ்கியெழுந்து மூவகைப்பட்ட கதிகளுடனே கற்பகக்காட்டிலே சஞ்சரிக்கின்ற இளந்தென்றற்காற்றானது வந்து முகத்திலே மிருதுவாகத் தவழவும், தேவகன்னிகைகள் பாதம் வருடவும், அவர்கள் முகமாகிய சந்திரனைக்கண்டு சந்திரகாந்தம் கக்குகின்ற நீர் மேலே துளிக்கவும் நித்திரை பண்ணிக்கொண்டிருந்தான். அவனுடைய சுவாசமென்கிற வேகத்தையுடைய பெருங்காற்றானது, ஆஞ்சநேயரை வாயிலின் புறத்திலே தள்ளிக்கொண்டு வந்து நிறுத்தி, மறுபடியும் பராக்கிரமமுள்ள அந்தக் கும்பகர்ணனுடைய மூக்குக்குள்ளே இழுத்துக்கொண்டு போயிற்று. அவர் பயந்து நடுநடுங்கிச் சீக்கிரமாய் அங்கிருந்து வெளியிலே குதித்து, ஆச்சரியப்பட்டுக் கைவிரலைத் தெறித்தார். புழுதிக் கூட்டங்களெழும்பி ஆகாயத்தை அளாவும்படி அவன் மூக்கினின்றும் வெளிப்பட்டுப்

பின்னும் அத்தற்குள்ளே போய் நுழைகின்ற அந்த உசுவாச நிசுவாசம் எப்படியிருந்ததென்றால், உலகங்களையெல்லாம் நாசஞ்செய்கிற பிரசண்ட மாருதமானது யுகாந்தகாலத்தின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு சஞ்சரிப்பதை ஒத்திருந்தது. அவன் சந்திரனைத் தன் பகைவர்களில் சேர்ந்தவனென்று பிடித்து இரு பிளவாக்கித் தின்னும்படி தனது பெரிய வாயினிடத்தில் வைத்தது போல அவனது முகத்தில் கோரதந்தங்கள் பிரகாசிக்க, மந்திரத்தினாலே தடைப்பட்ட நாகம்போலவும், யுகமுடிவைப் பார்த்துக்கொண்டு பொங்கி வாராமல் அடங்கியிருக்கின்ற கடல்போலவும், தன்னை மறந்து உறங்குகின்ற அந்தக் கும்பகர்ணனைப் பார்த்து, "இவன் இராவணனோ!" என்று எண்ணி, அனுமரானவர் அதிக கோபமாய்ச் சமீபத்திலே போய்ப் பார்த்தார். அவனுக்குப் பத்துத்தலையும் இருபது தோளும் இல்லாததனாலே இராவணன் அல்லனென்று குறித்து, கோபமாகிய வடவாக்கினியை அறிவாகிய கடல் நீரால் தணியச் செய்துகொண்டு, பின்பு, "இவன் ஆரோ தெரியவில்லை! நல்லது! எவனாயிருந்தாலுமிருக்கட்டும்! இன்னஞ்சில நாள் வரைக்குந்தானே உயிர் கொண்டிருக்கப் போகிறான்!" என்று மனத்திலெண்ணி, அந்த மாளிகையை விட்டு அப்பாலிருக்கின்ற மாடங்கள், கூடங்கள், மாளிகைகள், ஆடரங்குகள், சபா மண்டபங்கள், தேவாலயங்கள், வேதிகைகள், வித்தியாசாலைகள் முதலாகிய பல வகையிடங்களையும், ஸ்ரீராமருடைய கீர்த்தியே ஒரு வடிவெடுத்தது போன்றிருக்கின்ற அனுமரானவர் தேடிக் கொண்டே போனார். மேரு முதல் அணு வரையிலுள்ள சகல சராசரங்களிலும் நிறைந்திருக்கின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவைப் போல, மாணிக்கமாகிய வாயில்களுக்குள்ளும், சிறிய சாளரங்களுக்குள்ளும், புஷ்பங்களுக்குள்ளும், காற்றுக்குள்ளும், புகைகளுக்குள்ளும், அதற்குத் தக்கபடி ஸ்தூலமும் சூட்சுமமுமாகிய உருவமெடுத்து நுழைந்து லோகமாதாவைத் தேடிக் கொண்டு போகிற அனுமருடைய நிலைமையை யார்தான்

தெரிந்து சொல்லக்கூடும்! இந்தப் பிரகாரம் எந்த இடங்களிலும் போய் எவ்வகைப்பட்ட ஸ்திரீகளேயும் காணும் பொருட்டு, சொர்க்க மத்திய பாதாளங்களிலுள்ளவர்களெல்லாம் விரும்பும்படி அவதரித்த புண்ணிய சீலராகிய விபீஷணுழ்வானுடைய திருமாளிகைக்குள்ளே புகுந்தார்.

பவளத்தினல் அழகாகக் கட்டியிருக்கிற அந்த மாளிகையில் பளிங்கு மேடையின்மேல் தேன் துளிக்கின்ற பாரிஜாத புஷ்பப் பந்தலிலே அந்த விபீஷணர் படுத்துக்கொண்டிருந்தார். அவர் படுத்திருந்தது எப்படியிருந்ததென்ருல், தர்மமானது தனக்குரிய வெளுத்த நிறத்துடனே அந்த ஊரிலுள்ள இராட்சதர்களுக்கு முன் இருக்க முடியாதென்று பயந்து, அவர்களைப்போலக் கறுத்த ரூபமெடுத்து ஒளித்துக் கொண்டிருக்கிறது போலிருந்தது. அப்படிப்பட்ட விபீஷணரைக் கண்டு அவ்விடத்தில் நின்று அவருடைய விவேகத்தைத் தம்முடைய விவேகத்தினல் அளவிட்டு, "இவன் குற்றமற்றசற்குணத்தையுடையபரமோத்தமன்," என்றுஅவரைக் குறித்துச்சந்தோஷப்பட்டு, அப்பால் நடந்து போய், ஸ்வர்ணச் சாயையாய்ப், பிரகாசிக்கின்ற ஒவ்வொரு கோடி மாடங்களை ஒவ்வோர் இமைப்பொழுதிலே தேடினுர். அவ்விடங்களில் இந்திரஜித்து என்பவனல் சிறை வைக்கப்பட்டிருக்கின்ற தேவஸ்திரீகள், யக்ஷஸ்திரீகள், கந்தர்வ ஸ்திரீகள், கின்னர ஸ்திரீகள், வித்தியாதர ஸ்திரீகள் முதலாகிய அனேககோடி ஸ்திரீ கூட்டங்களிலும் தேடிக்கொண்டு போய், அவர்களுடைய பல விதமாகிய கிருகங்களையும் கடந்துமுன்னுளிலே தேவேந்திரன் சிறையிருந்த அந்த இந்திரஜித்தினுடைய ஆசாரவாயிலைக் கண்டார். அவ்விடத்திலே கைகளில் ஆயுதங்கள் பிரகாசிக்க மிதமற்ற இராட்சதர்கள் நின்றபடியே பூர்வ கதைகளும் விடுகதைகளும்சொல்லிக்கொண்டு கண்களை இமையாமல் ஜாக்கிரதையாய்க் காவலிருந்தார்கள். அவர்களுடைய கடினமாகிய காவலைக் கடந்து உள்ளே போய், அனேக ஸ்திரீ கூட்டத்தின் மத்தியில் மிக

உல்லாசமாய்ப் படுத்துக்கொண்டிருக்கின்ற இந்திரஜித்தைக் கண்டு, "திரிநேத்திரராகிய சிவபிரானுடைய புத்திரராகிய சுப்பிரமணியர் தம்முடைய ஆறு முகங்களில் ஐந்து முகங்களையும் பன்னிரண்டு கைகளில் பத்துக் கைகளையும் மறைத்து ஒரு முகத்துடனும் இரண்டு கையுடனும் வந்திருக்கிறதுபோலிருக்கின்ற இவன் இராட்சதனே, அல்லது அந்தச் சுப்பிரமணியன்தானே! இவன் சிங்கத்திற்குச் சமானமாகிய மஹா பலவானாகவும் காண்கின்றான். ஆகையால், ஆரோ தெரியவில்லை! இளைய பெருமாளும் ஸ்ரீராமரும் வந்து யுத்தஞ்செய்கின்ற காலத்திலே இவன் அனேக நாள் இளையாமல் யுத்தஞ்செய்வான். இப்படிப்பட்டவனைத் தனக்குத் துணையாகப் பெற்றிருக்கின்ற இராவணன் திரிபுவனத்தையும் ஜயித்ததை ஒரு பொருளாகச் சொல்லக்கூடாது. இவனுக்குச் சிவனும் பிரமாவும் மகாவிஷ்ணுவுமாகிய மும்மூர்த்திகளும் ஒப்பாவார்களென்று சொல்வது விவேகமோ!" என்று தம்முடைய கையை அசைத்து, "இவ்விடத்தில் நாம் தாமதமாயிருந்து காலத்தை வீணாகப் போக்குகிறது நன்மையன்று," என்று அவ்விடத்திலுள்ள மாளிகைகளிலும் அதி சீக்கிரத்தில் தேடி, அந்த இந்திரஜித்தின் அரண்மனையை விட்டு நீங்கி, புகை நுழையாத இடத்திலும் காற்று ரூபங்கொண்டு நுழையத்தக்க ஆஞ்சநேயரானவர் *அதிகாயன்* மாளிகையிலும், பின்னும் அவன் தம்பிமார்களின் மாளிகைகளிலும், மற்றுமுள்ள படைத்தலைவர்கள் அணித்தலைவர்கள் யூகத்தலைவர்களின் மாளிகைகளிலும் தேடிப்பார்த்து, அப்பால் மந்திரி பிரதானிகளுடைய சொர்ண மாளிகைகளிலும் ஸ்ரீராம பாணத்தைப்போல அதி வேகமாய்த் திரிந்து தேடி, பின்பு அந்த மூன்று சுற்றுக்கோட்டைக்கு நடுவேயிருக்கின்ற அகழிக்கு நேராக வந்தார்.

குழந்தைப் பருவத்தில் சூரியனை மாங்கனியென்று பிடிக்கும்படி தாவிய அனுமரானவர் அந்த அகழியைக்கண்டு, "ஏழு சமுத்திரங்களும் ஒன்றாகச்சேர்ந்திருக்கின்றதுபோலிருக்கின்

றதே இந்த அகழி! இதைக்கடக்கக்கூடாது. இனி இராமகாரியத்திற்கு விக்கினம் வந்தது!'' என்று கிலேசித்துப் பின்னும் அதைப் பார்த்து, "இதை அகழியென்று சொல்வார்களாகில், அனேகர் கூடி ஊழிக்கால பரியந்தம் தோண்டினுலும் தோண்ட முடியாது. இராவணனுக்குப் பயந்து சத்த சமுத்திரங்களும் இந்த நகரத்துக்குள்ளே வந்து இப்படிச் சூழ்ந்திருக்கின்றன,'' என்று நினைத்து, அந்த அகழிக்குச் சமீபமாய்ப் போய், "நாம் முன்பு சமுத்திரத்தைக் கடந்து வந்த வேகத்தைப்பார்க்கிலும் இரு மடங்கு அதிக விசை கொண்டு தாண்டின போதும் இதைக் கடக்கக் கூடாது! மேலிருந்து நால் வகையான மேகங்களும் கீழ் விழுந்து கவியும்படி தூக்கினுற்போலப்பொங்கி எழுகின்ற நீர்ப்பெருக்கையுடையதாய், பிரதாப இலங்கேஸ்வரனுடைய சேனு சமுத்திரத்தையொத்திருக்கின்றதே! இந்த அகழியின் சிறப்பை வாயினுற் சொல்லவுங் கூடுமா! இதில் யானைகள் பொழிகின்ற கன்ன மதம் முதலாகிய மூன்று வகைப்பட்ட மதங்களும், குதிரைகளின் வாயிலிருந்து ஒழுகுகின்ற நுரைகளும், தேவரம்பையர்கள் ஸ்நானஞ் செய்கின்ற குங்குமங்கலந்த ஜலமும், இலங்கையிலிருக்கின்ற ஸ்திரீகளுடைய கூந்தலுக்கு ஊட்டிய மயிர்ச்சாந்தும், அகிற்புகையும், தேனும், திவ்வியமாகிய கந்தமும் பரிமளிக்கின்றன. நாரைகள், கொய்யடி நாரைகள், அன்றில்கள், புதாக்கள். உள்ளான், அன்னம், நீர்க்கோழி, நீர்க்காக்கை, சக்கரவாகம், கின்னரம், கொக்கு, குணுல முதலிய பட்சிகள் நிறைந்திருக்கின்றன. ஸ்திரீகள் அணிகின்ற அகில், சந்தனம், கஸ்தூரி, செம்பஞ்சின் குழம்பு முதலானவைகளும் சேர்ந்திருக்கின்ற இந்த அகழியில் மூழ்கிப்போகின்ற ஆண் யானைகளைப் பெண் யானைகள் கண்டு, நம்முடைய நாயகன் வேருெரு நாயகியைப் புணர்ந்து வருகின்ருனென்று நினைத்துப் பிணங்குகின்றன. நீர்த்துறை தோறும் குவிந்திருக்கின்ற தாமரை மலர்கள் ஜானகியாரின் கரசரணுதி அவயவங்களுக்குச் சினேகமாகையால், அந்தப்

பிராட்டியார் சிறையிலிருப்பதைக் குறித்து முகம் வாடியவை போன்றிருக்கின்றன. அன்றியும், நீலமுதலாகிய இரத்தினங்களும், முத்துகளும், கரையின்மேலும், ஜலத்திற்குள்ளும், நாநாவிதமாகப் பிரகாசிப்பது, பாற்சமுத்திரம் முதலாகிய பல சமுத்திரங்களும் ஒன்ருகக் கலந்திருப்பதுபோலிருக்கின்றது,'' என்று குறித்து, அப்படிப்பட்ட அகழியைச் சமுத்திரத்தைக் கடக்கிறது போலக் கடந்து, மதிலையுந்தாண்டி, உட்பிரவேசிக்கக் கூடாத காவலையுடைய அந்த நகரத்திற்குள்ளே போனுர்.

அப்போது அர்த்தராத்திரியாயிற்று. அத்தருணத்தில் யமனும் பயந்து ஓடத்தக்க இராட்சதர்களுடைய பட்டணத்தில் அனுமரானவர் தாம் ஒருவராய் ஒவ்வொன்று பன்னிரண்டு யோசனைப் பிரமாணமாயிருக்கின்ற மூன்று இலட்சம் தெருக்களில் தேடினுர். ஆடல் பாடல்கள் அடங்கின. வீணை மத்தளம் முதலாகிய சகலவாத்திய முழக்கங்களும் அடங்கின. காவற்பறை மாத்திரம் முழங்கத் தலைப்பட்டது. கூடின ஸ்திரீ புருஷர்களெல்லாம் உறங்கினுர்கள். கதவுகளெல்லாஞ் சாத்தப்பட்டன. பூரண ஞானத்தையுடைய உத்தமர்களெல்லாம் நித்திய நியமாதி கருமங்களை முடித்துக்கொண்டு நித்திரை செய்தார்கள். யோகீஸ்வரர்களும் உறங்கினுர்கள். மதயானைகளும் உறங்கின. மயங்கித் திரிகின்ற பித்தர்களும் உறங்கினுர்களென்ருல், மற்றவர்களைக் குறித்து என்ன சொல்லுகிறது! அந்தச் சமயத்திலே, அந்த மதிலுக்குள் இருக்கிற பல ராஜ வீதிகளில் தேடிப்பார்த்து, அப்பால் ஆகாமிய சஞ்சித பிராரத்த கர்மங்களை ஒழித்த ஆஞ்சநேயர், இராவணனுடைய இருப்பிடத்தைச் சுற்றியிருக்கின்ற அகழையும் மதிலையுங் கடந்து உள்ளே பிரவேசித்தார். அங்கே இராவணனே சந்திரனுக, அந்தச் சந்திரனைச்சூழ்ந்திருக்கின்ற நட்சத்திரங்களைப்போல அந்த இராவணனைச் சேர்ந்திருக்கின்ற ஸ்திரீகளுடைய இரத்தினகசிதமாகிய மாளிகைகளெல்லாம் புகுந்து தேடத் தலைப்பட்டவராகி, களங்கம் நீங்

கிய சந்திரனும் தோற்கும்படி பிரகாசிக்கின்ற முகத்தினை யுடைய யக்ஷஸ்திரீகள் வாசஞ்செய்யும் மாளிகைகள் நெருங்கிய வீதிக்குப் போனார். ஸ்ரீ ராமதூதராகிய அனுமரானவர், வச்சிரத்திறவுகோல் நுழைகின்ற துவாரந்தோறும் நூலிழை போலவும், சிறு தென்றல் போலவும், அதி நுட்பமாகிய உருவங்கொண்டு நுழைந்து, மனம் தெளியும்படி பார்த்தார். அவ்விடத்தில் சில ஸ்திரீகள் தங்கள் நாயகனுகிய இராவணேஸ்வரன்மேல் அதி மோகமாகி, மனம் அவனிடத்தில் போயிருக்க, கண்ணிமையாமல் சித்திரம்போலிருந்தார்கள். சிலர் மன்மத பாணத்திற்குப் பயந்தோ, கனவிலாகிலும் அந்த இராவணனைச் சேரலாமென்று எண்ணியோ, ஒன்றுந் தெரியவில்லை—கண்ணை மூடிப் பொய்யுறக்கம் கொண்டிருந்தனர். சிலர் கிளிப்பிள்ளையையும், நாகணவாய்ப் பறவைகளையும் கடூரமாய்ப் பார்த்து, "நீங்கள் ஆகின்ற காரியம் ஒன்றும் செய்யவில்லை; என் பிராண சினேகிதனை அழைத்து வரவுமில்லை; என்னுடைய சமாசாரத்தையும் அவனிடத்திற் போய்ச் சொல்லவுமில்லை," என்று கண்ணீர் பெருகத் துக்கிக்கின்றனர். சிலர், ஸ்தனங்களில் மன்மதபாணந் தைக்கப் பெருமூச்செறிந்து, அழுது, "இனி செய்வதென்ன இருக்கின்றது! இராவணனுடைய உருவத்தைச் சித்திரத்திலாயினும் எழுதலாமா?" என்று நினைக்கின்றனர். சிலர், மகாமேருவை வில்லாக வளைத்து மகாவிஷ்ணுவை அம்பாகத் தொடுத்து எய்த சிவபெருமானுடைய கைலாச பர்வதத்தை யெடுத்த அதிசூரனுன இராவணேஸ்வரனுடைய தோள்களிலே அணியப்பெற்ற சந்தனக்குழம்பு தோய்ந்த தம் ஸ்தனத்தைப் பார்த்துச் சந்தோஷிக்கின்றனர். சிலர், இலங்கேஸ்வரனுடைய பிரதாபத்தை வீணையிலமைத்துப் பாடுகின்றனர். இந்தப் பிரகாரம் அந்த யக்ஷ ஸ்திரீகள் இருக்கின்ற மனைகளிலும் போய்த் தேடி அவைகளைத்தாண்டி, இராட்சத ஸ்திரீகள் இருக்கும் பல மாளிகைகளிலும் போய்த் தேடத் தலைப்பட்டார்.

அனேகர் நெய் விளக்கில்லாமல் இரத்தின சோதியே இருளை நீக்கும்படி பிரகாசிக்கின்ற மாடமாளிகைகளிலே தோழிமார் தாதிமார் முதலான பெண்டிர் கூட்டமெல்லாம் நீங்கிப்போகத் தாம் கொண்ட ஆசையும் தாமுமாய் ஒரு பக்கத்திலேயிருந்து, இராவணனிடத்தில் போயிருக்கின்ற தம் முடைய மனத்துடனே பிணங்குகின்றனர். அனேகர், தம் முடைய மேனியே ஆகாயமாகவும், முத்தாரமே நக்ஷத்திரங்க ளாகவும், இடையே மின்னலாகவும், சிவந்த கூந்தலே செவ் வானமாகவும், கண்ணே மேகமாகவும், நெற்றியே சந்திரனுக வும் பிரகாசிக்க, அந்தி வானத்திற்குச் சமானமாயிருக்கின் றனர். அனேகர், உயர்வான உப்பரிக்கைகளின்மேலிருந்து கண்களினுடைய நிறமானது மாறவும், அளகபாரம் சோரவும் ஏழங்காய் ஆடுகின்றனர். தேவஸ்திரீகளுடைய கூட்டங் கள் சத்தியலோகத்திலிருந்து மொண்டுகொண்டு வந்து ஸ்நானஞ் செய்விக்கின்ற ஆகாய கங்காஜலம் குளிர்ச்சியா யிருக்கவில்லையென்று அவர்கள் மேல் கோபித்து, மேல் மாடங்களின்மேல் ஏறிப்போய் மேகத்தினுடைய வயிற்றைத் துளைத்து அதிலிருந்து ஒழுகாநின்ற ஜலத்தினுல் ஸ்நானஞ் செய்கின்ருர்கள். அனேகர் நாகராஜர்களைப் பலாத்கார மாய்ப் பிடித்து, அவர்களுடைய சிரோ இரத்தினங்களையும், விஞ்சையர்களுடைய இரத்தினத் தாழ்வடங்களையும், மற்ற ஆபரணங்களையும் பறித்து, பந்தயமாகவைத்து நித்திரையில் லாமல் சூதாடுகின்றனர். அனேகர் புதுமையான புட்ப மெத்தையில் படுக்கச் சகிக்காமல், அதை விட்டுக் குளிர்ச்சி யான பளிங்கு மேடையிலே போய்ப் படுத்துக்கொண்டு, காமாக்கினியினுலே வெதும்பிப் புழுங்குகின்றனர். அனேகர் சித்த ஸ்திரீகள் வீணை மீட்டிப் பாட, நாககன்னியர்கள் மத் தளந்தட்ட, தேவரம்பையர்கள் ஆட, அந்த நடனத்தைப் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். அனேகர் விரகாக்கினி யானது மனத்தைத் தகிக்கக் கண்ணினின்றும் ஜலமானது பெருக, நித்திரையில்லாமலும், மகர வீணையும் வேணுக்

குழலும் தங்களுடைய கண்டமும் வேற்றுமை தோன்ருமல் அமிர்தமொழுகும்படி பாடுகின்றனர். அனேகர் வஸ்திரமும் மேகலாபரணமும் சோரும்படி குரவைக் கூத்தாடுகின்றனர். அனேகர் கள்ளும் உதிரமுமுண்டு பித்தேறிக் கொண்டா னடிக்கின்றனர். அனேகர் கள்ளுண்ட மயக்கத்தால் அறிவு தடுமாறிக் கண் சுழல, "என்மேல் தெய்வம் வந்தது பாருங் கள்!" என்று பெருமூச்சு விட்டு, இரண்டு கையையும் உச்சி மேல் கூப்பிக்கொண்டு குழறிப் பேசுகின்றனர். இப்படி யிருக்கின்ற அந்த இராட்சத ஸ்திரீகளுடைய வீதிகளிலும் தேடிப் பார்த்துக்கொண்டு, அப்புறம் சித்தமாதர்கள் வீதிக் குப்போய் அங்கும் தேடிப்பார்த்து, பின்பு அனுமரானவர் விஞ்சைய மாதர்களுடைய வீதியிலே போனுர்.

அங்கே இராவணனை வரக்காணுமல் தங்களிடையைப் பார்க்கிலும் மனமானது தளர்ந்து நடுங்க, உயிர் நிலை தடு மாற, பாணர்கள் பாடுகிற பாடலானது பாம்புபோலச் செவி யில் வந்து நுழைய வருத்தப்படுகின்றவர்களும், 'இவர்கள் இராவணனிடத்திலே பரிவு கூர்ந்திருக்கின்றவர்கள்,' என்கிற விரோதத்தைக் கொண்டு சந்திரன் பொழிகின்ற கிரணங்க ளானவை தனங்களை வெதுப்ப நெருப்பினிடத்திலே விழுந்த இளங்கொடி போலத் துடிக்கின்றவர்களும், ஒரு கணப் பொழுது அனேக ஊழிக்காலங்களாய்த் தோன்ற மனம் வேறுபட்டுக் காமநோயால் வருந்துகின்றவர்களும், தனத் திலேயெழுதிய சந்தனக்குறிகள் உயிரை வருந்தக் கண் களானவை சிவக்கப் பார்த்துக் கோபித்துப் பெருமூச்சு விடு பவர்களுமாய் அந்த விஞ்சைய மாதர்களிருக்கிற மாளிகை களிலும் தேடிப் பார்த்துக்கொண்டு, திரிலோகத்திற்கும் நாயகனுன பிரதாப இலங்கேஸ்வரனுடைய பெரிய அரண் மனையை நாடிப்போகிற அனுமரானவர் பூரண சந்திரனும் ஒளி மழுங்கும்படி அதிக தேஜசுடனே விளங்குகின்ற முகத் தினையுடைய மயன் மகளான *மண்டோதரி* வாசஞ்செய் கின்ற அந்தப்புரத்தைக் கண்டார்; கண்டு, தம்முடைய

கண்கள் பிரமிக்க, சித்தம் திடுக்கிட, "எங்கள் கர்த்தா வான ஸ்ரீ ராகவருடைய பிராணபதமாயிருக்கும் ஜகதீஸ்வரி யான ஜானகியாரை இராவணன் எடுத்துக்கொண்டு வந்து வைத்திருக்கின்ற இடமிதுதானோ! இங்குள்ள மாணிக்க மயமான சகல மாளிகைகளிலும், இது ஸ்ரீமகாவிஷ்ணுவி னுடைய மார்பிலணிந்த கவுஸ்துவ மணி போலப் பிரகாசிக் கின்றது!" என்று ஆச்சரியப்பட்டார். அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலான தெய்வப் பெண்கள் இளந் தளிர் போன்ற பாதத்தை வருட, வெண்சாமரை வீச, கரும் பைப்பார்க்கிலும் அதிக மதுரமான வசனத்தையுடைய மாதர்கள் யாழ் மீட்டிப் பாடுகின்ற பாடலானது காதுக் குள்ளே வந்து நுழைய, மூக்கினிடத்திலே கற்பகப்புட்ப வாடையானது சேர்ந்து மணக்க, இப்படி அனேக சம்பிரமத் துடனே புட்ப மெத்தையில் மாணிக்கத் தீபப் பிரகாசமும் மழுங்கும்படி ஜொலிக்கிற மேனியையுடைய திரிலோக பயங் கரன் மனைவியான மண்டோதரியானவள் நித்திரை செய்யக் கண்டார். "இவளா அந்த ஜானகியார்!" என்று நினைத்துச் சந்தேகமடைந்து, மனத்திலிருந்தெழுந்த கோபாக்கினி யானது தம்முடைய உடலையும் உயிரையும் சுடும்படி மிகவும் துயரப்பட்டு, "நான் எடுத்த சரீரத்தினுல் அடையத்தக்க பிரயோஜனத்தை இழந்துவிட்டேன்! அது இருக்கட்டும். இவள் தன் அன்பையும், குடிப்பிறப்பையும், தெய்விகமான தன் கற்பையும் இழந்துவிட்டாளாயின், ஸ்ரீ ராமருடைய கீர்த்தியும் தேஜசும் நானும் இந்த இலங்கையும் இராட்சதர் களும் இன்றையதினமே மாண்டு போவது நிச்சயம்!" என் றெண்ணி, மறுபடியும் செவ்வையாய்ப் பார்த்து, "அந்த லோகமாதாவோ, மகத்தான சிறந்த உருவத்தையுடையவர். இவளோ, அவருடைய திருவுருவத்தின் சதாமிசத்தில் ஓரமிச மும் ஒவ்வாததும் விகாரமுடையதுமான உருவத்தையுடைய வளாயிருக்கின்ருள். ஆகையால், இவள் யக்ஷ ஸ்திரீயோ! அசுர மாதோ! சந்தேகமாகவே இருக்கின்றது! சகலமான

ஆத்துமாக்களையும் மோகிப்பிக்கின்ற மன்மதனானவன், ஸ்ரீ ராமசந்திரர்மேல் அன்பினையுடைய பிராட்டியாரை அஃணுகுவானு! நாம் இப்பொழுது இவளை அந்த ஜானகியாரென்று நினைத்தது மகா பாதகம்! உத்தமப் பெண்களுக்குரிய இலட்சணங்களும் இவளுக்குச் சில உண்டாயிருக்கின்றன. ஆனாலும், இவளுடைய தேகத்தில் தோற்றும்படியான அவலட்சணங்கள் இவள் சில நாளைக்குள்ளே மகத்தான துன்பத்தை அடைவாளென்பதைத் தெரிவிக்கின்றன. தலை மயிர் அவிழ்ந்து சோர்ந்து விழ, வாய் வெருண்டு ஏதேதோ துர்வசனங்களைப் பிதற்றுவதனால், இவளுடைய நாயகனுக்கும் அவனுள்கின்ற இந்த நகரத்திற்கும் கேடு சமீபித்திருக்கிறதாய்க் காணப்படுகிறது,'' என்று அறிந்துகொண்டு, அந்த இடத்தை விட்டு நீங்கி, மகாமேருபர்வதமானது வந்திருப்பது போல அதிகவுன்னதமாய் இருக்கிற விசித்திரமான ஒரு கிருகத்தில் இராவணனாலும் எடுக்கப்படாத வெள்ளி மலையையொத்த திரண்ட தோளினையுடைய இராமதூதரானவர் பிரவேசித்தார். அம்மாத்திரத்தில் பூமியானது அதிர்ந்தது. பர்வதங்கள் அசைந்தன. இராட்சதப் பெண்களுக்கெல்லாம் அவர்களுடைய இடையைப்போல வலப் பாரிசத்துப் புருவமும் கண்ணும் தோளும் துடித்தன. திக்குகள் கம்பிதப்பட்டன. மின்னலும் மேகமுமில்லாமல் ஆகாயத்திலே இடியோசை உண்டாயிற்று. மங்களகரமாய் வைத்திருக்கிற பூரணகும்பங்களெல்லாம் வெடித்தன. இப்படிப்பட்ட துர்நிமித்தங்களுண்டாகவே, ஆஞ்சநேயர் தம்முடைய அறிவைக்கொண்டு யோசித்துப் பார்த்து, "சீக்கிரத்தில் இவ்விலங்கா நகரத்தின் சம்பத்துகளெல்லாம் நாசமாய்ப் போய்விடும்!'' என்று நினைத்துச் சற்றே மனம் கிலேசித்து, உடனே, "எந்தக் குலத்திலே தோன்றினவர்களாய் இருந்தாலும், எப்படிப்பட்ட தபோ நிஷ்டர்களானாலும், சகலமானவருக்கும் நல்வினையும் தீவினையும் சமமாகவே முடிந்திருக்கின்றன அல்லவா? ஆகையினாலே, ஊழ்வினையைப்பார்க்கிலும்

வலிமையையுடையது வேறென்ன இருக்கின்றது!'' என்று தாம் நவவியாகரண பண்டிதராகையால், தமக்குள்ளே நிச்சயித்துக்கொண்டு, சேனு சமுத்திரமானது புடை சூழ்ந்திருக்கின்ற அந்த மாளிகைக்குள்ளே பெரிய பாற்கடலில் அனேக அலைகளை வீசிக்கொண்டு ஒரு கருங்கடலானது கிடக்கிறது போலவும், இளஞ்சூரியர்கள் மலையின்மேலே உதயமானது போல இரத்தினமிழைத்த கிரீடங்களும் மற்றுமுள்ள பலவித பூஷணங்களும் இருளை நீக்கிப் பிரகாசிக்கவும், இரணியனைச் சங்கரித்த உக்கிர நரசிங்கமூர்த்தியானவர் அனேகமான தலைகளையும் தோள்களையும் பரப்பிக்கொண்டு படுத்திருக்கிறது போலவும் சயனித்துக்கொண்டு இருக்கிறவனும், ஆயிரம் தேவரம்பைகள் வரிசையாய் நின்று சாமரங்கள் போட, அவைகளிலுண்டான காற்றினுடனே கலந்துகொண்டு கற்பகப் புட்பத்தேன் துளிக்குந்தோறும் தன்னுடைய மேனியானது வெதும்ப, சீதாபிராட்டியை அடிக்கடி நினைத்துப் பெருமூச்செறிந்து தேய்கிறவனும், கைலாசத்தைக் குலுங்கச்செய்த தோளினுடைய பராக்கிரமத்திற்கும் அஞ்சாமல் மன்மதபாணங்கள் மார்பிலே உருவிப் பாய்ந்ததனுல் உண்டான பச்சைப் புண்கள் அஷ்டதிக்கஜங்களினுடைய கொம்புகள் தைத்த பழந்தழும்புகளின் மத்தியில் உதிரங் கசிந்துகொண்டிருக்க, காமாக்கினியை மூட்டுகின்ற துருத்தியைப் போல மந்தமாருதமானது தேகத்தில் பூசிய கலவைச் சந்தனத்தின்மேல் தவழ, ஜானகியின் மேல் மனுதி அந்தக்கரணங்களானவை செல்ல, பாம்புகள் குடி போன புற்றுப்போலப் பாழாயிருக்கிற இருதயஸ்தானத்தையுடையவனும், நினைத்த போதெல்லாம் திக்குதோறுஞ் சென்று தேவர்களுடனே யுத்தஞ்செய்து அவர்களுடைய புகழாகிய அமிர்தத்தைக் கைகளினுலே வாரி உண்டபோது, அது தனக்குத்தெவிட்டித் தன்னுடைய கடைவாய்களின் வழியே ஒழுகியதுபோலத் தாவள்யமாய்ப் பிரகாசியாநின்ற கோரத்தந்தங்களையுடையவனுமாயிருக்கின்

ருன். வெண்மையான மல்லிகைப் புஷ்பசயனமும் வெந்து பொடியாய்ப் புழுங்குகின்ற தன்னுடைய தேகத்தில் சமுத் திரத்திலுண்டான நீர்க்குமிழி போல வெயர்வு தோன்ற, பூ மாலைகளில் மொய்த்திருக்கின்ற வண்டுகள் கரிய, அந்த மாலைகளும் தீயும்படி பெருமூச்சு விடுகின்றவனும், ஸ்ரீராம ருக்குச் சீதையினிடத்தில் எப்படி மனஞ்செல்கின்றதோ, அப்படியே அவளிடத்திலே தன் நெஞ்சு செல்லும்படி பொய் யுறக்கங்கொண்டிருக்கிறவனும், ஜானகியின் மேலுண்டான ஆசையாகிய நீரை வார்த்துத் தன் உயிரான பதார்த்தத்தைப் பெருமூச்சான அம்மியிலிட்டு அரைக்கிறவனும், இடைவிடா மல் சீதையை நினைத்துக்கொண்டிருப்பதனால் அவள் எதிர்ப் பட்டது போல உருக்காணும்போதெல்லாம் கலகலவென்று சிரிக்கிறவனும், விரகத்தினாலே சரீரம் நடுங்குகிறவனும், ஜானகியானவள் பள்ளியறைக்குள்ளே வந்து புகுந்தா ளென்று மயிர்க்கூச்செறிகின்றவனும், சூரியனைப்போலே ஜொலிக்கின்ற நவரத்தின ஆரங்களானவை புரளத்தக்க தாய்த் திரிபுவனத்தையும் சிருஷ்டித்து இரட்சித்துச் சம்மரிக் கிற பிரமா விஷ்ணு உருத்திரனான மும்மூர்த்திகளினுடைய ஆயுதமும் இந்திரனது வச்சிராயுதமும் பட்டு முனை மடிந்து போம்படி அதிக பராக்கிரமத்தைப் பொருந்திய மார்பினை யுடையவனுமாயிருக்கின்றான். சத்துருக்களாகிய ராஜர்கள் தன்னுடைய கையிலே ஏந்திய வீர வேலாயுதத்திற்குப் பயந்து நடுங்கி ஓடி வந்து வணங்கும் பொழுதெல்லாம் அவர் களுடைய கிரீடங்களானவை பட்டுத் தேய்ந்து தழும்பேறிய பாதத்தையுடையவனான பிரதாப இலங்கேஸ்வரனை ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் பூர்வம் கொண்ட வாமனரூபத்தைப் பார்க்கிலும் மிகவும் சிறிதான ரூபத்தையுடைய அனுமரான வர் தெரியக்கண்ட மாத்திரத்தில் அவருடைய நெஞ்செரிந் தது; கண்கள் காலாக்கினியைப் போலக் கோபாக்கினியைச் சொரிந்தன. அண்டமானது மேலுங்கீழும் வெடித்தது. அப் பொழுது அவர், "லோகமாதாவை வஞ்சனை செய்து

கொண்டு வந்த இவன்மேல் இந்தக்கணமே குதித்து, இவனுடைய மணி முடிகளைக் காலினுல் எற்றி உடைத்தெறிந்து என்னுடைய பாராக்கிரமத்தைக் காட்டாமல் போவேனேயாகில், நான் ஸ்ரீராமருக்கடிமையாக மாட்டேன்! அந்த இராகவருக்கு ஆட்பட்டிருக்கிறதென்ன விளையாட்டுக்கா! என்னுடைய கண்ணிஞற் கண்டும் இந்த ராக்ஷதனுனவன் உயிரோடிருப்பானு! இவனுடைய இருபது தோள்களையும் மடக்கியடக்கிப் பிடித்து ஒடித்து, பத்துத் தலைகளையுமெட்டியுதைத்து நிலத்தில் உருட்டிக்கொன்று, இந்த இலங்கையையும் ஒருமிக்க நிர்மூலமாகச்செய்கிறேன்! அப்படிச்செய்தால், அப்பால் ஆவது ஆகட்டும்!'' என்று நினைத்து, பற்களை நெற நெறவென்று கடித்து, இரண்டு கைகளையும் நெருப்புப்பொறி பறக்கப் பிசைந்துகொண்டே அதியுக்கிரமாய் எழும்பினுர். இவ்விதம் கொல்லும்படி கோபித்தெழும்பிய அனுமரானவர், சற்று நின்று யோசித்து, "இவ்வண்ணம் செய்யும்படி சுவாமியானவர் நமக்கு ஆக்கியாபிக்கவில்லையே! ஆகையால், ஒன்றைச்செய்ய எத்தனப்பட்டு வந்து வேருென்றைச் செய்வது அறிவுக்குச் சரியானதன்று. ஆலோசிக்குமிடத்தில், இது மிகவும் குற்றமுடையாதாகும்,'' என்று கோபம் தணிந்து நின்ருர். இராவணனைக் கொல்லத் துணிந்த அனுமரானவர் கொல்லாமல் விட்டுவிட்டதற்குக் காரணம் என்னவென்று பார்க்கும் பொழுது, ஆலகால விஷத்தையுண்ட சிவனுக்கொப்பான மகா பலிஷ்டர்களாஞலும், உலகத்தையெல்லாம் முடிக்கத்தகுந்த உபாயம் தெரிந்திருந்தாலும், யோக்கியர்கள் இப்படிச் செய்தால் இப்படி முடியுமென்று முன்னே யோசியாமல் யாதொன்றையாவது செய்வார்களா? ஆகையால், காலம் பார்த்துக் கரை கடவாமல் இருக்கின்ற சமுத்திரத்தைப்போல ஆஞ்சநேயரும் அதிக்கிரமிக்காமல் அடங்கியிருந்ததாரெனத் தோற்றுகின்றது. பின்னும் அவர், "நான் இன்றைய தினத்தில் கொடிய பலிஷ்டனுன அரக்கனைப் போர் செய்து கொல்லுவேனேயாஞல், 'கோதண்ட

தீட்சா குருவான ஸ்ரீராமசந்திரருடைய தேவியாரைச் சிறை யிலே இருக்கும்படி வைத்த லோககண்டகனுன இராவணனை ஒரு குரங்கு வந்து கொன்று போய்விட்டது!' என்று உல கத்தார் எளிதாகச் சொல்லுவர். அதனுல் எம்பெருமா னுடைய வில் வீரத்திற்கும் இகழ்ச்சியுண்டாகும்,'' என்று எண்ணி, உக்கிரம் தணிந்து, "என் தாயாரான சீதா பிராட் டியார் இவனுடனே சயனிக்கும் மாதர்களுள்ளே சம்பந்தப் பட்டிருக்கவில்லை. இவனுடைய நிலைமையோ, அற்பமான காமத்திலே மெலிந்து இருக்கின்றதாகக் காண்கிறது. இத னுல், அந்தக் கருணுநிதியான ஜானகியார் கற்பழியாதிருக் கிருரென்பது எனக்கு நிச்சயமாய்த் தோன்றுகிறது,'' என்று குறித்துக்கொண்டு, "இனி இவ்விடத்திலிருந்து சும்மா ஆலோசித்துக் காலதாமதம் செய்வதனுல் யாதொரு பிரயோ சனமும் இல்லை,'' என்று நினைத்து, அந்த இராவணனுடைய அரண்மனையை விட்டு அப்புறம் போய்த்தேடுவதற்கு வேறிட மில்லாமையால், அங்கு நின்று, "ஐயோ! இந்த நகரமுழுதும் தேடிப் பார்த்தும் பிராட்டியாரைக் காணவில்லையே!'' என்று மிகுந்த கிலேசத்துடனே பிரலாபிக்கத் தொடங்கினுர்:

"கற்பழியாத மகா பதிவிரதையான லோகமாதாவை இந்தப் பாவி கொன்றுவிட்டானே! அல்லது கொடிய செய் கையையுடையவனுகையால் தின்றுவிட்டானு! மற்றெந்த லோகத்திலாயினும் வைத்திருக்கின்ருனே! இவன் சிறை வைத்த இடத்தை நான் ஒரு விதத்திலானுலும் அறியேன்! இவ்விடத்திலேயிருந்து இனித் திரும்பிப்போய் என்ன சொல லப் போகிறேன்! இவ்வகைப்பட்ட துயரமானது, இறந்தா லல்லாமல், என்னை விட்டு நீங்கமாட்டாது. ஸ்ரீ ராமர், 'அனு மன் சீதையைக் கண்டு வருவான்,' என்று எண்ணி யிருப்பார். சுக்கிரீவ மகா ராஜாவானவர், 'அவசியம் கொண்டு வருவான்,' என்று நினைத்திருப்பார். நான் வந்து சாதித்த காரியம் இதுதான்! இவ்வளவு செய்ய மாட்டாத நான், சிறிதும் வெட்கம் இல்லாமல் புண்டரீகாட்சரான

ஸ்ரீ ராமசந்திரரிடத்திற்கு இனிப் பிராணனுடனே போவேனே! இந்தச் சத்துருக்களை யுத்தஞ்செய்து எப்படியும் கொன்று இவர்களுடனே கூட இறப்பேனேயல்லாமல், நான் மாத்திரம் தனியே இறப்பேனே! 'நம்முடைய மகாராஜா குறித்த தவணை நாள் கழிந்து போய்விட்டது. இன்னமும் எம்பெருமாட்டியாரைக் காண இயலவில்லை. ஆகையால், நாமெல்லாம் மாண்டு போவோம்!' என்று சொல்லித் துக்கித்த அங்கதன், ஜாம்பவந்தர் முதலான வானர வீரர்களுக்குத் தைரியஞ் சொல்லி, இறக்க வேண்டுவதில்லையென்று மகேந்திரகிரியிலேயே நிறுத்திவிட்டு, 'நான் சம்பாதி சொன்ன பிரகாரம் இலங்கையிற் போய்ச் சீக்கிரத்திலே தேடிப்பார்த்துவருகிறேன்,' என்று வந்தேனே! அப்படி வந்த நான் எண்ணிய காரியத்தை முடிக்கவில்லையே! ஆகையால், இறவாமல் இருப்பேனே! புண்ணியமென்று சொல்லப்பட்ட ஒரு பொருளானது என்னிடத்தை விட்டு நீங்கிப் போனது போலக் காண்கிறது! எழுநூறு யோசனை விஸ்தீரணமான இந்த இலங்காபுரியிலே உள்ள ஜீவகோடிகளுக்குள்ளே நான் காணுதது வேறென்றில்லை. சகல புவன கர்த்தாவான ஸ்ரீ ராமருடைய தேவியார் மாத்திரமே பார்க்கக் கிடைக்கவில்லை. மகா சமுத்திரத்தைக் கடந்தும் இப்போது துக்க சமுத்திரத்திலே விழுந்தழிவேனே! இந்தத் தோஷியான இராட்சதனைப் பிடித்திழுத்து வாயின் வழியே குபீர் குபீரென்று இரத்தம் கொப்பளிக்க என்னுடைய கையினுற் குத்திச் 'சீதையைக் காட்டடா!' என்று சொல்லி, அவன் காண்பிக்க, நான் கண்டுகொள்வேனே! அல்லது, இந்த இராவணனும் இந்த ஊரும் அரக்கைப்போல உருகிக் கருகிப் போகும்படி நெருப்பிட்டுக் கொளுத்துவேனே! அப்படிச் செய்யாமல் தேவர்கள் முதலானவர்களை இவன் ஜானகியாரை எவ்விடத்தில் சிறை வைத்திருக்கிறுனென்று கேட்பேனுனல், அவர்கள் இவனுக்குப் பயந்து வாய்விட்டுச் சொல்ல மாட்டார்கள். அப்படியானுல், மற்றவர்களெப்ப

டிச் சொல்லுவார்கள்! நான் எவ்விதத்தில் அறிந்து கொள்ளுவேன்! இன்னமும் பிராணனை விடத் துணியாமல் பூமிக்குச் சுமையாக இந்தச் சரீரத்தைச் சுமந்துகொண்டிருக்கிற அறிவில்லாத நான், முன்பு கழுகுகளுக்கு ராஜாவான சம்பாதியானவர், 'அந்த இராமபத்தினியை இராவணன் கொண்டுபோய் இலங்கையிலே சிறைவைக்கக் கண்டேன்,' என்று சொன்னுரே! அவருடைய சொல்லும் பொய்த்துப்போய்விட்டதல்லவா! இந்த இலங்கையை எடுத்துச் சமுத்திரத்திலிட்டுக் கரைத்துவிடாமல், 'தேகத்தை வைத்துக்கொண்டு அனுமன் இன்னம் உயிரோடிருக்கிருன்!' என்று சொல்லும்படி உழலுவேனே! சுவர்க்கத்தாரும் பூலோகத்தாரும் அறியும்படி இராட்சதப் படுபாவியானவன் ஜானகியாரை எடுத்து வந்துவிட்டானென்னும் நிந்தனையானது தப்பாது. ஆகையால், இந்தப் பட்டணத்தை எடுத்துக் கடலிலே விட்டெறிந்து, இவனையுங் கொன்று, அதன் பின்பு நானிறக்கின்றதே உத்தமமாகும்,'' என்று நினைத்து, மறுபடியும் எள்ளிலும், அதிலும் சிறிதாகிய அணுவிலும், அணுவுக்கணுவிலும் நீங்காமல் எங்கும் வியாபகமாய் இருப்பதுமன்றித் தம்முடைய இருதயத்திலும் இருக்கின்ற பரப்பிரம்மான ஸ்ரீ ராமரைப்போல எங்கும் போய்ப் பார்த்து, அப்பால் ஒரு பக்கத்திலே இனிப்பாகிய தேனையுண்டு வண்டுகள் ரீங்காரஞ் செய்கின்ற ஒரு திவ்வியமான பூஞ்சோலையைக் கண்டார்.

## 3. காட்சிப் படலம்

ஆஞ்சநேயர் அச்சோலையைக் கண்டு, "இந்தச் சோலையிடத்தில் போய்த் தேடிப் பார்ப்பேனுகில், என்னுடைய துக்கம் நிவாரணமாகும். இதற்குள்ளுங் காணுமற்போனுல், அப்புறம் நினைக்க வேண்டுவது ஒன்றுமில்லை. உடனே இந்த

இலங்கையையும் நாசமாக்கி நானும் மாண்டு போவேன்!” என்று நிச்சயித்துக்கொண்டு, அந்தச் சோலைக்குள்ளே போனார். அப்பொழுது தேவர்கள் கூடி அவர்மேல் புஷ்ப வருஷம் வருஷித்துத் தோத்திரஞ் செய்து ஆனந்தப்பட்டார்கள். இது நிற்க.

முன்பு இராவணன் எடுத்து வந்து அசோக வனத்திலே சிறை வைத்த சீதா பிராட்டி எப்படியிருந்தாளென்றால், கடூரமாகிய இராட்சசிகள் தன்னை நெருக்க அந்தச் சோலையில் ஒரு சஞ்சீவி மருந்து மலையினிடத்திலே முளைத்து ஒருநாளும் மழையென்பதைக் காணாமல் உலர்ந்திருக்கிறது போலச் சரீரம் மெலிந்து, நித்திரை வந்ததென்று கண்களை மூடுதலும் இமைத்தலுமில்லாமல், வெளியில் ஏற்றிய விளக்கைப் போலத் தேகத்தின் ஒளி மழுங்கி, ஒரு பெண் மான் புலிக்கூட்டத்தின் நடுவில் அகப்பட்டுக்கொண்டது போல விம்மி வெதும்பிப் பயந்து ஏங்கி இரங்கி, ஸ்ரீ ராமரை நினைத்துத் தொழுது சோர்ந்து, நடுங்கித் துக்கித்துப் பெருமூச்சு விட்டு அழுதுகொண்டிருக்கிறதேயல்லாமல் வேறொன்றுமறியாள். தன் கண் மழைக்கண்ணென்கிற காரணத்திற்கு ஒத்தவாறு சதாகாலமும் இரண்டு நேத்திரங்களிலுமிருந்து மேகதாரைபோல ஒழுகாநின்ற ஜலமானது பொன்னிறத்தையுடைய மலைகளில் ஒழுகுகின்ற அருவியைப்போல ஸ்தன பாரத்தின் வழியே ஆறாய்ப்பெருகி ஓடும்படி, நீருண்ட மேகத்தைக் கண்டாலும் கருமையாகிய வஸ்துக்களில் யாதொன்றைக் கண்டாலும் வேதநாயகராகிய ஸ்ரீ ராமருடைய திருவுருவத்தை நினைத்துக்கொண்டு புலம்பி, உலகத்தில் அன்பினையுடைய நாயக நாயகிமார்களுக்குள் ஒருவரையொருவர் பிரிவதனாலுண்டாகிய துன்பமே உருவு கொண்டது போல மிகுந்த வியாகுலத்தையடைவாள்; செம்பவளத்தைப் போலச் சிவந்த திருக்கரத்தையும், திருவடிகளையும், நீல மேகத்திற்கு ஒப்பாகிய திருமேனியையுமுடைய ஸ்ரீ ராமசந்திரரை நினைக்குந்தோறும், கண்கள் பொழிகின்ற நீரினால்

சற்று நனைகின்றதும், சரீரத்தின் வெப்பத்தினுல் சற்று உலர்ந்திருக்கின்றதுமாகிய வஸ்திரத்தையுடையவளாய், 'பிரமதேவன் விதித்த விதியைக்கடந்துபோவதோ பிரயாசை!" என்று நினைப்பாள். சூரிய வமிசத்திற்கு உரிய பெருமையையும் அதற்குத் தன்னுல் சம்பவித்த பழியையும் பகுத்தறிந்து, "நம்முடைய நாயகராகிய சுவாமியானவர் வருவார்! வருவார்!" என்கிற நிச்சயத்தினுல் திசைகளெல்லாம் ஊடுருவிப் பார்ப்பாள்; பூமியினிடத்திலிருக்கின்ற பூரண சந்திரனை முழுமையும் விழுங்கிக் கக்குகின்ற கரும்பாம்பு போலத் தன் முகத்தின் இரு பக்கத்தையும் தழுவி ஒன்ருய்த் திரண்டு ஜடை பற்றிய கூந்தலோடிருந்து, தான் முன்பு உடுத்த புகை போல மெல்லிதாகிய ஒரு வஸ்திரமேயல்லது, வேருெரு வஸ்திரத்தைக் கண்ணினுலும் பார்க்கமாட்டாள். திருப்பாற்கடலில் தோன்றிய தேவாமிர்தத்தினுல் மன்மதனுனவன் செய்த சித்திரப் பிரதிமையானது புகை சூழப்பட்டிருப்பது போல, நீராடாமல் மாசு படிந்திருக்கின்ற மேனியையுடையவளாகி, "இளையபெருமாளானவர் மானின் பின்னே சென்ற சுவாமியைக் காணப் போனுரே! அவர் கண்டாரோ, காணவில்லையோ! கண்டாலும், இந்த இலங்கைச் சமுத்திரத்தின் மத்தியிலிருக்கின்ற இராவணன் என்னை எடுத்துக்கொண்டு வந்துவிட்டதையும், ஸ்ரீ ராமலட்சுமணர்கள் அறியார்கள்போலிருக்கின்றது!" என்று மனங்குழைந்து புண்ணுகி, அப்புண்ணினிடத்தில் அனல் நுழைந்தது போலப் புகையெழும்பும்படி பெருமூச்சு எறிவாள். "என்னை இந்த இராட்சதன் எடுத்து வரும்போது பார்த்த ஜடாயுவும் இறந்து போனுர். மற்றவர்கள் என் பிராணநாயகருக்கு எப்படி என்னிலைமையை அறிவிப்பார்கள்? இந்த ஜன்மத்திலே ஸ்ரீ ரகுநாயகருடைய திருமுகத்தை நான் காணக்கிடைப்பதே அருமையாயிருக்கின்றதே!" என்று எண்ணிப் பிரலாபிப்பாள்; உடனே சித்தங் கலங்குவாள்; மேன்மேலும் கிலேசிப்பாள். "தம்முடைய

தம்பியாராகிய இளையாழ்வாரை மதியாமல் மகாபாவியாகிய நான் சொன்ன வார்த்தையைக் கேள்விப்பட்டு, 'இவள் சிறிதாவது புத்தியில்லாதவளாயிருக்கின்ருள்,' என்று மனம் வெறுத்து என் நாயகர் என்னை நீக்கிவிட்டாரோ! அல்லது பூர்வஜன்மத்தில் செய்த கர்மத்திஞலேதான் இப்படி வந்து நேர்ந்ததோ!'' என்று ஓயாமல் அடிக்கடி சொல்வதனுல் வாய் உலர்ந்து, அறிவு சோர்ந்து, உயிர் பதைப்பாள்; "சுவாமியானவர் ஸ்நானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அமுதுசெய்யும்போது அவருக்குக் காய் கனி கிழங்கு முதலியவைகளை யார் பரிமாறுவார்களோ! அவரிருக்குமிடத்தில் யாராவது விருந்து வந்தபோது, தம் அடியாளாகிய என்னை நினைப்பாரோ!'' என்று கூறி அங்ஙனே சோகிப்பாள்; தானிருந்த இடத்தில் தன்னைச் செல்லரித்த போதும் அந்த இடத்தை விட்டு எழுந்திராதவளாகி, "நான் அடைந்த மனோ வியாதிக்கு ஒரு மருந்தும் உண்டோ!'' என்று சொல்லித் திகைப்பாள்; "'கொடிய வஞ்சனையுடைய இராட்சதர்கள் இத்தனை நாள் வரைக்கும் சீதையைச் சும்மா வைக்கமாட்டார்கள்; தின்றுவிடுவார்கள். ஆகையால், நாம் செய்யத் தக்கது இனியொன்றுமில்லை,' என்று தேடாமல் விட்டுவிட்டாரோ! தம்முடைய வமிசத்தாருக்குச் சுபாவமாயிருக்கின்ற சாதுகுணத்தையெல்லாம் தம்முடையதாக வகித்துக் கொண்டு, 'இந்த இராவணனுடனே எதிர்த்து யுத்தஞ் செய்கிறதில் என்ன பயன்!'' என்று கோபத்தைத் தணித்துக் கொண்டிருக்கிருரோ! நான் ஏதென்று நினைப்பேன்!'' என்று இராத்திரியென்பதும் பகலென்பதுமில்லாமல், நிரந்தரம் இவ்வண்ணம் கவலைப்படுவாள்; "பெற்ற தாய்மார்களும் தம்பிமார்களும் மறுபடியும் வந்து சுவாமியை அயோத்திக்கு அழைத்துக்கொண்டுபோய்விட்டார்களோ! அவர்கள் அழைத்த போதும் சிறிய தாயார் குறித்துச் சொன்ன பதினுன்கு வருட காலமும் ஆரணியவாசஞ் செய்து போவாரேயல்லாமல், அதற்குமுன் போகமாட்டாரே! பின்னையென்ன

சம்பவித்ததோ !'' என்று ஒருவரும் படாத நோய் படுவாள்; "பஞ்சவடியில் யுத்தஞ்செய்த கரன் முதலானவர்களைப் போல இப்போதும் இராட்சதர்கள் யுத்தஞ் செய்யும்படி நேர்ந்ததோ !'' என்று வருந்துவாள்; பின்னும் தான் லோக மாதாவாகையால், அந்த கரன் முதலானவர் ஸ்ரீராமருடனே எதிர்த்து இறந்ததைக் குறித்து முன்பு விசனப்பட்டது போல, இப்போதும் சுவாமியுடனே எதிர்த்த இராட்சதர் களும் அப்படியே இறப்பார்களே என்று மிகவும் துயரப் படுவாள்; கைகைசி இராமபத்திரரை நோக்கி, 'ராஜ்யமோ பரதனுக்கு உரியதாய்விட்டது. இனியுனக்கு யாதொரு சம்பந்தமுமில்லை,' என்று சொன்ன பொழுது எள்ளள வாவது வாடாமல் முன்னிலும் மூன்று பங்கு விசேஷமாய்ப் பிரகாசித்த முகாரவிந்தத்தையுடைய சுவாமியின் சாந்த குணத்தையே தியானஞ்செய்வாள்; 'சாம்ராச்சியத்தை நீ பெற்றுக்கொள்,' என்று தசரத மகாராஜர் சொன்ன பொழு தும், 'இந்தச் சம்பத்தையெல்லாம் விட்டு நீ வனத்திற்குப் போ,' என்று சிறிய தாய் சொன்ன பொழுதும், சித்திரத்தில் அலர்ந்த செந்தாமரைப் புஷ்பத்திற்குச் சமானமாயிருந்த திருமுக தேஜஸை நினைப்பாள்; கங்கையை அணிந்த ஜடா மகுடத்தையுடைய சிவபிரானது வில்லை மிதிலையில் க்ஷண மாத்திரத்தில் இரண்டு துண்டாய் இற்று விழும்படி செய்த புஜபல பராக்கிரமத்தை எண்ணி மெலிவாள்; கரதூஷணுதி யர்களுடனே வந்த பதினாலாயிரம் ராக்ஷசப்படையை மூன்று நாழிகைக்குள்ளே இறக்கும்படி செய்த வீரகோதண்டத்தின் பிரதாபத்தைக் குறித்துத் துதி செய்து சரீரம் வெதும்பு வாள்; கங்கா நதியிலே ஓடம் விட்ட எளியவனாகிய குக னென்னும் வேடனைப் பார்த்து, 'என் தம்பி, உன் தம்பி; எனக்கு நீ தோழன்; உனக்கு இந்தச் சீதை மைத்துனி,' என்று சுவாமி சொல்லிய அன்னியோன்னியமாகிய சினே கச் செய்தியை நினைத்து மதி மயங்குவாள்; கல்யாணம் நடந்த சமயத்தில் தன் பிதாவாகிய ஜனகமகாராஜா கைகளை

நீட்டிப் பாத பூஜை செய்ய எத்தனப்பட்டபோது, சுவாமி யானவர் அதை நீக்கித் தர்ப்பையை மேடைமேல் வைத்துப் பூஜிக்கச்செய்த வைதிக நியமத்தை எண்ணுவாள்; பரத னனவன் மணி முடிதரியாமல் ஜடை முடி தரித்துக்கொண்டு வந்ததைக் குறித்துச் சித்திரகூட பர்வதத்தில் இரகுநாயகர் அங்கலாய்த்ததை நினைத்து இரக்கப்படுவாள்; சகல சம்பத் தையுந் துறந்து வனத்திற்கு வருகிற காலத்தில் ஒரு வைதிக பிராமணன் வந்து கோதானம் கேட்க, அவனுக்கு அனேகம் பசுக்களைத் தானஞ்செய்தும் திருத்தியடையாத அவ னுடைய பேராசையைக் கண்டு சுவாமி சிரித்ததை நினைந் தழுவாள். ராஜாக்களை இருபத்தொரு தலை முறை வரைக் கும் கருவறுத்து, அவர்களுடைய ரத்த ஜலத்திலே மூழ்கி ஸ்நானஞ்செய்து, அதைக் கையினல் அள்ளிப் பிதுர் தர்ப்ப ணஞ் செய்த மழுவாயுதத்தையுடைய பரசுராமர் கொடுத்த வில்லை வாங்கி வளைத்து, அதனுல் அவருடைய தவத்தையும் பலத்தையும் கிரகித்துக்கொண்ட அதிவீரத்தை எண்ணி உயிர் வாடுவாள்; இந்திரகுமாரனனவன் காக்கை வடிவங் கொண்டு வந்து அபசாரப்பட, அந்தக் காகாசுரன்மேல் ஒரே பாணத்தைப் பிரயோகிக்க, அது அவனுடைய ஒரு கண்ணைப் போக்கடித்த நாள்முதல் உலகத்திலுள்ள மற்றக் காக்கைக் கூட்டங்களுக்கெல்லாம் ஒரு கண்ணில்லாமல் போம்படி செய்த பிரதாபத்தை விசேஷமாய் நினைப்பாள்; விராதனென்னும் இராட்சதன் தன்னை எடுத்துக்கொண்டு போன போது அவனைச் சங்கரித்து, அவனுடைய ஒழிக்கப் படாத சாபத்தையும் ஒழித்து ஆட்கொண்டருளிய கிரு பையை நினைத்து நினைத்துத் தன்னுயிர் சோர்ந்து, அறி வழிந்து, சரீரம் நடுங்குவாள். இந்தப் பிரகாரம் துயரப்பட் டுக்கொண்டிருக்கின்ற அந்தப் பிராட்டியின் பக்கத்தில் இருக்கின்ற விபீஷணருடைய குமாரத்தியும், *திரிசடை* என் னும் பெயரினை யுடையவளும், பிராட்டி விஷயத்தில் மிகுந்த அன்புடையவளும், திருந்திய இனிய வார்த்தையையுடைய

வளுமாகிய அவள் அந்நேரம் நித்திரை செய்திருந்தாள். கொடிய செய்கையையுடைய மற்ற இராட்சசிகளும் கள் ளுண்ட மயக்கத்திலே அந்த அர்த்த ராத்திரியில் உறங்கினுர் கள். அப்பொழுது ஜானகியானவள், திரிசடை என்பவளே எழுப்பி, " எனக்கு மாசில்லாத குணத்திளையுடைய சகோத ரியைப்போல இருக்கின்ற திரிசடையே, இன்றைய தினம் எனக்கு நன்மையே விளேயுமோ, அல்லதுநான் செய்த பாவத் திஞலே இன்னமுந் தீமையே விளேயுமோ தெரியவில்லே. புருவமுங் கண்ணும் வலப்பக்கம் துடித்துக்கொண்டிருந்தது போய், இப்போது இடப்பக்கம் துடிக்கின்றன். விஸ்வா மித்திரர் பின்னே சுவாமி மிதிலேக்கு வந்தபோது இப்படியே இடக் கண்ணும் புருவமும் துடித்தன. என் பிராணநாயகர் ராஜ்யத்தைத் தம்பியாருக்குக் கொடுத்துவிட்டு ஆரணியத் திற்குப் புறப்படுகிற பொழுது வலப்பக்கந்துடித்தது. இந்தப் பாவி என்னே எடுக்க வந்த நாளிலும்அப்படியே வலம் துடித் தது. இப்பொழுது உண்டாகியதைப் பார்த்தால் நன்மை போலவே காண்கின்றது; இது வரைக்கும் என்னேப் பயப் படாதே என்று சொல்லிக்கொண்டு வந்தாயே! இந்தச் சகுனம் ஏதாய் முடியுமோ! சொல்,'' என்று கேட்க, திரிசடையானவள், " அன்னேயீர், இந்த மங்களக் குறி நன்ருயிருக்கிறது! நீர் எப்படியும் உம்முடைய நாயகரைச் சேருவீர். இதற்குச் சந்தேகமேயில்லே. அல்லாமலும், உமது திருமேனி பசந்து புளகிக்கவும், திருவுள்ளங்குளி ரவும், திருச்செவியில் இப்பொழுது தேனே உண்டு களித்த ஒரு பொன் வண்டு வந்து மிருதுவாய் ரீங்காரஞ் செய்து போயிற்று. அதை ஆராய்ந்து பார்த்தால், உம்முடைய பிராணநாயகராகிய ஸ்ரீராமர் அனுப்பிய ஒரு தூதன் உமக்கு எதிரே வரக் காண்பீர் என்று தோன்றுகிறது. மேலும், பாத கர்களாகிய இராட்சதர்களுக்கு ஆபத்து வருவது சத்தியம். இன்னமும் என் வாய் மொழியைக் கேளும்: நீர் நித்திரை செய்யாததனுல் கனவு காணவில்லே. நான் கண்ட கன

வைச் சொல்லுகிறேன் கேளும்: என் கனு அவசியம் தவருமல் பலிதமாகும். என் பெரிய தகப்பனுகிய இராவணன் பத்துத் தலைகளிலேயும் எண்ணெயிட்டுக்கொண்டு, சிவந்த வஸ்திரம் தரித்துக்கொண்டு, கழுதைகளையும் பேய்களையுங் கட்டிய தேரின்மேலேறித் தென்முகமாய்ப் போனுன். அவனுடன், அவன் பிள்ளைகளும், பந்து ஜனங்களும், மற்றவர்களும் போனுர்கள். அவர்கள் திரும்பி வரவில்லை. அதுவுமல்லாமல், இராவணனுடைய ஓமாக்கினியும் அணைந்து போய்விட்டது. வானத்திலிருந்து வெள்ளிடி இடித்து விழுந்தது. மாளிகைகள் அங்கங்கே வெடித்தன. மத யானைகளுக்கு மதம் வற்றிப்போய், பெண் யானைகளுக்கு மதமுண்டாயிற்று. பேரிகைகளெல்லாம் முழக்குகிறவர்களில்லாமல் இடி போலத் தாமே முழங்கின. நட்சத்திரங்கள் உதிர்ந்தன. பகலென்பதில்லாமல் இராத்திரியே நிலைபெற்றிருந்தது. இராட்சதர்கள் மார்பில் தரித்திருக்கின்ற கற்பகப் பூ மாலைகளெல்லாம் தீய்ந்து, புலால் நாற்றம் வீசிக்கொண்டிருந்தன. இந்த இலங்கையும் இதைச் சூழ்ந்த மதிலும் சுழன்றன. திக்குகளெல்லாம் நெருப்புப் பற்றி எரிந்தன. சிங்காரத் தோட்டங்களும் பூஞ்சோலைகளும் கரிந்தன. பட்டணம் முழுமையும் வெற்றுவெளியாய்விட்டது. மங்கலக் கலசங்களெல்லாம் விரிந்து சிதறின. விளக்குகளையெல்லாம் இருள் விழுங்கியது. தோரண கம்பங்கள் இரண்டு துண்டாய் முறிந்தன. பட்டத்து யானையின் கொம்பு முறிந்தது. வேதமந்திரங்களைச் சொல்லி ரிஷீஸ்வரர்களால் ஸ்தாபிக்கப்பட்ட பூரண கும்பங்களிலிருக்கின்ற தீர்த்தமானது கள்ளுப் பொங்குகிறது போலப் பொங்கியது. சந்திரனைப் பிளந்து கொண்டு நட்சத்திரம் புறப்பட்டது. தண்டு, சூலம், வாள், வில் முதலாகிய ஆயுதங்களெல்லாம், வீரர்கள் கையிலெடுத்து யுத்தஞ் செய்யாமல், தமக்குள் தாமே ஒன்ருேடொன்று யுத்தஞ்செய்தன. இந்தப் பட்டணத்து ஸ்திரீகளுடைய தாலிகள் ஒருவரால் வாங்கப்படாமல், தாமே

அற்று, அவரவர்கள் ஸ்தனங்களின்மேல் விழுந்தன. இன்ன மோர் அதிசயஞ் சொல்லுகிறேன்; கேளும்: இந்தப் பட்ட ணத்து ராஜாவின் மனைவியும் மயன் மகளுமாகிய மண்டோ தரியின் புறத்தில் அவிழ்ந்து விழுந்தது. அது தன்மேல் அக் கினி பட வெந்தது. இது அவளுக்குத் துயரம்வந்து சம்பவிக்கு மென்பதற்கு ஏதுவல்லவா? மற்றும் நான் கண்ட விபரீதமான கனுக்களை என்னவென்று சொல்வேன்! அதிக பலமுள்ள இரண்டு சிங்கங்கள் புலிக்கூட்டங்களைக் கண்டு, அவற் றுடனே கூடிக் கொண்டு வந்து, அளவிறந்த யானைகளிருக் கின்ற ஆரணியத்தில் புகுந்து, முழுதும் வளைத்துக்கொண்டு, நெருங்கிப் போர் செய்து, சின்னபின்னங்களாகக் கொன்று, அந்த யானைப் பிணங்களை மலை மலையாகக்குவித்துத் திரும்பிப் போம்பொழுது ஒரு மயிலையுங் கூட்டிக்கொண்டு போயின. உம்மைப் போலவே ஒரு ஸ்திரீ பொன் தாம்பாளத்திலே ஆயிரம் திருவிளக்கினையுடைய ஒரு தேர் விளக்கை ஏற்றி வைத்து, அதை ஏந்திக்கொண்டு, இராவணன் வீட்டிலிருந்து புறப்பட்டு என் பிதாவாகிய விபீஷணர் வீட்டிலே வந்து புகுந் தாள். இவ்விதம் கனவு கண்டுகொண்டேயிருக்கும்போது தான் என்னை நீர் எழுப்பினீர். மேலும், என்னென்ன காணுமோ! முடியக் காணவில்லை!'' என்று சொன்னாள்.

அது கேட்ட பிராட்டி திரிசடைக்குக் கைகூப்பி வந்த னஞ்செய்து, "அம்மா, அந்தக் கனவின் குறையை இன்ன மும் அறியவேண்டும்; நீ சீக்கிரமாய் நித்திரை செய்,'' என்று சொன்னாள். அப்படியிருக்கின்ற சமயத்தில், ஸ்ரீராம தூதராகிய அனுமரானவர் அந்தச் சோலையில் பிராட்டி எழுந் தருளியிருக்கிறதைக் கண்டார். முன்பு உறங்கிக் கிடந்த இராட்சசிகளெல்லாம் விழித்துக்கொண்டு, 'கெட்ட நித்திரை வந்து நம்மைக் கெடுத்தது!' என்று எவ்விடங்களிலும் எழுந்து அதட்டி, வேல் முதலிய ஆயுதங்களைக் கையி லெடுத்துக்கொண்டு புறப்பட்டார்கள். அவர்கள், வயிற் றிலே வாயிருக்கின்றவர்களும், நெற்றியில் கண்ணிருக்

கின்றவர்களும், கடூர திருஷ்டியுடையவர்களும், மலைக் குகைக்கு ஒப்பாகிய வாயுடையவர்களும், பத்துக் கையும் ஒருதலையுமுடையவர்களும், அதிக பயங்கரமாகிய ரூபத்தை உடையவர்களும், பர்வதங்கள் போலப் பருத்த ஸ்தனங்கள் தொங்குகின்றவர்களும், ஒற்றை ஸ்தனத்தையுடையவர் களும், விஷமே வடிவு கொண்டது போலக் கறுத்திருக்கின்ற வர்களும், எமனும் பிரமிக்கத்தக்க பராக்கிரமமுள்ளவர்களும், யானை முகம், குதிரை முகம், புலி முகம், கரடி முகம், யாளி முகம், பேய் முகம், சிங்க முகம், நரி முகம், நாய் முகங்க ளுடையவர்களும், முதுகிலே முகமிருக்கின்றவர்களும், மூன்று கண்ணுள்ளவர்களும், வாயிலே புகை எழும்புகின் றவர்களும், எண்ணுக்கடங்காத கூட்டத்தை உடையவர் களும், கண்ணுக்கடங்காத தோற்றத்தை உடையவர்களும், காலனானவன் பல உருவங்கொண்டு பெண்ணென்று பெயர் வைத்துக்கொண்டு திரிகிறது போல இருக்கின்றவர்களு மாகிய அந்த இராட்சத ஸ்திரீகளெல்லாம் எழுந்து வந்து ஸ்ரீ ராமருடைய திருத்தேவியைச் சுற்றிக்கொண்டார்கள். அப்போது ஜானகி ஒன்றும் பேசாமல், அவர்கள் முகத்தைப் பார்த்துப் பயந்திருக்க, ஸ்ரீ ராம தூதராகிய ஆஞ்சநேயர், ஒரு விருக்ஷத்தின்மேலேறி அதன் கிளையில் மறைவாயிருந்து பார்க்கத் தலைப்பட்டார். "இராட்சச ஸ்திரீகள்கையிலே ஆயு தம் பிடித்தவர்களாய் நித்திரை நீங்கிப் பலபேர் கூடியிருக் கின்றார்கள். இவர்களிப்படிக் கூடியிருப்பது ஏன்?" என்று உற்றுப் பார்த்து, கறுத்த மேகக் கூட்டத்தின் மத்தியில் பிர காசிக்கின்ற மின்னற்கொடி போலக் கரிய நிறத்தையுடைய இராட்சசிகளின் நடுவில் இரகுநாயகருடைய தேவியைக் கண்டு, "அரக்கிகள் சுற்றிலுங் காவலாயிருக்க அவர் களுக்கு மத்தியில் இருக்கின்றவரே சீதாபிராட்டியார் போலக் காண்கிறது! இவரோ, தடாகத்தின் நடுவிலிருக்கின்ற அன்னப்பேடு போலத் தமது கண்ணினின்றும் ஒழுகுகின்ற ஜலப்பிரவாகத்தின் மத்தியிலிருக்கின்றார். இந்தத் தேவி

யாரைத் தேடி வந்த நான் இப்பொழுதுதான் கண்டேன்! ஆகையால், முன்பு தர்மம் பொய்த்துப் போய்விட்டதென்று நினைத்தேனே, அது சரியன்று. நானும் இனி இறக்கமாட்டேன்!'' என்று சொல்லி, ஆனந்தமாகிய தேனையுண்டு, சரீர ஸ்மரணை தெரியாமல், ஸ்ரீ ராம நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு கூத்தாடினார்; இங்கும் அங்கும் ஓடினார்: எங்கும் உலாவினார். "இகழப்படாத இவருடைய திவ்வியரூப சவுந்தரிய லட்சணங்கள், எங்கள் சுவாமியாகிய ஸ்ரீராமசந்திரர் சொன்ன அடையாளத்திற்குச் சிறிதாவது வித்தியாசப் பட்டிருக்கவில்லை. கள்ளச் செய்கையையுடைய இராவணனவன் ஸ்ரீ ராகவருடைய பிராணநாயகியாராகிய இவரை ஒளித்து வைத்தது, திரி லோகத்தாருக்கும் மகத்தாகிய அக்கிரமத்தைச் செய்கின்ற பாபிஷ்டனான அவன் தன்னுயிரை இழப்பதற்கே! இதற்குச் சந்தேகமில்லை. அந்த ஸ்ரீராமர் ஸ்ரீமகாவிஷ்ணுவே; இந்தச் சீதாபிராட்டியார் தாமரைப் புஷ்பாசனத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமகாலட்சுமியே; அழுக்கடைந்திருக்கின்ற இரத்தினத்தைப் போலவும், சூரியனுக்கு எதிரே உதயமாகிய சந்திரனைப்போலவும் தேஜஸ் மாறியிருக்கின்ற இவருடைய கற்புக்கும் மனவுறுதிக்கும் பின்னமுண்டாகவில்லை. எங்கேயாவது தர்மத்திற்கும் அழிவுண்டா? ஸ்ரீ ராமருடைய திருத் தோள்களைத்தான் சொல்வேனா! பதிவிரதா ஸ்திரீகளுக்கு மூலதிலகமாகிய இந்த உத்தமியாருடைய குணாதிசயத்தைச் சொல்வேனா! அந்த ஜனக மகாராஜாவினுடைய வமிசத்தின் பெருமையைத்தான் சொல்வேனா! நான் எதைத்தான் சொல்வேன்!'' என்று மிகவும் புகழ்ந்து, "தேவர்களும் பிழை செய்யவில்லை; ரிஷீஸ்வரர்களும் பிழை செய்யவில்லை; தர்மத்திற்கும் குறைவில்லை; இனி நான் செய்கிறதற்கு அருமையாகிய காரியம் என்ன இருக்கின்றது! எம்பிரானாகிய ஸ்ரீ ராமருக்குச் செய்யும் என்னடிமைத் தொழிலும் ஒன்றும் பிழைபடவில்லை. இந்தலோகநாயகியாரின் கற்பானது சிதையுமானால்

சுவாமிக்குக் கோபம் ஜனிக்கும்; அதனுல் சதுர்த்தசபுவனங்களும் நாசமாகுமென்று நினைத்தேன். அப்படிக் கற்புச்சிதையாமையால், இனி ஒரு சலனமுமில்லாமல், உலகங்களெல்லாம் பல்லூழிக் காலம் வாழ்ந்திருக்கும்! நல்ல குடியிற்பிறந்து இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கைகளையுடைய பதிவிரதா ஸ்திரீகள் தங்கள் மனத்தைப் பலவிடங்களிலும் செல்லவொட்டாமல் நிறுத்துகின்ற தபோ மகிமைக்கு முன், பஞ்சாக்கினி மத்தியிலிருந்து பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து அன்னபானுதிகளை நீக்கிக் கோரத் தவம் செய்பவர்களுடைய தபோ மகிமை எவ்வளவு! இந்தப் பாக்கியவதியார் பூமியில் தோன்றினதால், குடிப் பிறப்பும், அதனையுடைய பெண் பிறப்பும், அதற்குரிய நாணம் முதலானவைகளும் தவஞ்செய்து சிறப்பினையடைந்தன. இவ்விடத்தில் இவர் இப்படிப்பட்ட மகத்தாகிய அருந்தவம் செய்துகொண்டிருக்கின்ற அதிசயங்களையெல்லாம், ஸ்ரீராமர் தம்முடைய திருக்கண்களால்காண்கின்றதற்குத் தவஞ்செய்யாமற்போனுர்! இங்குள்ள இராட்சதஸ்திரீகளெல்லாம் கிரமந்தப்பிக் கோபிக்கின்றவர்களாயிருக்கிருர்கள். நல்லவர் இந்தப் பிராட்டியாரொருவரேயல்லாமல் வேறெருவரில்லை லோக காரணியாராகிய ஜானகியாரைத் தர்மமே காத்ததோ, அல்லது மேன்மையாகிய கற்பே காத்ததோ! அம்மம்ம! அருமை! எவர்தான் இதைச் சகிப்பர்! இது என்னைப்போன்றவர்களால் சொல்லத்தக்கதா!'' என்று இப்படியெல்லாம் நினைத்து நினைத்து, அதிக சந்தோஷ சித்தராகி ஆஞ்சநேயர் அந்த மரக்கிளையிலேயே தங்கிப் பார்த்துக்கொண்டிருந்தார். அச்சமயத்திலே இராவணேஸ்வரன் அந்தச் சோலைக்கு வரப் புறப்பட்டான்.

# 4. நிந்தனைப் படலம்

வச்சிரத்தால் செய்யப்பட்ட மகர குண்டலங்கள் அசைந்துகொண்டிருக்கின்ற இருபது தோள்களும் இரு பக்கத்திலும் பிரகாசிக்கவும், மாணிக்கமயமாகிய மகுடகாந்தி யானது அந்த இராத்திரியைப் பகலாகச் செய்யவும், ஊர்வசி உடைவாளேந்திக்கொண்டு வரவும், மேனகை தாம்பூலம் மடித்துக் கொடுத்துக்கொண்டு வரவும், திலோத்தமை பாத ரட்சை தாங்கிக்கொண்டு வரவும், அரம்பை காளாஞ்சி ஏந்தி வரவும், மற்றும் பல ஸ்திரீகள் கைகளில் நெய் விளக்கு எடுத்து வரவும், யக்ஷ ஸ்திரீகள், தேவஸ்திரீகள், விஞ்சைய ஸ்திரீகள், பன்னக ஸ்திரீகள், சித்த ஸ்திரீகள், இராட்சத ஸ்திரீகள் முதலாகிய பல ஸ்திரீ கூட்டங்கள் பெரியமலை யைச் சூழ்ந்து வருகின்ற மயில் கூட்டங்கள் போலப் புடை சூழ்ந்து வரவும், பச்சைக் கற்பூரம் கஸ்தூரி முதலாகிய வாச னைத் திரவியங்கள் சேர்க்கப்பட்ட கலவைச் சந்தனமானது கமகமவென்று பரிமளிக்கவும், பல ஸ்திரீகள் அன்னக் கூட் டங்கள் நடக்கிறது போல நடந்து தன்னைச் சூழ்ந்து வரவும், தனது மார்பின் இரு புறத்திலும் வெள்ளைப்பட்டு உத்திரீயமானது தொங்கவும், அம்மார்பில் பொன்னாரம் பிரகாசிக்கவும், மேகத்தின் மத்தியில் தோன்றிய மின்னலைப் போல முப்புரிநூல் விளங்கவும், இருபது புஜங்களிலும் அணிந்த வாகுவலயங்களும் கேயூரங்களும் இராக்காலத்தில் ஆகாயத்தில் உதயமாகிய நவக்கிரகங்களைப்போல மின்ன வும், கால்களில் அணிந்திருக்கின்ற வீரகண்டாமணிகளின் ஓசையானது பரவவும், வக்கிர தந்தங்கள் அர்த்த சந்திரனைப் போல இளவெயிலெறிக்கின்ற முகங்கள் இருளைப்பார்க்கிலும் கருமையாய்ப் பிரகாசிக்கவும், இரத்தினகசிதமாகிய வீர சங் கிலியும் முத்தாரமும், யுகாந்த காலத்திலே மகாமேருவில் தொத்திக்கொண்டிருக்கின்ற பல நட்சத்திரங்கள் போல மார் பில் அணிந்த சொர்ணகவசத்தின்மேல் பிரகாசிக்கவும், சிரசில்

தாங்கிய பத்துக் கிரீடங்களும் உதயகிரியின் சிகரங்களில் பன்னிரண்டு சூரியர்களில் இருவரை நீக்கிப்பத்துச்சூரியர்கள் உதயமானது போல ஜொலிக்கவும், நாநாவித வாத்தியங்கள் விஷத்தைக் கக்குகின்ற நாகங்களும் அமிர்தத்தைக் கக்கும் படி ஆகாயம் பூமியெங்கும் அளாவி முழங்கவும், புஷ்பத்தால் அலங்கரிக்கப்பட்ட விதானமும், சாமரைகளும், தவளக் குடைகளும், ஆலவட்டங்களும், கொடிகளும், மகர தோர ணங்களும் ஸ்திரீகள் தாங்கிக்கொண்டு நடந்து வரவும், அந்தக் காலத்தில் மன்மதன் பிரயோகித்த அக்கினி ஜொலிக்கின்ற பாணங்கள் துளைத்த வெவ்விதாகிய புண் ணில் வேலானது நுழைந்தது போலச் சந்திர கிரணங்கள் பாயவும், பாற்சமுத்திரத்தின் வெண்மையாகிய அலைகள் கறுத்த பர்வதத்தின்மேல் தாவிப் புரள்வதுபோல வெண்சா மரம் இரட்டவும், கருங்கடலிலிருந்து உதித்து உயர எழுந்த களங்கமில்லாத பூரண சந்திரனைப்போலத் தவளப்பூச்சக்கரக் குடையானது முடியின்மேல் பிரகாசிக்கவும், சீதாபிராட்டி எழுந்தருளியிருக்கின்ற திசையைத் தான் அறிந்திருந்தும் மனம் திகைத்துத் திசை தெரியாமல் பல தலைகளையுடைய பாம்பைப் போலப் பலவிடங்களிலும் உழன்று திரிந்து கொண்டு வருகின்றான்.

இப்படி வருகின்ற இராவணனைச் சிற்றுருவங் கொண்டு அசோக மரத்தின் கிளையில் தொத்திக்கொண்டிருக்கின்ற அனுமரானவர் செவ்வையாகப் பார்த்து, "குணமும் செய லும், இனிமேல் விளையும் விளைவும், இவ்விடத்தில் தெரிய வரும்," என்றெண்ணி, ஸ்ரீராமசந்திரருடைய திருநாமத்தை ஸ்மரித்துக்கொண்டு மறைவாய் இருந்தார்.

இராவணன் அந்தச் சோலையில் வந்து சேர்ந்து, தன் னுடனே வந்த அரம்பா ஸ்திரீகளையும் மற்றவர்களையும் வெளி யிலே போயிருக்கச் சொல்லி, தான் தனியே இருக்கின்ற பெண் விளக்காகிய அந்த லோகமாதாவின் சமீபத்தில் வந்தான். அப்போது பிராட்டி அவனைக் கண்டு, நடுநடுங்கி,

விழுங்க வரும் பெரும்புலியைக் கண்ட இளம்பெண்மான் போலப் பயந்து திடுக்கிட்டுக் கரைந்தாள். இவ்வண்ணம் மனங்கூசி உயிர் நிலை கலங்கிய ஜானகியையும், அவள் மேல் கொண்ட ஆசையினால் பிராண சங்கடப்படுகின்ற மகா பாதகனாகிய இராவணனையும், ஆஞ்சநேயர் தம்முடைய இரண்டு நேத்திரமும் சாக்ஷியாகப் பார்த்து,மனம் ஊசலாடும் படி அதிக கிலேசத்துடனே மங்களாஸாசனம் செய்யத் தொடங்கி, "ஜனக மகாராஜாவின் புத்திரியாராகிய இந்தச் சீதாபிராட்டியார் வாழக்கடவர். இவருடைய நாயகரும் இரகு குல திலகருமாகிய அந்த இராமசந்திரரும் வாழக்கடவர்! அவருடைய நாமரூப குணங்களைச் சொல்லுகின்ற சதுர் வேதமும் வாழக்கடவன! அவ்வேதத்தை அத்தியயனஞ் செய்கின்ற பிராமணோத்தமர் வாழக்கடவர்! அவர்களிடத் தில் நிலைபெற்றிருக்கின்ற தர்ம்மும் வாழக்கடவது!" என்று வாழ்த்தினர்.

இராவணன் பிராட்டியைப் பார்த்து, "குயிலுக்குச் சமானமாகிய இனிய குரலினையுடைய பெண்ணே, பெண்கள் சிகாமணி, எங்கள் குலதெய்வமே, என் பிராணதாரமாகிய சீதா, நீ எப்பொழுது என்னிடத்தில் கிருபை செய்வது?" என்றான். சிவன் முதலானவர்களுக்கும் அஞ்சாத திடச்சித் தத்தையுடைய இராவணனானவன் ஆசையும் நாணமும் தன்னைப் பீடிக்கும்படி கூசிக்கொண்டு, "இன்றென்றும் நாளை யென்றும் வீணாக நாள் கழிந்துவிடுகின்றதே! நீ என்னைக் கொன்ற பின்புதான் கூட இருக்கின்றாயோ? என்னுடைய அளவில்லாத பாக்கியமாகிய ராஜரிக சாம்ராஜ்யத்திற்குத் திலகமாயிருக்கின்றவளே, உன்பொருட்டு மன்மதனானவன் என்னிடத்தில் செய்கின்ற கலகத்தை நீ பார்ப்பதுமல்லாமல், அவனுக்கு நான் தோற்கின்ற என்னுடைய ஏழ்மையையும் பார்க்கின்றாயோ? நீண்ட கூந்தலையுடைய ஆயிரத்தெட்டு மாற்றுத்தங்கமே, கீர்த்தி பொருந்திய என்னுடைய மகதைஸ் வரியத்தை இகழ்ந்துவிடுகின்றாயே! உன் நாயகனாகிய

இராமன் இறந்து போகாமல் பிழைப்பானு? தவம் செய்கின்றவர்களும், அதிநுட்பமாகிய சாஸ்திரார்த்தங் களைத் தெரிந்தவர்களும் பெறும் பிரயோசனம், என் னுடைய வார்த்தையைச் சிரசாக வகிக்கின்ற பிரமாதி தேவர்களுடனே கூடியிருக்கின்ற இன்பந்தானே? உனக்குப் பாதாதிகேச பரியந்தமாகிய அவயவங்களெல்லாம் அழ காகத் தெரிந்து படைத்த பிரமன், இடையும் கிருபை யும் இல்லாமல் போம்படி ஏன் செய்துவிட்டான்? இள மைப் பருவமானது நாளுக்குநாள் விருத்தியாகின்றதா? கொஞ்சம் கொஞ்சமாய் மாண்டுபோய்விடுகின்றதே! அப் படி அருமையாகிய இளமையானது வேண்டிய சுகம் அனுப விக்கத்தக்க காலத்தில் வீணுய்ப் போமானல், அப்புறம் என் மனேபீஷ்டத்தை எப்பொழுது முடிக்க இருக்கின்ருய்? இளங்கிளிக்குச் சமானமாகிய ஜனகராஜ புத்திரியே, சிறந்த பெண்கள் தன்மையும், உயர்ந்தரூப இலட்சணமும், மாறு படாத திடசித்தமும் உடைய உனக்கு, தாக்ஷண்யமாத்திரம் இல்லாமல் போனதென்ன? என் பிராணன் போனலும் போகட்டும்! உன் முகம் மாத்திரம் கோணுமலிருக்க வேண் டும்! அப்படியல்லாமல், நீ முகங்கோணினல், குணம் அழகு காமம் முதலானவை தங்கி நிற்பதற்கு இனி யார் இருப்பிட மாவார்கள்? உன் கணவனே நான் கொல்லும் பொழுது அவன் அலறிக் கூவும் குரலேக் கேட்கவும், அவன் இறந்து கிடப்பதைப் பார்க்கவும் இருக்கின்ருயோ? ஊழ் வினையா னது எளிதாக ஊட்டுகின்ற தர்மப்பயனுகிய நன்மையை இப்படி இகழ்ந்து தள்ளிவிடுகின்றவர்களே நான் எங்கும் பார்க்கவில்லே! நீ ஒருத்தி என்னிடத்தில் வந்ததனுல் எனக்கு மகத்தாகிய சாம்ராஜ்யமானது மேன்மேலும் உண்டாயிற் றென்கிற கீர்த்தியை விட்டு, இன்னவளாலே இன்னுன் மாண்டுபோய்ப் பாக்கியமும் இழந்துபோனுன் என்கிற அப கீர்த்தியைச் சம்பாதித்துக்கொள்ளுகின்றனேயோ? தேவர் களும் அவர்களுடைய தேவிமார்களும் கை கூப்பி அடி

வணங்குகின்ற திரிலோகாதிபத்தியமானது உன்னிடத்தில் வலிய வருகின்றது. அதை நீ விலக்கிவிடுகின்ருயாகையால், உன்னைப்போலும் பேதைகளான பெண்கள் யாரிருக்கின்ருர் கள்? மூன்று லோகத்தாரும் ஏவல் செய்யும்படியிருக்கின்ற திரிலோகாதிபதியான என்னை நீ அடிமை கொண்டருளக் கடவாய்!'' என்று கைகளைக் கூப்பித் தலைமேல் வைத்துக் கொண்டு, சாஷ்டாங்கமாகப் பூமியில் விழுந்து தண்டன் சமர்ப்பித்தான்.

இவ்வார்த்தைகளால் ஜானகியின் செவிகள் தீய்ந்தன; மனம் சுழன்றது; போபம் மூண்டது; கண்கள் சிவந்தன, அப்போது பிராணன் போனுலும் போகின்றதென்று சிறிதும் அஞ்சாமலும், பெண் தன்மைக்கு ஒவ்வாத சொற்களானுலும் இந்த வேளையில் சொல்லுகிறதே சரியென்று துணிந்தும், வஞ்சகனுகிய இராவணனுடைய மனம் வேறுபடும்படி கற்பினுல் தன் மனத்தைக் கல்லைப்பார்க்கிலும் மிகவும் உறுதிப்படுத்திக்கொண்டு, அவன் முகத்தைப் பாராமல், கீழே கிடக்கின்ற ஒரு துரும்பைப் பார்த்து, அவனை அந்தத் துரும்பாக மதித்து, “அடா, அற்பமாகிய திரணமே, இப்பொழுது நான் சொல்லுகின்ற சொல்லானது என்னைப்போலும் நல்ல குடிப்பிறப்பினையுடைய பெண்கள் சொல்லத்தக்கதன்று. ஆகிலும், உன்னைக் குறித்துச் சொல்லுகிறேன்: மகாமேருவை உருட்ட வேண்டுமென்ருலும், ஆகாயத்தைப் பிளந்துகொண்டு அதற்கப்புறம் போகவேண்டுமென்ருலும், பதினுன்கு லோகத்தையும் முடிக்க வேண்டுமென்ருலும், ஸ்ரீ ராமபாணம் அப்படியே செய்யத்தக்க பலமுடையது! அதை அறிந்திருந்தும்,புத்தியில்லாமல் இழிவாகிய வார்த்தைகளையெல்லாம் பிதற்றி, உன் பத்துத் தலைகளும் அற்று விழுவாயா! என் நாயகருக்கு நீ பயந்துதானே சமயம் பார்த்து, ஒரு வஞ்சனையான மானையேவி, அவரை என்னை விட்டு நீங்கும்படி செய்து, உன்னுருவத்தை மறைத்து, மாயா சன்னியாசி வடிவங்கொண்டு வந்தாய்? நீ பிழைக்கிறவனுனல்,

என்னை விட்டுவிடுவாய். உன் குலத்துக்கெல்லாம் விஷமாகிய என்னை உன் கண்களும் பார்க்கக்கூடுமா? இந்தப் பத்துத் தலைகளும் இருபது தோள்களும், கோதண்ட தீட்சா குருவாகிய என் நாயகர் பலபல பாணங்களைப் பிரயோகித்து விளையாடத் தகுந்த விசித்திரமாகிய இலட்சியமாயிருக்குமல்லாமல் வேறென்ன செய்யும்? யுத்தத்தில் எதிர்க்கத்தக்க சத்தியையுடையவனைப்போலப் போய், அன்றைய தினம் ஜடாயு பலத்துக்கு முன் நிற்கமாட்டாமல் தரையில் விழுந்தாயே! ஒரு பட்சிக்கு நீ தோற்றும் சிவனுடைய கைவாளினாலே அல்லவோ வென்றாய்? அல்லவென்றால், அந்நாளே இறந்து போய் நீ செய்த தவமும் அதனாற்பெற்ற வரமும் தீர்க்காயுளும் உனக்குக் கூற்றுவனாலே அபாயம் வந்து சம்பவிக்காமலிருப்பதைக் குறித்தேயல்லாமல் என் நாயகருடைய பாணத்தினாலே இறவாமலிருப்பதைக் குறித்தன்று; இதற்காக நீ ஏதாவது தவஞ்செய்து வரம் பெற்றதுண்டா? நீ பெற்றிருக்கின்ற அந்த வாளையும், நாளையும், பராக்கிரமத்தையும், மற்றுமுள்ள சகலத்தையும் உனக்குக் கொடுத்த பிரமாதி தேவர்களுடைய வரங்களெல்லாம் இரகுநாயகரானவர் தமது கோதண்டத்தை வளைத்து நாணேறிட்டு ஓர் அஸ்திரத்தை மாத்திரம் அனுசந்தானஞ்செய்து பிரயோகித்தவுடனே, உன்னை விட்டு விலகி அழிந்து போகும். நன்றாய்ப் பிரகாசிக்கின்ற தீபச்சுடருக்கு முன் இருள் விலகிப்போகாமல் நிற்பதுண்டா? நீ கைலாசகிரியை எடுத்த நாளில் தமது காற்பெருவிரல் நுனியால் உன்னை அழுத்தி ஜயித்த திரிபுராந்தகரான சிவபிரானுடைய கைவில்லை என் பிராண நாயகராகிய இராகவர் வளைத்த போது, அது அவர் பலத்திற்குச் சகிக்காமல் ஒடிந்து விழுந்த சத்தம் நீ கேட்கவில்லையா? 'மலையை எடுத்தேன்! அஷ்டதிக்குக் கஜங்களை ஜயித்தேன்!' என்று சொல்லுகின்ற நீ, எங்கள் இளைய பெருமாளானவர் கையிலே வில்லெடுத்துக்கொண்டு நிற்க அங்கே போய் அவரை ஜயிக்கத்தக்க நிர்வாகமில்லாமல், நானுமொரு வீரனென்று

இன்னமும் தலையெடுத்துக்கொண்டு பெண்கள் காலில் விழுந்து கெஞ்சிக்கொண்டு திரிகின்ருயோ? அறிவில்லாதவனே, நீ ஒளித்துக்கொண்டிருக்கின்ற இடம் மாத்திரம் இன்னதென்று எங்கள் ஸ்ரீ ராமபிரானுருக்குத் தெரிந்தால், அப்போதே இந்தச் சமுத்திரமும் இலங்கையும் அழியும்! உன் பிராணனும் நாசமாகும்! அந்த மட்டிலே போகுமா? ஊழியும் தீய்ந்து போகும்! நீ ஒருவன் இப்படிப்பட்ட வஞ்சனை செய்ததனுல், ஸ்ரீ ராமசந்திரருடைய கோபத்தால் இராட்சதருடனே மாத்திரம் முடிந்து போகாமல், இந்த லோகங்களுக்கெல்லாம் என்ன அழிவு வருகின்றதோவென்று தர்ம தேவதை சாட்சியாக நான் அஞ்சிப் பார்க்கிறேன்! 'இந்த இராமலட்சுமணர்கள் மனிதர்தாமே!' என்று நினைத்தாயேயானுல், முன்னுளிலே உன்னைச் சிறை வைத்த கார்த்தவீரியனும் மனிதன்தானே? 'இவர்கள் இருவர்தாமே? இவர்களுக்கு வேருேர் உபபலமுமில்லையே!' என்று அலட்சியஞ்செய்வாயானுல், சகல புவனங்களையும் சகலாத்துமாக்களையும் சங்கரிக்கின்ற ஊழி நாதன் ஒருவனல்லவோ? ஆதலால், அவர்களுக்கும் உனக்கும் யுத்தம் நடக்கும்போது, என் சொல் மெய்யோ, பொய்யோ, நீ பார்த்துக்கொள்! இரணியன் இரணியாட்சனென்னும் அசுரர்கள் அதிபராக்கிரமசாலிகளாய், உன்னிலும் மேலாகிய சம்பத்தையுடையவர்களாய், நெடுங்காலம் வாழ்ந்திருந்தார்கள். அவர்களும் தர்மம் தப்பி நடந்தார்கள்; ஆகிலும், இப்படிப் பரதாரத்தை இச்சிக்கவில்லை; அகங்காரத்தினுல் மாண்டு போனுர்கள்! அடா, பூலோகத்தாரும் சுவர்க்கலோகத்தாரும் நடுங்கும்படி வாழ்கின்ற கொடும்பாவி, உன்னுடைய அற்பமாகிய துஷ்கிருத்தியத்தை விலக்காமல் உனக்குப் பயந்திருக்கின்ற பிரமா விஷ்ணு ருத்திரர்களைப்போல எங்கள் இரகுநாயகரையும் நீ நினைத்தாயோ? ஐம்புலன்களும் செல்கின்ற வழியில் செல்லாமல் தர்மத்தின் நிலையிலே நின்று வினையைக் கடந்தவர்கள் பிரமா முதலாகிய தேவர்களா,

அசுரர்களா? சகல லோகத்தாரும் ஏவல் செய்யும்படி மகா சம்பத்து உனக்குக் கிடைத்திருக்கின்றது புண்ணியத்தினுலேயா, அல்லது பாவத்தினுலேயா? ஆய்ந்து பார்! இப்படிப்பட்ட பெரிதாகிய செல்வத்தை உனக்குக் கொடுத்த அந்த மகேஸ்வரரும் தர்ம மார்க்கத்தில் நின்றல்லவோ அப்படிப்பட்ட இஷ்ட காமியத்தை அனுபவிக்கிருர்? நீ மாத்திரம் தர்மந்தப்பி நடந்து, ஒப்பற்ற செல்வத்தையும் இழந்து, பந்து ஜனங்களுடனே நிர்மூலமாயழிந்துபோகும்படி ஏன் எத்தனப்படுகிருய்? அடா, அறிவில்லாதவனே, போர்க்களத்தில் புறங்கொடுத்தோடாத மகா பலிஷ்டர்களானுலும், தர்மந்தவறினவர்களும் ஜீவகாருணியமில்லாதவர்களுமல்லவோ பிறந்து இறந்து உழல்கின்றவர்கள்? அவ்வாருகிய ஜனன மரணத்தை நீக்கினவர்கள், அகங்கார மமகாரத்தைக் கெடுத்து, காமவெகுளி மயக்கத்தைக் கடந்தவர்களேயல்லால் வேறே யார்? அகஸ்தியர் முதலாகிய மகரிஷிகளெல்லாங் கூடிப் புருஷோத்தமராகிய ஸ்ரீ ராமரிடத்தில் வந்து, 'ஐயா, தசரதகுமாரரே, இராட்சதர்கள் செய்யும் உபத்திரவத்தைச் சகிக்காமல் தவம் முதலாகிய வைதிக கர்மங்களையெல்லாம் இழந்தோம்! தேவரீர் அவர்களைச் சங்காரஞ் செய்தருளும்! உம்முடைய பாணத்தினுல் அவர்கள் சத்தியமாய் மாண்டு போவார்கள்! எங்களை இரட்சியும்!' என்று முறையிட்டுக்கொண்டார்கள். அந்தச் சமயத்தில், நான் அவர் பக்கத்திலிருந்து கேட்டேன். நீயோ, அதற்கேற்றபடி நடந்து வருகின்ருய். உன்னையும் உன்னுடைய பராக்கிரமத்தையும், நீ பெற்றிருக்கின்ற தீர்க்காயுளையும், உன் சேனு பலத்தையும், முனீஸ்வரர் சொல்லக் கேட்டும் எங்கள் இராமபத்திரர் எவ்வளவும் இலட்சியம் செய்யாமல், உன் தங்கையின் மூக்கையும், உன் தம்பிமார்களாகிய கரன் முதலானவர்களுடைய கரசரணுதி அவயவங்களையும், சின்னபின்னப்படுத்திய சமாசாரத்தை நீ கேள்விப்படவில்லையோ? உன்னுடைய இருபது கைகளையும் சேர்த்துப்

பிடித்து, உன் பத்து வாயின் வழியாகக் குபீர் குபீரென்று உதிரங் கக்கும்படி குத்தி, உன்னை அருஞ்சிறையில் வைத்த ஆயிரங்கைகளையுடைய கார்த்தவீரியார்ச்சுனனுடைய வைர மாகிய தோள்களையும் மழுவாயுதத்தால் தறித்தெறிந்த பரசுராமரானவர், என் நாயகருக்குத் தோற்றுப்போன சமா சாரம் நீ அறியாயோ? மேல் வரும் கதியை அறியாத நீசனே, கடிக்கின்ற விஷசர்ப்பமும் மந்திர உச்சாடனம் பண்ணக் கேட்டுத் தடைபடுகின்றது! இதாகிதம் தெரியா மல் தனித்துத் துள்ளுகிற உன்னை, இது தகும் இது தகா தென்று அதற்கேற்ற ஏதுக்களுடனும் திருஷ்டாந்தங்க ளுடனும் புத்தி சொல்லி இடிக்கின்றவர்களில்லை; நீ நினைத் ததே சரி சரியென்று சொல்லி உன்னை முடித்துவிடத்தக்க வர்கள் மாத்திரமிருக்கின்றார்கள். இப்படியானால், இனி உனக்கு நாசம் வருமேயல்லாது வேறொன்று சம்பவிக்குமா?" என்று பலபல வார்த்தைகளைச் சொல்லினள்.

இப்படிச் சொல்லவே இராவணன் மேகத்தின் வயிற் றைக் கிழித்துக்கொண்டு எழுந்த மின்னலைப் போல இரு பது கண்களிலும் நெருப்புப் பொறிகள் எழும்ப, வாய்க ளெல்லாம் புகைய, அதட்டி ஆர்ப்பரித்து, காமத்திலும் கோபமிகுந்தவனாய், அதிக நாணத்தைக் கொண்டு, 'இவ ளைப் பிளந்து தின்றுவிடுகிறேன்!' என்று எழுந்து வந்தான். இப்படி ஆசையுங் கோபமும் முன்னும் பின்னும் தள்ள ஜானகிக்குச் சமீபத்தில் வந்தவனை அனுமார் பார்த்து, "என்னை அடிமை கொண்ட நாயகருடைய தேவியாரை என்னெதிரே இப்படியெல்லாம் பேசிய நீசனாகிய இராவணன் தீண்டுகிறதற்கு முன்னே, இவனுடைய பத்துத் தலைகளையும் உதைத்து உருட்டிவிட்டுப் பின்பு எந்தக்காரியமும் பார்த்துக் கொள்வேன்!" என்று நினைத்து, பின்னும், "இந்த இராவ ணனோ தனியேயிருக்கின்றான். ஆகையால், எளிதாக இவன் தலைகளையுடைத்துத் தள்ளி, பிராட்டியாரை எடுத்துக் கொண்டு ஸ்ரீ ராமபிரானிடத்திற்குப் போகிறதே காரியம்!"

என்று துணிந்து, அதிக கோபாவேசத்துடனே கையைப் பிசைந்துகொண்டிருந்தார்.

அப்பொழுது, அண்டங்களையெல்லாம் அழிக்கும்படி மூண்டெழுந்த யுகாந்த காலாக்கினியைப்போல முதிர்ந்த கோபத்துடனே கிட்டி வந்த இராவணனானவன், அந்தக் கோபாக்கினியைக் காமம் என்கிற வெள்ளமானது அவிக்க, லோகமாதாவான சீதைக்கு எதிரே சும்மா நின்று, "நான் உன்னைக் கொல்லுகிறேனென்று சொன்னேனே! அதிருக்கவேயிருக்கிறது. உலகில் எனக்கு எந்த விஷயமாயினும் சாத்தியப்படாததென்று உண்டா? தோற்பதும் ஜயிப்பதும் எனக்கு விளையாட்டுச் செய்கையாய் இருக்கின்றன. உன்னுடைய உயிருக்கு ஒப்பான நாயகனை நான் கொன்றால் நீ இறந்து போவாய். அது கண்டால் நானும் இறந்து போவேன். அந்தச் சங்கடத்தை எண்ணித்தான் அன்று நான் உன்னை வஞ்சனை செய்து எடுத்து வந்தது. யுத்தஞ் செய்யத் தலைப்பட்டால், யார்தான் எனக்கு எதிர் நிற்பவர்? மானானது வந்ததென்று அறிந்து அதைப் பிடிக்கத் தொடர்ந்த மானிடர்கள், என் ஆஞ்ஞாதிகாரத்தை அறிந்தால் இந்த வழி வருவார்களா? முன்னாளிலே ஆரோ என்னை ஜயித்தார்களென்று சொன்னாயே! அவர்களும் இருக்கட்டும்; சகலமானவர்களுக்கும் மேலானவர்களும், யாவராலும் இறவாதவர்களுமாகிய தேவர்களும் இருக்கட்டும். அந்நாள் முதற்கொண்டு தேவேந்திரனானவன் பணிவிடை செய்ய மூன்றுலகத்தையும் நான் ஒருவன் ஆள்கின்றேன். இதைக் காட்டிலும் வேறொரு காரணம் சொல்ல வேண்டுமா? எல்லாரையும் நான் வெல்லுவதும் பிடித்துவந்து ஏவல்கொள்ளுவதுமேயல்லாமல், என்னை ஏவல் கொள்பவர்களும் இருக்கின்றார்களா? மும்மூர்த்திகளையும் மற்றத் தேவர்களையும் பராக்கிரமம் அழியச்செய்த என் பிரதாபத்திற்கு உன்னாலே பழி வரும்படி பிரயோஜனம் இல்லாத தவத்தைச் செய்துகொண்டிருக்கின்ற அற்ப மனிதர்களை நானொரு பிர

யோஜனமாக எண்ணிக்கொல்லப்போகின்றேனு? இதோ அழைத்து ஏவல் கொள்ளுகிறேன்! அந்தச்சாமர்த்தியத்தை யும் பார்! அற்பப் பலத்தையும் அற்பச் செய்கையையு முடைய அற்ப வீரர்கள்மேல் எனக்குக் கோபம் உதிப்பதே இல்லை. ஆயினும், இன்றைய தினமே போய் அந்த இராம இலட்சுமணர் இருவரையும் ஒரு கையில் பிடித்துக்கொண்டு வந்து உன் முன்னே விடுகிறேன் பார்! அவர்கள் மனிதர் களானுலும் ஸ்திரீ இரத்தினமான உன்னை எனக்குக் கொடுத்த உபகாரத்தை ஆலோசித்துப் பார்த்தால், அவர் களைப் பிராண இமிசை செய்யக்கூடாது. அப்படியன்றி, அவ சியம் கொல்லவேண்டும் என்று உனக்கு இஷ்டமிருந்தால், இப்பொழுதே கொல்லுகிறேன்! மேலும், அயோத்திக்குப் போய் அங்கிருக்கின்ற பரதன் முதலான சகலரையும் கொன்று, மிதிலைக்குப் போய் அவ்விடத்திலுள்ள ஜனகன் முதலானவர்களையும் கருவறுத்துவிட்டுச் சீக்கிரத்திலே வந்து உன் உயிரையும் மாய்க்கிறேன்! என் பிரதாபத்தை நீ என்ன அறிவாய்! நீ சிறுமியாகையால், அறியாமற்சொன் னுய்! உன் பிராணனைப் போக்கடிக்கிறதற்கு நெடுநேரஞ் செல்லாது. இன்னும் இரண்டு மாதம் போனுல் அப்புறம் உனக்கே தெரிய வரும்," என்று அதட்டிப் பேசி, அந்தச் சீதாபிராட்டியினுடைய திவ்விய சுந்தரமான திருவுருவத் தைக் கண்ணிலே கண்டபடி மனத்திலே பதித்து வைத்துக் கொண்டு, அவ்விடத்தை விட்டு நீங்கினுன்.

இப்படி நீங்கிய இராவணன், அச்சீதைக்கு அருகே காவலாயிருக்கின்ற இராட்சசிகளை இரகசியமாக அழைத்து, "பூங்கொடி போலும் இளமையுடைய ஜானகியை ஒரு விதத் தினுல் பயப்படும்படி செய்தாவது அல்லது அவளுக்குப் புத்தி வரும்படி தெரியப்படுத்தியாவது வசியஞ்செய்து என் னிடத்திலே மனம் இரமிக்கும்படி செய்தீர்களானுல் பிழைத் தீர்கள்! அல்லாவிட்டால், கொன்றுவிடுவேன்!" என்று சொல்லிவிட்டு, தன் மாளிகையில் போய்ச் சேர்ந்தான்.

பின்பு, கேதுவென்னும் பாம்பு விழுங்கிக் கக்கிய சந்திரனைப் போல இருந்த சீதாபிராட்டியைப் பொல்லாத இராட்சசிகள் சுற்றிக்கொண்டு, ஆர்ப்பரித்து அதட்டிக் கோபித்து, தங்களுடைய மனத்திலே தோன்றியபடியெல்லாம் பேசத் தலைப்பட்டார்கள். சிலர், “சூலம் முதலான ஆயுதங்களை இவள் மேலேறிந்து இவளைக் கொல்லுங்கள்! கொல்லுங்கள்!” என்றும், “இவளுடைய சரீரத்தைக் கண்ட துண்டமாக்கி வயிருரத் தின்னுங்கள்!” என்றும் முடுக்கினர். சிலர், “இந்தப்பிரதாப இலங்கேஸ்வரன் சதுர்முகப் பிரமாவுக்குக் கொள்ளுப்பேரன்; புலஸ்தியப் பிரமாவுக்குப்பேரன்; விஸ்ரவ பிரமாவுக்குப் புத்திரன். மேலும், சகல வேதங்களும் அறிந்தவன்; ஞானுதிக்கன்; சத்தியசந்தன்; வினையைக் கடந்தவன். இவன் என்ன சாமானியனு! இப்படிப் பட்டவன் உன்னிடத்திலே ஆசை வைப்பானேயானுல், இந்த ஈனத்தை என்ன சொல்லலாம்! இது ஒன்றேயல்லாமல், மற்றப்படி இவனிடத்தில் என்ன குற்றம் இருக்கிறது?” என்றனர். சிலர், “அடி, பெண்களுக்குள்ளே கொடியவளாய் இருக்கின்றவளே, பொறுமையாய் ஆலோசித்துப் பாராமல், புண்ணிலே கோலிட்டாற்போலக் கர்ண கடூரமான வசனத்தைச் சொல்லி நீ முதலற்றுப் போவதுமல்லாமல் உலகத்திலே உள்ள மானிட குலம் முழுமையும் மாய்ந்துபோகத்தக்க மன வருத்தத்தையும் உண்டாக்கினையே! நாங்கள் சொல்லும் உண்மை வார்த்தையைத் தீர்க்கமாக எண்ணிப்பார்,” என்றனர். சிலர், “அடி, கல் போன்ற நெஞ்சையுடைய அறிவில்லாதவளே, நீ பிறந்த குலத்திற்கும், புகுந்த குலத்திற்கும் கடுநெருப்பை வாரியிறைக்க ஏற்பட்டாயல்லவா? நீயும் இந்த க்ஷணமே மாண்டாய்! இனி ஒரு பொழுதும் வாழமாட்டாய்! நாங்கள் உனக்கு உறுதிப்படச் சொன்னோம்!” என்று கூச்சலிட்டனர்.

அந்த இராட்சசிகளெல்லாம் மிரட்டுவதையும், இராவணன் அவர்களை இவ்வண்ணஞ்செய்யும்படி ஏவினதையும்

அறிந்து, பிராட்டி கிலேசமடைந்து கலங்கினுள். அத்தரு ணத்திலே, திரிசடை என்பவள் பிராட்டியைப் பார்த்து, "அன்னையீர், ஏன் அங்கலாய்க்கிறீர்? முன்னேயே கனுக் கண்டு சொன்னேனே! நீர் தைரியமாய் இரும்!" என்று சொல்லிப் பின்பு இராட்சசிகளை நோக்கி, "உத்தமியை அறி யாமல் வீணுக அபசாரப்பட்டால் மகத்தான தோஷம் வரும்!" என்று சொன்னுள். அது கேட்டு, "தாயே, நல் லது!" என்று அவர்களெல்லாரும் அடங்கினுர்கள். சீதை யும் பிராணன் நிலைத்திருந்தாள்.

## 5. உருக்காட்டு படலம்

அப்போது, மரத்தின்மேலே நின்று பார்த்துக்கொண் டிருந்த அனுமரானவர், "இதுதான் காண்பதற்குத் தகுந்த சமயம்!" என்று அறிந்து, அந்த இராட்சசிகளுக்கெல்லாம் உறக்கம் வரும்படி ஒரு மந்திரத்தை உச்சரித்தார். அதனுல், அவர்கள் எல்லாரும் பிரேதம் போல உறங்கிவிட்டார்கள். எப்பொழுதும் நித்திரை செய்யாத இராட்சசிகளும் நித்திரை செய்வது கண்டு, துக்கத்தைச் சகிக்காமல், உஜ்ஜீவிக் கின்ற மார்க்கத்தையும் காணுமல், மனமானது தளர்ந்து அஞ்சி நெடுநாளாய் வருந்துகிற பிராட்டி சுவாமியினிடத் திலே தனக்குண்டான அன்பினுல் பிரலாபிக்கத் தொடங் கினுள்:

"தடுக்கப்படாத வலிமையுடைய என் விதியே, கார் மேகத்திற்கும் கருங்கடலுக்கும் ஒப்பான கறுத்த மேனியை யுடைய என்னுடைய நாயகரானவர் தம்மைப் பிரிந்து தனியே யிருக்கும் என்னுடைய பிராணனைத் தருவாரா? பிரளயகால இடியோசைக்குச் சமானமான அவருடைய உக்கிர கோதண்டத்தின் குணத்தொனியும் இந்த இலங்கை யிலுள்ளவர்கள் கேட்க வருமா? நீ சொல். விவேகமில்லாத

சந்திரனே, பிரகாசமான சந்திரிகையே, தொலையாத இரவே, குறையாத இருளே, நீங்களெல்லாம் ஒருமிக்கக் கூடிக் கொண்டு என்னை மாத்திரம் உபத்திரவப்படுத்துகிறீர்களே! இதைச் சிறிதாவது நினையாத அந்தக் கோதண்ட ராமரை இப்படிச் செய்யமாட்டீர்களா? பூங்கொடிகளே, நெருப்பை வாரி இறைக்கும்படி எவ்விடத்திலுஞ் சஞ்சரித்து வருகின்ற வாடைக் காற்றுடனே சேர்ந்துகொண்டு என்னைச் சீறுகின்றீர்களே! என்னுடைய உயிர் நிலையை நீங்கள் அறிய மாட்டீர்களா? ஸ்ரீ ராமசந்திரருடனே ஆரணியத்தில் நெடுங்காலமாய் உழலுகின்றீர்களே! அவருக்கு நீங்களாவது சொல்லமாட்டீர்களா? 'நம்முடைய பிராணபதமாய் இருக்கின்றவர் வாராமற்போகமாட்டார்!' என்கிற நிச்சயத்தினலே அல்லவோ பலகோடித் துன்பத்திற்கும் சலியாமலிருக்கிறேன்? அழிவில்லாத மகா பராக்கிரமத்தையுடைய வீரசிகாமணியே, பரமபுருஷரே, விருட்சங்கள் நெருங்கிய காட்டினிடத்தில் உம்முடனே வரும்படி நான் எத்தனப்பட்ட போது, 'நீ வந்தால் வருத்தப்படுவாய்; வரவேண்டா; நான் போய்ச் சில நாளில் வருகிறேன்; நகரத்திலேயே இருக்கக்கடவாய்,' என்று நியமித்தீரே! உம்முடைய கிருபை இப்படி இருக்குமானல், இப்போது நீர் தனித்திருந்து தமியளான என்னுடைய உயிரை வருத்தலாமா? நான் கைவிடாமல் இருக்கும் என்னுடைய அறிவே, என்னுயிரே, நெடுநாளாக நீங்களுமஞ்சி உழல்கின்றீர்கள். ஆகையால், என் நாயகரைக் காணும் பரியந்தம் என்னை விட்டு நீங்கமாட்டீர்கள் போலக் காண்கிறதே! நானடையும் பழியை நீங்களும் அடைய வேண்டுமா? இறவாத தம்முடைய பிதாவான சக்கரவர்த்தியார் இறக்கவும், தாய்மார் தம்பிமார் முதலானவர் துக்கப்படவும், இவைகளைக் குறித்து எவ்வளவேனும் இரக்கப்படாமல் என்னை அழைத்துக்கொண்டு வனத்தில் வந்து பிரவேசித்த பாதகர் இன்னமும் வருவார் வருவாரென்று நினைத்து நினைத்து நான் குலாவிக் கொண்டிருப்பதா?" என்றிப்படிப் பலபல விதமாக

எண்ணி யெண்ணி உயிர் நடுங்கிப் பிரலாபித்த ஜானகி பின்பு சிறிது நேரம் சும்மா இருந்து, "ஐயோ! நான் செய்த பாவம், என்னுடைய உயிர் இருக்கிற வரைக்கும் துன்பம் இடைவிடாமல் சம்பவித்துக்கொண்டிருக்கும். இந்த மட்டிலே நான் இறந்து விடுவேனேயானுல், சிரமம் நீங்கிக் கீர்த்தி கிடைக்கும்!'' என்று அதற்குத் தகுதியான ஆலோசனை செய்கின்ருள்:

"ஆ! வீரகண்டை அணிந்த இரகுநாயகரைக் காண வேண்டுமென்கிற ஆசையினுல் பல வித வருத்தத்தையும் சகித்துக்கொண்டு, என்னுடைய உயிரையும் விட்டுவிடா திருந்தேன். இப்படி நெடுநாளாக இந்த இராட்சதருடைய நகரத்திலே சிறையிருந்த என்னை, அந்த மனுகுலோத்தம ரான துல்லியரானவர் தொடுவாரா? என்னைப் பரபுருஷர் இச்சித்தாரென்றறிந்தும், பல பேருஞ்சொன்ன பழிச்சொற்க ளெல்லாம் காதிலே விழக் கேட்டும், இந்த உயிரை வைத்துக் கொண்டு எத்தனை காலமாய் இருக்கின்றேன்? என்னைப் பார்க்கிலும் கடின சித்தத்தையுடைய இராட்சசிகள் வேறே யார்! நீங்காத பழியைச் சுமந்துகொண்டிருக்கின்ற என்னு டைய குடிப்பிறப்பும் நாணமும் நன்ருய் இருக்கின்றன! கதை களிலே சொல்லப்பட்டிருக்கின்ற கற்புடைய ஸ்திரீகளுக்குள் மனை வாழ்க்கையை நீங்கிப் பிராணனேடிருக்கின்றவள் நானல்லாமல், யார் இருக்கின்ருர்கள்? 'அந்நியருடைய கிருகத்தையடைந்த பெண்ணை விரும்புகிறது யோக்கிய மன்று,' என்று என்னுடைய பிராண நாயகர் என்னைக் கை விட்டவராகி, வேருெரு ஸ்திரீயைச் சேர்ந்து சுகித்திருக்க, நான் வீண் பொழுது போக்கி அதர்மத்தைச் செய்து வேறெந்த உபாயத்தைக்கொண்டு அதைச் சகிப்பேன்! எப்பொழுது நான் இந்தப் பெரும்பழிக்கு ஆளானேனே, அப்பொழுதே பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ள வேண் டும்! அப்படிச்செய்யாமல், உலகத்தார் அளவிடப்படாத நிந்தை கூற, நான் துப்பழிந்து உயிர் கொண்டிருப்பது

மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைகிறதற்கா! என்னுடைய நாயகரும் கொழுந்தரும் மனத்திலே அன்பில்லாதவர்களாய்ப் பொல்லாத பழியைச் சுமந்தாலும் சுமக்கட்டும்! நான் கீர்த்தி பெற்ற நல்ல குடியிலே பிறந்தேனே! எனது பழியைத் துடைப்பவர் என்னைப்பார்க்கிலும் வேறே யார் இருக்கிறார்கள்! வஞ்சனையாய் வந்த மானின் பின்னே பர்த்தாவைப் போக்கி, பின்பு எனக்குக் காவலாயிருந்த என் மைத்துனரையும் அவர் பிறகே போவென்று அனுப்பிவிட்டு, விஷத்திற்கு ஒப்பான இராட்சதனுடைய வீட்டில் வந்திருக்கிற நான் பிராணனோடே இருந்தாலும் உலகம் அங்கீகரிக்குமா? சுத்த வீரர்களான இரகுநாயகரும் இளையபெருமாளும் தங்களுக்கு வந்த குற்றத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டு யுத்தஞ் செய்து சத்துருக்களை ஜயித்தாலும் ஜயிக்கட்டும்; அல்லவென்று இறந்து போனாலும் போகட்டும். நான் கிருகதர்மம் தப்பி நடந்த பிறகு சொல்லுகிற என்பழி அவர்களைச் சுற்றுமோ? கவரி மானுக்குச் சமானமாகிய மானமுடைய பதிவிரதைகளுக்கு எதிரே பேதைமையையுடைய நான், 'புருஷோத்தமனான தன் நாயகனைப் பிரிந்து, கள்ளருடைய நகரத்திலே வாசமாயிருந்தவள் இவள்,' என அவர்கள் ஏசும்படி கேட்டுக்கொண்டிருப்பேனோ! என் பிராணநாயகரானவர் வந்து இராட்சத வர்க்கத்தையெல்லாம் பற்றறக் கொன்று என் சிறை மீட்ட காலத்திலேயும், 'நீ வீட்டிற்குள்ளே நுழைவதற்கு யோக்கியமானவளல்லை,' என்று சொன்னால், அப்பொழுது எனது கற்பை எவ்விதத்தில் நிலைநிறுத்துவேன்! ஆகையால், இறந்துபோவதே தர்மநெறி. என்னைச் சாகாமல் காத்துக்கொண்டிருக்கும் இராட்சசிகளும் எனது அதிருஷ்டத்தினால் உறங்கிவிட்டார்கள். இதுதான் நல்ல சமயம்! இதைவிட வேறு தக்க சமயம் கிடைக்கமாட்டாது,'' என்று கூறி எழுந்து, ஒரு குருக்கத்தி மரத்தினிடத்திலே போய்ச் சேர்ந்தாள்.

அது கண்ட அனுமர் பிராட்டியின் கருத்தை அறிந்து நடு

நடுங்கி, "இப்படிச் செய்ய வேண்டாவென்று இந்தக் கண்ம் போய்க் கையைப் பிடித்துக்கொண்டு தடை செய்யலா மெனப் பார்த்தால், பதிவிரதா சிரோமணிகளாயிருக்கிறவர் களைத் தீண்டக்கூடாதே!" என மனங்கூசினவராகி, "ஸ்ரீராம ராமா!" என எதிரே ஓடிவந்து, "அடியேன் தேவ தேவ்ரான உம்முடைய பிராண நாயகருடைய தூதன்," எனத் திருவடி யிலே விழுந்து சேவித்து, "அன்னையீர், ஸ்ரீராமருடைய ஆக் கினையைச் சிரசின்மேற் கொண்டுவந்தவன் நான். என்னைப் போல அனேக வானரவீரர்கள் தேவரீரைக் குறித்து உலக மெல்லாம் போய்த் தேடுகிருர்கள். அடியேன் செய்த தபோ பலத்தினுலே உம்முடைய பாதாரவிந்தத்தை வந்து தரிசித் தேன்! தேவரீர் இவ்விடத்தில் இருப்பதைச் சர்வலோகநாயக ரான ஸ்ரீராமர் அறியார். இதற்குச் சாக்ஷி என்னவெனில், இன்னும் இராட்சதக் கூட்டங்கள் மாளாமல் ஜீவனுேடே இருப்பதுதான். இதைப்பார்க்கிலும் வேறு சாக்ஷியும் வேண் டுமா? திருவுளத்திலே ஐயப்பட வேண்டா. அடையாளம் கொண்டு வந்திருக்கிறேன். அதுவும் பார்த்துக்கொள்ளும். இது தவிர, சுவாமியானவர் திருப்பவள வாய் திறந்து சாதித் தருளிய திருமொழியும் இருக்கிறது. அதைக் கரதலாமலக மாகச் சொல்லுகிறேன். அதையும் கேட்டறிந்துகொள்ளும். வேறே யோசனை செய்ய வேண்டா," என்று சொல்லித் தாழ்ந்து வணங்கி மெலிந்து குழைந்து நின்ருர். பிராட்டி அவரைப் பார்த்தருளி, முதலில் இராட்சதனுமெனக் கோபங் கொண்டு, பிறகு இரக்கமுற்று, "இவன் ராட்சதனல்லன்; நல் லொழுக்கத்திலே நின்று ஐம்பொறிகளையும் வென்ற சர்வோத் தமனுக வேண்டும்; அல்லனெனில், தேவனுக வேண்டும்; மேலும், அறிவிலும் வார்த்தையிலும் பார்த்தால், பரிசுத்த னுகவும் குற்றமற்றவனுகவும் காண்கிருன். இத்தருணத்தில் சொல்லிக்கொண்டு வந்த வார்த்தையானது கொடுமை யாய்ச் சொன்னதாய் இருந்தாலும் இருக்கட்டும். எம்பெரு மானுடைய திருநாமத்தைச் சொல்லி என் மனத்தையுருக்கி

இந்தச் சமயத்திலே நல்ல தெளிவைக் கொடுத்தானே! இதைப்பார்க்கிலும் உயிருக்கு வேறுதவி என்ன செய்ய வேண்டும்?'' என நினைத்து, கிருபையுடனே பார்த்து, "எனது உள்ளம் இரங்குகிறது! இவனுடைய மனத்திலே கள்ளமில்லை; இவன் வஞ்சக மார்க்கத்தை உடையவனல்லன்; அந்தரங்க மான வார்த்தையுடனே கண்களிலே நீர் பெருகும்படி புலம்பு கின்றான். ஆகையால், இவனைக் கேட்கலாம்,'' என்று எண்ணி, "நீ யாரப்பா?'' என்று கிருபையுடனே திருவாய் மலர்ந்தருளினள்.

அத்திருமொழியைச் சிரசிலே தாங்கிக்கொண்டு கை கூப்பித் தண்டஞ் சமர்ப்பித்து, "அன்னையீர், தேவரீரை ஸ்ரீராமர் பிரிந்த பிறகு சம்பாதித்த சிநேகனும், சூரியனுடைய குமாரனும், வானர குலத்திற்கெல்லாம் தலைவனும், மிகவும் நல்லவனுமான சுக்கிரீவனென்பவன் இருக்கிறான். அவனுக்குத் தமையன் வாலியெனச் சொல்லப்பட்டவன். அவன் முற்காலத்திலே இந்த இராவணனைத் தன் வால் முனையிலே கட்டிக்கொண்டு, எட்டுத் திக்குகளிலும் எழும்பிப் பாய்ந்து ஜயங்கொண்டவன்; தேவர்கள் வேண்டிக்கொள்ள மந்தர பர்வதமான மத்தில் வாசுகியைக் கயிருகச் சுற்றி, அமிர்தம் உண்டாகும்படி கடலைக் கடைந்த புஜபல பராக்கிரமமுடையவன். அப்படிப்பட்ட வாலியை உம் நாயகர் ஓர் அம்பினாலே பிராணனை வாங்கி, அவனுடைய ராஜரிகத்தை அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்குக் கொடுத்து அவனைத் தோழனாக்கிக் கொண்டார். அந்தச் சுக்கிரீவன் எங்களுக்கு ராஜாவாயிருக்கின்றவன். அவனிடத்தில் இருக்கின்ற மந்திரிமார்களில் நாயேன் ஒரு மந்திரி. நான் வாயு குமாரன். என் பேர் அனுமன் என்பது. எங்கள் ராஜாவினிடத்தில் எழுபது வெள்ளம் சேனை வீரர்கள் இருக்கின்றார்கள். அவர்களில் ஒவ்வொருவரே இந்த லோகத்தையெல்லாம் பேர்த்தெடுக்க வேண்டுமென்றாலும் எடுப்பர்; சமுத்திரத்தையும் தாண்டுவர். அப்படிப்பட்டவர்களெல்லாம் கூட்டமாகக் கூடி

யிருக்கின்றூர்கள். உம்முடைய பிராணநாயகர் எதைக் குறித்து ஆக்கியாபித்தாலும் அதைக் குறிப்பினுல் தெரிந்து கொண்டு, அந்த க்ஷணமே தவருமல் செய்வார்கள். அனேக வானரர்கள் அண்டமெல்லாந்தேடி உம்மைக் காணுவிட்டால், இந்த அண்டத்துக்கு அப்பாலும் போய்த் தேடும்படி புறப்பட்டுப் போயிருக்கின்றூர்கள். இராவணன் உம்மை எடுத்துக்கொண்டு வருகிறபோது நீர் வஸ்திரத்தில் கட்டிப் பூமியில் எறிந்த ஆபரணக் குறிப்பினுல் ஸ்ரீராமர் என்னை அழைத்துத் தனியே வைத்துக்கொண்டு, சொல்ல வேண்டியவைகளெல்லாம் சொல்லித் 'தென் திசைக்குப் போய்வா,' என்று ஆக்கியாபித்தார். அவருடைய கிருபைக்கு விக்கினமும் வருமா? அன்று நீர் கழற்றி எறிந்த ஆபரணங்களை எங்கள் ராஜாவானவர் சுவாமி சந்நிதியில் கொண்டு வந்து வைத்த போது, அவருக்கு உண்டாகிய துக்கம் என்னுல் அறிந்து சொல்லக்கூடுமா! தேவரீரேயல்லாமல் ஸ்ரீராமசந்திரருக்கு உயிர் நிலை வேறுண்டோ? அந்தத் திருவாபரணந்தான் இந்நாள் வரைக்கும் உம்முடைய மாங்கல்ய சூத்திரத்தைக் காத்தது. அது அப்படியிருக்கட்டும். வாலியினுடைய குமாரனும் எங்களுக்கெல்லாம் இளவரசுமாகிய அக்கதனென்பவன் இரண்டு வெள்ளஞ்சேனையுடனே தெற்குத் திசையில் தேடுகிறதற்குப் புறப்பட்டு வந்திருக்கிருன். அவன் இலங்கைக்குப் போய்வாவென்று சொல்லி என்னை அனுப்பினுன்," என்று நிந்தனையை நீங்கிய அனுமரானவர் விண்ணப்பஞ் செய்து அன்புடனே மனமுருகி நின்றூர்.

இப்படி அவர் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில், மகத்தாகிய பிரமானந்தமானது பொங்கி எழும்பப் பிராட்டி பெருமூச்செறிகிறது தவிர்ந்து, இளைத்திருந்த சரீரம் மிகவும் பூரித்து, "நான் உஜ்ஜீவிக்கிறதற்குக் காலம் வந்ததோ!" என்று கண்களில் அருவி போல ஆனந்தபாஷ்பம் ஒழுக, "அப்பா, அந்த இரகு குலோத்தமருடைய திருமேனி எப்படி இருக்கும்? சொல்," என்று கேட்டார்.

அந்த வார்த்தை கேட்ட அனுமார், அதிக மகிழ்ச்சியுடனே, "அம்மையீர், ஸ்ரீராமருடைய திவ்விய சுந்தரம் இப்படியிருக்குமென்று உவமானமெடுத்துக் காட்ட ஒருவராலுமாகாது. ஆகிலும், நாயேன் அறிந்த மாத்திரம் சொல்லிக்கொண்டு வருகிறேன். அவைகளில் ஏதாவது தவறு வந்தாலும் உமது திருவுளத்தில் ஆயாசப்படாமல், அவருடைய திருமேனியைத் தேவரீர் அறிந்திருக்கிறவரான படியினலே மனத்தில் சரியாகப் பாவனை செய்து அங்கீகரித்துக்கொள்ளும்,'' என்று சுவாமியினுடைய திருவழகைப் பாதாதி கேசபரியந்தம் தெளிவாக வருணித்தார்:

அவைகளையெல்லாம் கர்ணாமிர்தமாகக் கேட்டுக் கொண்டு வந்த பிராட்டி, அக்கினியிலிட்ட மெழுகுபோல மனமுருகி, தன்னை அறியாமல் பரவசப்பட்டு மனங்கரைந்தாள். அப்படி உருகி நின்ற சீதாலட்சுமியை மாருதியானவர் பூமியில் விழுந்து சாஷ்டாங்கமாகச் சேவித்துக்கொண்டு, "என் அன்னையீர், சர்வலோக சரணியராகிய உம்முடைய பிராணநாயகர் சொல்லிய சில குறிகளும், அடையாளச் சொற்களுமிருக்கின்றன. அவைகளையும் சொல்லுகிறேன்; கேளும்:

"முன்னம் சுவாமியானவர் தேவரீரை நோக்கி, 'வழி நடக்கிறதோ, உனக்குப் பிரயாசம்! சில நாள் மாத்திரம் எனக்குத் தாய்மார்களாகிய உன் மாமிமார்களுக்கு உரிய பணிவிடைகளைச் செய்துகொண்டு நீ இவ்விடத்திலேயே இரு,' என்று சொன்னவுடனே, நீர் உடுத்த வஸ்திரத்தோடும், உயிர் பதைக்கின்ற தேகத்தோடும், மிகுந்த கோபத்தோடும், திருமாளிகையைவிட்டுப் பிரயாணப்பட்டு அப்பால் வந்து நின்றீராம்; அதுவுமல்லாமல், மகுடாதிபதியாகிய தசரத சக்கரவர்த்தியாரது ஆக்கினையைச் சிரசாக வகித்துத் தாம் பெற்ற பரிபூரணமாகிய சம்பத்துகளையெல்லாம் விட்டு நீங்கி வனத்திற்கு வரும் போது, பட்டணத்து மதிலையும் கோட்டை வாயிலையும் தாண்டி வெளிப்படாததற்கு

முன்னமே ' காடு எங்கே ?' என்று கேட்டீராம்; உம்மைத் தேரின்மேல் ஏற்றிக்கொண்டு வந்து வழி விட்ட சுமந்திரரிடம், 'என் தங்கைகளிடம் 'உங்கள் தமக்கையாகிய சீதையானவள் ஸ்ரீ ரகுநாயகர் திருவாய் மலர்ந்தருள்கின்ற வசன சாதுரியத்தால் மனே துக்கமெல்லாம் தணிந்தாள்; தான் வளர்த்த கிளிப்பிள்ளைக்கும், நாகணவாய்ப் பறவைக்கும், சொற்கள் கற்பித்து, அவைகள் இளைத்துப் போகாமல் ஜாக்கிரதையாகக் காப்பாற்றச் சொன்னாள்,' சொல்லும். மற்றுஞ் சொல்லவேண்டுவது என்ன இருக்கின்றது?' என்று சொன்னீராம். அதைச் சொல்லச் சொல்லித் தமது திருநாமத்தைப் பதித்திருக்கின்றதும் அழகும் பிரகாசமும் உள்ளதுமாகிய ஒரு திருவாழியை எடுத்து, 'இதை ஜானகி கையிற் கொடு,' என்று கொடுத்தார்,'' என்று அதை இரண்டு கைகளாலும் ஏந்திக் காண்பித்தார்.

அந்தக் கணையாழியைப் பிராட்டி கண்டாள். கண்ட பொழுது ஸ்திரீ ரத்தினமாயிருக்கின்ற ஜானகிக்கு உண்டாகிய சந்தோஷத்தை என்ன சொல்லுவேன்! மானிடராய்ப் பிறந்தும் மோட்சம் பெற வேண்டிய முயற்சியில்லாமல் இறந்தவர்கள், அதைத் தற்செயலாய் அடைந்தார்களென்று சொல்லுவேனே! ஒரு பொருளை வைத்து மறந்து போய்க் காணுமல் துக்கித்தவர்கள், மறுபடி அந்தப் பொருளை நினைத்தெடுத்தார்களென்று சொல்லுவேனே! தேகத்தை விட்டு நீங்கிப் போன உயிரானது, மீளவும் அந்தத் தேகத்தில் தானே வந்து பிரவேசித்ததென்று சொல்லுவேனே! இந்தப் பிராட்டியினுடைய செய்கையை அறிவதெப்படி? நாகமானது தானிழந்த தனது மாணிக்கத்தைத் தன் கண்ணுக்கு எதிரே கண்டது போலவும், தம்முடைய கையை விட்டு நீங்கிய பிதுரார்ச்சிதமான திரவியம் கிடைக்கப் பெற்றவர்கள் போலவும், பிள்ளைக்கு ஏக்குற்றிருந்த மலடியானவள் பிள்ளையைப் பெற்றது போலவும், கண்ணில்லாமலிருந்த ஆத்துமா கண் பெற்றது போலவும்,

அபரிமித ஆனந்தத்துடனே அதை வாங்கி ஸ்தனங்களினிடத்தில் வைத்து, சிரசின்மேல் தாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டு, தோள்கள் பூரித்து, மெலிந்து குளிர்ந்து வெதும்பி ஏங்கிப் பெருமூச்செறிந்தாள். அதை இன்னதென்று ஒருவரால் தெரிந்து சொல்லக்கூடுமோ! அந்தத் திருவாழியை மூக்கினிடத்தில் வைத்து மோந்து பார்ப்பாள்; ஸ்தனங்களின்மேல் சேர்த்து முயங்குவாள்; கண்ணீரைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் கண்களில் நீர் ததும்ப நெடுநேரம் உற்றுப் பார்ப்பாள்; அதனுடனே பேசலாமென்றும் நினைப்பாள்; ஒன்றுஞ் சொல்லாதிருப்பாள்; மகிழ்ச்சியினால் சரீரம் புளகித்து மயிர்க்குச்செறிவாள்; அதை விழுங்குவோமென்றும் இச்சிப்பாள். அந்த மோதிரத்தின் பிரகாசத்தினால் மின்னலுக்கு ஒப்பாகிய பிராட்டியினுடைய திருமேனி முழுதும் மாற்றுயர்ந்த பொன்னிறமாய்ஜொலிக்கத் தலைப்பட்டது. அதனால், அந்தக் கணையாழியானது தீண்டின மாத்திரத்தில் சகல வஸ்துக்களையும் பொன்னாகச் செய்யும் பரிசவேதியென்கிற தெய்விகமாகிய இரத்தினந்தானே! மற்றும் அது ஜானகிக்கு அனேக நாள் பசியாயிருந்தவர்களுக்குத் தேவாமிர்தம் கிடைத்தது போலவும், தர்ம சிந்தையுள்ளவர்களிடத்தில் வந்த விருந்தினர் போலவும், பிராணன் போகின்ற சமயத்திலே கிடைத்த சஞ்சீவி மருந்து போலவுமிருந்தது. மாணிக்கமயமாகிய அத்திருவாழியானது, இவ்வாறு உயிரை உருக்குதலால், அந்த ஜகன்மாதாவானவள், கண்ணீர் முத்துப்போல ஸ்தனங்களின்மேல் துளிக்க, பவளம் போலப் பிரகாசிக்கின்ற திருவாயிலிருந்து உற்பத்தியாகிய சொற்கள் குழற, “அனுமனே, நீ என் பிராணனைக் கொடுத்தாய்! ஆதலால், நீ பரமோத்தமன்! சொர்க்க மத்திய பாதாளமாகிய மூன்று லோகத்திலுமுள்ள சகல உயிர்களையும் சிருஷ்டித்த முதல்வனுக்கும் முதல்வனானவனே, என் சரீரத்தை விட்டு நீங்கிப் போய்விடுகின்ற உயிரைக் கொடுத்த உனக்குப் பிரதியுபகாரம் நானென்ன

செய்யப்போகின்றேன்! அது என்னுல் செய்கிறதற்கு எளிதாயிருக்கின்றதா? எனக்குத் தாயும் தந்தையுமாகிய அப்பனே, கிருபைக்கு வாழுமிடமாயிருக்கின்றவனே, இம்மைப்பயனும் மறுமைப்பயனுமாகிய இரண்டையும் கீர்த்தியுடனே எனக்குக் கொடுத்தாய்! பராக்கிரமமுண்டாகிய பருத்த தோள்களையுடைய வீரசிகாமணியாகிய ஆஞ்சநேயனே, இந்த இலங்கையில் ஒரு துணையுமில்லாமல் பரிபவப்பட்டுக்கொண்டிருந்த என்னுடைய துயரத்தைத் தவிர்த்து ரக்ஷித்த வாழ்வினையுடையவனே, உதாரத்துவமுள்ளவனே, நான் மனத்தில் எவ்விதமான களங்கமுமில்லாத பதிவிரதையானுல், ஊழிக்காலங்களை ஒவ்வொரு நாளாகச் சொல்லப்பட்ட கற்பகாலமெல்லாம் இந்த ஈரேழு லோகங்களும் அழிந்தாலும், இன்று நீ எப்படி அழிவில்லாமலிருக்கிருயோ இப்படியே சுகமாயிருக்கக்கடவாய்!'' என்று அனுக்கிரகம் செய்தாள்.

அப்படி அதிக சந்தோஷத்துடனே அனுக்கிரகஞ் செய்து வாழ்த்தி, "குணநிதியாகிய அனுமனே, என் பிராண நாயகராகிய அந்த வீரராகவர் எங்கே எழுந்தருளியிருக்கின்ருர்? தம்பியாரும் அவரும் உன்னை எவ்விடத்தில் கண்டனர்? என்னுடைய சமாசாரம் அவர் எப்படியறிந்தார்? யார் அவருக்குச் சொன்ஞர்?'' என்று பிராட்டி கேட்க, மாருதியார் மிகவும் சந்தோஷமாய் நடந்ததைச் சொல்லுகின்ருர்:

"கிருபா நிதியே, இராவணன் சொல்ல, மாரீசனுனவன் மாயையால் சொர்ணமயமாகிய மாறு வடிவு கொண்டு வந்தான். அவனைத் தொடர்ந்து போய் அது மாயமானென்று அறிந்து ஸ்ரீராமர் பாணப் பிரயோகஞ்செய்ய, அந்தப் பாவி பூமியில் விழுந்து மாண்டு போகின்ற சமயத்தில், உம்முடைய மனத்தைக் கலக்க வேண்டுமென்று ஸ்ரீ ரகுநாயகருடைய குரல் போலவே அழைத்தான். அந்தக் குரல் கேட்டு இலட்சுமணர் சந்தேகிக்காமலிருக்கும்படி சுவாமியானவர் கோதண்டத்தின் குணத்தொனி எழுப்பினுர். அப்படிக் குணத்தொனி

எழுப்பியும் விதிப்படியே நடந்தது. பின்பு ஸ்ரீ ராகவர் 'இந்த அரக்கனுடைய வஞ்சகமாகிய கூாலோசையானது வீணாய்ப் போகாது. சிறிது நேரத்திற்குள்ளே ஏதோ பிரமாதம் விளையும்!'' என்று எண்ணி அங்கிருந்து அதிசீக்கிரமாய் வரும் போது, உம்மைத் தனியே விட்டு இளைய பெருமாள் எதிரே வரக் கண்டார். கண்ட மாத்திரத்தில் தம்பியாரது முகக் குறியினால் அவருடைய உட்கருத்தை அறிந்துகொண்டு, நடந்த செய்தியை அவர் வாய்விட்டுச் சொல்லவுங் கேட்டு, அந்த க்ஷணம் பஞ்சவடிக் காட்டிற்கு வந்து, பர்னசாலையிற் பார்க்க, உமது திருவுருவத்தைக் காணாமல் உயிர் சோர்ந்திருந்தார். அன்று முதல் அவருக்கு உண்டாகிய வியாகூலம் சொல்லி முடியாது. இப்பொழுது அடியேன் தேடிக்கொண்டு வந்து தேவரீரை நேராகக் கண்டேன். நீர் க்ஷேமமாய் இருக்கிற படியினால் இனி ஸ்ரீ ராமசந்திரருக்கு யாதோர் அபாயமுமில்லை! முன்பு உண்மையாகிய உயிர் நீங்கிப் பொய்ம்மையாகிய உயிரைத் தாங்கிக்கொண்டிருப்பது போலிருந்த அந்தப் பரம புருஷருடைய இருதயத்தில் நீர் பிரியாமலிருக்கிற படியினாலே, அவருக்கு நாசம் வருமா? அவருடைய உயிராகிய நீர் இவ்விடத்திலிருக்கிறீரே! ஆகையால், அவ்விடத்திலே அவர் எந்த உயிரை விடுவார்? அப்படியிருந்து சுவாமியானவர் அந்தப் பஞ்சவடியை விட்டு நீங்கி, காடுகள் மலைகள் கானாறுகளெல்லாம் தேடி, அப்பால் பிராணனில்லாமல் நடக்கின்ற சூத்திரப் பிரதிமையைப்போல நடந்து, தமது பிராணனைக் கீர்த்தியாகிய பொருளுக்காக விற்ற பக்ஷிராஜராகிய ஜடாயு இருக்குமிடத்தில் வந்து சேர்ந்தார். சேர்ந்து அவருடைய சரீரம் பின்னப்பட்டிருக்கின்றதைப் பார்த்து, மிகுந்த துக்கத்தை அடைந்து, 'ஐயா, உமக்கு இப்படிப்பட்ட ஆபத்து வந்து சம்பவித்ததற்குக் காரணமென்ன? சொல்ல வேண்டும்,' என்று கேட்க, ஜடாயுவானவர் இந்த இலங்காதிபதியாகிய் பாவியானவன் தேவரீரை வஞ்சித்து எடுத்து வந்த சமாசாரத்தைச் சொல்ல, உலகங்களெல்லாம் எரிந்து

நீருய்விடுமென்று சொல்லும்படி ஸ்ரீ ராமருக்கு உக்கிரமாகிய கோபாக்கினி ஜொலித்து எழும்பியது. அப்படிக் கோபித்துத் தமது கையிலிருக்கின்ற வில்லைப் பார்த்து, 'இந்தத் திரி லோகங்களும் வெந்து உதிர்ந்து போகும்படி உஷ்ணிக்கின்ற ஒரு பாணத்தினுலே பொடிப்படுத்துகிறேன்!' என்று ஆர்ப் பரித்த போது அவருக்குச் சமீபத்தில் இருந்த பிதாவாகிய ஜடாயுவானவர் அது கண்டு, 'என்ன அப்பா! ஓர் அற்பனு னவன் அபசாரஞ் செய்ய, அதைக் குறித்து உலகத்திலுள்ள ஆத்தும கோடிகளுக்கெல்லாம் துன்பம் ஜனிக்கும்படி நீ கோபிக்கலாமா? மனம் பொறுக்க வேண்டும்,' என்று சொல்லி ஆற்றினுர். அதனுல், கோபமாறி, 'ஐயா, அந்த இராட்சதன் எந்த வழியே போனுன்? எந்த லோகத்திலுள் ளவன்? அவனுடைய இருப்பிடம் எது? சொல்லவேண்டும்,' என்று கேட்க, அது சொல்ல வாயைத் திறந்த ஜடாயுவான வர் பொல்லாத விதி வசத்தினுலே இறந்து போனுர். அவர் இறந்ததைப் பார்த்து, தம்பியாரும் தமயனுருமாகிய இரு வரும் துக்கசாகரத்தில் மூழ்கி, சகலமுந்தெரிந்தவர்களான படியினுல் உடனே தேறி, ஆண்மையையுடைய அந்தத் தந்தையாருக்குச் செய்ய வேண்டிய உரிமைக் கடன்க ளெல்லாம் தேவர்களும் பிரமிக்கும்படி செய்து, 'அனுசித மாகிய செய்கையையுடைய அந்த ராக்ஷதனை நாம் தேடிப் பார்ப்போம்,' என்று அவ்விடம் விட்டு மேக மண்டலத்தை அளாவிய கொடுமுடிகளையுடைய அனேக மலைகளையும் வனங்களையும் கடந்து போய்த் தேடியும் உம்மைக் காணுத தனுலே சோர்ந்து, ஒருவாறு அச்சோர்வு நீங்கி, நேத்திரங் களிலிருந்து பிரவாகமாய் ஒழுகுகின்ற ஜலமானது பூமியைச் சேறுக்க அக்கினியிலிட்ட மெழுகு போல உருகி, உடல் கரைந்து கிலேசித்து, அறிவு தடுமாறிப் பிரலாபித்த விதத்தை நான் என்னவென்று சொல்லப் போகின்றேன்! அம்மம்ம! பிரபஞ்சத்தாருக்குள்ளே கர்மத்தைக் கடந்தவர்கள் யாரிருக் கின்றுர்கள்? புஜபல பராக்கிரமத்தையுடைய வீரசிரோமணி

யாகிய சுவாமியானவர் மதி மயக்கங் கொண்டு, ஐம்புலன் களும் வேறுபட்டு, ஊமத்தம்பூவையும் பாம்பையும் சிரசிலே சூடிய பித்தனுகிய சிவனைப்போல உன்மத்த குணத்தையுடையவராய்க் கோதாவிரி நதியைப் பார்த்து, 'கோதாவிரியே, உன்னிடத்தில் பவளக்கொடிக்குச் சமானமாகிய சீதையானவள் ஸ்நானஞ் செய்கிறவள் ஆனபடியினுல், அவளை நீ தேடிக்கொண்டு வந்து என்னிடத்தில் கொடுக்க வேண்டும். கொடாமற்போனுல், நீ நெருப்பாய் எரிந்துபோவாய்!' என்று கோபிப்பார்; பர்வதங்களை நோக்கி, 'ஆ! பர்வதங்களே, சீக்கிரமாக நீங்கள் கோமள ரத்தினக் கொம்புக்கு ஒப்பாகிய என் நாயகியைக் காட்டுங்கள்; காட்டாவிட்டால், உங்களுடைய குலங்களையெல்லாம் இப்பொழுதே பிளந்து எரிந்து கரிந்து போகும்படி செய்கின்றதற்கு இந்த அம்பு ஒன்றுமே போதும்!' என்று கோபிப்பார்; மான் கூட்டங்களைக் கண்டு, 'மான்களே, இராட்சதர் பொன் மானுருவத்தைக் கொண்டு மாயை செய்ததனுலல்லவா என் பிராணபதமாய் இருந்தவள் என்னை விட்டுப் பிரிந்துபோனுள்? அது பற்றி என்னுடைய வில்லிலே தொடுக்கப்பட்ட அஸ்திரத்தினுலே உங்களுடைய நாமமற்றுப் போகும்படி செய்கிறேன்!' என்று மகத்தாகிய கோபங்கொள்வார். இவ்வண்ணம் மனங்கலங்கி ஸ்ரீ ராமர் துயரப்பட, அது கண்டு அவருடைய உயிருக்கு ஒப்பாயிருக்கின்ற தம்பியாரானவர் அப்பொழுது இதமாகச் சொன்ன சொல்லாகிய மருந்தினுல் தேறி உயிர் பெற்று, அந்த இளைய பெருமாளுடனே கூடிக்கொண்டு புறப்பட்டுச் சூரிய புத்திரனுன எங்கள் சுக்கிரீவ மகாராஜனிருந்த ரிசியமுக பர்வதத்திற்கு வந்தார். வந்த இடத்தில் தேவர்கள் உஜ்ஜீவிக்கும்படி ஸ்ரீ ராமலட்சுமணர்களுக்கும் சுக்கிரீவ மகாராஜனுக்கும் சினேகமுண்டாயிற்று. அத்தருணத்தில் உங்களுக்குச் சம்பவித்த ஆபத்தையும், அது காரணமாகத் தாங்கள் அவளைத் தேடி வந்ததையும், ஒன்ருெழியாமற் சொல்லி மனம் புண்ணுக நோகும்படி வருத்தப்படுமளவில், உம்முடைய திருவா

பரணங்களை நாங்கள் காட்டினோம். வேதத்தினாலும் ஞானத்தினாலுங் காணப்படாத இராகவர் அவைகளைக் கண்டு, சரீர ஸ்மரணையில்லாமல் மூர்ச்சித்திருந்தார்; அவ்வாறு மூர்ச்சித்திருந்து பின்பு தெளிந்து அந்த ரிசியமுக பர்வதத்திற்கு அப்புறத்திலுள்ள கிஷ்கிந்தா பர்வதத்தில் இருக்கின்றவனும், இந்த இராவணனை முன்னாளில் தன்வாலிலே கட்டிக்கொண்டு மலைகளையும் கடல்களையும் தாவினவனும், சுக்கிரீவனுக்குத் தமையனும் பகைவனுமாகிய வாலியென்பவனை ஒரு பாணத்தினாலே பிராணனை வாங்கி, தம்மிடத்தில் அதிக இஷ்டத்தையுடையவராகிய அவன் தம்பியாரது துயரத்தையாற்றி, அவருக்கு ராஜ்ய பட்டாபிஷேகமும் செய்வித்தார். பின்பு அவரை ஸ்ரீ ராமர் சேனைகளைச் சேகரஞ் செய்துகொண்டு வரும்படி ஆக்கியாபித்து அனுப்பிவிட்டு, அவர் அந்தச் சேனைகளைக் கூட்டிக்கொண்டு வருகின்றதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்; அப்பொழுது மாரிக்காலமானபடியினாலே ஆறு மாத பரியந்தம் மதங்க பர்வதத்திலிருந்தார். பின்பு வந்து சேர்ந்த வானரசேனைகளைச் சுக்கிரீவருடைய ஆக்கினையினாலே எட்டுத் திக்குகளிலும் அவைகளுக்கு அப்புறத்திலும் போய் உம்மைத் தேடும்படி அனுப்பி, அடியேனைத் ‘ தென்திசைக்குப் போய் வா,’ என்று அனுப்ப வந்தேன்,” என்று ஆஞ்சநேயர் மகத்தாகிய அன்புடனே இரண்டு கால்களையும் சேரவைத்துக் கை கட்டி வாய் புதைத்துக் கொண்டு நின்று நைச்சியமாக விண்ணப்பஞ்செய்தார்.

அவைகளைக் கேட்டுச் சீதா பிராட்டி சாத்துவிக பிரமமாகிய ஸ்ரீ ராமர் படும் உபத்திரவங்களையெல்லாம் நினைத்து நினைத்து, எலும்பும் உருகிக் கரைய இரங்கி ஏங்கி, துக்கமும் சந்தோஷமும் மாறி மாறித் தோன்றுகின்ற உள்ளத்தையுடையவளாய்க் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகப் பூரண கிருபையுடனே பார்த்து, “ அப்பா, குழந்தாய், அனுமனே, நீ வந்த மார்க்கத்தின் மத்தியிலே சமுத்திரமிருக்கின்றதே! அதை எப்படிக் கடந்து வந்தாய்? சொல்,” என்று

கேட்டருள, "அன்னையீர், தேவரீருக்குநாயகராகிய ஸ்ரீராமசந்திரருடைய பொன்னடியைத் தியானிக்கின்றவர்கள் ஒழியாத மூலப் பிரகிருதியாகிய பெரிய மகா சமுத்திரத்தைக் கடந்து பரமபதத்தைச் சேர்க்கின்றது போல, தாசனாகிய நானும் அவர் திருவடியை ஸ்மரணை செய்துகொண்டு என் காலினாலேதான் இந்தக் கடலைக் கடந்து வந்து உம்முடைய சரணாரவிந்தத்தை அடைந்தேன்," என்று சொன்னார்.

அது கேட்டுச் சீதா பிராட்டி ஆச்சரியப்பட்டு, "கேளப்பா, இவ்வளவு சொற்பமாகிய சரீரத்தையுடைய நீ அவ்வளவு பெரிதாகிய சாகரத்தைக் கடந்து வந்தது தபோபலத்தினாலா, அல்லது அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவமென்கின்ற அஷ்டமா சித்திகளாலா? சொல்," என்று புன்சிரிப்புடனே கேட்க, அதற்கவர், "ஜகதீஸ்வரியீர், என்னுடைய சொற்பமாகிய உருவத்தைப்பார்த்தருளும்," என்று இரண்டு கைகளையும் குவித்து அஞ்சலி பண்ணி, நின்றபடியே அண்டமுகட்டை முட்டுகின்ற சிரசும், திசைகளெல்லாம் நிறைந்த தோள்களும், பஞ்சமகா பூதங்களும் சேர்ந்து ஒரு வடிவெடுத்தது போன்ற சரீரமுமாய், மகா மேருவில் வளர்ந்தோங்கிய விருக்ஷங்தோறும் மொய்த்துக்கொண்டிருக்கின்ற மின்மினிக் கூட்டங்கள் போலத் தமது திருமேனியின் ரோமங்தோறும் நக்ஷத்திரங்கள் தொத்திக்கொண்டிருக்கவும், கண்ணுக்கும் அறிவுக்கும் எட்டாத காட்சியுடனே சந்திர மண்டலம் சூரியமண்டலங்களுக்குப் பிரதியாய் இரண்டு காதிலும் மகர குண்டலங்கள் பிரகாசிக்கவும், அதியுன்னதமாய் வளர்ந்தார். அதற்குமுன் இது மிகவும் அற்பமாகிய ஒரு குரங்கென்று அலட்சியமாக நினைத்த பிராட்டியும் அப்படி விஸ்வரூபங்கொண்ட அந்த ஆஞ்சநேயரை உற்றுப்பார்த்து, அனுமனுடைய உயர்வுக்குத் தமது திரிவிக்கிரம சொரூபத்தின் உயர்வும் ஒரு லட்சியமாகத் தக்கதன்று என்று உலகங்களை

யெல்லாம் அளந்த மகாவிஷ்ணுவும் வெட்கப்படுவாரென்று எண்ணினர்.

அப்பொழுது அஷ்டதிக்குகளிலும் எல்லா உலகங்களிலும் உள்ள சகல ஆத்துமாக்களும் ஆஞ்சநேயரது திருமேனியைப் பார்த்தன. அவரும் தம்முடைய நேத்திரத்தினுல் சொர்க்காதி லோகங்களிலுள்ள சகல தேவர்களையும் பார்த்தார். இவ்வண்ணம் எழுந்துயர்ந்த பரமோத்தமராகிய அனுமருடைய இரண்டு பாதங்களும் அழுந்துவதால் நிலம் புதைந்து, இலங்கைக்குள்ளே சமுத்திர ஜலமெல்லாம் வந்து விழுந்து, அலைப்பட்டதனுல் கடலில் இருந்த மீன்களெல்லாம் அந்த இலங்கா பட்டணத்திலே நெளிந்து புரண்டன.

மறுவில்லாத கற்புடைய ஸ்திரீ ரத்தினமாகிய ஜானகி மாதியினுடைய தாமரைப் புஷ்பத்திற்கு ஒப்பாகிய பாதத்தின் உயரத்தையுங் காணுதவளாய், அதிசயித்து, ":இனி இராட்சத வர்க்கம் நிர்மூலமாய்ப் போய் விடும்!'' என்று திருவுள்ளத்திற் குறித்துக்கொண்டு அனுமரை நோக்கி, "அப்பா, என் கண்மணியாகிய ஆஞ்சநேயனே, எனக்குப் பார்க்கப் பயமாய் இருக்கிறது! உலகத்திலும் உன்னுடைய விஸ்வ ரூபத்தை முழுதும் பார்க்கத்தக்கவர் யாருமில்லை! ஆகையால், இதைச் சுருக்கிக்கொண்டு, முன்பு உனக்குள்ள வடிவமே கொண்டிரு!'' என்று சொல்லி, இரகுநாயகருடைய திருத் தோள்களைத் தழுவியது போல ஆனந்தப் பரவசப்பட்டாள். அப்படிப் பிராட்டி கூறிய மாத்திரத்தில் அனுமர், 'புத்தி புத்தி!' என்று சொல்லி, அண்டத்திற்கு மேலும் உயர்ந்த அந்த விஸ்வரூபத்தை அடக்கிக் கண்ணுக்கு அடங்கத்தக்க முன்னைய உருவத்துடனே எதிரே நின்று நமஸ்காரம் செய்தார். அவரைப்பார்த்தருளி, "பிரசண்ட மாருதத்திற்கு ஒப்பான வேகத்தையுடைய அதிவீரனுகிய அனுமனே, உன் சாமர்த்தியத்தைப்பார்த்தால், நீ இந்தக் கடலைக் கடந்தாயென்று சொல்லுகின்றது சிறுமையே அல்லாமல், எவ்வளவு

பெருமையாகும்? சக்கரத்தைக் கையிலே தாங்கிய அந்தப் பரம புருஷருடைய கிருபையையும் கீர்த்தியையும் அழிவில்லாமல் பல்லூழிக்காலம் நிலை நிற்கும்படி செய்கிறதற்கு நீ ஒருவனே உண்டாயிருக்கின்றாயாகையால், உன் பெருமைக்குத் தக்கபடி இந்தப் பகையாளியினுடைய இலங்கையானது ஏழு சமுத்திரத்திற்கும் அப்புறத்திலிராமல், இவ்வளவு சமீபத்திலிருக்கின்றது இழிவல்லவோ? உனக்கு அறிவும், சொரூபமும், பராக்கிரமமும், ஐம்புலன்களை அடக்கும் தன்மையும், செய்யுங்காரியமும், தெளிவும், தெளிந்த ஒழுக்கமும், நினைவும், நீதியுமாகிய இவைகளெல்லாம் ஒன்றுக்கொன்று குறைவில்லாமலிருக்கின்றன. ஆதலால், இனி, பிரமா முதலாகிய மேலானவர்களெல்லாம் இப்படிப்பட்ட குணங்களில் ஒன்றுமில்லாதவர்களென்றல்லவோ சொல்லப்படுவார்கள்? மின்னலுக்கு ஒப்பாகிய கோரப் பற்களையும் பலத்தையுமுடைய ராக்ஷதக் கூட்டம் மிகுதியாயிருக்கின்றதைப் பார்த்தும், என் பிராண நாயகருக்குத் தம்பியாராகிய இலட்சுமணர் ஒருவரேயல்லாமல் வேறு துணையில்லாத பிழையைப் பார்த்தும், ஏதேதோ எண்ணியெண்ணி மனம் தளர்ந்த நான், 'இந்த மகா புருஷன் என் நாயகருக்கு உபபலமாயிருக்கிறதனால், பயமென்ன? ராக்ஷதர்கள் என்ன ஆவார்கள்?' என்று தைரியங்கொண்டு இப்பொழுதுதான் அந்தச் சந்தேகம் ஒழிந்து உயிர் பெற்றேன்! இனி நான் மாண்டாலும் பழுதில்லை! இன்றே இந்த மாயச்சிறையினின்றும் நீங்கினேன்! எனக்கு இப்படிப்பட்ட துக்கத்தைக் கொடுத்த சத்துருக்களுடைய குலத்தையும் வேரறுத்தேன்! என் பிராணநாதருடைய திருவடியையுஞ் சேவித்தேன்! இனி எனக்குக் கீர்த்தியேயல்லாமல் பழியுண்டாகாது," என்று சொல்லி ஸ்ரீ மகாலட்சுமியின் திருக்கழுத்திலே தரித்திருக்கின்ற மாங்கல்யத்திற்குச் சமானமாகிய சீதாபிராட்டி சந்தோஷித்தாள்.

அத்தருணத்திலே ஆஞ்சநேயர் பிராட்டி திருவடியை

வணங்கி, "அன்னையீர், அடியேன் அதிசயமானவனு? நான் எவ்வளவு! ஸ்ரீ ராமருக்கு இந்தக்கடலிலே கிடக்கின்ற மணலைப்போல அனேக வானர சேனு வீரர்களிருக்கிருர்கள். சுவாமியின் திருவடித்தொண்டு செய்கிற படைத்தலைவர்கள் எண்ணிறந்தவர்களிருக்கின்ருர்கள். அப்படைத் தலைவருக்குள்ளே நான் ஒரு படைத்தலைவனுய் வந்தேன்; அழைத்த குரலுக்கு ஏனென்பேன்; ஏவிய பணிவிடைகளைச் செய்வேன். முன் சொன்ன வானர சைனியமோ, ஒரு விதத்தில் எழுபது வெள்ளம் வானரமடங்கியதாகும். அவைகளுக்குள்ளே ஒவ்வொரு குரங்கு ஒவ்வொரு கை அள்ளிக் குடிக்கிறதற்கும் இந்தச் சமுத்திர ஜலம் போதுமா? கள்ளச் செய்கையையுடைய ராக்ஷதர்கள் வாழும் இலங்கை அவர்கள் காணுதபடியினுலே, இது வரைக்கும் அழியாமலிருக்கின்றது. இப்பொழுது அறிந்தபடியால், இனி நிற்குமா? நிற்கமாட்டாது! வாலியினுடைய தம்பியார் சுக்கிரீவமகாராஜரும், வாலியின் புத்திரனுகிய அங்கதனும், மயிந்தன், துமிந்தன், குமுதன், நீலன், ரிஷபன், குமுதாட்சன், பனசன், சரபன், ஜாம்பன், துர்மருஷணன், காம்பன், கவையன், கவையாட்சன், சங்கன், வினதன், துயிந்தன், நளன், ஸ்தம்பன், தூமன், ததிமுகன், சதவலி என்று சொல்லப்பட்ட வானரப் படைத்தலைவர்களும், இந்த உலகத்துடனே எவ்வகைப்பட்ட உலகங்களையும் எடுக்கத்தக்க மகா பலவான்களாயிருக்கின்றவர்கள்! அவர்கள், ஸ்ரீ ராம பாணத்தைப்போல உதவி செய்கின்றவர்கள். அந்த வானர வீரர்களையெல்லாம் பார்த்தால், இந்த இராட்சதக் கூட்டம் அவர்கள் தொகைக்கு உறையிடுகிறதற்கும் போதாது! அப்படி எண்ணத் தொலையாத வானர சேனையிருக்கின்றது!" என்று விசதமாகச் சொன்னுர்.

## 6. சூளாமணிப் படலம்

மறுபடியும் அந்த அனுமரானவர், "ஸ்ரீ மகாலட்சுமிக்குச் சமானமாகிய இந்தப் பிராட்டியார் வெகுவாகத் துன்பப் படுகின்ருர்! இவருக்குத் துணையுமில்லை! சகலாண்டங்களுக்கும் தனி நாயகமாகிய எங்கள் ராமபிராமனுடைய உயிருக்கு ஒப்பாயிருக்கின்ற இவரை நான் பார்த்தும், இங்கே தனியே விட்டுப் போகிறது நன்மையன்று; சுவாமியினிடத்திற்குக் கொண்டு போகின்றதே தக்கது!" என்று தமக்குள்ளே யோசித்து லோகோத்தமியாகிய ஜானகியை நோக்கி, "அன்னையீர், நாயேன் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன். அதைத் தேவரீர் கோபமில்லாமல் கேட்டருள வேண்டும்: இந்த இராட்சதன் உம்மைக் கொன்றுவிடுவானுகில் அப்புறம் இவனைக் கொல்லுகிறது காரியமன்று. இந்தச் சமயத்திலேயே உம்மைக் கொண்டு போய்ச் சுவாமி சந்நிதியில் காட்டி, அவர் திருவடிக்குத் தண்டஞ்சமர்ப்பிக்கலாமென்று என் மனத்திலே தோன்றுகிறது. ஆகையால், அதிக மிருதுவாகிய ரோமங்கள் நெருங்கி அன்னத்தூவி அணை போலிருக்கின்ற அடியேனுடைய தோளின்மேல் எழுந்தருள்வீராகில், தேவரீரை ஏந்திக்கொண்டு, மத்தியில் எங்கும் தங்காமல், ஓரிமைப் பொழுதுக்குள்ளே ஸ்ரீ ராகவர் எழுந்தருளியிருக்கின்ற மலையின்மேல் தாவிக் குதிக்கின்றேன்! அதையறிந்து இராட்சதர்கள் இடையிலே வந்து தடுத்தாலும், அவர்களெல்லாம் முறிந்து அதமாய்ப் போகும்படி எதிர்த்து யுத்தஞ்செய்து சங்கரித்து, என் கோபத்தை முடித்துக்கொள்ளுகிறேன்! நான் ஒரு நாளும் ஒருவர் கையிலும் சாகாதவன். நாயேன் இவ்விடத்திற்கு வந்து நீரிருக்கின்ற இருப்பைக் கண்டும், சுவாமியினிடத்தில் வெறுங்கையுடனே போகமாட்டேன்! நீரே சொல்லும்: சுந்தரத் தோளராகிய எம்பெருமான் பக்கலிற்போய், 'என் தாயாரும் உம்முடைய தேவியாருமாகிய தேவாமிர்தத்தையொத்த சீதாபிராட்டியார் சதிகாரர்களாகிய

ராக்ஷதர்களுடைய பட்டணத்தில் சிறை வைக்கப்பட்டு மிகுந்த துயரத்துடனே அந்த அருஞ்சிறை நீங்காதிருக்கின்ருர்!' என்று சொல்வேனே யாகில், அப்பால் என்னடிமைத் திறம் என்னுகும்? பிரபலமாகிய யுத்தஞ்செய்து என் தோளிலே புண் படாமற்போய்ச் சுவாமி சந்நிதியில் சத்துருக்களுடைய பராக்கிரமத்தையே விஸ்தரித்து எடுத்துச் சொல்வேனே! அல்லது 'பிராட்டியாரைக் கொண்டு வரவில்லை; என் பிராணனுக்கு மாத்திரம் அபாயமில்லாமல் வந்தேன்,' என்பேனே! 'ஒரு கணப்பொழுதில் ராக்ஷதக் காவலையுடைய இந்த இலங்கை முழுமையும் எரித்து நீருக்கி, ராக்ஷத குலத்தையெல்லாம் கொன்று கருவறுத்து, ஜயம் பெற்றுக் கொண்டு சீக்கிரத்தில் போ,' என்று நீர் ஆக்கியாபித்தாலும் அப்படிச் செய்கின்றேன்! அல்லவென்று உம்மை நான் கொண்டுபோய் இரகுநாயகரிடத்தில் சேர்த்தேனேயாகில், அவருடைய சித்தசாஞ்சல்யம் நீங்கித் தெளிவுண்டாய்த் தேவரீருடனே அவர் இவ்விடத்திற்கு வந்து, அளவற்ற ராக்ஷத வமிசங்களை நாசமாகச் சங்காரஞ்செய்து பின்பு உலகத்திற்குச் சம்பவித்திருக்கின்ற துன்பத்தை நிவாரணம் செய்கிறது நன்மையாகக் காண்கின்றது! ஆகையால், இனி வேறே சொல்லத்தக்கதில்லை. நான் இந்தப் பேறு பெறும்படி கிருபை செய்து கிலேசப்படாமல் அடியேனுடைய தோளின் மேல் ஆரோகணித்தருளும்," என்று சொல்லித் திருவடியில் சாஷ்டாங்கமாய் விழுந்து சேவித்தார்.

இவ்வாறு தகுதியான நல்ல வசனங்களை அன்புடனே வசனித்துத் தாய்ப் பசுவைக்கண்ட இளங்கன்றைப்போலக் களிக்கின்ற அனுமரைப் பாத்து, "இவனாலே ஆகாத காரியம் ஒன்றுமில்லை. இவன்தான் சொன்னபடியே செய்யத் தக்கவன்," என்று திருவுள்ளத்திலெண்ணிய பிராட்டி, "கேளப்பா, ஆஞ்சநேயனே, நீ உன்னுடைய சாமர்த்தியத் திற்குத் தக்க யோசனையே செய்தாய். அது உனக்கு அரியதன்று. அப்படிச் செய்யவே செய்வாய். அதற்குச் சங்

தேகமேயில்லை. ஆயினும், இது உரிய செய்கையன்று என்று மிகுந்த பேதைமையான என் பெண் புத்திக்குத் தக்கதாக ஒரு யோசனை தோன்றுகிறது: அது என்னவென்றால், நீ என்னை எடுத்துக்கொண்டு போகிறபோது சமுத்திரத்தின் நடுவிலே இந்தக் கொடிய ராக்ஷதர்கள் வந்து சுற்றிக் கொண்டு வில்லை வளைத்துப் பாணப் பிரயோகஞ் செய்து போராடினால், அத்தருணத்தில் நீ என்னைப் பாதுகாப்பாயா, அவர்களுடனே யுத்தம் செய்வாயா? ஒருவரும் துணையில்லாமல் தனிமையாயிருக்கின்ற நீ மிகவும் பிரமிக்க நேருமே! அதுவுமல்லாமல், வேறொன்றிருக்கின்றது: அதென்னவென்றால், ஸ்ரீ ராகவருடைய விஜய கோதண்டத்தின் பிரதாபத்திற்கும் மாசுண்டாகும். ஆதலால், அதனால் வருகின்ற நன்மையென்ன? அவர்கள்தான் நாய்போல வஞ்சித்து ஒருவருமறியாமல் என்னைக் கொண்டுவந்துவிட்டார்கள். நீயும் அப்படி நினைக்கலாமா? யுத்தத்திலே சுவாமியின் வில் வீரத்தைத் தேவர்களெல்லாம் காண என் வடிவத்தைக் கண்ட பாவியாகிய இராவணனுடைய கண்களைக் காகங்கள் கொத்திக் கொத்தித் தின்னும்படி என் கண்ணிலே கண்டபோதல்லாமல், நானுயிருள்ளவளாவேனோ? நாணமில்லாத ராக்ஷசிகளுடைய தாலிகளெல்லாம் சூர்ப்பணகையின் மூக்கறுபட்டதுபோல அறுபட்ட போதல்லது, எனக்குரிய நாணமும் பெருமையை உடையதாகுமா? இலங்கையென்கிற பொன் மலையானது பகைவர்களுடைய எலும்பு மலையாகாமற் போனால், என்னுடைய குடிப்பிறப்பையும், ஒழுக்கத்தையும், கற்பையும் நான் பிறருக்கு எப்படி நிலைநாட்டுவேன்? அல்லாமலும், இந்த இலங்கையை மாத்திரமன்றி அளவிறந்த அண்டங்களையெல்லாம் என்னுடைய வாய்ச்சொல் ஒன்றினாலேயே பஸ்பமாய்ப் போகும்படி எரிப்பேன்! இவ்வண்ணம் செய்வது இரகுநாயகருடைய வில்லாண்மைக்குப் பழுதென்று பொறுத்துக்கொண்டிருக்கிறேன். அப்பா, என் புத்திரனாகிய ஆஞ்சநேயனே, இன்னமொரு வார்த்தையுண்டு; அதுவும்

கேள் : வீர சிகாமணியாகிய ஸ்ரீ ராமபத்திரர் ஒருவர் மாத்திரம் தமது திருக்கரத்தால் தீண்டலாமே அல்லாமல், நீ பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்திருந்தாலும், ஆண் வடிவங் கொண்டிருக்கின்றதனுல் என்னைத் தொடக்கூடுமா? புத்தியீனனுகிய இராவணன் என்னைத் தீண்டுவானேயாகில், இத்தனை நாள் உயிரோடுங் கூடி வாழ்வானு? அவன், 'இவளைத் தீண்டினுல், ஒரு நொடிப் பொழுதிற்குள் நாம் மாண்டுபோய்விடுவோம்!' என்றல்லவோ பூமியோடும் பேர்த்து எடுத்துக்கொண்டு வந்தான்? இதுவுமல்லாமல்,ஜகத்ரக்ஷகருடைய திருவுந்திக் கமலத்தில் உற்பவித்த பிரமதேவன் பூர்வகாலத்தில் இந்த மகா பாதகனைக் குறித்து, 'நீ உன்னிடத்தில் மனேரம்மியப்படாத ஸ்திரீகளைத் தொட்டால், உன் சிரசு ஆயிரஞ் சுக்கலாக வெடிக்கக் கடவது!' என்று சாபமிட்டிருக்கின்ருன். அதுவல்லவாநானிறந்துபோகாமலிருக்கும்படி என் பிராணனைக் காத்தது? நான் துக்கப்படுகிற சமயத்தில் அவ்விதமாகிய பிரம சாபம் அவனுக்கு உண்டென்று, சத்திய சந்தனுகிய விபீஷணுழ்வான் புத்திரி திரிசடையென்பவள் என்னிடத்தில் அன்பினுல் எனக்கு இரகசியமாகச் சொல்லி, 'அம்மா, நீ யாதொன்றுக்கும் அஞ்சாதே!' என்று எனக்குத் தைரியத்தையுண்டாக்கி விசனத்தை நீக்கினுள். இராவணன் அப்படிச் சாப சம்பந்தனுயிருக்கின்றவனுகையால், அதிக்கிரமிப்பானேயானுல் மரணமடைவானென்றும், தர்மம் தவற மாட்டாதென்றும், என் நாயகருடைய புஜபலபராக்கிரம சத்தியைத் திடமாக எண்ணியும், என் கற்பின் பரிசுத்தத்தைக் காட்டவுமே இவ்வளவு காலம் வரைக்கும் இரகு குலோத்தமரைப் பிரிந்து தனியேயிருந்தும், இந்தச் சரீரத்தை வைத்துக் கொண்டிருக்கிறேன். மேலும், இருந்த இடத்தை விட்டு நான் அப்புறம் பெயரவேயில்லை. அதற்குத் திருஷ்டாந்தம் என்னவென்ருல், முன்னுளில் இருப்பிடமாக இளைய பெருமாளால் அமைக்கப்பட்ட பன்னசாலை, வஞ்சகனுகிய இராவணனுல் தண்டகாரணியத்திலிருந்து நிலத்துடனே பேர்த்தெடுத்துக்

கொண்டு வந்து இவ்விடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. இதை உன்னுடைய கருணை சுரந்த கண்களினுல் செவ்வையாகப் பார்! இந்த ஜலம் நிறைந்த தாமரைப் பொய்கையானது கோதண்ட தீட்சாகுருவாய் விளங்காநின்ற சுவாமியினுடைய மரகதத் திருமேனியைப்போல இருக்கின்றதாகையால், இவ்விடத்திற்குச் சோர்ந்து போகின்ற என் பிராணனை இரட்சித்துக்கொள்ளும் நிமித்தம் வருவேன். இது தவிர இருப்பிடத்தை விட்டு ஒரு பொழுதும் நீங்குகிறதேயில்லை. ஆகையினுலே, நீ என்னைக் கொண்டு போகிறது காரியமன்று. வேதநாயகராகிய ஸ்ரீ ராமசந்திரரிடத்திற்கு நீ திரும்பிப்போய்ச் சேர்வதே காரியம்," என்று லோக மாதாவான பிராட்டி சொல்லினள்.

அது கேட்ட துல்லியராகிய ஆஞ்சநேயர், "இந்த ஜகத்காரணராகிய ஸ்ரீ ராகவருடைய தேவியார் கொண்ட விரதம் நன்ருகின்றது!" என்று நினைத்து, சந்தேகமும் வருத்தமும் நீங்கினவராய் மனமகிழ்ச்சி கூர்ந்து, ஆனந்தப்பரவசராய்த் துதிசெய்து, "என் அன்னையீர், தேவரீர் திருவுள்ளம் அப்படியானுல், இராவணனுல் இந்த உலகம் அந்தகாரப் பட்டிருக்கின்றது நிவாரணமாகும். இனிச் சில நாள் மாத்திரம் வியாகுலப்படாமல் இவ்விடத்திலேயே ஏழுந்தருளியிரும். அவ்விடத்தில் பிரமை கொண்டிருக்கின்ற சுவாமிக்கு அடியேன் போய்ச் சொல்லத்தக்க வார்த்தைகளென்ன? அவற்றை அருளிச்செய்யும்," என்று சாஷ்டாங்கமாகச் சேவித்தார்.

அத்தருணத்தில் பிராட்டி, "நீதிமானுகிய அனுமனே, தமியேனுகிய நான் உன்னைப் பார்த்ததனுல் இன்னும் ஒரு மாத பரியந்தம் உயிரோடிருப்பேன். அதற்குமேல் அந்த இராமசந்திரருடைய திருவடி சாக்ஷியாகப் பிராணனை வைத்துக்கொண்டிருக்கிறதில்லை. இதை நீ உறுதியாக மனத்திலே கொள். ஆரங்கள் பிரகாசிக்கின்ற திருமார்பையுடைய இரகுகுலோத்தமருக்கு நான் பத்தினியல்லவென்றிருந்தாலும்

இருக்கட்டும்! அவருடைய இருதயத்தில் இரக்கமும் அன்பு மில்லாமற்போனாலும் போகட்டும்! தமது வீரத்திற்கு மாத்திரம் பின்னமில்லாமலிருக்கும்படி காத்துக்கொள்ள நீ அவரை வேண்டிக்கொள். யாவரும் துதிசெய்யத்தக்க பராக்கிரமசாலியாகிய இளைய பெருமாளுக்கு, 'உம்முடைய தமையனார் ஆக்கினைப்படி என்னை நீர் காத்திருந்தவராகையால், மத்தியிலே எனக்குச் சம்பவித்த இந்தக் கொடிய சிறையை மீட்கின்ற கடன் உம்முடையதுதான்,' என்று நான் சொன்னதாக ஒரு வார்த்தை சொல். மேலும் நான் கொண்ட விரதம் ஒரு மாதத்தில் முடிந்து போகும். அதற்குள்ளே சுவாமியானவர் இங்கே எழுந்தருளாவிட்டால், அவர் கையினாலே கங்கையில் எனக்குச் செய்ய வேண்டிய கடனைச் செய்துவிடச் சொல். சிரேஷ்டராகிய எங்கள் மாமியார் மூவருக்கும், 'உங்கள் மருமகளாகிய சீதையானவள் அவ்விடத்தில் இறந்து போகின்றாள். உங்களுக்கு நமஸ்காரம் செய்தாள்,' என்று சுவாமியைச் சொல்லச் சொல். இந்தச் சொல்லை ஒரு வேளை தர்மஸ்வரூபியாகிய என் நாயகரானவர் என்னிடத்தில் கிருபையில்லாமல் சொல்லுகிறதற்கு மறந்து போனாலும், நீ மறவாமல் சொல். கல்யாண குணபிராமரானவர் என்னை வந்து பாணிக்கிரகணஞ் செய்த அன்றைய தினம், 'இந்த ஜன்மத்தில் நான் உன்னை விட்டு மற்றொரு ஸ்திரீயை என் மனத்தினாலும் நினைக்கிறதேயில்லை,' என்று எனக்கு வரம் கொடுத்திருந்தார். அதையும் அவர் திருச்செவியிற் கேட்கும்படி சொல். 'தான் இவ்விடத்திலிருந்து இந்தத் துயரத்தினால் மாண்டு போனாலும், புனர்ஜன்மமெடுத்து வந்தாவது உம்முடைய திருமேனியைத் தழுவத்தக்க மகத்தாகிய ஒரு வரம் வேண்டித் தொழுது நிற்கின்றாள்,' என்று சொல். அவர் பட்டாபிஷேகம் செய்துகொண்டு நவரத்தின சிங்காதனத்தில் எழுந்தருளியிருந்து இராஜரிகம் செய்கின்ற திருவழகையும், சத்திர சாமரங்களுடன் பட்டத்து யானையின் மேல் வீதியில் பவனி வருகிற திருக்கோலத்தையும் கண்டு

களிக்கும்படி தரிசிக்கப் பிராப்தியில்லாத நான், பலபல வார்த்தைகளைச் சொல்லியும் என்ன பயன்! என் விதிச் செயல் இப்படியும் இருந்ததல்லவாவென்று நினைக்கிறேன். அப்பா, ஆஞ்சநேய, இன்னமொன்று சொல்லுகின்றேன்: தம்மைப் பிரிந்ததைக் குறித்து உலகத்தார் பிரலாபிப்பதற்காகவும், தாய்மார்கள் படுகின்ற துக்கத்திற்காகவும், பரதாழ்வார் முதலாகிய தம்பிமார்கள் அடைந்த வருத்தத்திற்காகவும், அவ்விடத்திற்குப் போவாரேயல்லாமல், அவர் என்னைக் குறித்து இவ்விடத்திற்கு எப்படி வரப்போகிறார்? மிதிலையில் இருக்கின்ற எங்கள் மாதாபிதா முதலாகிய பந்து ஜனங்களுக்கெல்லாம் என் வந்தனை சொல். வானர சேனாபதியாகிய சுக்கிரீவனை உன்னுடைய தோழராகிய இரகுநாயகரைக் கைவிடாமல் பாதுகாத்து அயோத்திக்கு அழைத்துக் கொண்டுபோய்ப் பட்டாபிஷேகம் செய்விக்கச் சொல்,'' என்று இவ்வண்ணம் கண்களிலே நீர் பெருகிப் பாயும்படி துக்கத்துடனே சொல்லிக்கொண்டு வந்த பிராட்டியை ஆஞ்சநேயர் பார்த்து, "அம்மா, இன்னமும் தேவரீருடைய விசனம் நீங்கவில்லையே! தேவரீரும் இவ்விடத்தில் இறந்து போவீர்! அப்பால் மெய் தளர்ந்திருக்கின்ற ஸ்ரீராமசந்திரரும் இறவாமல் பிராணனுடன் அயோத்திக்குப் போய் மகுடாபிஷேகம் பண்ணிக்கொள்வார்! கற்புக்கு உற்பத்தி ஸ்தானமாகிய உம்மைச் சிறை வைத்த பாவியும் ஜீவனுடன் இருப்பான்! வில் வீரர்களாகிய ஸ்ரீ ராமலட்சுமணர்களுடைய புஜபல பராக்கிரமமும் பொய்த்துப் போகும்! இது மிகவும் ஆச்சரியமாய் இருக்கின்றது! இதற்குச் சமானமாவதேது? உம் விஷயத்தில் அபசாரப்பட்ட பாபாத்துமாக்களைக் கொல்லாமல் நானும் என்னுடனே கூட வந்த எல்லா வானர வீரர்களும் பிராணனுடனே எங்கள் ஆச்சிரமத்திற்குப் போகவும், அப்பால் அங்கெழுந்தருளியிருக்கின்ற சுவாமியும் தமக்கு உயிர்த் துணையாகிய உம்மை விட்டு அவ்விடத்தை நீங்கிக் கையிலே பிடித்த வில்லுடனே நகரத்தை நாடிப்போகவும் வேண்டாவா?

அதிருக்கட்டும்! துக்க சாகரத்தில் மூழ்கி அவதிப்பட்டுக் கொண்டிருந்த எங்களுக்குப் பரிபூரணமாகிய சம்பத்தைக் கொடுத்த அந்த ஸ்ரீ ராகவருக்குத் தேவரீரை மீட்டுக்கொண்டு போய்க் கொடாமற்போனுல், எங்களைப்பார்க்கிலும் யோக்கியராவார் யாரிருக்கின்ருர்கள்! இவ்வுலகத்தில் சன்மார்க்கத்தையுடைய ரிஷீஸ்வரர்களையெல்லாம் கொல்லுகின்ற மகா பாதகர்களாகிய இராட்சதர்களுடைய குடல்களை இரணக்களத்தில் பேய்கள் தின்னும்படி சங்கரித்தாலல்லாமல், இராச்சியத்திற்குப்போகிறதில்லையென்று வாக்குப் பிரதானம் பண்ணியிருக்கின்ற மகானுபாவருக்கு இந்த வார்த்தையென்ன ஒவ்வாதா? பலவீனர்களாகிய சத்துருக்களால் சிறை வைக்கப்பட்ட தேவரீரை நாங்கள் மீட்டுக்கொள்ளாமற் போவோமேயானுல், உலகத்தில் சகல சாஸ்திரங்களிலும் தேர்ந்த பண்டிதர்களேயல்லாமல் பாமரர்களாவது இந்த வார்த்தையைச் செவிகொடுத்துக்கேட்பார்களா? கற்புடையவளும் சத்தியந் தவருதவளுமாகிய மனையாளானவள் வஞ்சகர்களாகிய இராக்ஷதர்களால் தீண்டப்படாததற்கு முன்னே மாண்டு போய்விட்டாளென்று கொண்ட புருஷன் தனக்குத் தானே மனதிலே சித்தப்படுத்திக்கொண்டு அவளை வந்து பாராமல் திரும்பிப் போய்விடுவானுனுல், அப்புறம் அவனுடைய வீரம் நன்ருய்ப் பிரசித்தமாக மாட்டாதா? லோகோத்தமியராகிய நீர் துக்கத்தினுல் உம்முடைய பிராணனை மாய்த்துக் கொள்வீரேயாகில், அதற்காக எங்கள் ஐயராகிய இரகு நாயகர் ராக்ஷத வமிசத்துடனே சகல அண்ட சராசரங்களையும் சுட்டு நீருக்கினுலும், அந்த அபவாதம் தீராதல்லவா? நம்முடைய கோதண்ட ராமரை எதீஸ்வரர் முதலானவர்களும், 'லோக கர்த்தாவாகிய நீரே இப்படிச் செய்வது சற்காரியமன்று,' என்று சொன்னுலும், தேவரீர் பிராணனை விட்ட பின் அவர் சத்தியத்தைப் பார்ப்பாரா? திரிலோகங்களையும் முன்னே மாய்ந்து போம்படி செய்யாரா? சுவாமிக்குப் பிறக்கும் உக்கிர கோபமானது கொடியவனுகிய இரா

வணனுடைய உயிரை மாத்திரம் நாசஞ்செய்வதனுலேயா தணியும்? பூலோகத்தையும் சுவர்க்க லோகத்தையும் நாசஞ் செய்யாமல் விடுமா? இராமபத்திரருடைய அஸ்திரமானது சத்த சமுத்திரங்களேயும், பதினுலு லோகங்களேயும், யுகாந்த காலாக்கினியைப்போல நொடிப்பொழுதிலே கவளீகரிக்க மாட்டாதா? இர்குபதியானவர் இப்பொழுது தேவர்களுடைய சத்துருக்களே நிர்மூலஞ் செய்தார்; பெரியோர்களுடைய ஆபத்துகளே நீக்கினுர்; எப்போதும் தர்மத்தைத் தலே யெடுக்கும்படி செய்தார்; பிரபலமாகிய கீர்த்தியையும் சம் பாதித்தாரென்று நினைத்துக்கொள்ளும். யாவரும் வெறுக் கத்தக்க இந்தக் கண்டகர்களுடைய இரத்தப் பிரவாகத்தில் பேய்க்குலங்கள் மூழ்கிக் குளிக்குந்தோறும், ராக்ஷதர்களுக் குப் பயந்து ஒளிக்கின்ற தேவர்கள் கண்டு மனங்களிக் கின்றதை நீர் பார்க்கப் போகின்றீர்!

"பிரளயகால இடியைப்போலச் சக்கரவர்த்தி திருமகனு ருடைய பாணமானது புறப்பட்டு இராட்சதர்களுடைய சரீ ரத்தைப் பிளக்க, அந்தப் புண்ணிலிருந்து ஒழுகாநின்ற உதிர சமுத்திரமானது பெருகி வந்து விழுவதனுல் ஏழு சமுத்திரங்களும் ஒன்ருய்த் திரண்டு இரைகின்றதையும் பார்க்கப்போகின்றீர்! இராட்சத ஸ்திரீகள் கர்ப்பம் நிறைந்த வயிற்றைப் பிசைந்துகொண்டு அழுது துக்கித்துக் கண்களி லிருந்து தாரை தாரையாக நீரொழுகும்படி வாயுவினுலும் தாண்டப்படாத மலே போல அறுத்தெறிகின்ற தாலிக் குப்பை களேயும் பார்க்கப் போகின்றீர்! ஆகாயத்தைத் தீண்டு கின்ற ஸ்தூலதேகத்தையுடைய பேய்க் கூட்டங்களும் நீண்ட சிறகுகளேயுடைய பறவை ஜாதிகளும் இராட்சதர்க ளுடைய உதிரக் கடலில் மூழ்கி, அவர்கள் மனேவிமார்க ளுடைய கண்ணீராகிய ஆற்றில் குளிப்பதையும் பார்க்கப் போகின்றீர்! மிருதங்கம் வீணே முதலாகிய வாத்தியங்கள் முழங்க, அரம்பா ஸ்திரீகள் நாட்டியஞ்செய்கின்ற இந்த நாடக சாலேகளில் ஸ்ரீ ராகவருடைய பிரதாபத்தைப் பாடிக்

கொண்டு வானரங்கள் வரிசை வரிசையாக ஆடுகின்றதைப் பார்க்கப் போகின்றீர்! இராவணன் முதலானவர்களுடைய சரீரத்திலிருந்து ஒழுகுகின்ற இரத்த ஆருனது, பிணமலைகளைப் புரட்டி இழுத்துக்கொண்டு போய்ச் சமுத்திரத்தைத் தூர்ப்பதைத் பார்க்கப் போகின்றீர்! தேவரீருடைய மாசற்ற திருமேனியைப் பார்த்த தசக்கிரீவனுடைய கண்களை அவன் தலைகளின்மேல் தாவுங் காக்கைகள் கூரிய மூக்கினுல் கொத்திக் கொத்தித் தின்பதையும் நீரே பார்க்கப் போகின்றீர்! ஆகையால், இன்னமும் பல பல வார்த்தைகள் சொல்ல வேண்டுவதென்ன! ஒரு மாதம்வரைக்குங்கூட நீர் துயரப்பட்டுக்கொண்டு இவ்விடத்திலிருக்க வேண்டுவதில்லை. அடியேன் போய்ச் சுவாமி திருவடியைத் தரிசிக்கிறதுதான் தாமதம்! அப்பால் அவர் ஒரு பொழுதாவது பொறுத்திருப்பாரா? அவருக்கு உயிருண்டென்கிற சொல் மாத்திரந்தான் உண்டு. ஆரணியத்திலே அவருடைய திருமேனி தீண்டித் தீயாத புஷ்பங்களும் தளிர்களும் இல்லை. அவர் சரீர உஷ்ணத்தினுலே பொறியெழுந்து வேகாத சோலைகளுமில்லை. மேகம் கர்ஜித்தாலும், இடியிடித்து விழுந்தாலும், பாம்பு கடித்தாலும், அவருக்குத் தெரியாது. நீர் பிரிந்ததனுல் மத்துக்கொண்டு கடையப்பட்ட தயிர் போல உயிர் தளர்ந்து கரைந்து ஐம்புலன்களும் வேறுபட்டுப் பித்துப் பிடித்து மயங்கி நாள்தோறும் அடிக்கடி எவ்வளவோ வேதனைப்படுகின்ருர்! இப்படிப்பட்ட நிலைமையுடைய அந்தப் புருஷோத்தமர் வாராமலும் இருப்பாரென்று நினைப்பீராகில், நான் சொன்னவைகளையெல்லாம் இப்போதே உம்முடைய உள்ளங்கை நெல்லிக் கனியைப்போலக் காண்பிக்கிறேன் பாரும்! அதற்கு மாறுபட்டிருந்தால், அப்பொழுது பொய்யென்று நினைத்துக்கொள்ளும்! ஸ்ரீ ராமரும் வானராதிபதியாகிய சுக்கிரீவனும் உம்முடைய செய்தியைக் கேட்டுச் சந்தோஷிப்பதற்கு முன்னமே வானரங்கள் வந்து, சமுத்திரத்தைத் தூர்த்து, இலங்கையைச் சுற்றிக்கொண்டு

ஆர்ப்பரிக்கின்றதைத் தேவரீர் கேட்டுச் சந்தோஷிக்கப் போகிறீர்! எண்ணவியலாத வானர சேனை நாளைய தினம் இந்த நகரத்திற்கு வந்த போது, அதற்கு நடுவே கருடன்மேல் ஆரோகணித்து வருகின்ற ஸ்ரீமந்நாராயண னைப்போல அடியேனுடைய தோள்களின்மேல் இரகுநாயகர் எழுந்தருளி வருவதைக் காண்பீர். உதயகிரியிலே தோன்று கின்ற இளஞ்சூரியனைப்போல அங்கதனுடைய தோளின் மேல் இளைய பெருமாளும் எழுந்தருளி வரக்காண்பீர். இனி மேல் துயரத்தையும், சங்கையையும் விட்டுவிடும்! இப் போது குறித்துச் சொல்லிய சில தினத்திற்குள்ளே வந்து உம்முடைய சிறையை மீட்காவிட்டால், பழியும் பாவமும் சம்பாதித்துக்கொள்கிறதற்கு அந்த ஸ்ரீ ராமரே இராவண னும், இராவணனே ஸ்ரீ ராமருமென்று உமது திருவுள்ளத் தில் எண்ணிக்கொள்ளும்!'' என்று இவ்வண்ணம் சாங்கோப சாங்கமாக ஆஞ்சநேயர் எடுத்துச் சொல்லினர்.

இந்த வார்த்தைகளெல்லாம் குற்றமற்றவைகளாயிருக் கக் கேட்ட பிராட்டி மனத்திலே அபரிமிதமாகிய மகிழ்ச்சி கூர்ந்து, உஜ்ஜீவித்தவளாகி, "மெய்தான்! இவன் சீக்கி ரத்திற்போய்ச் சேர்கிறதே உத்தமம்,'' என்று அனுமரைப் பார்த்து, "மாருதியே, நீ துரிதமாய்ப் போய் வா! யாதொரு தீங்கும் உன்னை அணுகமாட்டாது! இனி நான் வேறொன் றும் சொல்லுகிறதேயில்லை. உனக்குத் தெரியாததைக் குறித்து நானே சிறிது சொல்லப் போகிறேன்! என் பிராண நாயகருக்கு முன்பு நடந்தவைகளாகிய சில அடையாளங் களைச் சொல்லுகிறேன்: பூர்வத்தில் ஒரு மாயமாகிய காகம் வந்து என் சரீரத்தைத் தனது கூர்மையாகிய நகத்தினலே கிழித்தது கண்டு சுவாமியானவர் அற்பமாகிய புல்லைப் பிர யோகிக்க, அதுவே அஸ்திரமாகித் துரத்த, அதற்கு அஞ்சி அந்தக் காக்கை வடிவாய் வந்த இந்திரகுமாரனுன சயந்த னவன் பிரமாவினிடத்திலும் சிவனிடத்திலும் மற்றத் திக்குப் பாலகர்களிடத்திலும் போய்ச் சரணமடைந்தான். அவர்க

ளெல்லாம் இராமபாணத்திற்குப் பயந்து, அபயாஸ்தங் கொடாமல், அவனைப் பார்த்து, 'ஐயையோ! இனி உனக்கு எங்கள் ஆண்டவராகிய ஸ்ரீ ராமபிரானுடைய திருவடியல் லது வேறு கதியில்லை! மேலும், அவரே சரணாகத வாற்சல் யர். ஆகையால், நீ போய் அவரிடத்திலேயே சரணாகதம் செய்,' என்று சொல்லினர். அவன் அங்கிருந்து நடுநடுங்கி, 'இராகவா, அபயம்! ஸ்ரீ ராமசந்திரா, அபயம்! தாசரதி, அபயம்! சீதா சமேத, அபயம்! கோதண்டபாணி, அபயம்! அபயம்!' என்று பூமியில் விழுந்து தண்டன் சமர்ப்பித்தான். உடனே சுவாமி திருவுளமகிழ்ந்து, அவன் பிராணனை வாங் கும்படி விட்ட பாணம் அவனுடைய இரண்டு கண்களில் ஒரு கண்ணைக் கிரகித்துக்கொண்டு போகும்படி கிருபை செய்ய, அது அப்படியே கிரகித்துக்கொண்டு தம்முடைய அம்புப் புட்டிலில் வந்து சேர்ந்தது. அப்பொழுது இராமபத்திரர், 'நீ சரணாகதம் செய்ததனால் உன் குற்றத்தைப் பொறுத் தருளினோம்! இன்று முதல் உன்னைப்போலிருக்கின்ற காக்கைக் கூட்டங்களின் இரு கண்ணுக்கு ஒரு மணி உலா வக் கடவது!' என்று சொன்னார். பின்பு காகாசுரன் வருத் தம் நீங்கி இரகுநாயகரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு சொர்க்கலோகத்திற்குப் போனான். தேவர்கள் சுவாமியின் காருணியத்தைக் குறித்துப் புஷ்ப வருஷம் வருஷித்தார்கள். இந்தச் செய்தியைச் சொல். அயோத்தியிலிருந்த பொழுது சுவாமியை நோக்கி, நான் வளர்த்த என்னுயிர்க்கு ஒப்பா கிய இளங்கிளிக்கு என்ன பெயரிடுகின்றதென்று கேட் டேன். அவர், 'ஆசையாகிய என் தாய் பெயரை வைத் திடு,' என்று சொன்னார். இதையும் அவரிடத்தில் சொல். அப்பா, ஆஞ்சநேயனே, நான் அவருக்குச் சொல்லி அனுப்ப வேண்டிய அடையாளங்களுள் இவற்றிலும் விசேஷமாகிய அடையாளம் வேறொன்றுமில்லை,'' என்று கூறி, சிறிது யோசித்து நிச்சயம் பண்ணிக்கொண்டு, தன் காந்தியினால் மேலேழு லோகங்களையும் கீழேழு லோகங்களையும் ஜயித்த

சூளாமணியென்னும் இரத்தினத்தைத் தனது திருவாடையில் வைத்திருந்து, தாமரைப் புஷ்பத்திற்குச் சமானமாகிய திருக்கரங்களாலெடுத்தாள்.

எடுத்த மாத்திரத்தில் நவ வியாகரண பண்டிதராகிய ஆஞ்சநேயர், 'இது என்ன!' என்று பிரமித்துத் தேகம் பூரித்து அதிசயித்தார். அப்பொழுது இருளெல்லாம் சிதைந்து ஓடியது. இராட்சதர்கள், 'இப்பொழுது சூரியன் சிறிதும் மனம்கூசாமல் இலங்கைக்கு வந்தது ஏன்?' என்று சந்தேகித்தார்கள். அந்நகரத்தில் சூரியன் வருகிறதில்லாமையால், 'எப்பொழுது சூரியனை வரக் காண்போம்!' என்று துக்கமுற்றிருந்த சக்கரவாகப் பக்ஷிகளெல்லாம் களிகூர்ந்தன. தாமரை மலர்கள் மலர்ந்தன. சூரிய காந்தக் கற்கள் தீயைச் சொரிந்தன. அந்த இரத்தினக் கிரணம் பிராட்டியினுடைய திருமேனி முழுதும் சிவக்கும்படி செய்து ஸ்ரீ ராமசந்திரருடைய திருவடிகளைப் போல ஜொலிக்கத் தலைப்பட்டது.

அப்படிப்பட்ட திவ்வியமாகிய சூளாமணியைக் கண்ட ஆஞ்சநேயரைச் சீதாபிராட்டி நோக்கி, "அப்பா, அனுமனே, என் கண்ணுக்கு ஒப்பாகிய இந்தச் சூளாமணியை இது வரையில் என் வஸ்திரத்தில் வைத்துக்கொண்டிருந்தேன். இதுவே என் நாதருக்குப் பெரிய அடையாளம். நீ இதை வாங்கிக்கொள்," என்று கொடுக்க, வாயு குமாரர் தொழுது அதை இரண்டு கையினாலும் வாங்கி, அந்த க்ஷணமே வஸ்திரத்தில் சுற்றிப் பதனம் பண்ணி வைத்துக்கொண்டு, கண்களில் நீர் பாயும்படி ஜானகியை மூன்று தரம் பிரதட்சிணம் வந்து, சாஷ்டாங்கமாகச் சேவித்து, "அடியேன் போய் வருகிறேன்," என்று சொல்லி, பிராட்டி தம்மைப் புகழ்ந்து வாழ்த்த அப்பால் நடந்தார்.

# 7. பொழில் இறுத்த படலம்

இப்படி ஜானகியினிடத்தில் நியமனம் பெற்றுக்கொண்டு வடதிசையை நோக்கிச் செல்ல உத்தேசித்து அதிசீக்கிரமாய் நடந்து எதிரே தோன்றிய அசோகவனத்தில் பாய்ந்து போகின்ற அனுமரானவர், சற்று நின்று, "நான் இலங்கைக்கு வந்து பிராட்டியாரைக் கண்டு அவரிடத்தில் மாத்திரம் சில சமாசாரங்களைக் குறித்துப் பேசிவிட்டுப்போகிறது பிரதாபமன்று. வீரத்திற்குத் தக்க ஒரு பிரபலமான காரியத்தைச் செய்து போக வேண்டும்: கொடிய பாபிஷ்டர்களாகிய ராக்ஷதர்களையெல்லாம் கொலை செய்து, இந்த இலங்கா பட்டணத்தையும், வேருடனே களைந்தெடுத்துச் சமுத்திரத்தில் அழுந்தும்படி எறிந்துவிட்டு, லோகநாயகியாராகிய வைதேகியாரை என்னையராகிய சக்கரவர்த்தி திருமகனுர் திருவடியில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். அப்படிச் சேர்க்காவிட்டால், நான் எவ்விதத்தில் அந்த விஜயராகவருக்கு அடிமையாவேன்! சுவாமிக்குத் துரோகியாகிய இராவணனை இறுக்கிப் பிடித்து, என்னுடைய நீண்ட வாலினுல் அவன் பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் சேர்த்துக் கட்டி இமிசித்துச் சிறை வைக்கவுமில்லை. அப்படியல்லவென்ருலும், அவனை நேரேயாவது ஜயித்தேனு? அதுவும் செய்யவில்லை. இப்படியானுல், ஒருவர் மற்ருெருவருக்கு அடிமையென்பது தகுமா? என்னுடைய கண்ணிற்கண்ட இராட்சதக் கூட்டங்களைச் சின்னபின்னப்பட அடித்து, இலங்காதிபதியினுடைய கண்களுக்கு முன்னே அவன் மனைவியான மண்டோதரியைத் தலை மயிரைப் பிடித்து இழுத்து வந்து சிறை வைத்தாலுந்தான் என் புஜபலத்திற்குப் பழுதுண்டாகுமா? கிராதர்களான அரக்கர்களுக்கு என்னுண்மையெல்லாம் காட்டி, அவர்களைத் திசைதோறும் ஓட்டித் துரத்தி அதஞ்செய்வதே பிரதான.காரியம்! இனி எண்ணத்தக்கது மற்ருென்றுமில்லை. ஆதலால், அவர்

களைச் சண்டைக்கு இழுக்க வேண்டுமே! அதற்குத் தக்க உபாயம் என்ன! நான் இந்தச் சோலையை ஒரு நொடிப் பொழுதிலே அதஞ்செய்கிறேன். அப்படிச் செய்தால், அந்த ஆர்ப்பாட்டத்தைக் கேட்ட மாத்திரத்தில் மிகுந்த கோபத்தோடும் இராட்சதர்கள்வந்து என்னை எதிர்ப்பார்கள். எதிர்த்த பொழுது அவர்களைச் சந்ததியறக் கொன்று உயிர் குடிப்பேன்! என்னோடு போர் செய்ய வருகின்றவர்களை யெல்லாம் மறுபடியும் உயிரோடே போகவொட்டாமல் கொன்றால், அந்த இராவணனும் எனக்கு முன்னே வந்து எதிர்ப்பான். எதிர்ப்பானேயானால், அவனுடைய பத்துத் தலைகளையும் குழிந்து போகும்படி குட்டி உதைத்து, என் மனத்திலே பொங்குகின்ற கோபமும் சிறிதாறிச் சந்தோஷ மாய்ப் போவேன்! ஆகையால், இவ்விதம் செய்வதே நல்ல தந்திரம்!'' என்று தீர்க்காலோசனை செய்து, தம்முடைய விசுவரூபத்தைக் கொண்டு, உலக முழுமையும் ஒரு கொம் பிலே தாங்கிய ஆதிவராகத்தைப்போல ஓங்கியுயர்ந்து, அந்த வனத்தையெல்லாம் தம்முடைய பாதத்தைக் கொண்டு துவைத்தார். துவைத்த பொழுது அதிலிருந்த விருட்சங்கள் பிளந்தும், முறிந்தும், நெறிந்தும், ஆஞ்சநேயருடைய பாத மானது படுதலாலே சந்தனமரங்களும் பூமரங்களும் பிளந்து துணிந்தன. மல்லிகை முல்லை முதலான கொடி வகையும், செடி வகையுமான சகலமும் தூள் தூளாயின. மயிலும் குயிலும் கிளியும் வண்டுமான இவையெல்லாம் நெருங்கி நசுங்கி மடிந்தன. பக்ஷிகள் இரையும் ஓசையும், மரங்கள் ஒடியும் ஓசையும், அனுமர் அடிக்கடி கர்ஜிக்கின்ற ஓசையும் கூடி, ஏக கோஷ்டமாய், இந்த அண்டகடாகத்தைத் தாண்டி அப்பாலும் வியாபித்தன. காடு போல அடர்ந்து நெருங்கிய மரங்களை அசைத்தெடுத்து அனுமரானவர் வீசுதலால் யானைச்சாலை, புரவிச்சாலை, இரதச்சாலையாகிய இவையும், இவற்றிலுள்ள யானை புரவி தேர்களும், ஆடரங்குகளும், அன்னசத்திரமும், தண்ணீர்ப் பந்தலும் சிதைந்து நொறுங்

கின. அவர் வலக்கையினுல் சிலசில பெரிய மரத்தையும், இடக்கையினுல் சிலசில கட்டு மலையையும் பேர்த்தெடுத்து எறிந்தார். அதனுலே, இலங்கையிலிருந்தவர் யாவரும் பயந்தோடினர்.

இப்படி வாயு குமாரரானவர் சின்ன பின்னம் செய்யும் பொழுது, "இலங்கேஸ்வரனுனவன், 'நான் .சீதையினுலே விரகதாபப்பட்ட தருணத்திலே நீயேன் சரீரத்தைத் தகித்தாய்? இப்பொழுது தேவர்களுக்கு முன்னே ஒரு குரங்கு வந்து சோலையை அழிக்கும்படி ஏன் பார்த்துக்கொண்டிருந்தாய்?' என்று கோபிப்பானே! இதற்கென்ன செய்வது!'' என்று பயந்து ஒளித்தாற் போலச் சந்திரன் அஸ்தமித்தான்.

இராட்சதர்களாலே காவல்செய்யப்பட்ட சோலையிலேயிருந்த சகல விருக்ஷமும் அழிந்து போயும், சீதா பிராட்டி எழுந்தருளியிருக்கும் ஒரு விருக்ஷம் மாத்திரம், அழியாமல் பரலோக பூலோக பாதாள லோகமெல்லாம் நாசமாய்ப் போகும்படியான மகா பிரளய காலத்திலே ஸ்ரீமந்நாராயணன் திருக்கண் வளர்ந்தருளாநின்ற ஆல் போல விளங்கியிருந்தது. 'மிகுந்த பிரகாசத்தையுடைய சூளாமணியான ஜீவ ரத்தினத்தைத் தன் பிராணனுக்குச் சமானமான சக்கரவர்த்தி திருமகனுருக்கு அடையாளமாய்க் கொடுக்கச்சொல்லி அனுமர் கையில் கொடுத்துவிட்டதனுல், ஐயோ! சீதையானவள் வறுமையை அடைந்தாள்!' என்று அவளுக்குத் தாய் வீடான சமுத்திரமானது ஒரு சிகாமணியை அனுப்பியது போலச் சூரியன் உதயமானுன்.

அந்தச் சோலை முழுமையையும் பற்றறத் தொலைத்துவிட்டுத் தனியே நிற்கும் ஆஞ்சநேயர், சதுர்த்தச புவனத்தையும் அளந்த திரிவிக்கிரமனைப்போலப் பிரகாசித்தார். இவ்விதமாயிருக்கும் சமயத்திலே அவர் முன்பு செய்த மந்திரோச்சாடனத்தால் பிரஞ்ஞையில்லாமற் சவம்போல உறங்கிக் கிடந்த இராட்சசிகள் எல்லாம் நித்திரையினின்றும் விழித்

தெழுந்து, வடமேரு பர்வதம்போல விசுவரூபத்துடனே நிற்கும் சுத்தாத்துமாவான வாயு குமாரரைப் பார்த்து, "அம்மம்ம! இது எப்படிப்பட்ட சொரூபம்! இந்த மகாபுருஷன் யார்?" என மகத்தான பீதியடைந்து, ஜானகியை நோக்கி, "நீ இவனுடைய பூர்வோத்தரம் அறிவையாயின் சொல்," என்றூர்கள். அது கேட்டுப் பிராட்டி, "துர்ச்சனர் செய்த துஷ்கிர்த்தியங்களையெல்லாம் அப்படிப்பட்ட துர்ச்சனர்கள் அறிவார்களேயல்லாமல், சற்சனர்கள் அறிவார்களா? தண்டகாரணியத்திலே இருக்கும்பொழுது மாய மானுனது வர, அந்த மானைப் பார்த்து எங்களுடைய இளைய பெருமாளானவர், 'இது இராட்சதர் செய்த மாயமாகும். உள்ளபடி மானன்று' என்று சொல்லியும் கேளாமல் மெய்யென்று மயங்கின நான் இதை எப்படியறிவேன்!" என்று சொல்லினள். அதைக் கேட்ட அந்த இராட்சத ஸ்திரீகள் வயிற்றிலடித்துக்கொண்டு மிகவும் அச்சமடைந்தவர்களாய்ப் பூமியும், வானமும், மலையும், கடலும் நிலை குலையும்படி ஓடத் தலைப்பட்டார்கள். அவ்விடத்திலே இராவணனுடைய ஆக்கினையைக் கொண்டு பிரமதேவரானவர் சொர்ணத்தினுலே சிருஷ்டி செய்ததும், வித்வஜனராலும் புகழ்தற்கு அருமையாய் இருக்கிறதுமான ஓர் ஓம மண்டபம் இருந்தது. அதைத் தம்முடைய தந்தையான வாயுவையொத்த பராக்கிரமம் மிகுந்த ஆஞ்சநேயரானவர் கண்டு, அவர் பூர்வத்திலே தசக்கிரீவனுனவன் வெள்ளி மலையாகிய கைலாயகிரியைப் பேர்த்தெடுத்த சமாசாரம் கேள்விப்பட்டவராகையால், அவனுடைய புஜபலத்திற்கு பின்னமுண்டாகும்படி அதற்குப் பிரதிநிதியாகத் தாம் பொன்மயமான மேருகிரியை எடுத்தது போல, அந்த யாக மண்டபத்தை அடியோடே பறித்தெடுத்து இலங்கையின் மேலே விட்டெறிந்தார். அது போய் விழுந்து அநேக மாட கூடங்கள் பொடியாகி, அவற்றினிடத்திலேயிருந்து அனற்பொறி எழுந்து, பக்கத்திலே இருந்த சகல வஸ்துக்களையுஞ் சுட்டெரித்தது. அதனுலே எத்தனையோ இராட்சதர் இறந்து

போனூர். பலர் வீரமழிந்தனர். யாரானுலும் பிறருக்குக் கேடு நினைத்தால் பிழைப்பாரா?

அச்சமயத்திலே அந்தப் பூங்காவனத்தைக் காக்கும் காவலாளரான தேவர்கள், பிரமித்து, திடுக்குற்றெழுந்து பார்த்துப் பதறி, உடுத்த வஸ்திரத்துடனே சிறுநீர் விட்டுக் கொண்டு, நெஞ்சிலே பயமாகிய நெருப்பிடப்பட்டவராகி, நிறம் வேறுபட்டு, நடுநடுங்கிக் காலிடறும்படி ஓடி, உக்கிர நரசிங்கத்திற்குச் சமான்மான இராவணனுடைய சமீபத்திலே போய் அவனுடைய பாதத்திலே சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கி, "எம்முடைய ஆண்டவரான பிரதாப லங்கேஸ்வரரே, இனி நாங்கள் காவல் செய்வதற்கு முடியாது! ஏனென்ருல், பருவதத்திற்கு ஒப்பான தோளையுடைய ஒரு குரங்கானதுவந்து உம்முடைய சிங்காரச் சோலையை அழித்தது! அது சொல்லுவதற்கு எளியதன்று! காலினுலும், கையினுலும், வாலினுலும், தோளினுலும் உதைத்தும், பறித்தும், சுற்றியும், முற்றியும் ஒரு புல் புதர் தூசு முதலானவையுமில்லாமற் போகும்படி பொடிப்பொடியாக்கி, அந்தச் சோலையிலிருந்த யாக மண்டபத்தையும் பேர்த்தெறிந்து, சிறிதிடம் மாத்திரம் தவிர முழுமையும் நாசமாக்கிவிட்டது!" என்று சொன்னூர்கள்.

அது கேட்ட மாத்திரத்தில் இராவணனனவன், "அற்ப ஜந்துவான ஒரு குரங்கானது நம்முடைய கற்பக விருக்ஷம் முதலிய பலஜாதி விருக்ஷங்கள் நெருங்கின பூங்காவனத்தைப் பொடி படும்படி நிர்மூலமாக்கி, இராட்சதரால் காவல் செய்யப்பட்ட கல்யாண உப்பரிகையென்று சொல்லும் யாக மண்டபத்தையும் பேர்த்தெறிந்து, அதனுலே இலங்கா புரியையும் அழித்ததாம்! ஆஹா! ஆஹா! இராட்சதருடைய வீரப் பிரதாபம் நன்ருயிருக்கின்றது! இந்தச் சொல் மூடர்களும் சொல்லமாட்டார்களே!" என்று குலுங்கக் குலுங்க நகைத்தான்.

மறுபடியும் அந்தச் சோலையைக் காக்கும் தேவர்கள்

இராவணேஸ்வரனைப் பார்த்து, "சுவாமி, ஆகாயம் பூமியெங்கும் நிறைந்த அதனுடைய ஸ்தூல வடிவத்தைச் சுமக்கும் சத்தியையுடைய இந்தப் பூமியையல்லவோ புலவரெல்லாம் துதி செய்ய வேண்டும்? அந்தக் குரங்கைப் பிரமா விஷ்ணு உருத்திரனென்று சொல்லப்பட்ட மும்மூர்த்திகளிலே ஒருவனென்று சொல்லுதலும் பொருந்தாது. அதைப் பின்பு தேவரீரே பார்க்கப் போகிறீர்!'' என்றார்கள்.

அத்தருணத்தில் பூமண்டலமானது கிழியவும், கடல் பல திசைகளிலும் மோழை போகவும், அஷ்ட கஜங்களும் திக்குப் பாலகரும் பயந்து ஓட்டம் எடுக்கவும், இராட்சதர்கள் கர்ப்பமானது கலங்கி விழவும், அண்டகடாகமும் வெடிபட்டதென்று சொல்லும்படி அனுமரானவர் அட்டகாசஞ் செய்து ஆர்ப்பரித்தார்.

## 8. கிங்கரர் வதைப் படலம்

இவ்விதம் ஆஞ்சநேயர் கர்ஜித்த முழக்கமானது எழுந்து, மலைக் குகையிலே விழுந்த இடி போலவும், முன்னாளிலே மிதிலையிலே சிவனுடைய வில்லொடிந்து பிறந்த சத்தம் போலவும், தசக்கிரீவனுடைய மாணிக்கக்கிரீடத்தையணிந்த பத்துத் தலையும் குலுங்கும்படி இருபது காதிலும் வந்து நுழைந்தது. அப்பொழுது இராவணனுக்குக் கொஞ்சம் நகைப்புத் தோன்றச் சகிக்கக்கூடாமல் மகா பராக்கிரமசாலிகளான அனேக இராட்சத கிங்கரரைக் கூவி, "அந்தக் குரங்கானது ஓடிப்போவதற்கு முன்னமே சீக்கிரத்திலே ஆகாய மார்க்கத்தையும் போய்க் கட்டி வளைத்து, அதைக்கொல்லாமல் இலகுவாய்ப் பிடித்துக் கொண்டு வாருங்களடா!'' என்று ஆக்கியாபித்தான். அக்கணமே சூலம் முதலான ஆயுதவர்க்கத்தைக் கையிலே தாங்கிக்கொண்டு, காளகூட விஷத்தைப்போலச் சரீரமானது கறுத்துத் தோன்ற உல

கத்தை அழிக்கும்படி ஊழிக்காலத்து விசைபோலப் பொங்கி யெழுந்து வருகின்ற சமுத்திரத்தைப் போல அதி வேகமாய் நடக்கின்றவர்களும், யுத்தமானது கிடைத்ததென்று சொல் லக் கேட்ட மாத்திரத்திலே அந்தச் சொல்லானது கள்ளுண் டதைப்பார்க்கிலும் அதிகமான களிப்பையுண்டாக்கச் சந் தோஷிக்கும் சிந்தையையுடையவர்களும், காடு போல நெருங்கிச் சூழ்ந்து சமுத்திரத்தைப் போலக் கோஷிக்கிறவர் களும், ஆகாசத்தைப்பார்க்கிலும் பரந்த கீர்த்தியையும் மலைபோலப்பருத்து உயர்ந்த தோள்களையுமுடையவர்களும், தேவதானவரான இரு வகைப்பட்ட பகைவரையும் அநாயாச மாய் ஜயித்த வீர விக்கிரமத்தையுடையவர்களுமான கிங்கரர் கள், "நாம் இப்பொழுது ஒரு சிறிய குரங்கினுடனேயா போர் செய்து ஜயம் பெறுவது!" என்று நினைத்து, அந்த நிந்தைக் காக மிகுந்த நாணங்கொண்டு, அரையிலே உடைவாளும், மார்பிலே வச்சிரகவசமும், காலிலே வீரகண்டாமணியும் தரித்திருப்பவர்களும், 'ஒரு குரங்கல்லவா அசோக வனத் தையும் யாக மண்டபத்தையும் அழித்தது! நம்முடைய பராக்கிரமமானது நன்ருய் இருக்கின்றது! இனிமேல் இதைப்பார்க்கிலும் வேறு பழியுமுண்டோ?' என்று சொல் லிக்கொண்டு கோபாவேசத்துடனே மனோ வேகத்தைப் பார்க்கிலும் முடுகி வருபவர்களும், அஷ்டகிரியைக் காலினுலே இடறச் சொன்னுலும், அந்த வார்த்தை வாயில் இருக்கும் பொழுதே செய்து முடிக்கத் தக்கவர்களுமான கிங்கரர்கள் சிங்கக்குழாம் போலவும், ஆலகால விஷம் போலவும், அதிக உக்கிரமாய்ச் சரவேகத்தைக்கொண்டு கரிய மலைகள் உருப் பெற்று வருவது போல வந்தார்கள்; மேக சஞ்சாரமில் லாத ஆகாயம் போல உருவழிந்திருக்கும் அந்தச் சோலை யைச் சுற்றி வளைத்தார்கள்.

இவ்விதம் வந்து வளைத்தவர்களுடைய ஊதுகொம்பி னுடைய சத்தத்தையும், தவளச் சங்கினுடைய ஓசையை யும், பேரிகை முழக்கத்தையும், வீர கர்ஜனையையும் கேட்டு,

அனுமரானவர் அவர்கள் வருவது கண்டு, போர் செய்ய வருகின்ருர்களென்பதைக் குறித்துத்தம்முடைய மனேபீஷ்டம் சித்தித்ததென்று மிகவும் சந்தோஷப்பட்டார். அந்த ராக்ஷதர்கள் அனுமரைப் பார்த்து, 'இவன்தான்! இவன்தான்!' என்றும், 'இதுதான்! இதுதான்!' என்றும் சொல்லிக்கொண்டே வாயுவைப்பார்க்கிலும் விசையாக எதிரே நடந்து, அனைவரும் நெருங்கி, சொர்க்க மத்தியபாதாளமென்று சொல்லப்பட்ட திரிலோகமும் கிடுகிடாய்க்க ஆயுதவர்க்கமெல்லாம் பிரயோகித்தார்கள். சம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என்கின்ற எழுவகைப்பட்ட மேகங்களும்; இலவணம், இட்சு, சுரா, சர்ப்பி, ததி, க்ஷீரம், சுத்தோதகம் என்னும் மழையைப் பெய்வது போல, பேரிகையை முழக்கினுர்கள். மலை முழையைப் போலத் தங்கள் வாயைத்திறந்து அதிலிருந்து புகை தவழும்படி கோபித்தார்கள். மூங்கிற் காட்டில் அக்கினி கலந்தது போல ஒன்ருகக் கலந்தார்கள்.

தர்ம மூர்த்தியாகிய மாருதி யுத்தசன்னத்தராய் வந்த இராட்சதர்களை அறிந்து, தமக்கு அருகில் முறிந்து கிடக்கின்ற ஒரு பெரிய மரத்தையெடுத்து, "இது இந்தச் சமயத்தில் கிடைக்கக் கூடாத துணையாகக் கிடைத்தது!" என்று அதிக மனக்களிப்போடு கையில் தாங்கிக்கொண்டு, முற்காலத்தில் பாற்சமுத்திரத்தைக் கடைந்த மந்திரகிரியைப் போல அந்த இராட்சத சேனு சமுத்திரத்தின் மத்தியில் குபீரென்று எழும்பிக் குதித்து, கையிற்கொண்ட மரத்தால் மலைகள் பிளக்கும்படி இடி இடிந்து விழுகிறது போல மோதி மோதி அடித்தார். அத்தருணத்தில் எதிர்த்த இராட்சதக் கூட்டங்களில் அனேகர் பருத்த பர்வதத்திலிருந்து அருவியாறுகள் ஒழுகுகிறது போலத் தோள்களினின்று உதிர வெள்ளம் ஒழுக, ஒருவரையொருவர் சேர்த்துக் கட்டிக்கொண்டவர்களும், தலைகள் பிளந்து உருள்கின்றவர்களும், கண்கள் பறியுண்டவர்களும், விழுந்து தரையுடனே தரை

யாய்ப் படிந்தவர்களும், கோர தந்தங்களிழந்தவர்களும், பிடரியுந் தலையும் பிளந்தவர்களும், உயிர் நீங்க உடல் சிதைந்தவர்களும், குடல் சரிந்தவர்களும், ஆயுதங்களையெறிந்து சரீரம் முறிந்து மரித்தவர்களும், ஆயுதத்துடனே ஆயுதந் தாக்குதலால் அக்கினிப் பொறியெழுந்து மயிர்கள் தீய்ந்தவர்களும், தொடைகளும் முதுகும் துணிந்தவர்களும், அஸ்திர சஸ்திரங்கள் ஒடிந்து தோள்களறுந்து விழுந்தவர்களும், வயிறுபீறுண்டவர்களும், மலைகள் சாய்கிறது போலக் கால் சாய்ந்தவர்களுமானார்கள். பின்னும் போர் செய்ய இருட் கூட்டத்தைப்போல நெருங்கி வந்தவர்கள், உடனே புழுதியில் விழுந்து புரண்டு பிராணனை இழந்தார்கள்.

வில்லையும் அம்பையும் தண்டாயுதத்தையும் ஏந்தி வந்தவர்கள், அனுமர் உதைத்த உதையினால் மார்பு நெறிந்து இரத்தங்கக்கினார்கள். அனுமர் வாரியிறைக்க அனேகர் எங்கும் இறைபட்டனர்; கரகரவென்று சுழற்றியெறிய, அனேகர் சுழன்றுகொண்டே ஆகாயத்தில் போய் அங்கிருந்து சமுத்திரத்தில் விழுந்தனர். சரீரம் சின்ன பின்னப்பட்டு அனேகர் மூலைக்கு மூலை ஓடினர். சிலரைப் பிடித்துக் கைகளையும் கால்களையும் பிட்டு எறிந்ததனால், அன்னார் சிறகறுபட்டுக் கிடக்கின்ற பர்வதங்களைப்போல நிலத்தில் கிடந்தனர். சிலரை வாலினால் சுற்றியெடுத்துவீசுதலால், அவர்கள் பம்பரத்தைப் போல அந்தரத்தில் சுழன்றார்கள். பல இராட்சதர்களுக்கு வாள்களும் மழுக்களும் சூலங்களும் இற்று, அவைகளைப் பிடித்த கைகளும் தோள்களும் அற்றன. பல இராட்சதர்களுக்கு நக்ஷத்திரங்கள் உதிர்வது போலப் பற்கள் பலபலவென்று உதிர்ந்தன. பல இராட்சதர்களுக்குத் தலைகள் உடைந்து மூளைகள் தெறித்தன. அனுமர் சிலரை ஓடி மேல் விழுந்து அழுத்திக் கொன்றார்; சிலரை அவர்கள் தேர்க் கொடிக் கம்பத்தினால் சாடிக் கொன்றார்; அந்த இராட்சத சைனியத்தின் நடுவே புகுந்து காற்றடியைப் போல நான்கு மூலைகளிலுஞ்சுழன்று திரிந்தார். விருக்ஷங்தோறும், தெற்றி

தோறும், நாற்சந்தி தோறும், கடைதோறும், கோட்டை தோறும், தோப்பு தோறும், தெருத்தோறும், மடுக்களும் வாவிகளும் ஏரிகளும் ஓடைகளும் அந்தத்தேச முழுமையும் ராக்ஷதப் பிணமாகும்படி செய்தார். அவர்களுடைய உயிர் களையெல்லாம் பிடித்துப்பிடித்து நமனுனவன் கையும் சலித் துக் காலுமோய்ந்தான்.

இவ்விதம் யுத்தம் நடக்கிற சமயத்தில் மறுபடியும் இராட்சதர்கள் கோபாவேசமாய் வந்து, ஆகாய முழுமையும் எட்டுத்திக்குகளும் மேகங்கள் கவிந்துகொண்டது போலக் கவிந்துகொண்டார்கள். அவர்களுக்கு மத்தியில் வாயு குமா ரர் மேகத்தின் நடுவிலிருக்கிற சூரியனைப்போலப் பிரகாசித் தார். இறைகின்றதனுலும் அலைகின்றதனுலும் பெருத் திருப்பதனுலும் கறுத்துக் காண்பதனுலும், வேல் - வாள் முதலாகிய ஆயுதங்கள் மகர மச்சங்கள் போல விளங்குத லாலும் ராக்ஷதர்கன் கலங்கிய கடல்போல இருந்தார்கள். அனுமரானவர் அந்தக் கடலைக் கடைந்த மந்தரகிரிபோல இருந்தார். ஆஞ்சநேயருடைய கையினுலும் மெய்யினுலும் காலினுலும் வாலினுலும் மணி முடிகள் நெரிந்து சிதைந்து மடிந்த இர்ாட்சதர்களோ, தேவர்கள் நடுங்கும்படி கருடன் அமிர்தகலசத்தைக் கிரகித்துக்கொண்டு போனகாலத்தில் அவனுல் சின்னபின்னப்பட்ட சர்ப்பராஜர்களைப்போன்ருர் கள். ஆஞ்சநேயரோ, அந்தக் கருடராஜனைப்போன்ருர். தசை முதலானவைகள் சிதறும்படி துகைத்துக் கொன்றும் குறைவு படாமலிருக்கின்ற அரக்கர்கள், யானைக்கூட்டத்தையொத் தார்கள். அனுமரானவர், அந்த யானைக்களுக்குச் சத்துரு வாகிய சிங்கத்தையொத்தார், அம்புகொண்டு எய்ததும், கதை கொண்டடித்ததும், சூலங்கொண்டு எறிந்ததும், வாள் கொண்டு அறுத்ததும், கோல்கொண்டு குத்தியதும், சுரிகை கொண்டு தோண்டியதும், வேல்கொண்டு துளைத்ததும், கோடரிகொண்டு பிளந்ததும், சக்கரங்கொூண்டு கொய்த தும், பாசங்கொண்டு சுற்றியதும், குறடுகொண்டு பற்றிய

தும், சலாகைகொண்டு குடைந்ததுமாகிய பல விதக் காயங்களும் அனுமருடைய புஜத்திலுண்டாயின. கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்காகிய அஷ்ட திக்குகளிலும் சக்கரம் போலச் சுழல்வதனுலும், ஆகாயத்தில் உயர்ந்தெழும்புவதனுலும், அங்கிருந்து மலே வருவது போலப் பூமியிற் பாய்வதனுலும், காலொடிந்து, கையறுந்து, தோள் முறிந்து, தொடை நெறிந்து, வயிறு கிழிந்து, குடல்கள் சரிந்து, தலே பிளந்து, உடல் நசுங்கி, இராட்சதர்களெல்லாம் இறந்தார்களேயல்லாமல், அனுமாருடைய சரீரம் / சிறிதாவது வெயர்க்கவுமில்லே; அவர் பெருமூச்செறியவுமில்லே; மனஞ் சலிக்கவுமில்லே.

அந்தக் கிங்கரர்களெல்லாம் ஒரு க்ஷணப்பொழுதில் மடிந்து போகவே, அது கண்டு சிங்காரவனத்தின் காவலாளர்கள் நடுக்கத்துடனே புறப்பட்டுக் கைகளெழாமல் பயமானது கழுத்தைப் பிடித்துத் தள்ள, பிணமலேமீது விழுந்து தடுமாறி எழுந்து சீக்கிரமாயோடி இராவணனிடத்திலே பயத்தினுலே சொல்லுகிறதற்கு நாவெழாமல் விம்மி விம்மி, அனுமராலே ராக்ஷதர்கள் மடிந்ததைக் கையினுலே காட்டிக் காட்டித் திக்குகளே வெறிக்கப்பார்த்துச் சஞ்சலப்பட்டார்கள். அவர்கள் படுகின்ற வருத்தமே தனக்குச் சொல்ல இராவணன் அறிந்துகொண்டு, "என்னடா, பேய்ப் பயல்களே, நான் அனுப்பின இராட்சதர்களெல்லாம் இறந்து போனுர்களா, அல்லது என்னுடைய ஆக்கினேயைக் கடந்து துறந்து போனுர்களா, அல்லது யுத்தஞ் செய்து வெகுநாளானபடியினுல் அதனே மறந்து போய்த் திரும்பி வந்துவிட்டார்களா? நீங்களேன் ஓடி வந்தீர்கள்?" என்று தன் பத்து வாய்களும் நெருப்பைக் கக்கும்படி கேட்டான்.

அதற்கு அவர்கள், "சுவாமி, அப்படிக்கெல்லாம் வந்தது ஒன்றுமில்லே. நீங்களனுப்பிய கிங்கரர்களெல்லாம் அந்தக் குரங்கினுலே யுத்தகளத்தில் பராக்கிரமமழிந்து, அஞ்

சாமல் பொய்ச் சாக்ஷி சொன்னவர்களுடைய குலம்போல, நிர்மூலமாய் மடிந்துபோனுர்கள் !'' என்று சொன்னுர்கள். இராவணன் அது கேட்டுத் தன் பக்கத்திலிருந்து ஏவல் செய்கிற அஷ்டதிக்குப் பாலகர்களாகிய தேவர்களைப் பார்த்து, மனத்திலே நாணங்கொண்டு, "இதுவென்ன? நீங்கள் அறியவில்லையா?'' என்று மூன்று லோகங்களையும் விழுங்கத்தக்க கோபாக்கினியானது மூண்டெழச் சொன்னுன். அவர்களொன்றும் பேசாமல் பயந்திருந்தார்கள். மறுபடியும் சிலர் வந்து சொல்ல, "அந்தக் குரங்கு நம்முடைய இராட்சதர்களைக் கொன்றதென்கின்ற வார்த்தை நீங்கள் காதினுலே கேட்டதா, அல்லது கண்ணினுலே கண்டதா? சொல்லுங்கள்,'' என்று கேட்டான். அதற்கு அவர்கள், "ஐயா, நாங்கள் ஒரு பக்கத்திலிருந்து பார்த்தோம். சமுத்திரம் போலச் சுற்றி வளைத்துக்கொண்ட நம்முடைய சேனைகளையெல்லாம் அந்த வானரம் மண்டலாகாரமாகச் சுழன்று சுழன்று ஒரு மரத்தாலே அடித்து மடித்தது! இன்னமும் அது ஒழியவில்லை!'' என்று சொன்னுர்கள்.

## 9. சம்புமாலி வதைப் படலம்

அப்போது கைகூப்பிக்கொண்டு எதிரே நிற்கின்ற மலைக்கொப்பாகிய தோள்களையுடைய அதிவீரனுகிய **சம்புமாலி** என்பவனை இராவணன் பார்த்து, "நீ இந்த க்ஷணமே யானை குதிரை முதலாகிய சேனைகளுடனே போய் வளைத்து, அந்தக் குரங்கின் மதத்தையடக்கி, அதைப் பிடித்துக் கயிற்றினுல் கட்டிக் கொண்டு வந்து என் முன் விட்டு என் கோபத்தை ஆற்று,'' என்று சொன்னுன். சம்புமாலி அந்த வார்த்தையைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியாய்ச் சேவித்துக் கொண்டு, "கணக்கின்றித் திரண்ட இவ்வளவு ராக்ஷத விரர்களுக்குமுன் என்னை ஒரு பொருளாக மதித்து, 'நீ இந்தக்

காரியத்தை முடிக்கவேண்டும்,' என்று ஏவத்தக்க பாக்கியம் நான் பெற்றேனே! இனி என்னைப் பார்க்கினும் உயர்ந்தவர் யாரிருக்கின்றார்கள்?'' என்று சொல்லி, அந்த இலங்காதி பதியாகிய இராவணனுடைய கோபமே நடந்து போகிறது போல நடந்தான். இப்படி நடந்த சம்புமாலியானவன், தன்னு டைய சேனைகளுடனும், தனக்கு ராஜாவாகிய இராவணன் கூட்டிய சேனைகளுடனும், தன் பிதாவும் இராவணனுடைய முதல் மந்திரியுமாகிய *பிரகஸ்தன்* என்பவன் அனுப்பிய சேனைகளுடனும், மற்ற இராட்சத சிரேஷ்டர்கள் விட்ட சேனை களுடனும், நமக்கு யுத்தம் வாய்த்ததென்கிற சந்தோஷத் தைக்கொண்டு ஆஞ்சநேயரிருக்கும் சோலையை நோக்கிப் புறப்பட்டான். அப்போது இரதக் கூட்டங்களும், காற்றைப் பிடித்துக்கட்டிக் கால்கள் முதலாகிய பல உறுப்புகளும் ஏற் படுத்தி உயிருங்கொடுத்து எமனை மேலேயேற்றியதற்கு ஒப் பாயிருக்கின்ற புரவிக் கூட்டங்களும், சுழல்கின்ற விழிகளை யுடைய புலிகளுக்குச் சமானமாகிய பதாதி கூட்டங்களும் நெருங்கவும், மழு முதலாகிய அனேகவித ஆயுதங்கள் பிரகா சிக்கவும், பல பேதமாகிய சித்திரக் கொடிகள் ஆகாயத்தை யளாவிக்காடுபோல அடர்ந்துவரவும், முரசங்கள், சங்கங்கள், எக்காளங்கள் முதலாகிய வாத்தியங்கள் சத்திக்கின்ற சத்த மும், தேர்ச் சக்கரங்கள் 'கடகட'வென்று ஒலிக்கின்ற ஒலியும், குதிரைகள் கனைக்கின்ற ஓசையும், யானைகள் முழங்குகின்ற முழக்கமும், வில்லின் குணத்தொனியும், சகல ஜீவராசிகளின் செவிகளும் செவிடுபடும்படி அண்டமுகடு மட்டும் போய்த் தேவர்கள் ஒருவர்க்கொருவர் பேசுகின்ற வார்த்தையை விவ ரந் தெரியாமல் மயக்கின. இப்படிப்பட்ட சேனைகளெல்லாம் சூழும்படி அந்தச் சம்புமாலி என்பவன் தேவர்களும் பயந்து நடுங்க அளவில்லாத ஆயுதங்களை ஏந்திக்கொண்டு, கண் களில் நெருப்புப்பொறி பறக்க, மார்பிலணிந்த கவசமும் கோர தந்தங்களும் பிரகாசிக்க வந்தான்.

அப்போது நந்தவனத்திலிருந்த அனுமரானவர், 'ஏனோ

இன்னம் இராக்ஷதர்கள் வரவில்லை!' என்று அவர்கள் வரும் வழியைப் பார்த்து, சோலையின் வாயிலில் சந்திரன் முதலாகிய கிரகங்களும் நக்ஷத்திரங்களும் மேலே தவழும் படி இந்திர தனுசு போலத் தோன்றுகின்ற தோரண கம்பத் தின் மேலேறி, சமுத்திரத்தின் நடுவே உதயமாகிய சூரி யனுக்குச் சமானமாய் விளங்கியிருந்தார். அப்படியிருந்த வர், இடியுடனே மேகங்கள் சிந்தவும், கடலோசையடங்க வும், அஷ்டமாநாகங்கள் உயிரையும் விஷத்தையும் கக்கவும், ராக்ஷதர்களுடைய நெஞ்சில் பயம் ஜனிக்கவும், தேவர்கள் நடுங்கவும், அஷ்ட திக்கிலுமுள்ள ஐராவதம் - புண்டரீகம் - வாமனம்-குமுதம்-அஞ்சனம்-புஷ்ப தந்தம் - சார்வபௌமம் , சுப்பிரதீபம் என்கின்ற யானைகள் மதமடங்கி அசைவற் றிருக்கவும், தென்திசையிலிருக்கிற யமனும் மனந்திடுக்கிட வும், ஆகாயத்தினின்றும் நட்சத்திரங்கள் புஷ்பங்கள் உதிர் வது போல உதிரவும், சமுத்திரங் கலங்கவும், தோள்களைக் கொட்டினர்.

அத்தருணத்தில், ராக்ஷதர்களெல்லாம் சமுத்திரத்தைப் போல ஆர்ப்பரித்து, நான்கு திசையிலும் இரத்தப்பிரவாகம் ஓட, மத்தியில் பிணமலைகள் தங்களைத் தடுப்பதனல் வருவதற் குச் செவ்வையாகிய வழியைக் காணமல், 'எந்த வழியால் போவோம்?' என்று சொல்லிக்கொண்டு தங்கள் தங்கள் இனத்தாருடைய சரீரத்தின்மேல் காலிடறி விழத்தலைப்பட் டார்கள். சம்புமாலியானவன் அவ்விடத்தில் அந்தச் சேனையை வெவ்வேருக அணி வகுத்து இரு பக்கங்களிலும் முன்னும் பின்னும் கிரமம் கிரமமாக முடுகிப் போகும்படி ஏவித் தானும் தன் தேரை நடத்தினன். அது கண்டு தோரண கம்பத்தின்மேலிருந்த ஆஞ்சநேயர், தம்முடைய அபீஷ்டம் சித்தித்ததென்றறிந்து, தோள்கள் பூரித்து, திரு வாழி திருச்சங்கத்தை ஏந்திய ஸ்ரீமந்நாராயணனுடைய திரு மண் குறியானது தீபச்சுடர் போலப் பிரகாசிக்கின்ற தமது நெற்றியே முன்னணியாகவும், தேகத்தில் மொய்த்திருக்

கின்ற ரோமங்களே நடுவணியாகவும், வாலே பின்னணி யாகவும், கைகளும் கால்களும் வேல்கள் வாள்களாகவும் அமையத் தாமும் அவர்களுக்கெதிரே யுத்தசன்னத்தராய் நின்ருர். அது கண்டு ராக்ஷதர்கள் கோபச் செருக்குற்றவர் களாகி, அவர்மேல் சூரியனைப்போல ஒளி வீசுகின்ற அனேக வித ஆயுதங்களை மழை பொழிவது போலப் பிரயோகஞ் செய்தார்கள். கறுத்த சமுத்திரத்திற்குச் சமானமாகிய அந்த ராக்ஷத வீரர்கள் பிரயோகித்த ஆயுதங்களையெல்லாம்ஆஞ்ச நேயர் தமது சரீரத்தில் ஒன்ருவது படவொட்டாமல் கை களால் பிடித்து ஒடித்து, தூள் தூளாகும்படி பிசைந்து கடலி லெறிந்துவிட்டு, ரோமத் துவாரந்தோறும் அனற்பொறி சித றும்படி வடவாமுகாக்கினியைப் போலக் கோபித்து, தோர ணக்கம்பத்தை விட்டுப் பூமியில் குதித்துப்பார்க்கும் பொழுது ஓர் எழுவாயுதம் கிடந்தது. அதை எடுத்துக்கொண்டு ராக்ஷ தக்கூட்டத்தில் பிரவேசித்து, அவர் தோரண கம்பத்தின்மேல் இருக்கின்ருரென்றும், அதிலிருந்துஎழுந்தாரென்றும், நிலத்தி லிறங்கினுரென்றும். மறுபடி ஏறினுரென்றும், நான்கு பக்கங் களிலும் திரிகின்ருரென்றும், சண்டை செய்கின்ருரென்றும் அறியாதவர்களாய், எங்கும் நெருங்கிய அரக்கர்களெல்லாம் யுத்தகளத்தில் சின்னபின்னப்படும்படி சாடினுர்; அவர்கள் எறிகின்ற சக்கரம் முதலானவைகளையும், எய்கின்ற அஸ்திர முதலானவைகளையும், வில்லிடியைப்போல மேலே வருகின்ற தண்ட முதலானவைகளையும், இடக்கையினுலே பற்றிச் சிதைத்தார்; யானைகள் மாளவும், தேர்களழியவும் குதிரை கள் நெரியவும், வலக்கையிலே குத்திக் குமைத்தார். மற்றும் வாயு புத்திரர் அந்த எழுவாயுதத்தைக் கொண்டு மோதுத லாலே அனேகம் யானைகள் கொம்புகள் நெறிந்து, தும் பிக்கையானது துணிந்து, கால் முறிந்து, வால் சிதைந்து, செவியறுந்து, தொனியுமடங்கி, மதமும் வறண்டு, மஸ்தகம் பிளந்து, கோபந்தணிந்து மடிந்தன. அனேக இரதங்கள் அச்சொடிந்து, மச்சழிந்து, சகடு பிளந்து, முகடு குலைந்து,

மேற்பார் தகர்ந்து, கீழ்ப்பார் நெறிந்து, ஏர்க்கால் முறிந்து, குத்துக்கால் துணிந்து, தட்டுச் சிதைந்து, சுற்றுப்பெயர்ந்து குடை சாய்ந்து, கொடி வீழ்ந்து, புரவிகள் மடிந்து, சாரதி களிறந்து சின்னபின்னமாயின. அனேகம் குதிரைகள் இடுப்பொடிந்தும், மண் மேலேயுருண்டும், நெஞ்சுலர்ந்தும், வாய் புலர்ந்தும், வாலெரிந்தும், கண் குழிந்தும் மாண்டன. அனேகம் காலாட்கள் பயப்பட்டுப் பிரமித்து, திட்டென்று விழுந்து, பொட்டென்றெழுந்து, அடியுண்டு பிடியுண்டு, ஐம் பொறி கலங்கி, அறிவு தடுமாறி, உருண்டு சுருண்டு பிராண னேடு தரையிலே உதைத்துக்கொண்டு புழுதியிலே புரண் டார்கள்.

அனுமரானவர் உயர எழும்பிக் குதிரையினுடைய முதுகில் குதிப்பார்; குதிரையினுடைய முதுகிலேயிருந்து இராட்சதருடைய மார்பிலே குதிப்பார்; இராட்சதருடைய மார்பிலேயிருந்து இரதத்தின்மேலே குதிப்பார்; இரதத்தின் மேலேயிருந்து மதயானையின்மேல் குதிப்பார்; இருவினையை யும் கடந்த முத்தாத்துமாவுடைய அறிவைப்போல ஒரு தன் மைப்பட்டிருப்பார்; வேசியருடைய மனத்தைப்போலப் பல தன்மையாகக் காணப்படுவார்; காற்றுடியைப் போலச் சுழன்று சுழன்று திரிவார். ஸ்ரீமந்நாராயணனுடைய தாச பூதர்கள் அவனுடைய குணுதிசயத்தைப் பெறுவாரென்று சொல்லும் வேதப் பிரமாணத்தைப் பிரத்தியக்ஷப்படுத்துகிற வரைப்போல, ஸ்ரீரகுநாதருக்கு அடிமையான ஆஞ்சநேயர் பூமியிலும், ஆகாயத்திலும், எட்டுத் திக்கிலும், பார்த்த பேருடைய கண்ணிலும்-நினைத்தபேருடைய மனத்திலும்-எங் கெங்கும் தாமாய்க் கலந்திருந்தார். தேர்களை அவற்றி னிடத்திலே கட்டிய கொடி குடை முதலான பல வித உறுப்பு களுடனும், பூட்டிய புரவிகளுடனும், மேலேயிருக்கும் ரதி கருடனும், நடத்துகின்ற சாரதியுடனும் ஒரு கையினுல் எடுத்து அடித்துநிலத்திலேயிட்டு அறைந்தார். மதயானைகளை அவற்றின்மேல் வைத்த அம்பாரியுடனும் அவற்றில் வீற்

றிருக்கும் வீரருடனும், அவற்றைச் செலுத்தாநின்ற பாகருடனும், ஒரு கையிலே பிடித்துப் பிசைந்து உயிர் போகும்படி பிழிந்தார். எமதரும ராஜனைப்போல வந்த இராட்சதரையெல்லாம், உருத்திர மூர்த்தியைப்போலத் தனித்தனி உதைத்து உதைத்துக் கொன்றார். இப்படிக் கூட வந்த யானைக்கூட்டமெல்லாம்ஓர் உக்கிரசிங்கத்தினாலே கொல்லப்பட்டு இறக்கத் தனித்து நிற்கிற மதயானையைப் போலச் சம்புமாலியானவன் தன்னைச்சூழ வந்த சேனையெல்லாம் அனுமராலே இமிசிக்கப்பட்டு மாண்டு போகத் தான் மாத்திரம் தனியே நின்று, எம தருமராஜனைப்போலக் கண் சிவந்து, அதிக கோபாவேசங் கொண்டு, தடுமாறிப் பிரயாசத்தோடே இரதத்தை நடத்திக் கொண்டு வந்தான்.

அப்படி வந்த சம்புமாலியைப் பார்த்த இராமதூதர், "அடா ராக்ஷதா, நீ உன் கையிலேந்திய ஆயுதமுமொன்றே நீ ஏறிய தேருமொன்றே. ஆகையால், நீ மிகவும் இளைத்தவனாய் இருக்கின்றாய். இவ்விதம் இளைத்த எளியவருடன் சண்டை செய்து பிராணனை வாங்குகிறது நீதியன்று; கூட வந்தவர்களை ரக்ஷிக்கத்தக்க சத்தி உனக்கில்லாமல் பின்னிட்டு நின்றாய். எதிர்த்தால் எப்படியும் இந்தக்கணமே இறந்து போவாயே அல்லாமல், வேறென்ன செய்வாய்? ஆதலாலே, போர் செய்து உயிரிழக்க வேண்டா. சும்மாத் தப்பிப் போய்விடு," என்று சொன்னார்.

அது கேட்ட சம்புமாலியானவன், "அப்படியா! என்னுடைய வீரம் நல்லதுதான்! நல்லதுதான்!" என்று நெருப்பெழும்படி நகைத்து, "இப்பொழுது உன்னை ஜயிக்க மாட்டாமல் உன்னாலே தோற்கடிக்கப்பட்டு மாண்டு போன இந்தச் சோம்பேறிகளைப்போலவா என்னையும் நினைத்துக்கொண்டாய்?" என்று சொல்லி, தன் பலம் பொருந்திய வில்லிலே சாணை பற்றி ஒளி வீசுகிற பாணங்களைப் பூட்டிப் பிரயோகஞ் செய்தான். அப்படிப் பிரயோகித்த சம்புமாலியை ஆஞ்சநேயர் பார்த்து, "அடா துஷ்டா, நீ சும்மா இராதே. இன்ன

மும் பாணங்களைப் பிரயோகஞ் செய். கையிலே வில் முத லான ஆயுதத்தையுடையவனுயிருக்கிறவன் நிராயுதனை ஜயிப்பது அருமையா? அருமையல்ல!'' என்று சொல்லி நகைத்துக் காற்றினுலே பல திசையினிடத்திலும் சிதறிப் போகாநின்ற மேகத்தைப்போலச் சிதறிப் போகும்படி அவ ஞலே எய்யப்பட்ட பாணத்தையெல்லாம் தம்முடைய கையிற்கொண்ட இருப்புலக்கையினுல் சின்னபின்னப்படுத் தினுர். சம்புமாலி தன்னுலே பிரயோகிக்கப்பட்டு முன்னும் பின்னுமாய்ப் போன அஸ்திரங்கள் அனுமருடைய தேகத் திலே படாமல் முறிந்து விழுந்தது கண்டு, அதிக கோபம் கொண்டு, தன் இரதத்தை அனுமர் மேலே செலுத்த யத்த னப்பட்டு, போகிறதற்கு வழி துறை காணுதவனுய்த் திகைத்து, முன்னிருந்த இடத்திலேயே இருந்து, அக்கினி யைக் கக்குகின்ற ஓர் அர்த்தசந்திர பாணத்தை விட்டு, ஸ்ரீராம தூதருடைய கையிலேயிருந்த இருப்புலக்கையைக் கண்டதுண்டமாக்கினுன். இருப்புலக்கையானது பொடி பட் டது கண்டு எங்களாண்டவரான ஆஞ்சநேயர், சற்றேமனஞ் சலித்து, மற்றும் அவ்விராட்சதன் எய்யும் பாணத்தையெல் லாம் ஒருமிக்கக் கையினுலே பிடித்து மடக்கி ஒடித்து நொறுக்கி எறிந்துவிட்டுத்தேவர்கள் பார்த்துச் சந்தோஷித்து ஆர்ப்பரிக்கும்படி அவ்விராக்ஷதனுடைய தேரின்மேல் பாய்ந்து, கரவடத்தையுடைய அந்தச் சம்புமாலியின் கை வில்லை எட்டிப் பறித்து அவன் கழுத்திலே மாட்டி விசையாகத் திருப்பி முறுக்கி இழுத்தார். இழுத்த மாத்திரத்தில் பெரிய மலை முறிந்து விழுவது போல அவனது தலை அற்று மண்மேலே விழுந்தது. உடனே அனுமர் அவனுடைய தேரும் சாரதி யும் புரவியும் முறிந்து நெறிந்து சிதைந்து குழம்பாகும்படி சரேலென்றெழும்பிக் குதித்து மிதித்துத் துகைத்துவிட்டு, மறுபடியும் அந்த உன்னதமான தோரண ஸ்தம்பத்தின் மேலே வந்து ஏறிக்கொண்டார்.

அவரைப் பழித்துக்கொண்டு வந்து போர் செய்து

மாய்ந்த இராட்சதரைக் கண்டு தேவர்களெல்லாம் பயந்து ஓடிப்போனார்கள். இறந்து போன இராட்சதருக்காக இராட்சத மாதர்கள் அங்கங்கே அழத்தொடங்கினார்கள். "இப்போது இந்த அனுமனாலே இராட்சதருடைய பலமழிந்தது!" என்று தர்மதேவதை சந்தோஷித்தது.

அச்சமயத்திலே அந்தப் பூங்காவனத்தைக் காக்கின்ற இராக்ஷதர்கள், இராவணனுடைய சமூகத்திற்குச் சீக்கிரமாய்ப்போய், பயத்தினால் வாய்விட்டு ஒன்றும் சொல்லமாட்டாமல், விக்கி விக்கித் தேம்பி அழுதுகொண்டு நின்றார்கள். அது கண்டு இலங்கேஸ்வரன் நகைத்து, "பயமடையாமல் சொல்லுங்கள்," என்று சொல்ல, "சுவாமி, நம் குலத்தாரெல்லாம் மாண்டுபோயினர். அவர்களுடனே சம்புமாலியும் இறந்து போனான். அவ்வொரு குரங்கே அத்தனை பெயர்களையும் மாய்த்துவிட்டது!" என்று சொன்னார்கள்.

இச்சொல்லைச் சொல்லும்பொழுதே இ ரா வ ண ன் கோபாக்கினியானது திக்குத்திக்கென்றெரிந்து ஓங்க, இச்செய்தியை நினைக்க நினைக்கக் கண்களிலேயிருந்து இரத்தமானது குமிழியிட்டுப்பாய, "அக்குரங்கைச் சீக்கிரத்தில் நானே போய்ப் பிடித்து வருகின்றேன்!" என்று சொன்னான். அது கேட்டு விருபாட்சன், விரூபாட்சன், துர்த்தரஷன், பிரதத்தன், பாசகர்னன் என்கிற பஞ்சசேனாதிபதிகள் திடுக்கென்றெழுந்து, கை கட்டி வாய் புதைத்துக்கொண்டு சொல்லுகிறார்கள்:

## 10. பஞ்ச சேனாபதிகள் வதைப் படலம்

"திரிலோக பயங்கர பிரதாப இலங்கேஸ்வரரே, சிலந்திப் பூச்சியைப் பிடித்துத் தின்கிற ஒரு குரங்கின்மேல் தேவரீர் படையெடுத்துப் போவீரேயாகில், பூர்வத்திலே நீர் செய்த யுத்தத்தில் உம்முடைய நேத்திரத்திலேயிருந்து மூண்டு

எழுந்த கோபாக்கினியினலே மதம் வற்றிக் கிடக்கின்ற திக்கஜங்களுக்கு மதமுண்டாகும். மேலும், மகத்தான பராக்கிரமத்தையுடைய கருடனானவன் ஒரு சிறிய கொசுகை இலட்சியம் செய்து அதன்மேலே யுத்தத்திற்குப் போவது போல நீர் இந்தக் குரங்கை ஒரு பொருளாய் மதித்துக் கொண்டு யுத்தத்திற்குப் போனல், இரவும் பகலும் உம் முடைய புஜபலத்தை நினைத்துத் துக்கப்பட்டுக்கொண்டிருக் கின்ற கைலாய பர்வதத்திற்கும் துக்க நிவாரணமாகும். அதனல் உமக்கு மோக்ஷ சாம்ராஜ்யம் வருமென்பதென்ன ? என்ருவது இழிவான செய்கையை உடையவர்களா யிருந்தவர்களெல்லாம் பெறுகின்ற பேறு யாதொன்றையும் கண்ணுலும்காணுமல் காதினுலும்கேளாமலே போய்விட்டார் கள். மேலும், இதற்குச் சமானமான இழிவு வேறென்ன இருக்கின்றது ? ஆகையால், நீர் அக்குரங்கின்மேல் போர் செய்யப் போவதனல் உம்முடைய பெருமை இவ்வள வென்று தெரியாமல் நடுங்குகின்ற திரிமூர்த்திகளுக்கும் சிரிப்புண்டாகும். அதுவுமல்லாமல் பார்க்கின்றவர்கள் கேட் கின்றவர்களுக்கு வேறே உம்மிடத்தில் பலசாலிகள் இல்லை எனவும் தோன்றும். முன்பு வீரமில்லாத பலவீனர்களை அனுப்பினீர். போனது போகட்டும். இனியாவது நன்மை யைப் பெற வேண்டுமென்று குறித்தீராயின், எங்களுக்குச் செலவு கொடுத்தனுப்பும்; அப்பொழுது எங்களுடைய சாமர்த்தியம் தெரியவரும்,'' என்று சொல்லிக் கைகளை எடுத்து அஞ்சலி செய்தார்கள்.

அதற்கு இராவணன் சம்மதித்தான். அத்தருணத்தில் திரிலோகாதிபத்தியம் தங்கள் வசமாகப் பெற்றவர்கள் போலப் பஞ்ச சேனபதிகள் சந்தோஷ சித்தர்களாகி, நெற்றியில் அணிந்த திலகமானது நிலத்திற்பொருந்தும்படி தாழக் குனிந்து, பின்னும் பின்னும் பலதரஞ் சேவித்துக் கொண்டு, இராவணனுடைய சபா மண்டபத்தை விட்டு வெளியிலே வந்து, எண்ணிக்கையில்லாத இரதகஜ துரக

பதாதிகள் சீக்கிரத்தில் வந்து சேரவேண்டுமென்று சொல்லி யானையின்மேல் பேரிகையறைவித்தார்கள்.

அந்தக்கணமே, நால்வகைச் சேனைகளும் சமுத்திரம் போல வந்து எங்கும் பரந்து நிறைந்தன. மேக கர்ஜனை போல இரணமுரசு முதலாகிய சகல வாத்தியங்களும் முழங்கின. நாநாவிதமான ஆயுதங்களும் மின்னல்போல நெருங்கி வந்தன. வெள்ளைக் கொடிகள் மேகத்தின் வயிற்றைத் துளைத்துக்கொண்டு போய் அனுமராலே கோபிக்கப்பட்டு இறந்துபோன சத்துருக்களுடைய கீர்த்தியானது பரந்தது போலவும், சண்டமாருதமென்கிற காற்ருனது மோதும்படி ஆகாய கங்கையின் அலைகளெழுந்து புரண்டது போலவும், வான முழுதும் பரந்து அசைந்தன. இராட்சதர்களெல்லாம் காலிலே வீரகண்டாமணி கட்டி, மார்பிலே கவசம் பூண்டு, அரைக்கச்சை இறுக்கிக்கட்டி, பல விதமான அஸ்திரங்களை நிறைத்த அம்புப்புட்டிலை முதுகின் புறததிலே சார்த்தி வில்லேந்திப் போர்க்கோலங் கொண்டு, தேர்கள், யானைகள், புரவிகள் முதலான வாகனங்களை அலங்காரம் செய்து அவற்றின் மேலேறிப் பிரயாணப்பட்டார்கள். அந்தச் சேனையிலிருக்கின்ற யானைகளின் மதம் பெருகிப் பூமியில் பாய்ந்தது. தேர்களினுடைய முழக்கமும், குதிரைகளின் முழக்கமும், வீரகண்டாமணியின் முழக்கமும், புரவிகளுடைய கிண்கிணி மாலைகளின் முழக்கமும், பிரளயகால சமுத்திர முழக்கத்திலும் மூன்று மடங்கு அதிகமாய் முழங்கின. இராவணன் மேன்மேலும் அழைத்தனுப்புந்தோறும் திரண்ட சேனு பிரவாகம் வந்து சஞ்சரிப்பதற்கு இடமில்லாமல் நெருங்குதலால், அந்தச் சேனு வீரர்களுடைய ஆயுதங்களோடே ஆயுதங்கள் பட்டிழைந்து மேகக் கூட்டங்களும் தீய்ந்து போகும்படி நெருப்புப் பொறிகள் எழுந்தன. யானைகளினுடைய பக்கங்களில் தொங்க விட்டிருக்கின்ற மணிகள் மேகக் கூட்டத்திலிருந்து இடி இடிக்கிறது போல மிகவும் ஒலிக்கத் தலைப்பட்டன. இவ்விதம் பிரயாணப்பட்ட

சேனைகளிலுள்ள இராட்சதர்களை அவர்கள் கொண்ட மனைவிமார்களும், அவர்கள் வயிற்றிற்பிறந்த புத்திரிமார் களும், அவர்களைப் பெற்றெடுத்த தாய்மார்களும், அவர்க ளுடைய உறவின் முறையார் சகலமானவர்களும் ஓடிவந்து தடுத்து, "முன்பு அக்குரங்கின் முன்னே போனவர்களில் ஒருவராயினும் உயிர் தப்பி மீண்டு வரவேயில்லை! அப்படி யிருக்க, இப்பொழுது நீங்களும் போகின்றபடியினாலே நாங் களும் உங்களுடனே வருகின்றோம்,'' என்று இரங்கிப் புலம்பியழுதார்கள்.

அந்தச் சேனா சமுத்திரத்தின்நடுவே பஞ்சமா பூதங்களைப் போலவும், ஐந்து தேரின்மேலே ஐந்து சூரியர்கள் வருகிறது போலவும், பஞ்ச சேனாபதிகள் பேரிகை முதலான பல வித வாத்தியங்களும்முழங்கும்படி கோபாக்கினிப் பொறிசிந்த,இடி முழக்கம் போல வில்லைக் குணத்தொனியெழுப்பிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் சர்வகாலமும் பஞ்சேந்திரியங்களைப் போலச் சத்துருத்துவத் தைக்கொண்டு உபத்திரவஞ் செய்கின்றவர்கள். யுத்தஞ் செய்கின்ற சமயத்தில் இந்திரனுடைய வஜ்ராயுதமும், வருண னுடைய பாசமும், எமதர்ம ராஜனுடைய தண்டமும், சிவ னுடைய சூலமுமாகிய தெய்விக ஆயுதங்களெல்லாம், ஓர் ஊசி நுழையத்தக்க சொற்பமான வடுவும் செய்யமாட்டாத புஜபலத்தையுடையவர்கள்; சூரபதுமனைச் சங்கரித்த சுப்பிர மணியர் ஏறுகின்ற வாகனமாகிய மயிலின் கலாபத்திலுள்ள இறகையும், சகலமான லோகங்களையும் சிருஷ்டித்த பிரம தேவர் ஏறுகின்ற வாகனமாகிய அன்னத்தினுடைய சிறகி லுள்ள இறகையும் பறித்து மத்தியில் மத்தியில் வைத்து முறுக்கித் தொடுத்துத் தலையிலும் நெற்றியிலும் விருதுக ளாகக் கட்டிக் கொண்டிருக்கின்றவர்கள்; பூர்வத்திலே குபேர னுடனே சண்டை செய்து, அவன் புறங்கொடுத்துப் போக, அவனுடைய பட்டணத்திலிருந்து கொள்ளையிட்டுக் கொண்டு வந்த நானாவிதமான பூஷணங்களையும் பூண்டிருக்கின்றவர்

கள். போரிலே தோற்ற இந்திரனானவன் பயத்தினால் ஐரா வதத்தை விசையாய் நடத்திக்கொண்டு போனது கண்டு, அதன் வால் முனையைப் பின் புறத்திலிருந்து பிடித்துக் கொண்டு, "அடா இந்திரா, நீ நடத்தத்தக்க சாமர்த்திய முடையவனானால் எதோ நடத்தடா பார்ப்போம்!" என்று சொல்லி இழுத்து வந்த பராக்கிரமம் உடையவர்கள்; 'பிர மாவினுடைய சொல்லினால் எமனானவன் உம்முடைய ஆக் கினையைக் கடந்து நடக்கின்றான்,' என்று சொல்லக்கேட்டு இராவணனுக்குக் கோபமூண்டெழுந்தது கண்டு, அந்த யமனை அதிவேகமாய்ப் போய் இறுகக் கட்டிக்கொண்டு வந்து இராவணன் முன்னே விட்டு, அவனுடைய கோபத் தைத் தணித்தவர்கள்; கயிலை - இமயம் - மந்தரம் - விந்தி யம் - நிஷதம் - ஏமகூடம் - நீலகிரி, கந்தமாதனம் என்னும் அஷ்டகிரிகளையும் இகழ்கின்ற விசாலமான மார்பினையும், உயர்ந்தெழுகின்ற கடல் அலைகளை இகழ்கின்ற பெரிய தோள்களையும், காலபாசத்தையுடைய எமனுடைய கொலைத் தொழிலை இகழ்கின்ற கொடூரமான கொலைத் தொழிலையும், கொல்லன் துருத்திகொண்டு ஊதுகின்ற உலைக்களத்தை இகழ்கின்ற அக்கினியைக் கக்கும் கண்களையுமுடையவர் கள்; யுகாந்த காலாக்கினியானது சுவாலா மலையாயெரிந்து கொண்டு வந்தாலும், யுகாந்த காலத்திலேயுண்டான மாருத மானது மோதியடித்தாலும், யுகாந்தகால சமுத்திரம் பொங் கிப் புரண்டெழுந்தாலும் எவ்வளவும் உபத்திரவமென்பதே இல்லாமல் நிர்ப்பயமாய்த் திக்குத்தோறும் சஞ்சரிக்கின்ற வர்கள்.

இப்படிப்பட்ட தன்மையையுடைய அந்தப் பஞ்ச சேனா பதிகள், தங்களைச் சூழ்ந்து வந்த சேனைகளுடனே அநுமார் ஏறியிருக்கும் தோரண ஸ்தம்பத்தினுடைய சமீபத்திலே போய்ச் சுற்றி மொய்த்துக்கொண்டு, சேனைகளை அணி வகுத்து, யூகங்கட்டினார்கள். ஸ்ரீ ராமதூதரான ஆஞ்ச நேயரும் அவர்களுடைய நிலைமையைத் தமது கண்ணினால்

கண்டார். அப்படிப் பார்த்த சிறிய திருவடிகளான அனுமரை அந்த இராட்சதர்கள் தலையை ஏறெடுத்துப் பார்த்து, "ஆ! ஆ! இதைப் பார்த்தால் மிகவும் அற்பமான குரங்காகக் காண்கிறது! இது தேவர்களுடைய கீர்த்தியை வேருடனே நாசமாகும்படி செய்த மகா பலிஷ்டர்களாகிய இராட்சதேந்திரர்களை யுத்தத்திலே வென்று, நிர்மூலமாகக் கொன்று, அவர்களுடைய கீர்த்தியையும் கெடுத்ததே!" என்று அதிசயமுற்றுச் சந்தேகித்தார்கள்.

அந்தச் சமயத்திலே அஞ்சனை தேவி புத்திரரானவர், தேவேந்திரனுடைய பட்டணமாகிய அமராவதியின் வாயிலிலேயிருந்து கொண்டு வந்து இராவணனுடைய சிங்காரத் தோட்டத்தில் நாட்டியிருக்கின்ற தோரண ஸ்தம்பத்திலிருந்தபடியேயிருந்து, அண்டமுகட்டையுந் தாண்டி அப்புறத்திலும் ஊடுருவும்படி பருத்து, உயர்ந்த விசுவரூபங் கொண்டார். அவ்வண்ணம் விசுவரூபங் கொண்ட ஆஞ்சநேயரைக் கண்டு ராக்ஷதர்கள் ஆச்சரியப்பட்டு, மகத்தான உக்கிரங்கொண்டு, விற்களை வளைத்து, அபரிமிதவான அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகம் செய்தார்கள். இடம்புரிசங்கம் - வலம்புரிசங்கம் - தவளச் சங்கம் - இரட்டைச்சங்கம் - வெற்றிச் சங்கங்கள் ஒலித்தன. இரணபேரிகை - ஜயபேரிகை - மங்களபேரிகை - வெண்கல பேரிகை முழங்கின. அந்த இராட்சதவீரர்கள் அனற்பொறிகளைச் சிதறிப் புகைந்தெழுகின்ற எண்ணிறந்த ஆயுதங்களைக்கொண்டு எய்தார்கள்; எறிந்தார்கள்; கொய்தார்கள்; குத்தினார்கள்; வெட்டினார்கள்; கட்டினார்கள்; எற்றினார்கள்; சுற்றினார்கள். அவைகளெல்லாம் என்னையரான அனுமருடைய ரோமங்கள் நெருங்கிய சரீரத்திலுண்டாகிய தினவு தீரும்படி சொரிந்தது போல இதவாயிருந்ததனால், அவருக்கு நித்திரை வந்தது. அது கண்டு இராட்சதர்கள், "அம்மம்ம! இந்தக் குரங்கு நம்முடைய ஆயுதங்களையெல்லாம் கொஞ்சமாகிலும் இலட்சியஞ்செய்யவில்லையே!" என்று மனஞ்செருக்கி,

பின்னும் தோமரம் - எறி சக்கரம் - பிண்டி - பாலம் - மழு - எழு முதலான ஆயுதங்களையெல்லாம் ஓயாமல் மழை போலப் பொழிந்தார்கள். அது கண்டு அனுமரானவர், "மற்றுமுள்ள இராட்சதர்களெல்லாம் வந்து மாயும்படி இவர்களை எல்லாம் அதிசீக்கிரத்தில் எற்றிக் கொல்லு வோம்," என்று எண்ணி, "ஓர் ஆயுதமும் இந்தச் சமயத் தில் கிடைக்கவில்லையே!" என்று நினைக்கும் பொழுது இராட்சத வீரனொருவன் தம்மேலெறிந்த எழுத்தடியை எழும் பிப் பிடித்துக்கொண்டு, அதனால் அனேக யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும், இராட்சத வீரர்களையும் அடித்துத் துமிசஞ் செய்து கொன்றார்; அப்பால் மதயானையி னுடைய கொம்புகளை முறித்து அவைகளையே கையில் ஆயுதமாக ஏந்திக்கொண்டு, மோதி மோதிப் பலபல தேர் களை உடைத்தெறிந்தார்; அந்தத் தேர்ச் சக்கரத்தைக் கழற்றியெடுத்து உருட்டியுருட்டிப் பல வீரர்களைக் கொன் றார்; அந்த வீரருடைய கைவாளை எட்டிப் பறித்து ஓங்கி வெட்டி வெட்டி மிதமற்ற குதிரைகளைக் கொன்றார்; ஒரு மரத்தினால் ஆயிரம் யானைகளை ஒரு க்ஷணப்பொழுதிலே மடித்துவிட்டார்; பின்னும் யானைப்படைகளை விசையாய் ஓடி உதைப்பார்; தேர்ப்படைகளை உருவழியும்படி கலக்குவார்; புரவிப்படைகளை இடுப்பொடியும்படி மிதிப் பார்; பதாதிகளைப் பூமியிலிட்டுத் தேய்ப்பார்; அனேக ராட்சதர்களை இருப்புலக்கையால் அடித்து மண்ணிலே உருட்டித் தள்ளுவார். அனேகருடைய தலைகளின்மேற் போய்க் குதித்துப் பல்லினாற்கடித்துக் கையினால் குத்து வார்; தேர்களையும் யானைகளையும் எடுத்துப் பந்து போல அஷ்ட திக்குகளிலும் ஆகாயத்திலும் விட்டெறிவார். குதி ரைகளையும் இராட்சதர்களையும் அவர்களுடைய ஆயுதங் களுடனே கையினாற்பிடித்து மாப்பிசைகிறது போலப் பிசைந்தெறிவார். இராட்சதர்களை வாலினாலே சுற்றி வரிந்து கட்டி வீசுதலால், அவர்கள் வந்து சமுத்திரத்திலே

விழுந்து, மந்தரகிரியை வாசுகியென்னும் பாம்பினுற்கட்டி அதிலிட்டுக் கடையும்போது அது சுழன்றது போலச் சுழன்ருர்கள். சுத்த வீரராகிய ஆஞ்சநேயர் எடுத்து வீசியதால் சமுத்திரத்தில் போய் விழுந்த யானைகள் தேர்கள் குதிரைகளை இரத்த நதியானது இழுத்துக்கொண்டோட, அவைகள் இலங்கையிலே போய்ப் புகுந்தன. இராட்சதப்பிணங்கள், அனுமரேறியிருக்கின்ற மகரதோரண ஸ்தம்பமும் மறையும்படி மலை போலக் குவிந்தன. ஆஞ்சநேயருக்கு மலைகளும், மரங்களும், இருப்புலக்கையுமே ஆயுதங்களாயிருக்கின்றன. மேலும், அவருடைய கைகளும் கால்களும் வாலுமிருக்கின்றன. அவர் கொல்லுகிறதற்குப் பல வகை ஏதுக்களும் இருக்கின்றன. அவராலே கொல்லப்படுவதற்கு அனேகர் சத்துருக்களாயுமிருக்கிருர்கள். ஆகையால், இப்போது யுத்தத்திற்கு வந்த ராக்ஷதர்களெல்லாம் இறந்து போவார்களேயல்லாமல் ஒருவராவது தப்பி உயிரோடு போவாரா? சிவன் கையிலே தாங்குகின்ற மழுவாயுதத்தைப்போல உதிரந் தோய்ந்து விளங்காநின்ற எழு ஸ்தம்பத்தால், அங்கு வந்த ராட்சதக் கூட்டம் சகலமும் இரணக்களத்தில் அதமாகும்படி ஆஞ்சநேயர் கொன்று தொலைத்தார்.

அப்படி அந்த இராட்சத வர்க்கங்கள் நாசமானதைக் கண்டு தேவர்கள் சந்தோஷித்தார்கள். இலங்கா பட்டணமானது அல்லோல கல்லோலப்பட்டது. இறந்தவர்களைக் குறித்து அழுகின்ற குரலோசையானது சமுத்திர கோஷமும் தாழும்படி அதிகரித்தெழுந்தது. அந்தச் சமயத்தில் பஞ்ச சேனபதிகள் மிகவும் வருத்தத்துடனே தேரை விட்டுக் கொண்டு வந்து, கொக்கரித்து, ஒவ்வொருவர் ஆயிரமாயிரம் பாணங்களைப் பிரயோகித்து அஞ்சனதேவியின் புத்திரசிகாமணியாகிய அனுமருடைய சரீரத்தை மறைத்தார்கள். அனுமர் அவர்கள் பிரயோகித்த பாணங்களெல்லாம் தமது திருமேனியில் வந்து தாக்காமல், கைபினுல் பிடித்து ஒடித்துப் பொடியாக்கிவிட்டு, உடனே அப்பஞ்ச சேனபதிகளில்

ஒருவனுடைய தேரைப் போய் உதைத்து அழித்துச் சின்ன பின்னப்படுத்தினர். ஆஞ்சநேயர் அவனையும் கொன்றார்.

அவன் மாளவே, மற்ற நான்கு பேரும் பிரளய காலாக்கினி போலக் கோபங்கொண்டு, விற்களை வளைத்துப் பாணங்களை அபரிமிதமாகப் பொழிந்தார்கள். அவர்களுடைய கண்கள் புகைந்தன. அனுமருடைய தோள்களில் உதிரம் பெருகிப் பாய்ந்தது. அப்போது அவர் மனங்கொதித்து, அந்த இராட்சதருடைய வல்லமையை அறிந்து, ஒரு மலையைப் பிடுங்கியெடுத்து அவர்கள்மேல் எறிந்தார். அவர்கள் அம்புகளினுல் அந்த மலையையும் பொடிப்பொடியாகச் செய்துவிட்டு, மறுபடியும் அவர்மேல் அனேக பாணங்களை மலை போல ஒன்றின் பின்னே ஒன்ருகத் தொடுத்து எய்தார்கள். அவைகள் வந்து மார்பிலே தைத்து உருவ, அவர் அதிசீக்கிரமாகச் சமீபத்திலோடி, அந்நால்வருளொருவனை அவனுடைய தேரோடெடுத்து ஆகாயத்தில் சுழற்றி எறிந்தார். அந்த இரதமானது ஆகாயத்திற்போய் அங்கிருந்து வேகமோய்ந்து விழுகிறதற்கு முன் அதிலிருந்த வீரன் பூமியிற் பாய்ந்தான். அவன் பாய்ந்தது கண்டு வீரர்களுக்கெல்லாம் அதிவீரராகிய அனுமரானவர் மதயானையின்மேல் ஆண் சிங்கமானது பாய்கிறது போல விசை கொண்டு பாய்ந்து குதித்து, அவனுடைய பர்வதத்திற்குச் சமானமாகிய சரீரத்தின் எலும்பு மாமிசம் முதலானவை குழம்பிப்போகும்படி மிதித்துத் துவைத்துவிட்டார்.

அது கண்டு மற்ற மூவரும் கோபமூண்டெரியும்படி தேர்களை மனோ வேகமாக நடத்திக்கொண்டு வந்து, "அடா! இனி நீ எங்கே போவாய்?" என்று எதிர்த்து நின்று அஸ்திரங்களைப் பிரயோகம் பண்ணி, திரிமூர்த்திகள் போர் செய்வது போல வேண்டியபடியெல்லாம் யுத்தஞ்செய்யத் தலைப்பட்டார்கள். அப்படி யுத்தம் பண்ணத் தொடங்கிய மூவரில் இருவருடைய தேர்களைத் திரண்டுயர்ந்த தோள்களையுடைய அஞ்சனாதேவி குமாரர், தேவர்களும் பயப்படும்படி இரண்டு

கைகளினுலும் கழங்கு போல் அலக்ஷியமாக எடுத்துக் கொண்டு மேலெழும்பினர். எழும்பிய வேகத்தில் அந்தத் தேர்களில் கட்டியிருந்த புரவிகள் மடிந்தன. சாரதிகளும் விழுந்து இறந்தார்கள். அது கண்டு அந்த இரதிகர் இருவரும் தேரை விட்டுக் கிளம்பி ஆகாயமார்க்கத்திற் போயினர். போகிறதற்கு-முன் அவர்களை அப்புறம் போகவொட்டாமல் அனுமர் வெகு சீக்கிரமாக ஓடித் தொடர்ந்து எதிர்த்தார். அந்தச் சமயத்தில் அவர்கள் அஸ்திரங்களைப் பிரயோகிக்க எத்தனப்பட்டார்கள். அதற்குள்ளே அனுமர் அவர்களுடைய கை வில்லைப் பிடித்து மளுக்கென்று முறியச் செய்தார். பின்பு அவர்கள் பாணங்களைப்பூட்டி எய்கிறதற்கு வில்லில்லாமையால், அந்தரத்தில் நின்றபடி அனுமருடனே மல்யுத்தஞ் செய்யத் தலைப்பட்டார்கள். வெண்மையாகிய கோரப்பற்களையும், கறுத்து நீண்ட சரீரத்தையும், ஆவென்று திறக்கின்ற பிளவாகிய பெருவாயையுமுடைய தன்மையால் அந்த அரக்கர் இருவரும் இராகு கேதுக்களால் மறைக்கப் பட்ட சந்திர சூரியருக்கு ஒப்பாயிருந்து போர் செய்யும்போது அனுமர் வாலைக் கொண்டு அவ்விருவரையும் வரிந்து கட்டி இறுக்கி, அவர்களுடைய கால்களையும் தோள்களையும் மள மளவென்றொடியும்படி ஒடித்தார். உடனே இருவரும் மாண்டு விழுந்தனர். ஆஞ்சநேயர் கிரகணம் விட்ட சூரியனைப்போலப் பிரகாசித்தார். இவ்விதம் விளங்கியிருந்த வாயு குமாரர், மற்றொரு சேனுபதி மாத்திரம் தனித்து நின்றது கண்டு, மலையின்மேல் தாவிக் குதிக்கின்ற சிங்கத்தைப்போல அவன் தலையின்மேல் தாவிக் குதித்தார். அந்த க்ஷணமே அவன் தன் தேருடனே பூமியில் ஆழ்ந்து புதைந்து மடிந்துபோனன். வஞ்சனையையும் களவையும் விரும்பித் துன்மார்க்கத்தில் பிரவேசித்துக் காளகூட விஷத்தைப்பார்க்கிலும் மிகவுங் கொடியவர்களும், குற்றத்தைச் செய்கிறதற்கு மனங்கூசாதவர்களுமாகிய அந்த ராக்ஷதர்களைந்து பேர்களும் அனுமர் ஒருவராலே கொல்லப்பட்டு, ஓர் அறிவினுலே வெல்லப்பட்ட

ஐம்புலன்களைப்போல ஆனார்கள். அனுமரோ என்றால், பஞ்ச சேனாபதிகளையும் கொன்றதனால் ஐம்புலன்களையும் வென்ற அறிவையொத்திருந்தார்.

அந்தப் போரில் எதிர்த்த இராட்சதர்களில் உயிர் கொண்டு மீண்டவர் ஒருவருமில்லையென்பதையும், எமனும் நடுங்கத்தக்க பஞ்ச சேனாபதிகளும் கைகொட்டிக் கொக்கரித்துக்கொண்டு முழுகிப்போ யிறந்ததையும், இலங்கையில் உள்ளவர்கள் எல்லோருங் கண்டார்கள். அத்தருணத்திலே நம்மை எப்போதும் குரங்கானது கொல்லுமென்று மனம் மறுகி ஏங்கித் துக்கிக்கும் ராக்ஷத ஸ்திரீகளைப் பார்த்துக் கோபித்துக் கடுஞ்சொற்சொல்லி வைதுவிட்டுச் சில இராட்சதர்கள் ஓடி வந்து ஊழித்தீயைப்போல எழுவகைப்பட்ட உலகங்களும் எரியும்படி உக்கிர திருஷ்டியாகப் பார்த்துக் கோபமே ஒரு வடிவெடுத்தது போல இருந்த இராவணேஸ்வரனுடைய செவித்துளைகள் வெந்து தீயும்படி, "இராவணேஸ்வரரே, இங்கிருந்து சென்ற சேனா சமுத்திரமடங்கலும் மடிந்துபோய்விட்டன! அது கண்டு சண்டை செய்யப் போய்ப் பஞ்ச சேனாபதிகளும் மாண்டு போனார்கள். நாங்கள் மாத்திரம் யுத்தஞ் செய்யாமலிருந்ததனால் இறவாமல் மீண்டு வந்தோம். அந்தக் குரங்கானது தேவர்கள் முதலானவர்களையும் ஜயித்த வீராதி வீரர்களையும் அதிசீக்கிரத்தில் மாயும்படி செய்துவிட்டு, மற்றுஞ்சண்டை செய்கிறவர்கள் இல்லாமையால் சோம்பியிருக்கின்றது," என்று சொன்னார்கள்.

## 11. அட்சகுமாரன் வதைப் படலம்

அவ்வார்த்தை கேட்ட இராவணன் கோபமாகிய கடு நெருப்பானது மூண்டெழும்படி பெருமூச்சு விட்டு, மார்பிலணிந்த புஷ்பமாலைகளும் அவைகளில் பரிமளிக்கின்ற தேனையுண்ண வந்து மொய்க்கின்ற வண்டுகளும் தீய்ந்து கருகும்படி செவ்வரக்கு ஊட்டியது போலக் கண்கள் சிவக்க,

தானே பிரயாணப்பட்டுப் போய்ப் பிடித்து வர ஆயத்தமானுன். அப்படி எத்தனப்பட்ட பிதாவைப்பார்த்து, கனிஷ்ட புத்திரனுகிய அட்சனென்பவன் எழுந்து வணங்கி, "அப்பா, இந்தப் பணிவிடையை அடியேனுக்குக் கடாக்ஷித்தருளலாகாதா? வந்திருப்பது, சோம சூரியாக்கினியாகிய முச்சுடர்களையும் மூன்று நேத்திரமாகவுடைய கைலாயபதி ஏறுகின்ற வாகனமாகிய ரிஷபமுமன்று; பரலோக பூலோக பாதாளலோகமாகிய திரிலோகங்களையும் திருவடியினுலளவிட்ட திரிவிக்கிரம சொரூபனுன ஸ்ரீமந்நாராயணனுடைய வாகனமாகிய கருடனுமன்று; அந்தப் பரமபுருஷன் திருக்கண் வளர்ந்தருள்கின்ற சயனமாகிய ஆதிசேஷனுமன்று; அஷ்ட திக்கஜங்களுமல்ல; ஒரு சிறிய குரங்கின் மேலா மகா பிரதாபசாலியாகிய தேவரீர் படையெடுத்துப் போகிறது? இந்த ஊழியத்தை அடியேனுக்கு ஆக்கியாபித்து நீர் இவ்விடத்திலேயே சுகமாயிருந்தருளும். முன்னுளில் அமரர் - சித்தர் - அசுரர் - தைத்தியர் - கருடர் - கின்னரர் - நிருதர் - கிம்புருஷர் - கந்தருவர் - யக்ஷர் - விஞ்சையர் - யூதர் - பைசாசர் - முனிவர் - உரகர் - ஆகாய வாசிகள் - போக பூமியர்களாகிய பதினெண் தேவகணங்களுக்கும் அதிபதியாகிய இந்திரன்மேல் தேவரீர் கோபங்கொண்டு, அவனைப் பிடித்துக் கொண்டு வந்து கொடுவென்று சொல்லி, அடியேன் பக்கத்தில் இருக்கும்போதே என்னை அனுப்பாமல் எங்கள் தமயனை அனுப்புவித்தீர். அது மனத்திலே குறையாயிருக்கின்றது. அந்தக் குறை தீரும்படி ஒரு குரங்கையாவது பிடித்து வர உத்தரவு கொடுத்தருளும். திருநேத்திரதாரியாகிய சிவனே வஞ்சனையை மனத்திலெண்ணி இவ்விடத்தில் ஒரு சொற்பமாகிய பழியை விளைக்கும்படி கற்பிதம் பண்ணிக்கொண்டு குரங்கு உருவமெடுத்து வந்தானுனுலும், நொடிப்பொழுதுக்குள்ளே ஜயித்து, எளிதிலே பிடித்துக்கொண்டு வந்து உம்மிடத்தில் கொடுக்கிறேன்! பூர்வகாலத்தில் வஜ்ரஸ்தம்பத்திலுற்பத்தியாகிய இரணியேஸ்வரனைச் சங்கரித்த உக்கிர நர

சிங்கமானாலும், ஒரு கொம்பினாலே பூமியைப் பேர்த்தெடுத்த ஆதிவராகமானாலும், நான் போய் யுத்தஞ்செய்யுங்கால் இந்த அண்டத்தைக்கடந்து அப்பால் போன போதுந் தொடர்ந்து போய்ப் பிடித்து வந்து உமக்கு எதிரே விடுகிறேன்! அப்படிச் செய்யாமற் போனேனாகில், அப்போது என்னைச்சிரசாக்கினை செய்யும். கிருபை செய்து உத்தரவு கொடுத்தருளும்," என்று கூற, இராவணன் மகிழ்ச்சி கூர்ந்து, "அப்பா, அப்படியே தேரேறிச் சேனைகளையும் கூட்டிக்கொண்டு போ," என்று சொன்னான்.

அட்ச குமாரன் அவன் சொற்படியே யுத்தத்திற்கேற்ற அலங்காரம் செய்துகொண்டு புறப்பட்டு, இரதத்தை அலங்கரித்து அதன்மேல் ஏறினான். அப்போது இராட்சதர்கள் ஆசீர்வாதம் செய்தார்கள். பேரிகை முழங்கியது. பிரளய கால சமுத்திரம் போலச் சேனைகள் வந்து கூடின. சதுரங்க சேனைகளும் அட்ச குமாரனுடைய தோழன்மார்களும் யுக முடிவு காலத்தில் ஜலத்தையும் தகிக்கின்ற காலாக்கினியின் சிகைகளைப் போல வந்து புடை சூழ்ந்தார்கள். தேவர்களெல்லாம் பயமடையவும், காலனும், 'இனியென்ன அனர்த்தம் விளையுமோ!' என்று எண்ணி மனம் மெலியவும், பேய்கள் - பூதங்கள் - இடாகினி - மோகினிகளெல்லாம் கண்களை உருட்டி விழித்துக் கொக்கரித்துப் புஜங்கொட்டவும், அதிக உக்கிரமாக வருகின்றான் அந்த அட்ச குமாரன்.

இப்படி வருகின்ற அட்ச குமாரனை வாயு புத்திரராகிய அனுமர் கண்டு, "இதோ நமக்கெதிரே வருகின்ற ராக்ஷத வீரன் இராவணனுடைய புதல்வனாகிய இந்திரஜித்தென்பவனோ! அல்லது அந்த இராவணனோ!" என்று மனத்திலே மிகுந்த சந்தோஷங்கொண்டு, தமது தோளைப்பார்த்து, ஸ்ரீ ரகுநாயகரைத் துதி செய்து, அவரெழுந்தருளியிருக்கின்ற திக்கு நோக்கித் தண்டன் சமர்ப்பித்து, "இவன் இப்பொழுது நான் நினைத்த ராவணன் இந்திரஜித்து என்கின்ற அந்த இருவருள் ஒருவனாயிருந்தால், பூர்வம் நான் செய்த

புண்ணியப் பலன் எப்படியும் பலிதமாகும். எங்கள் சுவாமி யாகிய ஸ்ரீ ராமசந்திரரும் தபோபலத்தையுடையவராவர். அவரிடத்திலிருந்து வந்த நானுமிருக்கிறேன். எமனும் காத்துக்கொண்டிருக்கின்ருன். எண்ணிய காரியத்தையும் சீக்கிரத்தில் தடையில்லாமல் இனி முடிப்பேன்,'' என்று யோசித்து, பின்னும் அவன் சமீபத்தில் வரவரச் செவ்வையாகப் பார்த்து, "மீளவும் இச்சேனையில் வருகின்ற நாயகனுடைய வடிவத்தைப் பார்த்தால், தோஷமற்றதாகக் காண்கிறது. ஆகிலும், இவனுக்குப் பத்துத் தலைகளில்லாமையால், இவன் இராவணனுமல்லன். நீலபர்வதம்போலிருக்கின்றமையால், இந்திரஜித்துமல்லன்,'' என்று நினைத்துக்கொண்டே தோரண கம்பத்தின்மேல் நின்ருர்.

அப்படி நின்ற அனுமரை அந்த அட்சகுமாரன் பார்த்து, இந்தக் குரங்குதானு இத்தனை இராட்சதக் கூட்டங்களையும் கொன்றது !" என்று சொல்லிக் குலுக்கென்று நகைத்தான். அதைக்கண்ட அவனுடைய இரதசாரதி, " பிரதாப சூரராகிய அட்ச குமாரரே, இதுதானு என்று நீர் அலக்ஷியமாக இகழ்ந்து சொல்லலாமா? உலகத்தில் எத்தனையோ விசித்திரமுண்டாயிருக்கின்றன ! முன்னுளிலே நம்முடைய ராஜாவுடனே எதிர்த்த வாலியும் ஒரு குரங்குதானே? அவனைப்பார்க்கிலும் சாக்ஷி வேறே வேண்டுமோ? ஆகையால், எச்சரிக்கையாகவே நடக்க வேண்டும்,'' என்று சொன்னுன்.

அட்ச குமாரன் சாரதியை நோக்கி, " இந்தத் துஷ்டக் குரங்கு எங்கே போனுலும் இதன் பின்னே விடாது தொடர்ந்து போய் ஜயித்து, இனிக் குரங்கென்பதே உலகத்திலில்லாமற் போகும்படி கருவறுத்துவிடுகின்றேன் ! பார் !'' என்று சொன்னுன். அப்பொழுது இராட்சத சேனையானது பொங்கியெழுந்து ஆர்ப்பரித்து அட்டகாசஞ் செய்து, அஞ்சனு தேவி புத்திரராகிய அனுமரை நெருங்கிச் சுற்றி மறைத்து, சோனை மேகமானது இடைவிடாமல்

அமோகமாக மழையைச் சொரிந்தாற்போலப் பல வித ஆயுதங்களையும் பிரயோகித்தது. அதனால், விண்ணுஞ்சலித்தது; மண்ணுஞ்சலித்தது. வீராதிவீரராகிய ஆஞ்சநேயர் தனியே அந்தச் சேனைக்கு நடுவே பிரவேசித்தார். இராட்சதர்கள் எய்கின்றவைகளும் எறிகின்றவைகளுமாகிய அஸ்திர சஸ்திரங்களெல்லாம் அவர் திருமேனியின்மேற்பட்டு முறிந்தன. யானைகள் வந்து அனுமரை முட்டி விழுந்திறந்தன. அனுமரெடுத்தெறிதலால் இராட்சதர்களுடைய சரீரங்கள் இலங்கையின் மார்க்கமாகப்போய் விழுந்தன. உலர்ந்த வைக்கோற் போரில் நெருப்புக் கலந்தது போல, வாயு குமாரரானவர் புகுந்து கொல்லுகின்ற இராட்சதர்களுக்கோ முடிவில்லை. அவர்களுயிரும் எமபுரம் போய்ச் சேர்வதோ ஒழியவில்லை. ஆகையால், அந்த யமனுக்கு ஆயிரம் கோடித் தூதர்கள்தானிருக்கின்றார்களோ தெரியவில்லை! போர்க்களத்தில் வந்தவர்களையும், வருகின்றவர்களையும், வருபவர்களையும், அனுமரானவர் ஓடியோடி வளைத்துத் தமக்கு முன்னுள்ள பராக்கிரமத்திலும் மூன்று பங்கு அதிக பராக்கிரமமுடையவராகி, ஊழிக்காலத்தில் உதயமாகின்ற சூரியனைப்போல உக்கிரமாய்ச் சாடத் தலைப்பட்டார். அந்த இராட்சதர்கள் சூரிய கிரணோஷ்ணத்தில் சுருண்டு கருகி மடிகிற கிருமிகளைப் போல மடிந்தார்கள். யானைகள் பிளவுண்டு, தேர்கள் நெறியுண்டு, குதிரைகள் சிதைவுண்டு, பதாதிகள் உதையுண்டு, உதிரம் ஆறாய்ப் பெருகவும், நிணம் சேறாய்க் குழையவும், கடல் சூழ்ந்த இலங்கையானது காலனாற் கொள்ளையிடப்பட்டதென்னும்படி ஐம்புலன்களையும் வென்ற ஆஞ்சநேயர் கொன்று குவித்தார். சமுத்திரத்திற்கொப்பான சேனைகளையுடைய மகா பலிஷ்டரான இராட்சதரோ, ஆய்ச்சியர் கடைகின்ற தயிரைப்போலாயினர். ஆஞ்சநேயரோ, அந்தத் தயிரைக்கலக்குகின்ற மத்தைப்போலானார். சேனாவீரர்களோ, யுகாந்தகால வெள்ளத்தையொத்திருந்தார்கள். அவர்கள் மத்தியிலேயிருந்து யுத்தஞ் செய்கின்ற ஆஞ்ச

நேயரோ, யுகாந்த காலாக்கினியை ஒத்திருந்தார். மற்றும் அட்சகுமாரனுடனே வந்த இரதகஜ துரகபதாதிகளான கூட்டங்களையெல்லாம் படுசூரணமாகும்படி அனுமரானவர் சங்கரித்ததால், அவர்களிலே அனேகர் கால் வேறு, கை வேறு, தோள் வேறு, தொடை வேறு, உடல் வேருனார்கள். இறவாமல் தப்பிப் பிழைத்த சிலர் மாத்திரம் உதிரமானது ஆறு போலப் பெருகி வழியும்படி காயப்பட்டுப் பயந்து நடுங்கிப் பின்னிட்டனர். பல திசைகளிலும் பிணமலைகள் குவிந்தன. அத்தருணத்திலே, தனியே நின்ற அட்சகுமாரன் கண்களெரியும்படி பார்த்து, ஒரே தேரோடே மலையைப் போல அபாரமான தன்னுடைய வில்லைச் சக்கராகாரமாக வளைத்து நாணேற்றி, கூர்மையான அம்புகளைத் தொடுத்துப் பிரயோகஞ் செய்துகொண்டே அவருக்கு நேரே வந்தான். ஆஞ்சநேயரும் அவ்வட்ச குமாரனைச் சந்தித்தார். இருவரும் ஒருவரையொருவர் சந்தித்த போது தேவர்கள் கண்டு, "இனி அனுமனுடைய நிலைமை யாதாகுமோ!" என்று சஞ்சலப்பட்டு, "இவர்கள் இருவருடைய சாகசத்தையும் பார்ப்பதற்கு நாம் இமையாத கண்களைப் பெற்றிருப்பதும் அதிருஷ்டந்தான்!" என்று நினைத்தார்கள். அந்தச் சமயத்திலே அட்சகுமாரனுனவன் வாயினுல் நெருப்பைக் கக்கும் பதினைன்கு பாணத்தை ஆய்ந்தெடுத்து அனுமர் மேல் எய்தான். அனுமர் அவை வந்து தம்மேற் படவொட்டாமல் தம் கையிலேயிருந்த எழுவாயுதத்தினுலே அடித்துப் பொடிப் பொடியாய் உதிரும்படி செய்தார். அட்சகுமாரன் அது கண்டு பின்னும் உக்கிரமான பல வித அஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்து அந்த எழுவாயுதத்தையறுத்துப் பூமியிலே விழத்தள்ளி, மறுபடியும் அனேக பாணங்களை வில்லிலே தொடுத்துத் தாரையாய்ப் பொழிந்தான். ஆஞ்சநேயர் அவற்றையெல்லாம் தம் கையையே ஆயுதமாக நீட்டி விலக்கிக்கொண்டு, சரேலென்று போய் அட்சகுமாரனுடைய தேரின்மேலே குபீரென்றெழும்பிக் குதித்து, அதை நடத்து

கின்ற சாரதியைக் கொன்றார். அதில் கட்டியிருந்த புரவிகளும் மடிந்தன. அட்சகுமாரன் விற்குதை நிமிராதிருக்கும்படி எய்கின்ற பாணங்களில் சில பாணங்கள் அனுமருடைய மார்பிலே தைத்து உருவின; சில தோளிலே புதைந்து மறைந்தன; சில முகத்தை மறைத்தன. ஆஞ்சநேயர் அதனால் சிறிதுஞ் சலியாமல் மெலியாமல், அவன் கையிலே தாங்கியிருந்த வில்லை ஒரு கையினால் தாவிப் பறித்துக் கொண்டு, அவன் எதிரே நின்றார். அவனந்த வில்லைத் தன் இரு கையினாலும் விடாமற்பற்றியிருந்தான். இருவரும் பிடித்த பிடி விடாமல் உறுதியாக வலித்தனர். இந்தப் போராட்டத்தில் அது மளுக்கென்று முறிந்தது. அதைக் கண்டு அட்சகுமாரன் உறையிலிருந்த உடைவாளையுருவிக் குத்தினான். ஸ்ரீராமதூதர் அந்த உடைவாளை ஒரு கையினாலே தட்டிப்பறித்து, ஒடித்துவிட்டார். அது ஒடிந்து கீழே விழுதற்கு முன்னமே அவனுடைய வலிமையான தோள்களொன்றோடொன்று தாக்கும்படி மல்யுத்தம் செய்ய யத்தனப்பட்டு, விசையாயெழும்பி அனுமரைக் கையினாலே இறுகக் கட்டிப் பிடித்தான். அனுமர் அவனுடைய கையிலிருந்து நழுவித் தம் சரீரத்திலிருக்கும் ரோமங்கள் வேல்களைப்போல அவனுடைய சரீரத்திலே தைக்கவும், தம் வால் நீண்டு அவனுடைய உடலையசைக்கவும் திருப்பவுமொட்டாமல் சுற்றியிறுக்கிக்கொள்ளவும், தாமும் அவனை இறுக்கிப் பிடித்தார். அப்படிப் பிடித்துக்கொண்டு வாள் போலக் கூர்மையாயிருக்கின்ற அவனுடைய பற்களுதிரும்படி கன்னத்திலே அறைந்து, மேகத்தினிடத்திலிருந்து மின்னல்கள் வழுவி விழுவது போலக் குண்டலம் முதலான ஆபரணங்கள் தெறித்து விழவும், குடல் சரிந்து தொங்கவும், அவனுடைய பிடரியில் குத்தினார். அப்படிக் குத்தியும் அவனுடைய உயிர் போகாதது கண்டு, அவனைக் கீழே தள்ளி மேலே குதித்தேறி, மாவாய்ப் போகும்படி அரைத்துத் தேய்த்துவிட்டார். அது கண்டு சில இராட்சதர் நடுங்கிக் கிலிபிடித்து ஓடினர்.

அத்தருணத்தில், அவ்விடத்திலேயிருந்த காவலாளர்கள் பயந்து ஓடி இராவணனிடம் நடந்த சமாசாரத்தையெல்லாஞ் சொன்னார்கள். அந்தச் சமயத்திலே மயன் குமாரத்தியான மண்டோதரி என்பவள் தன் பிள்ளை இறந்து போன சேதியைக் கேட்டு, கண்கள் இரண்டும் மலையருவி போல ஜலத்தைக் கக்கவும், அளகபாரமானது அவிழ்ந்து விழுந்து புழுதியிலே புரளவும், வயிற்றிலே அறைந்துகொண்டு, அதிக வருத்தத்துடனே தன் நாயகனான இராவணனுடைய பாதத்திலே விழுந்து கோவென்று கதறி அழுதாள். அந்தப் பட்டணத்திலே உள்ள சகல ஜனங்களும் அழுதார்கள்.

## 12. பாசப் படலம்

பிரதாப இலங்கேஸ்வரன் தன் கண்களில் நெருப்புப் பொறி சிதற, அதிக கோபங்கொண்டான். அப்பொழுது தன் தம்பி மாண்டானென்கிற சொல் தன் நெஞ்சைச் சுட, இந்திரனை ஜயித்துக் கீர்த்தி பெற்றதனால் இந்திரசித்து என்று பேர்படைத்த மேகநாதன் பெருமூச்செறிந்து, திரிபுர தகனம் செய்யும்படி மகாமேருவை வில்லாக வளைத்த ருத்திரமூர்த்தியைப் போல மகத்தான உக்கிரங்கொண்டு, அந்தக் கணமே தேரின்மேலே ஏறினான்; எட்டுத் திக்குகளும் கிழிய அண்டமும் பிளக்க விருது கூறி, வீராவேசத்துடனே தும்பை மாலையும் அணிந்தான். இடியும் பயந்தோடும்படி இரணபேரிகை முழங்கியது. தேவேந்திரன் உயிர் நடுங்கி உடல் புழுங்கி வெயர்க்கும்படி இந்திரசித்து வருகின்றதனால் யுத்தம் பிரபலப்பட்டது.

“இனி மோசம் வந்துவிட்டது!” என்று திரிமூர்த்திகளும் ஊக்கமழிந்தார்கள். தம்பியை நினைக்கும்போதெல்லாம் அவனுக்குக் கண்களில் ஜலமானது தாரை தாரை

யாய்த் ததும்பத் தலைப்பட்டது. அவன் தன் வில்லைப் பார்த்து வாயை மடித்து க்ஷாத்திரம் மிகுந்து கலகலவென்று நகைத்து, "ஆ! ஆ! மரக்கிளைகளிலே சஞ்சரிக்கின்ற எளிதான குரங்கினாலே தேய்ந்து போனவன் என் தம்பியா? என் தந்தையாரான பிரதாப இலங்கேஸ்வரருடைய கீர்த்தி யல்லவா?" என்று சொன்னான்; பல வகை ஆயுதங்களை யுடைய இராட்சதேந்திரர்கள் உடன் வரத் தன் பிதாவிருக் கின்ற ஆஸ்தான மண்டபத்திற்கு வந்து, இராவணனைச் சேவித்து, மாண்டு போன தம்பியைக் குறித்து அலறி அழுதான். அப்படி அழுகின்ற ஜேஷ்ட புத்திரனைத் தசக் கிரீவன் தன் மார்புடனே தழுவிக்கொண்டு அழ, ஸ்திரீக ளெல்லாம் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு கூச்ச லிட்டழுதார்கள்.

அது கண்டு இந்திரஜித்து அவரையெல்லாம் அதட்டி விலக்கிவிட்டு, தன் பிதாவைப் பார்த்து, "நீர் உறுதியொன் றும் பாராமல் சும்மாவிருந்து துயரப்படுகின்றீர். குரங்கி னுடைய பலத்தைச் செவ்வையாய் அறிந்திருந்தும், 'நீங்கள் போய் அதனுடனே யுத்தஞ் செய்யுங்கள்,'' என்று சொல்லி அணியணியாகச் சேனைகளை அதன்மேல் ஏவி, நீரே இராட்ச தக் கூட்டத்தையெல்லாம் அநியாயமாய்க் கொன்றீர்! கிங்கரர்களும் சம்புமாலியும் பஞ்ச சேனாபதிகளுமாகிய இராட்சத வீரர்களையும், அவர்களுடனே போன சேனையை யும், ஒருவராயினும் மீண்டு வரவொட்டாமல் கொன்றதனாலே அந்தக் குரங்கை என்னவென்று நினைப்பது? நீர் அஷ்ட திக்குகளையும் வென்றீர்; திரபுராந்தகனாகிய திரியம்பக னுடைய கைலாயத்தையும் திரிலோகங்களையும் ஜயித்தீர். இப்படிப்பட்ட மகா பிரதாபசாலியான நீர் அட்ச குமாரனை யும் கொல்லும்படி ஒரு குரங்கை இலட்சியம் பண்ணிக் கொண்டு, ஆடவிட்டு நாடகம் பார்ப்பது போல அதற்கு இவ்வளவு தூரம் இடங்கொடுத்துவிட்டீர். அது இருக்கட்டும். அட்ச குமாரனைக் கொன்றதென்று சொல்லும் அபகீர்த்தி

யானது இனி அந்தக் குரங்கைக் கொன்றாலுந்தான் நீங்குமா? ஆயினும், சீக்கிரத்திலே நானே போய் அந்தக் குரங்கைப் பிடித்துக்கொண்டு வந்து கொடுக்கிறேன். நீர் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டா. துக்கப்படாமலிரும்,'' என்று சொல்லி விட்டு யுத்தத்திற்குப் பிரயாணப்பட்டான்.

அதிரதம் - மகாரதம் - சமரதம் - அர்த்த ரதமாகிய நால் வகை இரதங்களும், இராசமதங்கம் - பத்திரமதங்கம் - மிருக மதங்கமாகிய மூவகை யானைகளும், மல்லகதி - மயூரகதி - வியாக்கிரகதி - விருஷபகதி - வானரகதியாகிய பஞ்சகதி களையுடைய புரவிகளும், வாள் வீரர் - வேல் வீரர் - வில் வீரர் முதலான பதாதிகளுமான சதுரங்க பலமுடனே கூடிய இராட்சச சேனைகள் யுகாந்தகால சமுத்திரம் போலச் சூழும் படி அவற்றினடுவே நின்ற மகா மேருவுக்குச் சமானமான தேரின்மேல் வீராதிவீரனென்று சொல்லப்பட்ட இந்திரஜித் துப் போய்,அனுமர் போர் செய்த போர்க்களத்தைப் பார்த்து, தான் திக்குகளையும் வென்றவனாயிருந்தும் அனுமருடைய போர்ப் பிரதாபத்தைக் குறித்து நன்றாயிருக்கின்றதென்று சந்தோஷப்பட்டான். அப்படி அவன் சந்தோஷப்படுகிறதைச் சகலரும் கண்டு, "இப்படி இவன் சந்தோஷப்படுகிறது என்ன பிரமாதத்தை விளைக்குமோ!'' என்று நடுங்கினர். இந்திர ஜித்தோ, "அம்மம்ம! எங்கே பார்த்தாலும் பிணங்களே மலை களும், இரத்தமே கடல்களும், நிணமே நதிகளும், ஆயுதங் களே காடுகளும் போலச் சூழும்படி இந்த இரணக்களமானது வேறோர் உலகம் போலத் தோன்றுகின்றதே!'' என்று நினைத்து ஆச்சரியப்பட்டான். அவன் எக்காலத்திலும் துக்க மென்பது அணுகாதிருக்கின்ற தன் மனத்திலே கொஞ்சம் விசனமடைந்து, "சமுத்திரத்தைப்போல அளவிடப்படாதவர் களும், மகா பராக்கிரமத்தையுடையவர்களும், சமானாதிக மில்லாதவருமான இராட்சதர்களெல்லாம் இறந்தார்கள்! ஒரு குரங்கே இத்தனை பேரையும் கொன்றதென்றால், இனி அந்தச் சீதைக்கு நாயகனான இராமன் வந்து எதிர்த்து யுத்

தஞ் செய்தால், நாம் எந்தச் சேனையைக் கொண்டு வந்து வெல்லுகிறது!'' என்றும் எண்ணினன். அப்படி எண்ணிக் கொண்டே அவன் போகும் வழி முழுவதும் கண்ணுக்குச் சமானமானவரும், பிராணனுக்கொப்பானவரும், யுத்தகளத் திலே உள்ளங்கைப் பொருளைப்போலக் காக்கின்றவருமான எண்ணிறந்த இராட்சதர்கள் இறந்து கிடப்பதைக் கண்டு, அங்கங்கே நின்று, உதட்டை மடித்து, ரௌத்திராகாரமாய், ஆராத புண்ணினிடத்திலே கோலிட்டாற்போல அவமானத்தி னலே மனம் நொந்து, "ஆரணியத்திலே எங்கள் அத் தைக்கு வந்த அவமானமும், கரன் முதலானவர் பட்ட பாடும், என்னைத் தமையனுகப் படைத்த என் தம்பி அட்சன் இறந்து போனதும், இரண்டு மனிதராலும் ஒரு குரங்கினுலு மல்லவா? ஆ! ஆ! என்னுடைய வீரப்பிரதாபம் அழகாயிருக் கின்றது!'' என்று நினைத்து, அனேகம் பிணக்குன்றுகளை இடறி, இரதத்தை நடத்திக்கொண்டுபோகிறவன், நிலத்திலே அரைபட்டுக் கிடக்கின்ற தன் தம்பியின் சரீரத்தைப்பார்த் தான். உடனே கண்கள் சிவந்து, ஏறியதேரில் சோர்ந்து, கை யிலே தாங்கிய வில்லையும் நழுவ விட்டு, விழிகளிலிருந்து உதிர மும் நீரும் சிதறப் பெருமூச்செறிந்து, "அடா தம்பி, உன் பிதாவின் உக்கிரமான ஆக்கினையைக் குறித்துப் பார்த்தானே யானுல் உன்னை எமனும் கொண்டு போகமாட்டானே! மற்ற லோகத்தாரும் உன்னை ஒளித்து வைப்பதற்குப் பயப்படு வாரே! ஐயோ! எங்களை நீங்கி நீ எந்த லோகத்திலே போய்ச் சேர்ந்தாயோ!'' என்று சொல்லிச் சொல்லி மனம் சகிக்கா மல் அறிவழிந்து, பிரலாபித்தான்.

அச்சமயத்திலே, இந்திரஜித்தை அனுமார் கண்டார்; கண்டு, "இவன்தான் இந்திரஜித்தென்பவன். முன்பு சில வீரரை நாம் ஜயித்தது ஓர் அதிசயமன்று. இவனை இவன் செய்த தீவினையே நமக்கு எதிரேவரும்படி அதிசீக்கிரத்திலே அழைத்துக்கொண்டு வந்துவிட்டது. இனி வெல்வது தோற்ப தாகிய இந்த இரண்டிலே ஏதாவதொன்று உண்டாகுமானு

லும் கீர்த்தியே! துள்ளுகாளையான இவன் மாத்திரம் நம்முடைய கையிற்பட்டானுனல், அது அந்த இராவணன் மாண்டதற்குச் சமானமாகும். பின்பாவது, 'நாமறியாமல் கெட்டோம்!' என்று அவன் அழியாத கற்பினையுடைய லோகமாதாவான பிராட்டியாரை விட்டுவிடுவான். இராட்சதருடைய மதமும் அடங்கும். இந்திரனும் தன் வருத்தம் நீங்கிச் சுகப்படுவான். இப்பொழுதே இலங்கா பட்டணமும் கட்டுக்காவல் அழிந்துபோம். நானே இராவணனை வேரோடே வென்றவனுவேன்!" என்று இவ்விதம் எண்ணுகின்ற தருணத்தில், இராட்சதரும், யானைகளும், தேர்களும், குதிரைகளும் மூன்று தரம் மூன்று லோகத்தையும் ஜயித்து வந்த மேகநாதனுக்கு முன்னே வந்து, கற்கண்டை எறும்பு மொய்த்தது போலத் தோரண கம்பத்தின்மேல் இருந்த ஆஞ்சநேயரை நாற்புறத்திலும் சுற்றி வளைத்துக்கொண்டு, பலவித ரூபத்தையுடைய பாணங்களைப் பிரயோகித்தார்கள். வீரர்கள் வாளாயுதம், வேலாயுதம் முதலிய அனேக ஆயுதங்களை அமோகமாகப் பிரயோகஞ் செய்தார்கள். அது கண்டு ஆஞ்சநேயரும், "வந்தீர்களா! வாருங்கள்!" என்று அழைத்து, தோரண ஸ்தம்பத்தை விட்டுக் கீழே குதித்து, உயர்ந்து கிளைத்துத் தழைத்திருக்கின்ற ஒரு மராமரத்தை வேருடனே பிடுங்கி எடுத்து, கரகரவென்று சுழற்றிக்கொண்டு உக்கிரமாகிய கோபத்தோடே அந்த சேனைக்குள் பிரவேசித்தார். எத்தனையோ இராட்சதர்கள் அனுமர் கையிற்பிடியுண்டார்கள்; சரீரம் பிளப்புண்டார்கள்; தோளொடியுண்டார்கள்; தலை உடைபட்டார்கள்; கழுத்தறுபட்டார்கள்.

இராட்சத வீரர்கள் விற்களை வட்டமாக வளைத்துத் தூணியிலிருந்து ஆராய்ந்தெடுத்து அனுசந்தானம் பண்ணிப் பிரயோகஞ் செய்த அஸ்திரங்களும், மற்றும் பல விதமாகிய ஆயுதங்களும் வாயு குமாரர்மேல்வந்து பட்டும், அவருக்கு ஓர் உபத்திரவமுஞ் செய்யாமல், பொடிப்பொடியாய்ச் சிதறின.

அது கண்டு இந்திரஜித்தானவன் நெருப்பைக் கக்கு

கின்ற அனேக பாணங்களை அவர்மேல் பிரயோகஞ்செய்தான். அவைகள் வந்து ஆஞ்சநேயர் திருமேனியிற்பட்ட மாத்திரத்தில் அவருடைய கோபாக்கினியினாலே சில வெந்தும், சில புகைந்தும், சில எரிந்தும், சில கரிந்தும், சில நீறுகியும் போயின. அனுமராலே தன்னுடன் வந்த தேர்களும், யானைகளும், புரவிகளும், காலாள்களுமாகிய சகல சேனைகளும் இறந்துபோகவே, வேறு துணையில்லாமல் தனித்து நின்ற வீராதி வீரனாகிய இந்திரஜித்து, நகைப்பும் கோபமும் அதிகரிக்க, வாயுவேக மனோவேகமாகத் தேரைச் செலுத்திக்கொண்டு, "அடா, எந்நேரமாக உன்னைக் குறித்து நான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறது? இவர்களை எல்லாம் கொன்றும் என் தோளின் தினவு தீரவில்லையே! ஆகையால், மகாராஜன் ஏதோ எனது நற்காலம் வந்துவிட்டாய்! வந்த நீ, சீக்கிரமாய் வரலாகாதா? இனியாவது வா," என்று தன்னை அழைக்கின்ற அனுமருக்குச் சமீபத்தில் வந்தான்.

அப்படி வந்து சேர்ந்த இந்திரஜித்து, தன் வில்லைக் குணத்தொனி செய்தான். அது கண்டு ஆஞ்சநேயரும், தம்முடைய தோள்களைக் கொட்டி அட்டகாசஞ் செய்தரர். அது கண்டு சித்தம் பிரமித்து, "நீயே நல்லவன்! நல்லவன்! இந்த உலகத்திலே உனக்குச் சமானமாகச் சொல்லுகிறதற்கு நல்லவர் யாருமில்லை. பராக்கிரமத்தைக்கொண்டு சகலமானவர்களுடனும் யுத்தஞ் செய்கிறதற்கு நீயே சமர்த்தன்! நீ பெற்றிருக்கின்ற பூரணாயுளுக்கு இப்பொழுதே முடிவு வந்தது!" என்றான் இந்திரஜித்து. அப்படி அவன் சொன்ன உல்லங்கனமாகிய வார்த்தையைக் கேட்டு, "அடா, நான் உங்களுடைய முடிவில்லாத ஆயுளுக்கு முடிவும், மகாபாவிகளாகிய ராக்ஷதர்களாய் ஜனித்துப் பெரியோர்களை எல்லாம் உபத்திரவப்படுத்துகின்ற உங்களுடைய அடங்காத ஆண்மைக்கு முடிவும், உங்களுடைய கொடுமையாகிய துஷ்கிர்த்தியத்திற்கு முடிவும், பொல்லாதவர்களாகிய நீங்கள் பிரமாதி தேவர்களை நோக்கித் தவஞ்செய்து பெற்ற

வாள் முதலாகிய ஆயுதங்களுக்கு முடிவும் இப்போதே வந்து சம்பவிக்கத்தக்க உபாயத்தைத் தேடி வந்திருக்கின்றேன். என்னுடைய பூரணுயுளுக்கு யாராலும் ஒரு போதும் முடிவே யில்லே!'' என்று சொன்னுர்.

அப்போது மேகநாதன், "இந்த எண்ணத்தைக் கெடுக்கிறேன் !'' என்று சொல்லி, அனுமருடைய திருமேனியில் உதிரமொழுகவும், அதைப் பார்த்துத் தேவர்கள் உடல் பதைக்கவும், வஜ்ராயுதத்திலும் அதிக வலிமையுடைய பாணங்களே வில்லிலே பூட்டிப் பிரயோகித்து, அவர் சிரசிலும் மார்பிலும் அழுத்திஞன். அழுத்தவே, ஆஞ்சநேயர் கோப மூண்டு, இராமசந்திரருடைய கீர்த்தியைப் போல நீண்டு உயர்ந்த விசுவரூபங் கொண்டார். அப்படி நின்ற அனுமரை இந்திரஜித்துப் பார்த்து, அவருடைய பாதிச் சரீரமாத்திரம் தெரியக் கண்டானேயல்லாமல், முழுதும் தன் கண்ணுக்குத் தெரியும்படி காணுமையால், மனந் திகைத்தவன் போல ஆச்சரியப்பட்டான்.

சுத்த வீரராகிய ஆஞ்சநேயர், தம் நீண்ட கைகளே எதிரே நீட்டி, அவனெய்த அஸ்திரங்களெல்லாம் தம்மேல் வந்து படாமல் திரும்பிப்போய் விழும்படி தட்டி வீசிவிட்டு, அவனுடைய இரதத்தில் கட்டியிருந்த பேய்களாகிய புரவிகளும் சாரதிகளும் மண்ணிலே விழுந்து மாயும்படி அறைந்தார். அறைந்த அறையினுலே தேரழிந்தது. உடனே யுகாந்தகால மாருதத்திற்குச் சமானமாகிய வேகத்தையுடைய குதிரைகள் கட்டிய மற்றொரு தேர் வந்து உதவியது. இந்திரஜித்து அதன்மேற்பாய்ந்தேறி, மேன்மேலும் பாணங்களேப் பிரயோகஞ்செய்து, அந்தப் பாணங்களினுலேயே ஆஞ்சநேயருடைய திருமேனியை மறைத்தான். அவனெய்த பாணங்களெல்லாம் அவர் மார்பில் வந்து புதைந்தன. புதைந்த மாத்திரத்திலே ஆஞ்சநேயர், ரோமங்கள் உதிர்வது போல அந்தப் பாணங்கள் அத்தனேயும் புலபுலவென்று உதிரும்படி உதறிவிட்டு, அவன் தேரின்மேலெழும்பிக்

குதித்து, உலக முழுமையும் ஜயங்கொண்ட அவனுடைய அபாரமாகிய வில்லைத் தமது கையாலெட்டிப் பறித்து, மடமடவென்று முறியும்படி ஒடித்தெறிந்தார். அந்த வில் முறிந்த ஓசை அடங்குகிறதற்கு முன் அந்த இந்திரஜித் தானவன் பூர்வகாலத்தில் வஜ்ராயுதத்தினுல் மலைகளின் சிறகுகளைக் கண்டித்த இந்திரனுனவன் போரிலே தனக்குப் பயந்து எறிந்துவிட்டுப் போன பிரசண்ட தனுசை உக்கிரத்துடனே எடுத்து நிறுத்தி, இழுத்து வளைத்து, நாரி பூட்டி, விரலால் முறுக்கித் தெறித்து, நூறு நூறு பாணங்களை ஒவ்வொரு கோவையாகக் கோத்து, சரசரவென்று மழை பொழிகிறது போலப் பொழிந்தான். அவைகள் வந்து சுரீல் சுரீலென்று அனுமருடைய சரீரத்தில் தைத்துப் பல விதக் காயங்களைச் செய்ய, ஸ்ரீ ராமதூதரானவர், சற்று நேரம் ஆயாசங் கொண்டிருந்தார். அது கண்டு தேவர்கள் அறிவழிந்து துக்கப்பட்டார்கள்.

பின்பு மாருதியார் சோகம் நீங்கி, ஒரு பெரிய மராமரத்தையெடுத்துச் சுழற்றிக்கொண்டே அவனுக்கெதிரே நடந்து, அவன் விடுகிற பாணங்களையெல்லாம் தூள் தூளாக்கித் தள்ளிவிட்டு, அந்த மரத்தினுலேயே, அவனுடைய தலையின்மேல் ஓங்கி அடித்தார். அந்த அடிபடவே, தேவர்களையெல்லாம் துரத்தியடித்த இந்திரஜித்து, தன் கிரீடம் உடைந்து விழும்படி தலை பிளந்து, மலையருவிபோல இரத்தம் பெருகிப் பாய, மெய் தளர்ந்து மனங்கலங்கிப் பிரமைகொண்டிருந்தான்; மீட்டும் தெளிவு வந்த மாத்திரத்தில் பற்களைக் கடித்து, மீசை படபடவென்று துடிக்க, அதிக கோபாவேசங் கொண்டு, தேவர்களும் அசுரர்களும் முனிவர்களும்திகைக்க, பர்வதம் போல எதிரே நிற்கின்ற அனுமருடையமார்பு கலங்க, தோளுங்குலுங்க, கடூரமாகிய ஆயிரம் பாணங்களை ஏககாலத்திலே வில்லிலே பூட்டி, விரைந்து சென்று தைக்கும்படி எய்தான். அவனெய்த பாணங்கள் வந்து மார்பிலும் தோளிலும் பதியவே, மாருதியார் மனங்கசிந்து, மிகவும் கொதித்து, சர

வேகத்தைப் பார்க்கிலும் அதிவேகத்தைக்கொண்டுபாய்ந்து, அவனைத் தேருடனே ஒரு சுண்டைக்காயைப்போல எளிதாக எடுத்து ஆகாயத்திற் போகும்படி எறிந்து, கர்ஜித்துக் கொக் கரித்தார். அப்படி அனுமரெறிந்த விசையினால் அளவிறந்த புஜபலத்தையுடைய சத்துருவாகிய இந்திரஜித்து, கண்ணி மைப்பதற்கு முன் தேருடனே ஆகாயம் வரையிற்போய் அங் கிருந்து பூமியில் வந்து விழுந்தான்; அவன் வந்து விழாத தற்கு முன்னே தேரைவிட்டு ஆகாயத்திலெழும்பினான். அப் போது அவனுடைய சேனையிலிருந்த நவரத்தினமயமாகிய சேமத்தேர்களையெல்லாம் ஓர் உழுந்து உருள்கின்ற பொழு திற்குள்ளே ஆஞ்சநேயர், அச்சு வேறு ஆணி வேறாகும்படி சிதைத்துவிட்டார்.

பின்பு இந்திரஜித்து ஏறுகிறதற்குத் தேரில்லாமலும், எதிரே நின்று போராடுகிறதற்குப் பலமில்லாமலுஞ் சங்கடப் பட்டு, வேறொன்றுஞ் செய்யக் கூடாமையினாலே தனக்கு அவமானம் வந்து சம்பவித்ததே என்று நினைத்து, விஷசர்ப் பம் போலச் சீறி, அதிக கோபங்கொண்டு, இங்குமங்கும் உழன்று, "இனி என்ன செய்கிறது? நம்மிடத்தில் பிரமபாச மொன்றுதானே இருக்கின்றது! அதுவுமிப்படிப்பட்ட ஆபத் துக் காலத்தில் உதவாமல் மற்றென்னதான் செய்ய இருக் கின்றது? அதையாவது பிரயோகம் செய்வோம்!'' என்று உத்தேசித்து, அதை மானஸீகமாகப் பூஜித்து, வில்லைக் கன்னபரியந்தம் இழுத்து அபிமந்திரித்து விட்டுவிட்டான். உடனே அந்தப் பாசம் விஷ ஜ்வாலையுடனே பிரசண்ட வேகமாய் வந்து, ஆஞ்சநேயருடைய தோள்களை இறுக்கி நெருக்கி ஒடுக்கி வளைத்துச் சுற்றிக்கட்டியது. இப்படி அந்தப் பாசமானது தமது சரீரத்தைக் கட்டி உபத்திரவப்படுத்தவே, வாயு குமாரர் தம் பின்னே தொடர்ந்து வந்த தர்மதேவதை கண்ணீர் விடும்படி தேகஸ்மரணை இல்லாமல், தோரண ஸ்தம்பத்துடனே சாய்ந்தார். இவ்விதம் சோர்வுற்றுச் சாய்ந் தவர் சிறிது பிரஞ்ஞையுண்டாகி, "இது நம்மை வருத்த

வேண்டிய கார்ணமென்ன! இது பிரமாவினுடைய வரப் பிரசாதமாய் இவனுக்கு வந்த பிரமபாசமாக வேண்டும் மற்ற அஸ்திர சஸ்திரங்களைப்போல இதை அவமதித்து நடக்கிறது நமக்குச்சரியல்ல,'' என்று நினைத்து, ஸ்ரீ ராமபத்திரரை மனத்திலே தியானித்துக்கொண்டு, கண்களை மூடினபடியே அசைவற்றிருந்தார்.

அப்போது மேகநாதன், "இந்த மட்டிலே குரங்கினுடைய வலி குன்றி, ஓட்டம் ஆட்டமெல்லாம் அடங்கி விட்டன!'' என்று சமீபத்தில் வந்தான். அப்போது அதற்கு முன் பயந்தோடிப்போய் அங்கங்கே பதுங்கிச் சமயம் பார்த்திருந்த இராட்சதர்களெல்லாம் கொக்கரித்து ஓடி வந்து சுற்றிக்கொண்டு, அனுமருடைய சரீரத்தைச் சுற்றியிறுக்கிக்கொண்டிருக்கின்ற சர்ப்பரூபமாகிய பிரமபாசத்தின் வாலையும் தலையையும் பிடித்திழுத்தார்கள். அந்தச் செய்தி கேட்டுக் குரங்கினுடைய பலமழிந்ததென்று இலங்கா பட்டணத்திலுள்ளவர்களெல்லாம் ஒரே கூட்டமாகக் கூடி வந்து, கை கொட்டிக் கூத்தாடி, இரைச்சலிட்டார்கள். கறுத்த பாம்பு உருவமாகிய பாசமானது, தமது பொன்னனைத்த மேனியைக்கட்ட, தர்ம தேவதைக்கொரு துணையாயிருக்கின்ற அனுமரானவர் பூர்வத்தில் வாயு மோதி அடித்தது கண்டு வாசுகி தன்னுடலைக்கொண்டு சுற்றும்படி சலனமில்லாமலிருந்த மகா மேருவைப்போல இருந்தார். அந்தரத்திலும், மேக மண்டலத்திலும், அஷ்ட திக்குகளிலும், இராட்சதர்களும் இராட்சதிகளும் பின்னும் வந்து மொய்த்துக் கொண்டு மழை போல ஆரவாரித்தார்கள். அவர்களுக்கு அப்பொழுதுண்டாகிய சந்தோஷத்திற்கு அளவேயில்லை. மேக நாதனானவன் தேவேந்திரனைப் பிடித்துக் கட்டிக் கொண்டு வந்த போது இலங்கா புரியானது எப்படிச் சந்தோஷித்ததோ, அப்படியே அன்றும் சந்தோஷித்தது.

## 13. பிணி வீட்டு படலம்

சகலமானவர்களும், "இந்தக் குரங்கு கெட்டது. இதை. எய்யுங்கள்! பிளவுங்கள்! வெட்டுங்கள்! பீறுங்கள்! அரியுங்கள்! குடலைக் கூறு கூருக்குங்கள்! மண்ணிலிட்டுத். தேயுங்கள்! தின்னுங்கள்! இது பிழைக்குமாகில் நம்முடைய பிராணனை மாய்த்துவிடும்!" என்று சொல்லிக்கொண்டு ஓடி வருகின்ருர்கள்.

அனுமரை இழுத்துக்கொண்டு எதிரே வரும்போது இலங்கையிலுள்ளவர்கள் கண்டு சந்தோஷத்தினுல் அண்ட கடாகமட்டும் அளாவும்படி ஆர்ப்பரிக்கின்ற சத்தத்தைக் கேட்டு, கண்டதுண்டமாகி மாண்டு போன தங்கள் நாயகன் மார்களுக்காக அழுதுகொண்டிருந்த ஸ்திரீகளும், துக்கம் நீங்கிச் சந்தோஷித்தார்கள்.

அனுமரானவர் இலங்கையின் வீதியிலே பார்த்துக் கொண்டே போனுர். இராட்சத ஸ்திரீகள் அனுமருடைய தோளிற்கட்டிய கயிற்றைக் காணுமல், "ஐயோ! இந்தக் குரங்கு இங்கும் வந்துவிட்டதே! என்ன செய்வோம்!" என்று வயிற்றிலடித்துக்கொண்டு ஓடுகிறதைக் கண்டு, அனேகர் மயங்கினர். அனுமர் கோஷிப்பதனுல் அனேகர் பேசப் பயந்து வாயைத் திறவாமல் அடங்கியிருந்தனர். இராட்சதர் களும் இராட்சதிகளும் தவிர மற்றவர்களெல்லாம் சீதா பிராட்டியினுடைய துக்கத்தைப் பார்த்தோ, அல்லது இரக்கத் தினுலோ, அல்லது தர்மம் இளைத்துப் போய்விட்டதென்றோ, பகிரங்கமாகக் கண்ணீர் விட்டழுதனர். கருடனைப் பார்க் கிலும் மூன்று பங்கு விசேஷமாகிய பலத்தினையுடைய கிங்கரர்கள் அனுமரைக் கட்டிய பாசத்தை இறுகப் பிடித்து இழுத்துக்கொண்டு போனுர்கள். அப்பொழுது ஆஞ்சநேயர், "இதுவே முகாந்தரமாகப் போய் இலங்காதி பதியாகிய இராவணனைக் காண்கிறதே நல்லது!" என்று மனத்திலே நினைத்து அவர்களுடனே போனுர்.

அவர், “ என் பிதாவாகிய வாயு பகவானுடைய கிருபை யினுலும் ஸ்ரீராமபிரானுடைய திருவடித்தியான பலத்தினுலும், தேவர்கள் பூர்வம் எனக்குக் கொடுத்திருக்கின்ற வரத்தினு லும், இந்தப் பிரமபாசத்தைக் கண்டதுண்டமாகச் செய் வேன் ! ஆயினும், அப்படிச் செய்யாமலிருக்கிறதே சர்வோத் தமம். வக்கிர தந்தங்களையுடைய ராக்ஷஸாதிபதியினிடத் திற்போய் அவனும் அவன் சமுகத்திருக்கின்ற மந்திரிமார் பிரதானிமார்களும் மற்றுமுள்ள பெரியோர்களும் அறியும்படி எதார்த்தமாக இனி விளையும் விளைவைச் சொன்னுல், ஒரு வேளை மனந்தளர்ந்து, பிராட்டியாரை என் வசமாகக் கொடுத்துவிடவும் கூடும் ; அல்லாமலும், அவனுக்கு உப பலமாயிருக்கின்றவர்களின்னுரென்பதும் இத்தனை பேரென் பதும் தெரியலாம் ; அவர்களுடைய அபிப்பிராயத்தையுமறி யலாம் ; இராவணனுடைய ஸ்திதியையும் மனக் கருத்தை யும், அவன் முகக் குறிப்பே தூதாகச் சொல்லவும் தெளிய லாம். மேலும், வாலி மாண்டதும், மராமரம் பட்ட பாடும், சுவாமிக்கு அநுகூலமாயிருக்கின்ற வானர சைனியத்தின் பலமும் மிகுதியும், சுக்கிரீவருடைய ஆண்மையின் பெருமை யும், அங்கதனுடைய பாராக்கிரமமும் நாம் சொல்லக் கேள் விப்பட்டால், இராவணனுடைய மனத்தில் உறுத்தும். ஆகையால், அந்த ராக்ஷதேந்திரனுக்குச் சமீபத்திற்போய் ஆண்மையையும் நீதியையும் அவன் மனத்திலே கொள்ளும் படி நிறுத்தி, அதற்குச் சம்மதியாமற்போனுல், அப்புறம் அவ னிடத்தில் இன்னும் இறவாமலிருக்கின்ற சேனைகளில் பாதிக்கு மேற்படக் கொன்று குவித்துவிட்டு, மெதுவாய்ப் போய்விடுகிறதே காரியம்,” என்று தீர்க்கமாயாலோசித்துச் சித்தப்படுத்திக்கொண்டார் ; ஆகவே, தம் புஜபலத்தின் சத் துவமொன்றையும் காட்டாமலடக்கிக்கொண்டு போனுர்.

இந்திரஜித்துவோ, சேனு சமுத்திரமானது நாற்புறத் திலும் மொய்த்துச் சுற்றிக்கொண்டு வர, ஒரு ரிஷபமானது கட்டுப்பட்டு வருகிறது போலக் கட்டப்பட்டு வருகின்ற அதி

வீரராகிய அனுமரை இராவணேஸ்வரன் இருக்கின்ற அரண் மனைக்குக் கொண்டு போனான்.

அப்போது தூதர்களோடி இராவணனைச் சேவித்து, "சுவாமி, தேவரீருடைய ஜேஷ்டபுத்திரர் யுத்தம் செய்து பிரமபாசத்தை விட, அதில் அந்தக் குரங்கு அகப்பட்டுக் கட்டுப்பட்டது!" என்று சொன்னார்கள். இராவணன் அதிக சந்தோஷமாகி, தன் மார்பில் அணிந்திருந்த கோடி சூரியப் பிரகாசமாகிய இரத்தினாரத்தைக் கழற்றி அந்தச் செய்தி சொன்னவர்களுக்குக் கொடுத்தான். பின்னும் அளவில் லாத மகிழ்ச்சியினால் அவன் தோள்கள் பூரித்தன. அவன் அவர்களைத் தன் கண்கள் மலரப் பார்த்து, "சீக்கிரத்தில் நீங்கள் போய் அந்தக் குரங்கைக் கொல்லாமற்கொண்டு வர நான் சொன்னதாகச் சொல்லுங்கள்," என்று சொல்லி அனுப்பினான்.

அந்தச் சொல்லைத் தூதர்கள் ஓடி வந்து இந்திரஜித்து அறியும்படி சொன்னார்கள்.

இப்படி நடந்துகொண்டிருக்கும் பொழுது ஆஞ்சநேயர் அசோகவனத்தை அழித்தாரென்றும், மிதமற்ற இராட்சதர் களை மாயும்படி கொன்றாரென்றும் அப்போதைக்கப்போது கேள்விப்பட்டுச் சந்தோஷித்துக்கொண்டிருந்த சீதாபிராட்டி, அனுமர் இந்திரஜித்தன் கையிற்சிக்கிப் பாசத்தாற் கட் டுண்டு இழுத்துக்கொண்டு போகப்பட்ட சமாசாரங் கேட்டு உயிர் சோரும்படி நிலத்தில் விழுந்து, மாணிக்கப் பிரதிமை யானது புகை சூழப்பட்டதுபோல மிருதுவாகி விளங்குகின்ற திருமேனியிற்புழுதி படியப் புரண்டு, மகத்தாகிய வருத்தத் துடனே பிரலாபிக்கத் தொடங்கினாள்: "அப்பனே, என் கண்மணியாகிய ஆஞ்சநேயா, அனுமனே, அடுக்கடுக்கா யுள்ள அண்டங்களையெல்லாம் ஊடுருவ வளர்ந்து, அவ்வண் டங்கள் முழுமையும் உன்னுடைய உருவத்தில் மறையும்படி ஓங்கி நின்றாய்; இப்படிப்பட்ட மகிமையையுடைய நீ, ஒரு கள்ளனாகிய இராட்சதனாற்பிடியுண்டு பாசத்தாற் கட்டுண்

டாயே! இதுதானே தர்மநீதியென்பது? புஜபல பராக்கிர மத்தையுடைய நீ என்னைத் துக்கத்தினின்றும் ஈடேற்றும் படி சமுத்திரத்தைக் கடந்து இந்த இலங்கைக்கு வந்து, இங் குள்ள ராக்ஷதர்களுடைய சரீரங்களைச் சின்னபின்னப்படுத் தியும் உனக்கு ஒரு துன்பமுமில்லாமல் உஜ்ஜீவித்திருந்தாய்; இப்போது முன்னிருந்த வருத்தத்திலும் அதிக வருத்தத்தை எனக்கு உண்டாக்கினாய். ஸ்ரீ ரகுநாயகருடைய திருவாழி யைக் கொண்டு வந்து காட்டி நீ என் பிராணனை ரக்ஷித்தபடி யினாலே, கற்பாந்தகால பரியந்தம் இறவாமல் சிரஞ்சீவியா யிருக்கும்படி உனக்கு நான் வரங்கொடுத்தேன். அதுவோ, என்றைக்கும் அழியாது. அது இருக்கட்டும். இன்னமொன் றுண்டு: பர்வதத்திற்கு ஒப்பாகிய உன் புஜபலத்தைக் காட் டப்போய் உடனே பெரிதாகிய அபகீர்த்தியை விளைத்தாய்! மேலும், நீ என்னைக் கண்டுகொண்டு போய் என் பிராண நாயகராகிய அந்தப் புருஷோத்தமரிடத்திற்சொல்லி, நானிருக்குமிடத்தை அவருக்குக் காட்டி அவரை அழைத்து வர, அவர் வந்து, இந்தக் கொடிய பாபிஷ்டர்களாகிய ராவ ணாதி ராக்ஷதர்களை யுத்தத்தில் சங்காரஞ்செய்து என்னைச் சிறைமீட்டுக்கொண்டு போவாரென்று நினைத்திருந்தேன். அக்காரியத்திற்கும் தடை செய்தாய்!'' என்று சொல்லிச் சொல்லித் தன்னுயிர் தேயும்படி துக்கித்து, இளங்கன்றைப் பறி கொடுத்த தாய்ப்பசுவைப்போல தீயையுஞ் சுடுகின்ற கற்பினையுடைய ஜானகி உடல் தளர்ந்து மதி மயங்கினாள்.

அந்தச்சமயத்திலே மகாத்துமாவாகிய அனுமரைக் கட் டிக்கொண்டு போன இந்திரஜித்து, பிரதாப இலங்கேஸ்வரன் வீற்றிருக்கின்ற சபாமண்டபம் போய்ச் சேர்ந்தான்.

இலங்கேஸ்வரனை ஆஞ்சநேயர் கண்டார்; பெருமூச் செறிந்தார்; பொறுத்து நின்று, ஒரு யோசனை செய்தார்: "சர்வசங்கார காலத்தினிருளெல்லாந் திரண்டதற்கொப்பாய் இருக்கின்ற கறுத்த நிறத்தையுடைய இந்த இராவணனே, மகாபலவான்; ஒருவராலே கொல்லுந்தரமுடையவனுமல்லன்;

வெல்லுந்தரமுடையவனுமல்லன் ; இவனுடைய புஜபலமோ, இராமசந்திரரால் வெல்லப்படுமேயல்லாமற் பிறரால் வெல் லப்படாது. இவனுக்கு என்னை ஜயிக்கிறதருமை ; எனக் கும் இவனை ஜயிக்கிறதருமையாகும். யுத்தஞ் செய்ய ஏற்பட் டால், தோற்புக் கெலிப்பில்லாமலே வெகுகாலம் வீணுகக் கழிந்து போம். அகனல், போர் செய்யத் தொடங்குவது சரி யன்று. அதுவுமன்றி, ஸ்ரீ ராமசந்திரர், 'சப்தலோகத்தாருந் துன்பம் நீங்கி இன்பத்தையடைய அந்தத் திரிலோக பயங் கரனுகிய ராவணனுடைய இருபது தோள்களையும் பத்துத் தலைகளையும் அஸ்திரத்தினுலறுத்துத் தள்ளிப் புழுதியிற் புர ளும்படி செய்கின்றது என்னுடைய கடன்,' என்று முன்பு சொல்லிய ஒரு வார்த்தையுமிருக்கின்றது. மேலும், பிராட்டி யார் நம்முடனே, 'இவ்விடத்தில் இன்னம் ஒரு மாத பரியந்தந் தான் நான் பிராணனுடனிருப்பேன்,' என்று ஸ்ரீ ராமபத்திர ருடைய திருவடி சாட்சியாகச் சொல்லியிருக்கின்றதனுல், அவரெதார்த்தமாக இறந்து போவாராகையால், யுத்தஞ்செய் கிறதுநன்மையேயன்று; நாம் தூதனுகவே பேசுகிறது யோக் கியம்,'' என்று நினைத்து, அந்த இராவணன் சமீபத்திற் போனுர்.

ஸ்திரீகள் கூட்டத்தின் நடுவிலிருந்த தன் பிதாவாகிய தசக்கிரீவனுக்கு இந்திரஜித்து, அனுமரைக்காட்டி "ஐயா, உலகங்களெத்தனையுண்டோ அத்தனையும் ஜயித்த இரணி யேஸ்வரனைச் சங்கரித்த நரசிங்கமூர்த்தியைப் போலவும். சங்கார கர்த்தாவாகிய சிவனைப்போலவும், மகா சேவகனு யிருக்கிறவன் இந்தக் குரங்குருவத்தையுடையவன்,'' என்று சொல்லி, இரண்டு கைகளையும் கூப்பி நமஸ்காரஞ் செய்தான்.

அப்பொழுது பெருமூச்செறிந்து, மகத்தாகிய கோபத் துடனே, தேவர்கள் அசுரர்கள் முதலாகிய சத்துருக்களெல் லாம் மனந்திடுக்கிடும்படி எமனைப்போல மிக உக்கிர மாக அதட்டி, "நீ என்ன நிமித்தமாக இங்கே வந்தாய்? நாமரூபங்களை மறைத்துக்கொண்டு வந்த நீ யார்? இவ்விடத்

திற்கு வந்த காரணமென்ன? யாருன்னை அனுப்பினவர்? எங்களுக்குத் தெரியும்படி உள்ளதைச் சொல்,'' என்று தேவர்களுடைய கீர்த்தியை வேரோடு விழுங்கிய இராவணன் கேட்டான்.

அதற்கு ஆஞ்சநேயர், புண்டரீகாக்ஷராகிய ஒரு கோதண்ட தீக்ஷா குருவினுடைய தூதனீ நான்; அவராரென்று அறியக் கேட்பாயாகில், முனிவர்களும் தேவர்களும் மும்மூர்த்திகளும் மற்ற யாவரும் எவைகளும் நினைப்பதற்கு அருமையாகிய பெரிய காரியங்களை முடிக்க வந்திருக்கின்றவர். உங்களுடைய பலத்தையும் பூர்வத்தில் நீங்கள் செய்த தவத்தையும் சேனைகளையும் தேவர்கள் கொடுத்த வரங்களையும் எண்ணத்தையும் வாழ்வையும் பின்னும் உங்களுக்குரிய துர்க்குணம் துர்நடத்தை முதலாகிய சுகலத்தையும் ஒரே பாணத்தினுலே வேருடனே களையும்படி உத்தேசித்திருக்கின்றவர். அவர் பூலோக புரந்தரராகிய தசரத சக்கரவர்த்தியார் குமாரர். ஞானமும், சாஸ்திரக் கேள்வியும், மகா தவமும், அழியாத வரங்களும் அவரெப்படி நினைக்கின்ருரோ அப்படியெல்லாஞ் சித்திக்கும். இதற்குச் சாக்ஷி வேதங்களும் தர்ம தேவதையுமே சொல்லும். அவர் அயோத்தியா புரியில் அவதரித்தார். மேலும், தர்மத்தை நிலைநிறுத்தி, வேதஞ்சொல்லுகின்ற நீதிகளையெல்லாமறிந்து உலகத்தார் நடக்கும்படி சன்மார்க்கத்திலே அவர்களைச் செலுத்தி, துர்ச்சனர்களைச் சங்கரித்து, சற்சனர்களுடைய பிறவிப் பிணியை நீக்குகின்ற பரமௌஷதமாயிருக்கின்றவரும் அவரேயன்றி வேறில்லை. யான் அப்படிப்பட்டவருக்குத் தொண்டு செய்வோன். என் பெயர் அனுமனென்பது. நான் சீதாபிராட்டியாரைத் தேடிக்கொண்டு நான்கு திக்கிலும் போயிருக்கின்ற வானராதிபதிகளில் தென் திசைக்கு வந்த வானரசேனைகளுக்கு ராஜாவாகிய வாலி குமாரனென்கிற அங்கதனுடைய தூதனுய்த் தனியே இந்த இலங்கைக்கு வந்தேன்,'' என்று சொன்னுர்.

இவ்வண்ணம் அனுமர் சொன்ன சொல்லே இராவணன் கேட்டு, மேகத்தின் மத்தியில் மின்னல் பிரகாசிக்கிறது போல நகைத்து, "வாலிபுத்திரன் அனுப்ப வந்த தூதனே, அந்த வாலி சுகமாயிருக்கிருனு?" என்று கேட்டான்.

ஆஞ்சநேயர் சிரித்து, "இராட்சதா, நீ பயப்படாதே! அந்த வாலி பூமியிலில்லே; அன்றே சுவர்க்கம் போனுன். அவன் திரும்பி வரமாட்டான். அவனுடைய வாலும் போய் விட்டது. என் நாயகராகிய ஸ்ரீ ராமருடைய ஒரு பாணத் தாலேதான் அவனிறந்தான். இப்போது எங்களுக்குச் சூரியகுமாரராகிய சுக்கிரீவர் ராஜாவாயிருக்கின்ருர்," என்று சொன்னுர்.

அது கேட்டு, "ஏன் வாலியை இராமன் கொன்ருன்? அந்த இராமன் எங்கே இருக்கின்ருன்? அவன் மனேவியை அங்கதன் தேடவேண்டிய காரணமென்ன?" என்று இராவ ணன் கேட்டான்.

அதற்கு வாயு குமாரர், "இரகுநாயகர் தம் திருத் தேவியாரைத் தேடிக்கொண்டு வந்தார். அந்தப் புருஷோத்த மரை எங்கள் சுக்கிரீவமகாராஜர் பிராணபதமாகச் சினே கித்து, தமக்குச் சம்பவித்திருக்கின்ற துக்கத்தை நிவர்த்தி செய்யவேண்டுமென்று முறையிட்டுக்கொண்டார். அப் பொழுது ஸ்ரீ ராமசந்திரர் வாலியைக் கொன்று, அவனுல் அபகரிக்கப்பட்டிருந்த சுக்கிரீவருடைய மனேவியாகிய உருமை என்பவளேயும் ராஜரிகமாகிய மகா சம்பத்தையும் அவருக்கு மீட்டுக் கொடுத்து, அவருடனே அவ்விடத்தில் ஆறு மாதமிருந்து, வானர சைனியங்களே வரவழைத்து, பின்பு ஜானகியாரைப் போய்த் தேட வேண்டுமென்று சுக்கி ரீவ மகாராஜர் எங்களுக்கு உத்தரவு செய்ய, நாங்கள் அந்த லோகமாதாவைத் தேடிக்கொண்டு புறப்பட்டோம். இதுதான் நடந்த சமாசாரம்," என்று சொல்ல, இராவணன், "உங்கள் குலத்திற்கு அதிபதியும் தனக்கு ஒருவரும் சமான மில்லாதவனுமாய்ச் சிலாக்கியனுயிருந்த வாலியை ஒரு

பாணத்தினலே கொன்ற மனிதனுக்கு அடிமைப்பட்டு, அவன் ஏவிய பணிவிடையைச் செய்துகொண்டிருக்கின்றீர்களே! இப்படியிருப்பீர்களாகில் உங்களுடைய கீர்த்தி அழிந்து போம்! உலகமும் நாசமடையும்! தன் தமையனைக் கொல்லும்படி செய்து அவனைக் கொன்ற இராமன் விஷயத்தில் அதிக அன்பு கொண்டிருக்கின்ற உங்கள் ராஜனுகிய சுக்கிரீவன் அனுப்ப, எனக்கு என்ன சமாசாரம் நீ தெரிவிக்க வந்தாய்? தூது வந்த நீ யுத்தம் செய்ய வேண்டியதென்ன? ஒரு வேளை உன்னை நாங்கள் கொல்லுவோமென்று பயப்படுவாய். கொல்லவில்லை. மனத்திலே அச்சமில்லாமற்சொல்,'' என்று கேட்டான்.

இவ்விதம் இராவணன் சொன்ன சொற்களை ஆஞ்சநேயர் ஆலோசித்துப் பார்த்து, "பொறுமையாகச் சில நீதிகளை இவனுக்கு நாம் போதித்தல் ஏற்புடையது,'' என்று கருதி, "உன் வாழ்வை நீ வீணுகக் கெடுத்துவிட்டாய்! சிறிதாவது ராஜதர்மமும் பார்க்கவில்லை! பாவத்தையே செய்ய ஏற்பட்டாய்! ஆகையால், உனக்கு முடிவு வந்துவிட்டது! ஆகிலும், இன்னமோர் உறுதி சொல்லுகிறேன்; கேள்: அதனல் நெடுங்காலம் நிலைபெற்று வாழ்வாய். அழியாத கற்பினல் அக்கினியைப் போலும் பரிசுத்தத்தையுடைய ஜானகியாரைத் துன்பப்படுத்தியதால், நீங்கள் ஐம்பொறிகளையும் அடக்கிச்செய்த உங்களுடைய முடிவில்லாத பெருந்தவங்களெல்லாம் மாண்டு போக நேர்ந்தது. நீ தீமையானது நன்மையை அழிக்க மாட்டாதென்கிற உண்மையைக் கைவிட்டாய். லோகநாயகியாராகிய வைதேகியாரின் திருவழகின் நிமித்தம் உனக்குண்டாகிய காம வியாதியினல், நீ அகோரத் தவம் செய்து பெற்ற அகண்டைஸ்வரியத்தையும் முன் பின் பாராமல் இழந்துவிடுகின்ருய்! வகை கெட்ட காமச்செருக்கினல் தம்மைத் தாம் மறந்து மதி மயக்கங் கொண்டு தர்மந் தவறினவர்கள், இம்மையில் தங்கள் செல்வத்தை இழந்து துர்மரணத்தையுற்று, மறுமையில் ரௌரவாதி நர

கத்தையடைந்து, பின்னும் பிறந்து உழல்கின்றதேயல்லாமல், யார்தான் நிலைபெற்று வாழ்ந்தார்? ஸ்திரீகள் மேல் காமங்கொண்டு இறந்தவர்கள் மிதமில்லாதவர்கள். சன்மார்க்கத்தையுடைய பெரியோர்கள் பொருளும் ஸ்திரீ இன்பமுமாகிய இந்த இரண்டையும் அபேக்ஷிக்கிறதைப்பார்க்கிலும் வேறே நரகவேதனையுண்டென்றும், தானமும் ஜீவகாருணியமும் காமமில்லாமையுமாகிய இவைகளைப் பார்க்கிலும் வேறே மோக்ஷசுகம் உண்டென்றும் நினையார்கள். துர் இச்சையினுல் பரதாரத்தை விரும்பி எக்காலமும் யாவரும் நகைக்கக்கண்டு நாணமில்லாமல் உழல்கின்றவன், பழிக்கு உடன்படுவான். அப்படிப்பட்டவனுடைய ஆண்மையும் நசித்துப் போமேயல்லாமல், விருத்தியாக மாட்டாது. சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையாண்டு அரசு செய்தவர்களுக்குள், உன்னைவிட நீதியுடையவர்களும் சதுர்வேத பண்டிதர்களும் யாரிருக்கின்றூர்கள்? ஆ! ஆ! அப்படிப்பட்ட நீ, இப்பொழுது தர்மப் பிரமாணத்தைக் கடக்கின்றுயே! ஒருவன் தன்னிடத்தில் விருப்பமில்லாத ஒருத்தியை அபேக்ஷித்து வேண்டி, பின்பு கூடாதென்று அவளால் தடுக்கப்பட்டால், உடனே பிராணத் தியாகம் பண்ணிக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாமல் வாழ்கின்ற வாழ்வைப் பார்க்கிலும் சிறந்த முகத்தின் நடுவே அழகாக நீண்டுயர்ந்த மூக்கறுப்புண்பதுவே அழகென்று சொல்லப்படும். உலகத்தைப் பொடி செய்கின்ற வலிமை பெற்றவைகளாய் இப்பொழுதிருக்கின்ற இந்த இருபது புஜங்களும் பத்துத் தலைகளுமேயல்லாமல், இன்னமும் அனேக புஜங்களும் அனேக சிரசுகளும் உனக்கு உண்டாயிருந்தாலும், அவைகளெல்லாம் ஊரைப் பற்றியெரிக்கின்ற கடுநெருப்பின் மேலிட்ட பலபல வஸ்திரங்களும் அந்த நெருப்பை மீறவொட்டாமல் அடக்கி ஊரை ரக்ஷிக்க மாட்டாதது போலவே, உனக்கு வருங்கேட்டை நீக்கப் பிரயோசனப் படமாட்டா. மேலும், முப்புரங்களும், அக்கினி தத்தமாகும்படி கோபித்த

உமாபதியானவர் கொடுத்த வரம் முதலானவைகளும் பயன் படாமல் அழிந்து போமென்று எண்ணவேண்டுமேயல்லாமல், வேதநெறி தவருத இராமசந்திரருடைய பாணங்கள் உன்னைக் கொல்லாமல் விடுமென்று நினைக்கக் கூடாது. ஆகையால், நீ அழிவில்லாத மானமழியக் குறைவில்லாத நல்ல சம்பத்தையும் எளிதிலே கெடுத்துக்கொண்டு, இராமபாணத்தினுல் வருந்துவது தருமமன்று. ஆகையால், நீ வருந்தித் தவஞ் செய்து அருமையாகப் பெற்ற செல்வம் நிலைபெறவும், அபரிமிதமாகிய சுற்றத்தார் சுகப்படவும், நீயுமந்தக் கோதண்டபாணியின் அம்புக்கு இலக்காகாமல் உயிரோடு வாழ்ந்திருக்கவும் நினைத்தால், அந்த ஜகன்மாதாவாகிய ஸ்ரீ ராம பத்தினியாரை விட்டுவிடும்படி எங்கள் சூரிய குமாரராகிய சுக்கிரீவ மகாராஜர் உனக்குச் சொல்லச் சொன்னுர்,'' என்று சொன்னுர்.

இப்படிச் சொன்னவுடனே ஜயமென்பதொன்றையே அல்லாமல் வேறென்றையும் நினையாத இராவணேஸ்வரன் கோபித்து, "குன்றுகளில் சஞ்சரிக்கின்ற குரங்கா இந்த நீதிகளை எனக்குச் சொல்லியது? நல்லது! இனிக் குரங்கின் புத்தியைக் கேட்டுத்தான் நான் பிழைக்க வேண்டும்!'' என்று சொல்லிக் கடகடவென நகைத்து, "அடா, அந்தச் சுக்கிரீவனுகிய குரங்கு சொன்ன மனுநீதிக் கிரமமும், இராம லட்சுமணர்களாகிய அற்ப மனிதருடைய வீரப்பிரதாபமும் அப்படியிருக்கட்டும். எப்படிப்பட்டவர்களாலும் கடக்கக்கூடாத காவலையுடைய இந்த இலங்காபுரத்தில் தூதாக வந்த நீ, இராட்சதர்களைக் கொன்றுயே! அதென்ன? சொல்லடா,'' என்று அதிக கோபத்துடனே கேட்டான். அதற்கு அனுமரானவர், "இவன் மரியாதை தவறிப் பேசுகின்றதனுல் நாம் மாத்திரம் மரியாதையுடனே பேசவேண்டுவதென்ன?'' என்று, தசக்கிரீவனைப் பார்த்து, "அடா, கேளடா: உன்னை எனக்கு நேரே காட்டுகின்றவர் ஒருவருமில்லாமையால், பூங்காவை அழித்தேன். அப்படி அழிக்கின்ற என் கருத்தை

அறியாதவர்களாய் மூர்க்கர்களாகிய இராட்சதர்கள் என்னைக் கொல்ல வந்தார்கள். அது கண்டு என்னைக் கொல்ல வந்தவர்களை நான் கொன்றேன். பின்பு வேண்டுமென்றே இந்திரஜித்தினுடைய பிரமபாசத்திற் கட்டுண்டவனாய் அடங்கி, உன்னைக் கண்டு பேச வந்தேனடா," என்று சொன்னவுடனே, இராவணன் இருபது கண்களிலுமிருந்து அனற்பொறி பறக்கப் பத்து வாய்களிலுமுள்ள பற்களைக் கடித்து, அகோரமாகிய கோபத்தையுடையவனாய்க் கொலை செய்வாரைப் பார்த்து, "இந்தத் துஷ்டக் குரங்கைச் சின்ன பின்னமாகும்படி கொல்லுங்கள்!" என்று சொன்னான். உடனே அவர்கள் கூட்டமாகத் திரண்டு வந்தார்கள்.

அப்போது நீதிபரராகிய விபீஷணாழ்வார் அக்கொலையாளரைப் பார்த்து, "நில்லுங்கள்! நில்லுங்கள்!" என்று மறுத்தவராய் எழுந்து நின்று, இரண்டு கைகளையுங் குவித்து, தமக்குத் தமயனாகிய இராவணேஸ்வரனுக்குத் தண்டனிட்டு, அவனைப் பிரார்த்தித்து, "நீர் கோபிப்பது முறைமையன்று. திரிலோகங்களையும் சிருஷ்டித்த பிரமதேவனிடத்திலும் சிவனிடத்திலும் மிகுத்த பத்தி செய்கின்ற தவமார்க்கத்தையறிந்து தேவேந்திரனே ஏவல் செய்யும்படி இராஜரிகஞ் செய்கின்ற பிரதாப இலங்கேந்திரரே, ஒருவன் 'தூதாக வந்தேன்,' என்று சொல்லக்கேட்டும், அவனைக் கொல்லலாமா? வேதங்களில் பூரண பாண்டியத்தியமுடையவரே, பூலோகத்திலும் தேவலோகத்திலும் சத்திய லோகத்திலும் பாதாள லோகத்திலும் இருக்கின்ற அரசர்களுள்ளும், ஸ்திரீகளைக் கொலை செய்தவர்களிருந்தாலுமிருக்கலாம். தூதர்களைக் கொன்றவர் ஆராகிலும் உண்டா? உண்மையாக உலகங்களைச் சம்ரக்ஷணை செய்கின்ற அரசராகிய நீர், நம்முடைய சத்துருக்களால் அனுப்பப்பட்ட தூதனைக் கொல்லுதல் மகத்தாகிய குற்றமாகும்! மேலும், பிரமா, விஷ்ணு, ருத்திரன் முதலாக நம்முடனே எதிர்த்துச் சண்டை செய்யச் சத்தியில்லாமல் பயந்து இருக்கின்ற தேவர்களுக்கெல்லாம் சிரிப்புக்கு

இடமாகும். நம்முடைய தங்கையாகிய சூர்ப்பணகை மூக்கையும் காதையும் அறுத்து, அவளைக் கொல்லாமல், 'இவ்விடத்தில் நடந்த சங்கதிகளையெல்லாம் போய்ச் சொல்,' என்று உண்மையை அறியத்தக்க வீரர்களாகிய இராமலட்சுமணர்கள் அனுப்பினார்களே! அது ஏதுக்கு? தங்கள் புஜபல பராக்கிரமத்தை நமக்கு அறிவிக்கும்பொருட்டல்லவா? இவனை உயிருடனே விடாமல் கொல்லுவீரானால், இவன் வந்து நம்மிடத்திற்கண்ட நமது பிரதாபத்தை நீர் அவர்களுக்குத் தெரியப்படுத்துகிறதற்குப் பயந்தவராய்விடுகின்றீர். இதற்குச் சந்தேகமில்லை,'' என்று இப்படி இணக்கமாகவும் நயமாகவும் சொல்லக்கேட்டு, இராவணேஸ்வரன், "இது மெய்தான். தம்பி, நீ நல்ல சொல் சொன்னாய்! நமக்குத் துஷ்கிர்த்தியத்தைச் செய்தாலும் இவனைக் கொல்லுகிறது குற்றந்தான்; இருக்கட்டும். 'சீக்கிரமாகப் போய் இந்தச் செய்தியைச் சொல்லி அந்த மனிதர்களை அழைத்துக்கொண்டு வா,' என்று இக்குரங்கின்வால் அற்றுப்போகும்படி சீலைகளைச் சுற்றி, நெய்யில் தோய்த்து, நெருப்பிலே கொளுத்திப் பட்டணத்தைச்சுற்றி இழுத்துக்கொண்டு போய் இந்த எல்லையிலிருக்கவொட்டாமல் அப்பாலே தூரத்திலே துரத்திவிடுங்கள்!'' என்று சொன்னான்.

அந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலே, ராக்ஷதர் அனேகர், 'அப்படியே செய்கிறோம்,' என்று இரைந்து கொண்டு புறப்பட்டன.

அத்தருணத்தில் இந்திரஜித்தானவன், "நாம் கட்டிய பிரமபாசத்துடனே இந்தக் குரங்கைக் கொளுத்துகிறது தோஷம். இனிக் கயிறுகளைக் கொண்டு வந்து கட்டுங்கள்,'' என்று ராக்ஷதர்களுக்குச் சொல்லி, அனுமருடைய தோள்களைச் சுற்றி இறுக்கிக்கொண்டிருந்த பிரமாவின் வரப்பிரசாதத்தால் பெற்ற பாசத்தின் கட்டவிழ்த்து விட்டான். உடனே இராக்ஷத வீரர்கள் நாலு திக்கிலும் ஓடி, கயிறுகளைக் கொண்டு வந்து ஆஞ்சநேயரை இறுக்கிக் கட்டினார்கள். அது

கண்டு, "நாம் தெய்விகமாகிய பாசத்தை அலட்சியம் பண்ணி அதை அறுத்துச் சிதைத்துத் தர்மம் தப்பலாகா தென்னும் ஆக்கினைக்கல்லவோ அஞ்சியிருந்தோம்! அவ் வண்ணமே நெறி தவருதிருக்கச் சத்துருக்களே அதை விடுவித்து நம் பக்ஷத்தில் மிகவும் உதவி செய்தார்கள்! இனி நாம் ஜயித்தோம்! இவர்கள் நம் வாலைச் சுடும்படி நினைத்த நினைவு, நம்மை நோக்கி, 'இந்த இலங்கையை நீ சுட்டெரித்துவிடு,' என்று துணிவு கொண்டு ஏவினதே யாகும்," என்று நிச்சயம் பண்ணிக்கொண்டு, பல திசை யையும் பார்த்து, தோஷரகிதராகிய ஆஞ்சநேயர் வெகு வாய்ச் சந்தோஷித்து, சொற்பமாகிய கயிறுகளைக் கொண்டு கட்டி இழுப்பதைச் சகிக்கத்தக்க சத்தியில்லாதவ ரைப் போலச் சரீரம் நடுங்கியும், கொடியவர்களாகிய ராக்ஷ தர்கள் பக்கத்திலிருந்து உபத்திரவஞ் செய்ய அதை நீக்கிக் கொள்ளத்தக்க உபாய தந்திரத்தை அறிந்திருந்தும் அப்படிச் செய்ய வேண்டுமென்னும் நினைவில்லாமலுமிருந் தார். இப்படி என்னையராகிய ஆஞ்சநேயர், மெய்ஞ் ஞானத்தை அறிந்தும் அறியாதவன் போல இருந்து பிரபஞ்ச மாயையாகிய பொய்யை மெய் போலக்கொண்டு நடிக்கின்ற யோகி போல அவர்கள் செய்யும் மாயைகளையெல்லாம் வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டு அவர்களுடனே போகின்றார். ராஜாவின் அரண்மனை ஆசாரவாயிலைக் கடந்து சீக்கிரத்தில் வெளியே கொண்டு வந்து ஒரு புறத்தில் நிறுத் திச் சாந்தமில்லாத மூர்க்கர்களாகிய அந்த ராக்ஷத வீரர்கள் நாற்புறமும் நெருங்கி நின்று நீண்டு உயர்ந்த அவருடைய வாலில் பல வகைப்பட்டசீலைகளை நெருங்கச் சுற்றி, எண் ணெயில் முழுதுந்தோய்த்து, நுனியில் நெருப்பிட்டுக் கொளுத்தி, கை கொட்டிநகைத்தார்கள். பின்பு தோள்களி லும் தொடைகளிலும் கால்களிலும்கைகளிலும் கழுத்திலும் இடுப்பிலும் கட்டிய கயிறுகளைப் பலர் இறுக்கிப் பிடித்துக் கொண்டு போகத் தொடங்கினர். ஆயுதபாணிகளாய்

இரண்டு பக்கத்திலும் காவல் வீரர்கள் திரண்டு வரத் தலைப் பட்டார்கள்.

சிலர் கோவென்று இரைந்து, ஜானகியிடமும் போய்ச் சமாசாரஞ் சொல்லினர். அது கேட்ட பிராட்டி உயிர் பதைத்து, உடல் வெயர்த்து, வாய் உலர்ந்து, விம்மி விம்மி, மண்மேல் விழுந்து அழுது, பெருமூச்செறிந்து; "ஐயா, அக்கினி தேவனே, தாய்க்குச் சமானமாகிய காருணியத்தை யுடைய ஆஞ்சநேயன் உனக்குச் சினேகனாக வேண்டுமே! அப்படிப்பட்டவனை நாய்க்குச் சமானமாகிய இராட்சதர்கள் இமிசிக்கும்படி கண்டால் உதவி செய்யாமல் இருக்கலாமோ? நான் கற்பிலே பரிசுத்தையானால், நீ உலகத்திற்கெல்லாம் உண்மையாகிய சாக்ஷியாய் இருக்கின்றவனாகையால், உனக்கே தெரியவரும். உன்னைக் குறித்து மிக வேண்டு கின்றேன்! அவனைச் சுடவேண்டா! சுடவேண்டா!" என்று அருளிச்செய்த மாத்திரத்திலே, அக்கினி தேவன் திடுக்கிட்டு, மனங்கூசி, பிராட்டியின் திருவுள்ளக் கருத் தின்படி அனுமருக்குக் குளிர்ச்சியாயிருக்கும்படி தன் கடூரத்தை அடக்கிக்கொண்டான். அப்பொழுது புறத்தி லுள்ள மயிர்கள் சிலிர்க்கும்படி வாயு குமாரருடைய வால் எலும்பு வரையிலும் குளிர்ந்தது. அத்தருணத்தில் ஆஞ்சநேயர், பவளமலை போலப் பிரகாசிக்கின்ற அதி உன்னதமாகிய தமது திருமேனியின் நாற்புறத்திலும் இடை விடாமல் சூழ்ந்து அக்கினியானது சுவாலா மாலையாய்க் கொழுந்துவிட்டெரிந்தாலும், தம்மைச் சுடாமலும் தமக் கொன்றும் உபத்திரவம் செய்யாமலுமிருந்த ஆச்சரியத்தை நினைத்துப் பார்த்து, "இது கிருபா நிதியாகிய பிராட்டியா ருடைய கற்பின் மகிமையாலும், அவர் திருவருளாலும், அவர் செய்த மங்களாசாசனத்தினாலுமே நம்மை வருத்தாம லிருக்கிறது!" என்று தெளிந்து, பரமானந்த சாகரத்தில் மூழ்கினார். அன்றைய இராத்திரி சீதையைத் தேடித் திரிந்த பொழுது அந்தப் பட்டணம் முழுதையும் தமது அறிவினால்

குறித்தறியாவிட்டாலும் ஐம்பொறிகளும் முன்பு செல்லஅவை களைத் தொடர்ந்து மறைந்து சென்று விஷயத்தை அறிகின்ற அறிவைப்போல, அனுமரானவர், 'கல்விப் பயிற்சியில்லாத இராட்சதர்களீ தமக்கு முன்னே நடந்து காட்டும்படி, இந்தக் குரங்கு நாற்புறத்திலும் பார்த்துக்கொண்டு போகின்றது,' என்று தமது அபிப்பிராயம் அவர்களுக்குத் தோன்ருமலிருக்க உபாயமாக ஒன்ருவது தவருமல் அவ்விடத்திலுள்ள சகல விசித்திரமும் பார்த்துக்கொண்டு போனுர். இவ்வண்ணம் இலங்கையின் மூலேமுடுக்கெல்லாம் கண்டுகொண்டேபோய், முடிவிலே, "இவர்களே விட்டு நழுவுதற்குச் சமயம் இதுவே!" என்று நிச்சயித்து, தம்மை இரண்டு பக்கத்திலும் உறுதி யாகப் பிடித்துக்கொண்டிருந்தவர்களும் கயிறுகளோடு எழும்ப ஆகாயமார்க்கத்தில் எழும்பினுர். அந்தக் கயிறு களும் அவைகளேப் பிடித்துக்கொண்டிருந்தவர்களுடைய கைகளும் எழுத் தடிகளேப்போலத் தொங்கும்படி அவரெழும் பிய போது, இராட்சதர்கள் கீழே விழுந்து மாய்ந்தார்கள். பூமியிலிருந்து மேலே கிளம்பிய வாயு குமாரரானவர், சர்ப்பக் கூட்டங்களே வாரிக்கொண்டு வானத்தில் எழும்பிய கருடனேப் போல அந்தரத்தில் பிரகாசித்தார்; "பாதகர்களாகிய இராவ ணுதி இராட்சதர்களுக்கு வாசஸ்தானமாய் இருக்கின்ற அந்த இலங்கையானது பற்றி எரியும்படி ஸ்ரீராமபிரானேத் தோத் திரஞ் செய்து இதைக்கொளுத்திவிடுவோம்,' என்று நினேத்து அந்தச் சொர்ணமயமான நகரத்தின்மேல் தமது வாலே நீட் டினுர். அப்போதந்த வாலானது, சிவபெருமான் திரிபுர தக னம் செய்யும்படி பிரயோகித்த பாணத்தைப்போல விளங்கி யது. தாவள்யமாகிய வெள்ளியைக் கொண்டும், பொன்னேக் கொண்டும், பலவித இரத்தினங்களேக் கொண்டும், தெய் வத் தச்சனுகிய விசுவகர்மா அனேக நாள் கை பழகி அரு மையாகச் செய்த உன்னதமாகிய வீடுதோறும், மலேகளின் மேல் ஊழிக்காலத்து இடியானது அக்கினிமயமாய் இடித்து விழுவதைப்போல அனுமர் திடீர் திடீரென்று தாவித் தாவிக்

குதித்துத் தகித்தார். அக்கினி தேவனானவன் அனுமருடைய வாலை ஆதரவாகப் பற்றிக்கொண்டு, விஷத்தையுண்ட பிரளயகாலருத்திரர் தாம் உகாந்த காலத்திலே ஊட்டத் தான் சகல புவனங்களையும் அழியும்படி உண்டது போல இலங்கையைச் சீக்கிரத்தில் தகித்து உண்டனன்.

## 14. இலங்கை எரியூட்டு படலம்

இப்படி இலங்கையை எரித்துண்ணத் தலைப்பட்ட கடுமையாகிய அக்கினியானது, காவலையுடைய மாளிகை தோறும் கட்டிய கொடிகளைப் பற்றிப்போய், மேற்கட்டிகளைக் கொளுத்தி, நீண்ட தூண்களைத் தாவியெரித்து, உயர்ந்த சுவர்களைச் சுற்றுமுற்றுஞ் சுட்டு நீருக்கியது. அனுமர் அந்தக் கோட்டை வாயிலிலிட்ட தீயானது, அதற்குள்ளிருந்த வீடுகளெல்லாம் நாசமாகும்படி பற்றியெரிக்க, எங்கே பார்த்தாலும் எரிகிறபடியினாலே, அப்பட்டணத்திலுள்ளவர் சகலரும் பயங்கொண்டு ஊசலாடுகிறவர்போல இங்குமங்கும் ஓடியோடி அலைந்து, அழுகுரலுடனே ஒருவரையொருவர் கூப்பிடத் தலைப்பட்டனர். இரத்தினத்தாற் கட்டிய கிருகங்களெல்லாம் நெருப்பைப்போல ஜோதிமயமாகிய கிரணங்களை வீசுதலால், அவைகள் தீப்பட்டு எரிகின்றனவென்று அறியாமல் ஸ்திரீகள் அறிவு தடுமாறித் திரிந்தார்கள். ஆகாயவெளி முழுதும் மறையும்படி புகையெழும்பி எங்கும் பரவிச் சூழ்ந்து கொண்டதனால், காட்டில் சஞ்சரிக்கின்ற மயில் போலும் சாயலையுடைய ஸ்திரீகள் தாங்கள் போன திசை தெரியாமலும், தங்கள் நாயகன்மார்களைக் காணாமலும், திகைத்துப் புலம்பினார்கள். இராட்சத வீரருடைய சிகையின்மேலும், அவர்கள் ஸ்திரீகளுடைய கூந்தலின்மேலும், கொழுமையாகிய நெருப்பு விழுந்து பற்றி எரிகின்றதை ஒருவர்க்கொரு

வர் காட்டக் கண்ணிறற்கண்டும், செம்பட்ட மயிராகையால் தீப்பட்டதும் படாததும் தெரியாமல் மயங்கினார்கள். வாமன ரூபமாய்ப் போய்ப் பலிச்சக்கரவர்த்தியானவர் உலகங்களைத் தானமாகக் கொடுக்க ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் தமது திருவடியினால் அளந்துகொள்ளும்படி அண்ட முகடு வரைக்கும் வளர்ந்தெழுந்து உயர்ந்த திரிவிக்கிரம சொரூபம் போல, புகையானது எழுந்து மேலே போய் எங்கும் கவிந்து நெருப்பானது மேல் விழுந்து சரீர முழுமையும் தகித்தலினால் வெந்து கறுத்த தோலுரிந்த யானைகளெல்லாம், கீழ்த்திசையில் இருக்கின்ற இந்திரனுடைய ஐராவதமென்னும் வெள்ளை யானைக்கு ஒப்பாயிருந்தன. பனி சூழ்ந்தது போலப் புகையும் தீயும் வீடுகள் எங்கும் சுற்றிக்கொண்டதனால் எருமைகள் மேகங்களைப்போலப் போய்த் தடாகங்களில் விழ, அவைகளில் இருக்கின்ற அன்னங்கள் விலகிப்போவது போல ஸ்திரிகள் ஒதுங்கிச் சென்றார்கள். தணலானது உள்ளே புகுந்து பற்றி எரிப்பதனால் சொர்ண மதில்கள் உருகியோடிக் கடலுக்குள்ளே பாய்ந்து இறுகித் திரண்டன. பர்வதங்களைப்போல வரிசையாய் உயர்ந்திருக்கின்ற உப்பரிகைகளும், பூஞ்சோலைகளும் எவ்விதத்தில் வேகாமல் இருக்கும்? நல்லவர்களாய் இருக்கின்றவர்கள் பொல்லாதவர்கள் இருக்குமிடத்திற்குப் போனால், அந்தப் பொல்லாதவர்கள் சுபாவமாய்ச் செய்யும் பொல்லாங்கையும் சகவாச தோஷத்தினால் நல்லவர்களும் செய்வார்களல்லவா? அது போலப் புனிதமாகிய அக்கினியும் மாயையையுடைய இராட்சதர்கள் உண்ணும்படி ஜாடிகளில் நிறைந்திருக்கின்ற கள்ளையுண்ணத் தலைப்பட்டது. தேனைச் சொரிகின்ற சோலைகளெல்லாம் தீப்பட்டெரிய, அங்குள்ள புஷ்பங்களில் மொய்த்துக் கொண்டிருந்த வண்டுகள் எழும்பிப் பறந்து, நாலு பக்கங்களிலும் தாவிப் படர்கின்ற அந்த அக்கினி ஜுவாலையைக் கண்டு சிவந்த தாமரைப் புஷ்பக்காடென்றெண்ணி, அதிலே போய் விழுந்து கரிந்து மடிந்தன. கற்புள்ள சில ஸ்திரீகள்,

"குரங்கு கொல்ல நம்முடைய நாயகன்மார்கள் இறந்து போனார்கள். நாம் வாசஞ்செய்கின்ற வீட்டுக்குள்ளும் அக்கினி பிரவேசித்தது. ஆதலால், நமக்கு என்ன வாழ்விருக்கின்றது! இனி வீட்டு வாயிற்படி கடந்து அப்புறம் போவதும் தர்மமன்று,'' என்று தாம் தாமிருந்த இடங்களிலேயே இருந்து வெந்து தீய்ந்து மாய்ந்து போனார்கள்.

அந்தத் தருணத்தில் தசக்கிரீவன் அவனுடைய ஸ்திரீகளும் மக்களும் ஒக்கலும் மற்றுமுள்ள பந்து வர்க்கங்களுமாகிய சகலருடனும் நவரத்தின மயமாய்ப் பிரகாசிக்கின்ற புஷ்பக விமானத்தின்மேலேறி, ஆகாய மார்க்கத்தில் தப்பிப் போய்விட்டான். பின்னும் நினைத்த மாத்திரத்தில் இராட்சதர்களும் அவர்களுடைய பிள்ளைகள் மனைவிமார்களனைவரும் எதேச்சையாய் ஓடிப்போனார்கள். ஆகையால், அந்த நெருப்பை அவிக்கத்தக்க பிரயத்தனஞ் செய்பவர் ஒருவரும் இல்லாமல் இலங்கா பட்டணமானது வெந்துபோய்விட்டது. அப்பொழுது இராவணன் ராட்சதர்களைக் கோபாக்கினி ஜொலிக்கப் பார்த்து, "அடடா! பதினாறு லோகங்களும் பற்றியெரியத்தக்க ஊழிக்காலந்தான் வந்ததோ! வேறு காரணம் ஏதாவதுண்டோ? நம்முடைய இலங்கையை நெருப்புத் தகிக்க வேண்டிய நிமித்தமென்ன?'' என்று அதட்டிக் கேட்டான்.

அந்தச் சமயத்தில் அழுதுகொண்டு வந்து எதிரே நிற்கின்ற இராட்சதர்கள், கைகளைக் கூப்பித் தண்டனிட்டு, "ஐயா, கடலைத் தாண்டி இவ்விடத்திற்கு வந்த குரங்கு நீளமாகிய அதன் வாலிலே நாம் கொளுத்திவிட்ட நெருப்பைக் கொண்டு ஊரைச் சுட்டது!'' என்று சொன்னார்கள்.

அதுகேட்டுத் தசக்கிரீவன் மிகுந்த கோபத்துடனே, "ஆ! ஆ! ஒரு குரங்கு தன் சாமர்த்தியத்தினால் இந்த நகரத்தைக் கொளுத்துவதும், அதன் வாலிலிருந்து அக்கினியானது கொழுந்து போல எரிப்பதும், அதனாலே இலங்கைத் தீவானது முழுதும் வெந்து பொடியாவதும், இதைக் கண்டு

தேவர்கள் கை கொட்டிச் சிரிப்பதுமாய் முடிந்ததல்லவா? இப்படியாகுமானுல், என் பராக்கிரமம் நன்ருகும்! நன்ருகும்!'' என்று கலகலவென்று நகைத்து, "குரங்குதான் தெரியாமற்கொளுத்தினுலும் அக்கினி எப்படி எரிக்கலாம்? அவனுக்கென்ன தெரியாதா? இந்த இலங்கையைக் கொஞ்சமாவது பயமில்லாமல் எரித்த அந்தத் துஷ்டனுகிய அக்கினியைக் கண்டவர்கள் முன்னே கைப்பிடியாகப் பிடித்து இழுத்து வாருங்கள்! கலகஞ்செய்யக் கற்றுக் கொண்ட குரங்கையும் பிடித்த பிடியோடே கொண்டுவாருங்கள்!'' என்று மிதமற்ற கோபத்துடனே பற்களைக் கடித்துச் சொன்னுன். பக்கத்தில் நின்றுகொண்டிருந்த இராட்சத வீரர்கள் அவனை வணங்கி, 'அப்படியே செய்கிருேம்,' என்று ஆஞ்சநேயரைத் தேடிக்கொண்டு அதிவேகமாகப் போனுர்கள். அவர்களனைவரும் ஆகாயம் பூமி ஆதியந்தமும் ஓடி வளைத்து மொய்த்துச் சுற்றி இரைச்சலிட்டுக்கொண்டு போகிற பொழுது, அனுமர் ஒரு பக்கத்தில் இருக்கிறதைக் கண்ணினுற் கண்டார்கள். கண்டவுடனே, "பிடியுங்கள்! பிடியுங்கள்! அடியுங்கள்! அடியுங்கள்! கட்டுங்கள்! கட்டுங்கள்! வெட்டுங்கள்! வெட்டுங்கள்! வளையுங்கள்! வளையுங்கள்!'' என்று கோபத்தோடு பல விதமான ஆயுத வர்க்கங்களைப் பிரயோகஞ்செய்து எதிர்த்தார்கள்.

அதை மாருதியார் கண்டு, ஒருவரும் ஓடிப்போகவொட்டாமல் பல திசையிலும் வாலை நீட்டி ஒருமிக்க வளைத்து இழுத்து, அனேகரை வலக்காலைக்கொண்டு உதைத்து, இடக்காலைக் கொண்டு எற்றி, வலக்கையைக் கொண்டு குத்தி, இடக்கையைக் கொண்டு மோதி, இரண்டு தோளினுலும் இறுக்கி, இரண்டு தொடைகளினுலும் நெருக்கி, முழங்கால்களினுல் முட்டி, முழங்கைகளினுல் இடித்து, அக்குளிலிட்டு அரக்கினுர்; பின்னும், உயர்ந்த ஒரு மராமரத்தைத் தமது வாலினுல் வளைத்துப் பற்றி எடுத்து மோதி அடித்தார்; இப்படி அடிக்கவே, ஆயுதங்களெல்

லாம் பொடிப்பொடியாகித் தோள்கள் துணிந்து, தாள்கள் அறுந்து, தொண்டை கிழிந்து, மண்டை பிளந்து, மெய் சிதைந்து, கையொடிந்து, விழி பிதுங்கி, செவியறுந்து, ஆவியும் ஆயுளும் முடிந்து பாவிகள் பரிதவித்தார்கள். முன்னின்று போராடினவர் இறந்து போனது கண்டு பின்னின்ற வீராதி வீரர்களெல்லாம் எதிரேறிச் சண்டை செய்தார்கள். அப்பொழுது அதிசீக்கிரத்தில் வாயு குமாரர் எமனைப்பார்க்கிலும் மூன்று பங்கு அதிகமாகக் கொன்றார். அதனால், ஐம்பதினாயிரம் இராக்ஷத வீரர்களும் மடிந்தார்கள். மற்றவர்களெல்லாம் அவருக்கு முன் நிற்கமாட்டாமல் சமுத்திரத்தில் ஓடி விழுந்தார்கள். அத்தருணத்தில் சத்தவீரர்கள், "இந்தக் குரங்கு எத்தனையோ இராட்சதர்களைத் தன் வாலை நீட்டி வளைத்தது. அந்த வாலில் அகப்பட்டு அனேகர் மாண்டனர். சிலர் கடலுக்குள் ஓடி விழுந்து முடிந்தனர். அம்மம்ம! இதுவென்ன ஆச்சரியம்! இப்படியானால், கண்டவர்கள் கேட்டவர்களுக்கு எல்லாம் ஏச்சல்லவோ? பேச்சல்லவோ?" என்றெண்ணிக் கோபக் குரோதர்களாய்த் தேர்களை வேகமாய் நடத்திப் போய்ச் சுற்றிக்கொண்டு விற்களை வளைத்து, பாணங்களைப் பிரயோகித்துத் தங்கள் வீரதீரத்தைக் காட்டிப் பிரபலமாகிய யுத்தஞ் செய்தார்கள்.

மாருதியார், அவர்கள் விட்ட பாணங்களை எல்லாம் இலட்சியம் பண்ணாமல், ஏழு பேர்களையும் ஏககாலத்தில் கொல்ல வேண்டுமென்று உத்தேசித்து மோத, அவர்கள் ஒரு மிக்க மாய்ந்து போனார்கள். பின்பு ஊர் முழுதும் அழிந்துபோய்விட்டதோ என்று பார்த்து வந்த விஞ்சையர்கள், "சகலத்தையும் சுட்டெரித்த அக்கினியானது சீதாபிராட்டியிருக்கின்ற சோலையை மாத்திரம் தகிக்கவில்லை. அது அந்தக் குணநிதியாகிய ஜானகியினுடைய கற்பின் மகிமையினாலல்லவா வேகாதிருந்தது!" என்று சொன்னார்கள். அவர்கள் சொன்ன சொல்லைக் கேட்ட ஆஞ்சநேயர் அதிசயித்துச் சந்தோஷித்து, "நான் பிழைத்தேன்! நான்

பிழைத்தேன்!'' என்று ஆனந்தமாய் அவ்விடத்திற்குப் போய், லோகமாதாவின் திருவடிகளைச் சேவித்து நின்றார். பிராட்டி, சிசுவைக் கண்ட தாய் போல அனுமரைப் பார்த்து அதிக மகிழ்ச்சியுற்றாள். அந்தச் சமயத்தில், அஞ்சனை குமாரர், "முன்னமே சகலமும் பேசி முடிந்தபடியால் இனி யென்ன வார்த்தை இருக்கின்றது!'' என்று நினைத்து, "அன்னையீர், நாயேன் போய் வருகிறேன்,'' என்று தண்டஞ் சமர்ப்பித்துத் திரும்பினார்.

அவர் அப்புறம் போனவுடனே, "ஸ்ரீராமதூதர் போய் விட்டபடியினால் கள்ளர்களாகிய ராக்ஷதர்கள் கண்டால், 'நம்முடைய நகரத்தைச் சுட்டெரித்தது இந்த அக்கினி தானே!' என்று நம்மைப் பிடித்துப் போய்த் தண்டிப்பார் கள்!'' என்று அக்கினித்தேவன் அவர்கள் கண்ணுக்குத் தோன்றாமல் ஒளித்துப் போனான்.

## 15. திருவடி தொழுத படலம்

ஆஞ்சநேயர், அங்கே ஒரு பக்கத்திலிருந்த பர்வதத்தின் சிகரத்திலே போயேறி, அந்த இடத்திலிருந்து, ஸ்ரீராமருடைய திருவடித் தாமரையை மனத்திலே தியானித்து, திக்கு நோக் கித் தண்டஞ்சமர்ப்பித்து, ஆகாயமார்க்கத்தில் எழும்பிப் பாய்ந்து போனார். போய்த் தம்முடைய வரவை எதிர்பார்த் துக்கொண்டிருந்த மேனாதேவியின் பிள்ளையாகிய மைநாகப் பருவதத்தின்மேல் குதித்தார். அந்த மைநாக பர்வதம் அவ ருக்கு உபசாரஞ் செய்து, 'என்ன சமாசாரம்?' என்று விசாரிக்க, அதனிடம் நடந்த காரியத்தைச் சொல்லிவிட்டு, அங்கிருந்து எழும்பி, அங்கதன் சாம்பவந்தர் முதலாகிய வானர வீரர்களிருந்த மகேந்திர பர்வதத்தின்மேல் வந்து குதித்தார்.

வானர வீரர்கள் அவரை நேரிலே கண்டவுடனே போன காரியம் முடிந்ததென்று சரீரம் புளகிக்க மயிர்க்குச்செறிய

அதிக மகிழ்ச்சியை அடைய, மாருதியார் இளவரசாகிய அங்கதனை முன்பு வணங்கி, பின்பு கரடிகளுக்கு ராஜாவாகிய ஜாம்பவந்தரைச் சேவித்துக்கொண்டு, மற்றுமுள்ளவர்களுக்கெல்லாம் அவரவர்களுக்கேற்றபடி செய்ய வேண்டிய மரியாதைகளைச் செய்து, அவ்விடத்தில் உட்கார்ந்து, "லோகநாயகராகிய ஸ்ரீ ராமசந்திரருடைய திருத்தேவியாராகிய ஜானகியார் உங்களுக்கெல்லாம் ஆசீர்வாதம் சொன்னார்," என்று கூறினார்.

இப்படிச் சொன்ன மாத்திரத்தில் அனைவருமெழுந்து சிரசின்மேல் கைகளைக் கூப்பி, திக்கு நோக்கி வணங்கி நின்று, கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக, அனுமரை நோக்கி, "இங்கிருந்து நீர் புறப்பட்டு இலங்கையை நாடிப் போனது முதல் அங்கிருந்து வந்து சேர்ந்தது வரைக்கும் என்ன என்ன அதிசயம் நடந்தனவோ, அவைகளையெல்லாம் ஒன்றுவது விடாமல் நாங்கள் கேட்கும்படி சொல்ல வேண்டும்," என்றார்கள். அப்பொழுது அவர் சீதாபிராட்டியினுடைய திருவடிகளை ஸ்மரித்துத் தொழுது, அவளது திருவுளக் கருத்தை நன்றாய்த் தெரியச் சொல்லி, பின்பு தாம் அங்கிருந்து சுவாமிக்கு அடையாளமாகச் சூளாமணியை அவள் கொடுக்க வாங்கி வந்ததையும் சொன்னாரேயல்லாமல், மகா பலிஷ்டர்களான பஞ்ச சேனாபதிகளுடனும் அட்சகுமாரன் முதலாகிய ராக்ஷதர்களுடனும் போர் செய்து அவர்களையெல்லாம் கொன்று வென்றதையும், இலங்கையையும் எரித்து நீறாக்கியதையும் சொல்லவில்லை. இந்த இரண்டு காரியமும் தம் ஜயப்பிரதாபத்தைக் குறிப்பதுபற்றி, இவற்றைச் சொன்னால் தற்புகழ்ச்சியாய் முடியுமென்று நினைத்துச் சொல்ல அச்சப்பட்டுக்கொண்டு, இவை நீங்கலாக மற்றவைகளையெல்லாம் ஒன்றுவது ஒளியாமல் சொன்னார். அந்தச் செய்தியைக் கேட்டு அதிக சந்தோஷமுற்று அங்கதன் ஜாம்பவந்தர் முதலானவர்கள் வாயு புத்திரரை ஊடுருவிப் பார்த்து, "இவர் இலங்கையிலுள்ள ராக்ஷதர்

களுடனே எதிர்த்துப் பின்னிடாமல் உக்கிரமாய்ப் போர் செய்ததை இவருடைய தேகமுழுவதுமிருக்கின்ற காயங்களே சொல்லும்; அவர்களை ஜயித்த சமாசாரத்தை இவர் அவர்களால் இறந்து போகாமல் திரும்பி வந்ததே சொல்லும்; இவர் அந்த இலங்கையைக் கொளுத்திய செய்தியை அந்தத் திசையில் ஓங்கிக் கறுத்தெழுகின்ற புகையே சொல்லும்; ஜானகியார் இராவணனுடைய நகரத்திலேயே இருக்கிறார் என்பதை இவர் தென்திசையை நோக்கித் தண்டம் சமர்ப்பித்துக்கொண்டு வருவதே சொல்லும்; 'சத்துருக்கள் சாமானியர்கள் அல்ல; அவர்கள் எல்லாம் அதிவீர பராக்கிரமர்கள்,' என்பதை ஜகன்மாதாவானவள் இன்னும் சிறை மீளாதிருப்பதே சொல்லும்,'' என அறிந்துகொண்டு, ''இனிச் செய்ய வேண்டுவதென்ன?'' என்று கேட்டார்கள்.

ஆஞ்சநேயர் மகிழ்ந்து, '' நண்பர்களே, இனி ஸ்ரீராமபத்திரருடைய சந்நிதானத்திற்குப் போய் அவருடைய திருத்தேவியாரைக் கண்ட சுபச்செய்தியைச் சொல்லி, அவர் மனக்கிலேசத்தை ஆற்றுவதே உத்தமம்,'' என்று சொல்ல, ''அப்படியே செய்வோம்,'' என்று சகலரும் சம்மதித்து, உடனே பிரயாணப்பட்டு நடந்தார்கள்.

இவ்வாறு மகிழ்ச்சியுடனே யாவரும் அதிவேகமாய் ஆகாயத்திலே தாவிப் பாய்ந்துபோய், சூரியன் உச்சியில் வருகின்ற சமயத்தில் மது வனத்தை அடைந்து அதிலே தங்கினர். அந்த வனத்தில் நெருங்கிய மரக் கொம்புகளிலெல்லாம் அபரிமிதமாகத் தேன் கூடுகள் கட்டியிருக்கக் கண்டு, அந்தத் தேனை உண்ணவேண்டுமென்று ஆசைகொண்டு வானர வீரர்களெல்லாம் ஒன்று சேர்ந்து, '' நாம் எல்லோரும் அங்கதராஜனைக் கண்டு, 'வைதேகியாரைத் தேடி வந்து நெடுங்காலம் ஆய்விட்டது என்று எங்கள் மனத்துக்குச் சஞ்சலம் உண்டானபடியினாலே நாங்களெல்லாம் உணவில்லாமல் இது வரையிலும் வெகுவாய் வருத்தப்பட்டோம்! இப்பொழுது எங்களுக்கு உணவைக் கொடுத்

தருளும்,' என்று சொல்லிக்கொள்ளுவோம், வாருங்கள்,'' என்று உடனே எழுந்து போனுர்கள். அவர்களில் அனுமரானவர் பலசாலியான அங்கதன் சமீபத்திற்போய் அவனேக் கைகூப்பிப் பணிந்து, "ஐயா, உம்முடைய வானர சேனே உணவில்லாமல் மிகவும் பசியும் இளேப்பும் கொண்டு வருத்தப்படுகின்றது. ஆதலால், அதற்கு இப்பொழுது இந்தச் சோலேயிற்கட்டிய கூடுகளிலிருந்து ஒழுகுகின்ற தேனே உண்ணும்படி உத்தரவு கொடுக்க வேண்டும்,'' என்ருர். அவன் அப்படியே செய்யலாமென்று சொல்ல, ஆஞ்சநேயர் வானரங்களுக்குக் கண் காட்ட, அவை போய், அந்த வனத்திற்குள்ளே பிரவேசித்து, மட்டில்லாத மதுவை மகிழ்ந்து குடித்துக் களித்துக் கூத்தாடும்போது அந்த வனத்திற்குக் காவலாயிருந்த வானரர்கள், கண்களேத் தீப்பறக்க விழித்துச் சீறி எழுந்து, அவர்களே எதிரிட்டு, சுக்கிரீவமகாராஜாவினுடைய ஆக்கினேயைத் தடுத்து நீங்களெல்லாம் என்ன நினேத்து என்ன செய்தீர்கள்? உங்களுயிருக்கு முடிவு வந்துவிட்டது! இந்தச் சமாசாரத்தை எங்கள் எஜமானர் அறிந்தால் எங்கள்மேல் கோபிப்பாரே! நாங்கள் என்ன செய்வோம்! இதோ போய் அழைத்து வருகிருேம்,'' என்று போனுர்கள்.

அவர்கள் ததிமுகன் என்கிற வானர வீரனேக் கண்டு, "எங்களிறையே, உம்முடைய வனத்தைக் குரங்கின் சேனேகள் வந்து இப்பொழுது அழித்துவிட்டன. நாங்கள் செய்யத்தக்கது இனி ஒன்றுமில்லே,'' என்று முறையிட்டுக் கொண்டார்கள்.

அது கேட்ட ததிமுகன், "மதுவனத்தை அழித்தவர்கள் யார்? அவர்களேக் காட்டுங்கள், பார்ப்போம்!'' என்று புறப்பட்டான். அவர்கள், "ஐயா, வாலி குமாரன் முதலான வானரக்கூட்டம் வந்து நிழலுக்குத் தங்கியது. பின்பு அங்கதனுடைய ஏவலினுலே அந்தக் குரங்கின் சேனே மரக்கிளேகளிற்பாய்ந்து, தேன் கூடுகளேயெல்லாம் நிர்மூல

மாக்கியது. அது கண்டு நாங்கள் போய்த் தடுத்தோம். எங்களை வம்பு வார்த்தைகள் பேசி, இடக்குப்பண்ணி, கைகளைக் கொண்டு ஓங்கியடித்ததனால்; நாங்கள்மிகவும் நொந்தோம்!'' என்று சொல்லவே, ததிமுகன் நெருப்பைப் போலப் பொங்கி, அவ்விடம் விட்டு எழுந்து, வானரங்கள் கல்லென்று ஆர்ப்பரித்து நெருங்கிச்சூழ்ந்து வரும்படி மது வனத்திற்குள்ளே வந்து நுழைந்தான்.

அங்கே மதுவை உண்டுகொண்டிருந்த வானர சேனையானது பயந்து ஓடிப்போய் வாலி புத்திரனுடைய பாதத்தில் வீழ்ந்தது. ததிமுகன் அங்கதனைப் பார்த்து, “அங்கதனே, தேவேந்திரனானவன் வாலிக்குக் கொடுத்த உசிதமாகிய இந்த மதுவனமானது, எளிதாக என்னாலே காவல் செய்யப் பட்டிருக்கின்றது என. என்னை நீ அசட்டை பண்ணினாய். இதற்கு உடையவனாகிய சுக்கிரீவமகாராஜனோ, இலேசானவனல்லன்! உன் வாழ்வு இன்றுடனே முடிந்தது! இந்த வனத்தை நீ வானரங்களை ஏவி அழித்துவிட்டாயல்லவா!'' என்று கொதித்துக் கொக்கரித்து, உடனே ஒரு பெரிய கருங்கல் பாறையை அடியோடே பேர்த்தெடுத்து அங்கதன் மேல் விசையாக விட்டெறிந்தான். வாலி குமாரன் கோபித்தெழுந்து, ததிமுகனைக் கெட்டியாய்ப் பிடித்து, கொம்கொம்மெனக் குத்தி, வாயின் வழியே இரத்தஞ் சோர்ந்து பிரமிக்கப் பின்னும் அடித்து, “இந்தச் செய்தியைப் போய்ச் சுக்கிரீவருக்குச் சொல்!'' என்று அவனைத் துரத்திவிட்டு, “அவனுடைய சேனைகளைப்பற்றிக் கட்டி அனற்பொறி பறக்க நன்றாய்க் குத்திக் குமையுங்கள்!'' என்று தன் சேனா வீரர்களுக்கு உத்தரவு செய்தான். உடனே வானரவீரர்கள் அவர்களை ஓடிப்போய்ப் பிடித்து வந்து, காட்டிலே படர்ந்திருக்கின்ற கொடிகளை அறுத்துத் தோளழுந்தக் கட்டி, இமிசித்தார்கள். அது பொறாமல், சோலைக் காவலர்கள் முதலாகிய வானரர்கள் சரீரம் துடித்துக் களைத்து விழுந்தார்கள். அது கண்டு, “நீங்களும் போய்ச் சொல்லுங்கள்!''

என்று அங்கதன் சொல்ல, அதிக பயத்துடனே அவர்களும் எழுந்து அலறிக்கொண்டே ஓடினார்கள்.

பின்பு யாவரும் உண்டு தேக்கி, வருத்தமாறி, 'வெயிலின் உஷ்ணம் தணிந்த பின்பு போகலாம்,' என்று பொழுதைப் பார்த்துக்கொண்டு மது வனத்திற்கு அடுத்த உவவனத்தில் இருந்தார்கள்.

இப்படியிருக்கிற தருணத்தில், ததிமுகனென்பவன் தன் பின்னே அடித்துத் துரத்தப்பட்ட வானரர்கள் அழுது கூச்சலிட்டுக்கொண்டு வரத் தலையிலிருந்து ஒழுகுகின்ற உதிரத்துடனே சுக்கிரீவ மகாராஜன் முன் வந்து, இரண்டு கைகளையும் கூப்பி வணங்கி, எழுந்து நின்று, "ஐயா, இன்றைய தினத்துடனே நம்முடைய மது வனம் அழிந்தது!" என்று சொன்னான். சுக்கிரீவன், இரத்தம் ஒழுகுகின்ற ததிமுகன் முகத்தைப் பார்த்து, "ததிமுகனே, அப்படிச் செய்தவர்கள் யார்?" என்று கேட்டனன். அதற்கவன், "ஐயா, அங்கதன் ஏவலால் நீலனென்பவனும் குமுதனென்பவனும் மலை போன்றுயர்ந்த தேகத்தையுடைய ஜாம்பவானென்பவனும், வானரசேனைகளும் வந்து நமது மது வனத்தை அழித்தார்கள். இப்படிச் செய்ய வேண்டாவென்று நான் சேனைகளுடன் போய்த் தடுக்க, அங்கதன் அச்சேனைகளை அடித்துத்துரத்தி, என்னையும் துன்பப்படுத்தி, உம்மையும் இகழ்ந்து பேசினான். நான் ஒரு பாறையைப் பேர்த்தெடுத்து, அங்கதன் மீது எறிந்தேன். அதைப் புறங்கையால் தடுத்துவிட்டு, என்னைப் பிடித்து உயிர் பதைக்கும்படி குத்திக் குமைத்து, 'நீ எவ்விடத்திற்போய்ச் சொல்லிக்கொள்ள வேண்டுமோ, அவ்விடத்திற்போய்ச் சொல்லிக்கொள்!' என்று அனுப்பிவிட்டான்," என்று சொல்ல, சுக்கிரீவ மகாராஜன் அதிக ஆனந்தத்தோடு எழுந்து நின்று, ஸ்ரீ ராமரைச் சேவித்து, "சுவாமி, அங்கதன் முதலானவர்களுக்கு இப்பொழுது உண்டாகிய கோபமானது, என் தாயாராகிய ஜானகியார் மகிமை பொருந்திய கற்பழியாது

இருக்கின்ருரென்பதை நமக்குத் தெரியச் சொல்லியது! பிராட்டியாரை அவர்கள் பிரத்தியக்ஷமாகக் கண்டார்கள். அந்தச் சந்தோஷத்தினுலேதான் மதுவனத்தையழித்து அதி லுள்ள தேனைக் குடித்து விளையாடினுர்கள். ஆகையால், இனித் தேவரீர் துக்கப்படவேண்டுவதில்லை!" என்று விண் ணப்பஞ் செய்ய, அதைத் திருச்செவி சார்த்தியருளிய ஸ்ரீ ராமபத்திரர், "தெற்குத் திசைக்குப் போனவர்கள் வந் தார்கள். இனி அவர்களென்ன செய்தி சொல்லுவார்களோ! எல்லாம் அறியலாம்!" என்று தமது திருவுள்ளத்தில் கருதி இருந்தார்.

சுக்கிரீவன், ததிமுகனைப் பார்த்து, "வீர, அவ்விடத் தில் வந்திருக்கின்றவர் யார்?" என்று கேட்டான். அதற்கு அவன், "அனுமன், அங்கதன், மயிந்தன், ஜாம்பவான் முத லாகப் பதினேழு வானர வீரசிரேஷ்டர்கள் கடலும் நாணும் படி அதிலும் அதிகமாக ஒலிக்கின்ற சேனைகளையுடையவர்க ளாய் வந்திருக்கின்ருர்கள்," என்று சொன்னுன்.

சுக்கிரீவன், "ததிமுகனே, வாலி குமாரன் சாமானியனு? இளவரசாயிருக்கிறவனுகையால், அவன் கேட்ட கேள்விக் குத் தாழ்ந்து உத்தரவு சொல்லுகிறது அருமை. நீ ஒன் றும் யோசிக்க வேண்டா. உனக்கு உறுதியைச் சம்பாதித் துக்கொள்ளவேண்டுமென்று மனமிருந்தால், அவனிடத்திற் போய் இப்பொழுதே சரணமடை," என்று சொல்ல, ததி முகன் ஒன்றுஞ் சொல்லாமல், அங்கிருந்து புறப்பட்டுத் தன் சேனைகளுடனே திரும்பி, அந்த உவவனத்திற்கு வந்தான்.

ததிமுகன் அங்கதனைக் கண்டு, "ஐயா, நான் உம் முடைய அடிமையாகையால் என்னை ரக்ஷிப்பது உமது கடனேயாகும். நான் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத் துக்கொள்ள வேண்டும்!" என்று சொல்லி அவன் காலில் விழுந்தான். அங்கதன் கோபந்தணிந்து, ததிமுகன் கையைப் பிடித்துத் தூக்கி, மார்பிறுகத் தழுவிக்கொண்டு, "நான் உன் விஷயத்தில் செய்த குற்றங்களை நீயும் பொறுத்

துக்கொள்ள வேண்டும்,'' என்று சொன்னான்; பின்பு அனுமரை நோக்கி, "ஐயா, ஆஞ்சநேயரே, இப்பொழுது புண்டரீகாக்ஷராகிய ஸ்ரீ ராமசந்திரருடைய துக்கத்தை ஆற்றும்படி நீர் முன்னாகப் போம்,'' என்று சொல்ல, அவர் அவனை வணங்கி, "இதுவே என் பாக்கியம்!'' என்று போனார்.

ஆஞ்சநேயரைக் கண்ட சுக்கிரீவன், "இதோ! அனுமன் வந்தான்!'' என்று சொல்ல, ஆஞ்சநேயர் சுவாமியினுடைய பொன்னடியைத் தொழாமல், பிராட்டியைச் சிரசின்மேல் கைகளைக் கூப்பித் தென்திசையை நோக்கிச் சேவித்துக் கொண்டே ஸ்ரீராமர் சமீபத்தில் வந்து, பூமியில் கரசரணாதி அவயவங்கள் தோயும்படி தண்டஞ் சமர்ப்பித்தார். அவருடைய செய்கைகளையும் முகக்குறி முதலானவைகளையும் நன்றாய்க் கண்டு, "வைதேகி க்ஷேமமாயிருக்கின்றாள்! இவ்வனுமன் அவளைக் கண்டதுமுண்டு! அவளது பதிவிரதா தர்மமும் சிதையவில்லை!'' என்று ஸ்ரீ ராமபிரான் தெரிந்து கொண்டார். மாருதியார், "சுவாமி, கண்டேன்! கண்டேன்! கற்பின் பூஷணத்தைக் கண்டேன்! கருணாநிதியைக் கண்டேன்! குணரத்தினத்தைக் கண்டேன்! ஜகன்மாதாவைக் கண்டேன்! ஜானகியார் இலங்காபுரியில் இருக்க அடியேன் கண்ணாரக் கண்டேன்! பிராட்டியார் உம் மகிமைத் திருத்தேவியாரென்கிற உரிமைக்கும், உம்மைப் பெற்ற பிதாவான தசரத சக்கரவர்த்தியாருடைய முதன்மைச் செல்வ மருமகளாரென்கிற பெருமைக்கும், ஜனகமகாராஜாவினுடைய அருமைத் திருமகளாரென்கிற ஒருமைக்கும் தக்கவர்! எனக்குத் தெய்வமாய் விளங்கியிருக்கின்றவர். அந்த அன்னையார் தேவரீருடைய குலத்தைத் தேவரீருக்கு உரித்தாக்கி, தேவர்கள் குலத்தை அவர்களுக்கு உரித்தாக வாழ்வித்து, என்குலத்தை எனக்குக் கடாக்ஷித்தருளினார். இலங்காதீபத்திலே தவம் செய்துகொண்டிருக்கின்ற ஜானகியாரை நான் காணவேயில்லை! குடிப்பிறப்பு என்பதொன்றும், பொறுமையென்பதொன்றும், கற்பென்பதொன்றும் சந்தோ

ஷித்து நடனஞ் செய்துகொண்டிருக்கக் கண்டேன்! அந்த அகில நாயகியாருடைய கண்ணினிடத்திலும் கருத்தினிடத்திலும், வாக்கினிலும் நீரிருக்கின்றீர். தவம் செய்த தவமாய் விளங்குகின்ற வைதேகியார், இலங்கையென்னும் நகரத்தில் ஒரு பக்கத்தில் அழகாகிய ஒரு சோலையினுள் தேவரீருடைய திருத் தம்பியாராகிய இளையபெருமாள் சிரமப்பட்டுத் தர்ப்பைப் புல் முதலானவற்றால் விநோதமாய்ச் செய்த பன்ன சாலையில் எழுந்தருளியிருக்கிறார். பிரமதேவன், பூர்வத்தில் இராவணனைப் பார்த்து, 'உன்னிடத்தில் இஷ்டமில்லாதவள் எவளையாவது நீ பலாத்காரமாய்த் தொடுவாயேயானால், உன் சிரம் ஆயிரம் பத்தலாக வெடித்து நீ உயிர் மாய்ந்து போவாய்!' என்று கொடுத்த சாபத்தை நினைத்து, அந்த இராவணன் கற்புக்கரசியாராகிய பிராட்டியாரைத் தீண்டுவதற்கு அஞ்சினவனாய், மண்ணினுடனே பெயர்த்தெடுத்துக் கொண்டு போயினான். பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்குள்ளே உம்மைக் காணாமையால் சோபமடைந்திருக்கின்ற அந்தப் பிராட்டியாரொருவர் கற்பழியாதிருப்பதனால், இந்திராணி சரஸ்வதி முதலான தேவமாதரும் முன்னிலும் இப்பொழுது அதிக சிறப்பினையுடையவர்களானார்கள். சிவபிரானுடைய வாமபாகத்திலிருக்கின்ற பார்வதியும், இனி அவரது சிரசில் இருக்கத் தக்க சிறப்புடையவளானாள். ஸ்ரீ மகாவிஷ்ணுவின் திருமார்பிலே எழுந்தருளியிராநின்ற மகாலட்சுமியும், இனி அந்தப் பகவானுடைய ஆயிரம் சிரங்களிலும் இருக்கும் சுவாதீனமுடையவளானாள். இலங்கை முழுமையும் தேடித் தசக்கிரீவனுடைய அரண்மனையினுள்ளே போய் அங்குள்ள மாதரையெல்லாம் ஆராய்ச்சி செய்துகொண்டு, அப்புறம் போய், இளந்தென்றல் உலாவும் பரிமளம் வீசுகின்ற புட்பச் சோலையினுள்ளே புகுந்து பார்க்கையில், அங்கே எழுந்தருளியிருக்கின்ற ஜானகியாரைக் கண்டேன்! அங்கே எண்ணில்லாத கோரரூபம் பொருந்திய இராட்சத மாதர்கள் சுற்றிலும் காவலாயிருந்து, யாவரும் பயம் கொள்ளும்படி செருக்

கடைந்து செய்யும் உபத்திரவத்தைக் கண்டு திருமேனி நடுங்கிப் பதைக்க, துக்கமென்பதே ஒரு பெண் வடிவு கொண்டு சிறையிருப்பது போல இருக்கின்றார். அடியேன் சீதாதேவியாரைக்கண்டு சேவித்துக்கொள்ளும்படி சமயம் பார்த்துக்கொண்டிருக்கின்ற வேளையில், பாதகனான இராவணன் அவ்விடம்வந்து, என் தாயாருடைய திருவடிக் கமலத்தில் தண்டாகாரமாய் விழுந்து சேவித்து, எழுந்து நேரிலே நின்று, இருபது கையையும் விரித்துக்கொண்டு, தன் குறையைச் சொல்லி இரங்கினான். பிராட்டியார் கடூரமான சொற்களால் அவனை நிந்திக்க, அந்தத் துராத்துமா கோபம் கொண்டு கொலை செய்ய எத்தனித்தான். அவ்வேளையில் ஜானகியாருடைய கற்பும், தேவரீருடைய கடாக்ஷமும், தர்மமும் தொடர்ந்து நின்று காக்க, அவன் இராட்சதிகளைப் பார்த்து, 'நீங்கள் சொல்லிச் சம்மதிக்கச் செய்வியுங்கள்,' என்று அவர்களைக் கண் காட்டி ஏவிவிட்டுப் போனான். அவர்கள் என்னாலே ஜபிக்கப்பட்ட மந்திரத்தினால் உறங்கிவிட்டார்கள். அவ்வேளையில் என்னுடைய தாயாரான பிராட்டியார் தம் பிராணனைப் போக்கடித்துக்கொள்ள நிச்சயித்து, ஒரு கொடியைக் கொய்து எடுத்து, மரக்கிளையிலே முடிந்து, அதைக் கழுத்திலே மாட்டிக்கொள்ள முயன்றார். அச்சமயத்தில் நாயேன் பயந்து, சீக்கிரம் போய்த் தடுத்துத் திருவடியிலே சாஷ்டாங்கமாய் வணங்கி, தேதரீர் திருநாமத்தை ஸ்மரித்தேன்.

அப்பொழுது அன்னையார், 'வஞ்சனைக்குத் தாயகமான இராட்சதருடைய மாயச் செய்கை இது,' என்று மனத்திலே குறித்துக்கொண்டு, அடியேனை நோக்கி, "எளியவளான நான் இறந்து போகிற வேளையில் தாரகப்பிரம மந்திரமாகிய ஸ்ரீ ராமாமிர்தஞ் சொல்லி எனக்கு மோக்ஷத்தைக் கொடுத்த நீ யார்?" என்று கண்ணீர் பெருக்கிக் கேட்டார். அப்பொழுது தேவரீர் தெளிவாக எனக்குச் சொல்லியிருந்த அடையாளமெல்லாம் நான் சொல்லி, பின்னும் தேவியாரின் மனத்தில் மாறுபாடில்லாதிருக்கச் செய்ய வேண்டுமென்று

நினைத்து, உம் திருவாழியையும் எடுத்துக் காட்ட, அதைத் தம் திருக்கண்களால் கண்டார். அப்போது அந்த மோதிர மானது பிராட்டியாருக்குச் சஞ்சீவி மருந்தைப்போல இருந் தது. நான் அனைத்தையும் அன்னையாருக்குத் தெரியச் சொல்லி, "அன்னையீர், நீர் எழுந்தருளியிருக்கின்ற இடம் இன்னதென்று தெரியாமையால் இது வரையிலும் தாமசப் பட்டது!" என்று சொல்லி, தேவரீர் படுகின்ற வருத்தமுந் தெரியும்படி விண்ணப்பஞ்செய்தேன். அந்த விண்ணப்பத் தைக் கேட்டுச் சோகமாறித் தம்முடைய பிராணன் நிலைக் கப் பெற்றார்; அப்பால், இவ்விடமுள்ள சமாசாரங்களை யெல்லாம் கேட்டருளினார்; அவ்விடம் நடந்த சமாசாரங் களைத் தம் அடிமைக்குத் தெளியும்படி திருவாய்மலர்ந்தருளி னார்; அல்லாமலும், 'நான் இன்னம் ஒரு மாதமட்டுந்தான் உயிரோடிருப்பேன். இதற்குள் சுவாமிக்கு விஜயம் பண்ணு கிறதற்குத் திருவுளம் இல்லாவிட்டால், அவசியம் பிராணத் தியாகம் பண்ணிக்கொள்ளுவேன்!' என்று தேவரீர் எழுந் தருளியிருக்கின்ற திசையை நோக்கித் தண்டஞ் சமர்ப்பித் தார். பின்பு தமது பொன்னுடையில் பொதிந்து வைத் திருந்த மணிராஜமான விலையில்லாத சூளாமணியையெடுத் துச் சந்தோஷமாக என் கையில் கொடுத்தார். இதோ! உம் முடைய தாமரைக்கொப்பான கண்களாரக் கண்டருளும்," என்று வேதசாஸ்திரமெல்லாம் எந்த மட்டும் அழியாமல் இருக்குமோ, அந்த மட்டும் அழியாமலிருக்கின்ற புகழ்ச்சி யுடனே நித்தியத்துவமும் பெற்றிருக்கின்ற அனுமரானவர் சுவாமி கையில் கொடுத்தார்.

அச்சூளாமணியை இரகுநாயகர் தம்முடைய திருக்கையினால் வாங்கின மாத்திரத்தில் நாள்தோறும் அவர் திருமேனி வேறுபட, காமமானது பொங்கி எழுந்தோங்க, சரீரம் வெதும்பித் திருவுளம் மெலியும்படி சம்பவித்திருந்த துக்கத்தை விட்டுவிட்டார். அம்மையார் கொடுத்தனுப்பிய சூளாமணியானது கையில் வரப்பெற்ற பொழுது சுவாமிக்கு

எப்படியிருந்ததென்ருல், பூர்வம் மிதிலாபுரியில் ஓமாக்கினிக்கு முன் தம் கையினுல் அந்த ஜானகியினுடைய திருக்கரத்தைப் பிடித்த பொழுது எவ்வளவு சந்தோஷமாயிருந்ததோ, அவ்வளவு சந்தோஷமாயிருந்தது. அன்றியும், உரோமங்கள் சிலிர்த்தன ; ஆனந்தபாஷ்பம் பெருகிற்று ; மார்பும் தோளும் துடித்தன ; வெயர்வை துளித்துளியாய்த் தோன்றியது ; அழகு பொருந்திய வாயிதழ் பதைத்தது : ஆவியானது வருவதும் போவதுமாய்த் திருமேனி புளகித்தது. அந்தக் குணங்களை அறியத்தக்கவர்கள் யாரிருக்கிருர்கள் !

அவ்வேளையில் இரண்டு வெள்ளம் வரனரசேனையுடனே அங்கதன் முதலானவர்கள் வந்து, ஸ்ரீ ராமபத்திரரையும் சுக்கிரீவமகாராஜனையும் வணங்கி, போன காரியம் முடிவானதைப்பற்றி உண்டாகிய மகிழ்ச்சியினுலே பூரண சந்திரனைப்போலப் பிரகாசிக்கின்ற முகதேஜஸையுடையவர்களாயிருந்தார்கள்.

அப்பொழுது சுக்கிரீவன் எழுந்து சுவாமியை வணங்கி, “இரகு நாயகரே, காலதாமதமாக இனி இவ்விடமிருக்க வேண்டிய காரணமென்ன ?” என்று கேட்டான். அப்படிக் கேட்ட மாத்திரத்திலே சுவாமியானவர் அதிசீக்கிரமாய் எழுந்து, “நம்முடைய சைனியங்களை இலங்கையை நோக்கிப் பிரயாணப்படும்படி உத்தரவு செய்,” என்ருர். வானர சைனியமெல்லாம் உடனே ஆர்ப்பரித்துக்கொண்டு, ரிசியமுகப் பர்வதத்தை விட்டெழுந்து, தென்திசையை நோக்கி நடந்தது. அப்போது ஸ்ரீ ராகவர், “இந்தசேனையானது காட்டை விட்டு நாட்டின் வழியே நடந்தால், உலகத்தார் பயந்து பிரமிப்பார். மேலும், இவைகட்கெல்லாம் உணவு கிடைக்கிறதும் பிரயாசமாயிருக்கும்,” என்று நினைத்து, இலைகள், தளிர்கள், காய்கள், கனிகள், கிழங்குகள், தேன் முதலானவைகள் விசேஷமாய்க் கிடைக்கத் தகுதியான வனங்கள் மலைகள் இவைகளின் வழியாய்ப் போக வேண்டுமென்று ஆக்கியாபித்தார். சைனியமானது நாடு நகரங்

களின் மார்க்கமாய்ப் போகாமல், சுவாமி சொன்ன வழியே போயிற்று. அதன் பின்னே வீர தீரத்தையுடைய ஸ்ரீராமரும் லட்சுமணப்பெருமாளும் சுக்கிரீவ மகாராஜன் முதலானவர்கள் சூழ்ந்து வர, அனுமரானவர் தென்சமுத்திரத்தின் மத்தியில் மகாமேருவின் சிகரமாகிய இலங்காபட்டணமிருக்கின்ற சிங்காரத்தையும், அங்கே பொல்லாத இராட்சதர்கள் வெகு ஜாக்கிரதையுடனே காவலாயிருப்பதையும், கோட்டை கொத்தளங்களினுடைய பலத்தையும், தலைவனாகிய இராவணனுடைய பராக்கிரமத்தையும், உக்கிரமான சேனைகளின் அளவில்லாமையையும் சொல்லிக்கொண்டு தொடர, அவற்றைக் கேட்டுக்கொண்டே பிரயாசமில்லாமல் வேடிக்கையாக வழி நடந்தார்கள். அப்படியே வெகுதூரம் வானர சேனாதிபதியாகிய சுக்கிரீவனுடனே ஸ்ரீ ராம லட்சுமணர்கள் போக, அவர்களுடனே கூடிக்கொண்டு போகின்ற வானர சேனை வீரர்கள் பவளமலையினிடத்தில் போய் ஒரு பகல் முழுதும் தங்கியிருந்து, பின்பு புறப்பட்டுப் பன்னிரண்டு நாளிற் போய்த் தென்சமுத்திரத்தைக் கண்டார்கள்.



சுந்தர காண்டம் முற்றிற்று.